| | |
|---|---|
| Name: | Arunodhayam 2000 - Poochoriyum Ponnochimaram |
| பெயர்: | அருணோதயம் 2000 - பூச்சொரியும் பொன்னொச்சி மரம் |
| Published: | May, 2000 |
| வெளியீடு: | மே, 2000 |
| Copyright: | © 2000 by<br>Alaveddy Arunodhaya College<br>Old Students' Association-Canada |
| பதிப்புரிமை: | அளவெட்டி அருணோதயக் கல்லூரிப்<br>பழைய மாணவர் சங்கம்-கனடா |
| Compilation: | P. Sithamparasivan |
| தொகுப்பு: | ப. சிதம்பரசிவன் |
| Published by: | Alaveddy Arunodhaya College<br>Old Students' Association-Canada<br>63 Woody VineWay<br>Willowdale, Ontario<br>M2J 4H5<br>Canada<br>(416) 499-5156 |
| வெளியீடு: | அளவெட்டி அருணோதயக் கல்லூரிப்<br>பழைய மாணவர் சங்கம்-கனடா |
| Web: | www.alaveddy.com |
| e.mail: | alaveddy@home.com |
| No. of Copies: | 2000 |
| பிரதிகள்: | 2000 |
| Size: | 8.5" x 11" (U.S. Letter size) |
| அளவு: | 8.5" x 11" |
| Layout, Design and Illustrations: | digi Graphics & Studios, Toronto |
| வடிவமைப்பு, வரைகலை: | டிஜி வரைகலை அமையம் |
| Printers: | Viveka Printers, Toronto |
| அச்சு: | விவேகா அச்சகம் |
| ISBN: | 0-9687207-0-6 |

# ஊர்/உள்



## ஊர் | உரைத்தமை





## ஊர் | இழந்தமை



## ஊர் நினைந்தமை





## ஊர் மீண்டமை

*R. Pathmanaba Iyer*
*27-B, High Street,*
*Plaistow*
*London E13 0AD*



## ஊர் விளைந்தமை





## ஊர் விரிந்தமை




கல்லூரி ஸ்தாபகர்

நாகமுத்து அருணாசல உடையார்




## கல்லூரிக் கீதம்

கலைபயில் தருசிறுவர் குழுமிக்
கலைவளர் பதி போற்றுவோம் (கலை)

அளவை அருணோதயக் கல்லூரி
மலைவிளக் கென நிலைநின் றோங்க
வளர் மதியமும் கதிரும் போல
வளர்ந்து கலைகள் பொலிந்து தேங்க (கலை)

ஆரியம் தமிழ் ஆத்ம ஞானம்
ஆங்கிலம் இசை கலை விஞ்ஞானம்
வீரியந் தரும் உடலின் பயிற்சி
விளங்கு மதனா லடைந்தோம் உயர்ச்சி (கலை)

பிறவி தோறுமே தொடரும் கல்விப்
பேற்றை எமக்கு அளித்த அன்னை
திறனை நினைந்து தினமு முனது
சேவை செய்குவம் மனதிலுவந்து (கலை)

அருணா சலவேள் எடுத்த வொன்று
அசையா அசல மாக நின்று
அருணன் வாழும் ஊழி நின்று
வாழ்க வாழ்க வாழ்க வென்று (கலை)

*ஆக்கியவர்: அமரர் ச. பொன்னம்பலம் ஆசிரியர்*

The Premier
of Ontario
Legislative Building
Queen's Park
Toronto, Ontario
M7A 1A1

Le Premier ministre
de l'Ontario
Hôtel du gouvernment
Queen's Park
Toronto (Ontario)
M7A 1A1




# Greetings from the Premier

## ALAVEDDY ARUNODHAYA COLLEGE
## OLD STUDENTS' ASSOCIATION
## 6TH ANNIVERSARY

On behalf of the Government of Ontario, I am pleased to extend greetings to the membership of the Alaveddy Arunodhaya College Old Students' Association as you celebrate your 6th anniversary.

Ontario's strength lies in the diversity of our culture and builds upon our willingness to share our rich traditions with one another. As you celebrate your anniversary and prepare for many more successful years, you can be proud of the role you play in preserving your heritage and promoting fellowship in your community.

Please accept my best wishes for a memorable celebration.

The Honourable Michael D. Harris
Premier of Ontario

May 20, 2000

# MESSAGE FROM THE PRESIDENT



Let us go with full force to fulfill the Himalayan project that the Alaveddy Arunodhaya College Old Students' Association has undertaken. The college, the dispensary and other important utilities in the village will receive financial and other necessary assistance from this association. I now understand that Alaveddy residents in the U.K., Europe, Australia and other countries have also volunteered to contribute towards these projects.

It is with great pleasure I acknowledge the untiring efforts taken by the patron Mr. Saravanamuthu Paranirupasingam, Mr. (Pundit) K. Nagalingam, Mr. Kandasamy Sivapragasam, Mr. P. Suntharalingam, the college principal Mr. Mahendrarajah and our actively participating executive committee and the members of the finance committee.

I wish to extend my grateful thanks to Mr. Sithamparasivan Pathmanathan, who worked with unceasing ardour to bring the Alaveddy Arunodhaya College Old Students' Association to this unbelievable heights within a very short time. I would also like to thank Sivan for bringing out this journal. It is nothing but fair to honour him for sowing the seeds of patriotism in the minds of our friends in Canada and in other countries, and getting their warm support to revive the honourable history of this well-known village.

Mr. Gengatharan, another live-wire of our association, has been bearing the burden of organizing the outdoor activities like picnics, dinners and managing the finances of this Association. He is another silent, hardworking pillar of this unit who has kept the flags flying.

We all know that the late Mr. Arumugam Ponnampalam and his family have donated a generous amount of money -$10,000 – to the Association. This money has been used wisely and effectively in the improvement of the school. We are proud of this generous financial support and we thank them profusely.

I wish and I hope that sons and daughters of Alaveddy will rise up to the occasion and contribute to this deserving cause of rebuilding all the schools, temples and other destroyed cultural centers and facilities in the once beautiful and leading village. Alaveddy has produced eminent men and women who have served and continue to serve the people of this world in different fields.

I am proud to mention that within a short span of time every member of our Association has given ardent support to steer this organization to a position of strength and stability.

We appreciate and sincerely thank our well wishers who have volunteered to contribute generously to the journal through their advertisements.

Long live our Association!

Thamo Vinayagaratnam

# செயலாளரிடமிருந்து...

இலங்கையில் நிலவுகின்ற போராட்டச் சூழ்நிலை காரணமாகப் பல வழிகளில் பாதிப்புற்று இருக்கும் அளவெட்டி மக்களின் மேம்பாட்டையும், சரித்திரப் புகழ்பெற்ற அளவெட்டி அருணோதயக் கல்லூரியின் வளர்ச்சியையும் கவனிப்பதோடு இலங்கையிலிருந்து குடி பெயர்ந்து உலகின் பல பாகங்களிலும் வாழும் அளவெட்டி மக்கள் மத்தியிலும் அருணோதயக் கல்லூரியின் பழைய மாணவர்கள் மத்தியிலும் சர்வதேச ரீதியான ஒருங்கிணைப்பைப் பேணி வளர்ப்பதையும் முதன்மை நோக்கங்களாகக் கொண்டு அளவெட்டி அருணோதயக் கல்லூரிப் பழைய மாணவர் சங்கத்தின் கனடாக் கிளை, 1994ஆம் ஆண்டு நிறுவப்பட்டது. அன்றிலிருந்து அளவெட்டி கிராம அபிவிருத்தி நடவடிக்கைகளில் சங்கம் ஈடுபட்டு வருகிறது.

**செய்ய முடிந்தவை**

- *1997ஆம் ஆண்டின் பிற்பகுதியில் அளவெட்டியில் மக்கள் மீளக் குடியமரத் தொடங்கியதை அறிந்து அவர்களுடைய அத்தியாவசிய தேவைகளில் ஒன்றான மருத்துவ வசதியை மனதில் கொண்டு பண்டிதர் க. நாகலிங்கத்துடன் தொடர்பு கொண்டு அதற்கென ஒரு நோயாளர் நலன் புரிச் சங்கத்தினை ஆரம்பிக்கச் செய்தது எங்களுடைய ஆரம்பப் பணியாக இருந்தது.*

- *பிரசவ விடுதி வளவினுள் ஆரம்பிக்கப்பட்டு இடையில் கைவிடப்பட்டிருந்த இருந்த மருத்துவ மனைக் கட்டிடத்தை மீளவும் கட்டியமைத்து அதனை இயங்கப் பண்ணுவதற்கென $7000.00 தொகைப் பணத்தையும் நாங்கள் திரட்டி அனுப்பினோம்.*

- *மருத்துவ மனைக்கான நிலப்பரப்பின் அளவு போதாமையினால் ஏற்பட்டு வந்த இட நெருக்கடிகளை நிவர்த்தி செய்யும் நோக்குடன் தெருவோரத்தில் இருந்த ஆறு பரப்புக் காணியை $6000.00 ற்கு வாங்க வழி செய்து இதன் மூலம் மருத்துவ மனைக்கு உரிய இடப்பரப்பை விரிவுபடுத்தியதுமல்லாமல் மருத்துவ மனையின் எதிர்கால நலனுக்கும் அபிவிருத்திக்கும் நாம் வித்திட்டோம்.*

- *அருணோதயக் கல்லூரி மீண்டும் அளவெட்டியில் ஆரம்பித்தவுடன் கல்லூரியின் தேவைகளைக் கருத்தில் கொண்டு அத்தியாவசிய தேவையான குடி தண்ணீர் வசதி, தளபாட வசதிகளை நிவர்த்தி செய்வதற்காக அதிபருடன் தொடர்பு கொண்டு $5800.00 அனுப்பி வைத்தோம்.*

- *நீண்டகாலமாக கல்லூரிக்குத் தேவையாக இருந்த சைவம் நவரத்தினத்தாரின் வளவை வாங்கி, வீட்டையும், கிணற்றையும் செப்பனிட்டு, சுற்று மதில் கட்டி கல்லூரியின் எல்லையை விரிவு படுத்தத் துணை புரிந்திருக்கிறோம். இத் தேவைக்காக திரு. ஆ. பொன்னம்பலம் குடும்பத்தினர் தந்துதவிய பத்தாயிரம் டொலர்களையும் சேர்த்து மொத்தமாக $ 13000.00 வழங்கியுள்ளோம்.*

இத்தேவைகளை நிறைவேற்ற உலகின் பலபாகங்களிலும் உள்ளவர்களுக்குக் கடிதங்கள் அனுப்பினோம். ஜேர்மன், டென்மார்க், சுவிற்சலாந்து, அமெரிக்கா போன்ற நாடுகளில் இருந்து ஓரளவு உதவி கிடைத்தது. இப்போது இங்கிலாந்து, சுவிற்சலாந்து ஆகிய நாடுகளிலும் அளவெட்டி நலன் புரிச் சங்கங்கள் உருவாகி அளவெட்டியுடன் தொடர்பு கொண்டு செயற்பட ஆரம்பித்துள்ளார்கள் என்பது மிகுந்த ஊக்கம் தருகிற ஒரு செய்தியாகும். அளவெட்டியைச் சேர்ந்த பெரியார்கள், கலைஞர்கள் கனடா வருகை தரும்போது அவர்களை உரியமுறையில் கௌரவித்து வருகிறோம்.

கனடாவில் கல்லூரியின் பழையமாணவர்களும் அளவெட்டி மக்களும் கலந்து கொள்ளும் ஒன்று கூடல்களை ஆண்டு தோறும் நடத்தி வருகிறோம். இப் புத்தாயிரம் ஆண்டில் 'அருணோதயம் *2000*' என்ற விழாவை மிகச் சிறப்பாக நடத்துகிறோம். புதிய நூற்றாண்டில் எமது செயற்பாடுகளுக்கு இந்த விழா மேலும் பலத்தையும் நம்பிக்கையையும் ஆதரவையும் அள்ளித் தர வேண்டும் என்பது எமது வேணவா.



**செய்ய நினைப்பவை**

மருத்துவ மனையின் எல்லையை அகலித்துச் சந்தர்ப்பம் வரும்போது ஆட்சியிலிருப்பவர்கள் மூலமாகவோ அல்லது வெளிநாட்டு நிறுவனங்கள் மூலமாகவோ நோயாளர்கள் தங்கி வைத்தியம் செய்யும் வசதியை உருவாக்க முயற்சிக்கிறோம். கண், பல் சிகிச்சை போன்றவற்றிற்கெனப் பிரிவுகள் தொடங்கி கிழமையில் சில தினங்களுக்காவது சிறப்பு மருத்துவர்களை வரவழைக்க ஏற்பாடு செய்ய விரும்புகிறோம்.

வாசிகசாலை, நெசவுசாலை ஆகியவற்றை மீளக் கட்டியெழுப்புவது, பலநோக்குக் கூட்டுறவுச் சங்கத்தின் வளர்ச்சிக்கு உதவி செய்வது, நெசவு, தையல் வகுப்புகளை ஒழுங்காக நடத்துவது, விவசாயிகளின் முன்னேற்றத்துக்கு கூட்டுறவுச் சங்கம் மூலம் உதவி செய்வது, எமது மக்களின் நீண்டகாலத் தேவையாக இருந்து வந்த திறந்த வெளி அரங்கும், விளையாட்டு மைதானமும் கட்டி எழுப்புவது என்பன எமது வருங்காலத் திட்டங்களாகும்.

கல்லூரி நலன் கருதி ஒரு தொகைப் பணத்தை வங்கியில் நிரந்தர வைப்பில் இட்டுவைத்து அதில் இருந்து வரும் வட்டிப் பணத்தில் ஆசிரியர் பற்றாக்குறையை நிவர்த்தி செய்யும் பொருட்டு திறமையான ஆசிரியர்களை நியமித்து ஊதியம் வழங்குதல், வசதியற்ற மாணவர்களுக்கு பாடப்புத்தகங்கள் வழங்கல், பல்கலைக்கழகம் செல்லும் மாணவர்களை ஊக்குவிக்கும் முகமாக கடனாகவோ அல்லது நன்கொடையாகவோ பண உதவி செய்தல், புலமைப் பரிசில் வழங்கி ஊக்குவித்தல், வளர்ந்து வரும் மாணவர் சமூகத்தின் அறிவுத்திறன் துரிதமாக வளர்ச்சியடைவதற்கு உதவு முகமாக கல்லூரிகளிலும் சனசமூக நிலையங்களிலும் தரமான நூல் நிலையங்கள் அமைத்தல், ஆகியவற்றை முக்கியமான ஒரு திட்டமாக சங்கம் முன்னெடுக்க இருக்கிறது.

இன்றைய உலகில் கணினித்துறை எல்லா இடங்களிலும் வியாபித்து வருவதால் எம்மூர்ச் சிறுவர்கள், இளைஞர்கள் கணினி அறிவைப் பெறுவதில் பின் நிற்றலாகாது எனும் நோக்கில், கணினிப் பயிற்சி, கணினி அறிவூட்டல் அகிய திட்டங்களை முன்னெடுக்க விரும்புகிறோம்.

எமது அனைத்து முயற்சிகளுக்கும் அன்பர், ஊரவர், உறவினர், உலகினர் ஆதரவு நிறையக் கிடைக்க வேண்டும் என்று விரும்புகிறோம்.

**ப. சிதம்பரசிவன்**
செயலாளர்,
அளவெட்டி அருணோதயக் கல்லூரிப் பழைய மாணவர் சங்கம் - கனடா.

# அளவெட்டி நலன் புரிச் சங்கம்

***சுவிஸ் கிளை***

*எந் நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லைச்*
*செய்ந் நன்றி கொன்ற மகற்கு.*
*- பொய்யா மொழி*

*அளவெட்டி மக்களுக்கும் அதனைச் சூழ உள்ளவர்கட்கும் அளப்பரிய சேவையாற்றிவரும் அருணோதயக் கல்லூரியினதும் அரசினர் வைத்திய சாலையினதும் இன்றைய நிலையை வெளிநாடுகளில் வசதியுடன் வாழும் உணர்வுள்ள எம் மக்கள் அறிந்து செயற்படவேண்டும் என்று கனடாவில் உள்ள அருணோதயக் கல்லூரிப் பழைய மாணவர் சங்க நிர்வாக உறுப்பினரான திரு. ப. சிதம்பரசிவனது ஊக்குவிப்பால் தற்போது சுவிற்சலாந்தில் வாழ்ந்துவரும் திரு. செ. சிவபாலன் முன்னெடுப்பால் அளவெட்டி நலன்புரி நிலையங்களின் நலன்விரும்பிகள் ஒன்றிணைக்கப்பட்டனர்.*

*இலங்கையின் இன்றைய சூழ்நிலை காரணமாக பல இன்னல்களின் மத்தியிலும் எதிர் நீச்சலிட்டு முன்னேற முயல்கின்ற எமது இளம் சமுதாயத்தின் துன்பங்கள் நீங்கி இன்பமாக வாழ இயன்றவரை உதவ சுவிற்சலாந்தில் வாழும் மக்கள் உள்ளது உணர்ந்து ஊக்கத்துடன் அளவெட்டி நலன்புரிச் சங்கம் ஒன்றை ஆரம்பித்தனர்.*

*04. 07. 1999 இல் நிறுவப்பட்ட இச் சங்கத்தின் தலைவராக செ. சிவபாலன், செயலாளராக தெ. தர்மகுலசிங்கம், தனாதிகாரியாக சு. பரமானந்தம், நிர்வாக உறுப்பினராக சி. மனோகரன், ஆர். நேசன், ஆர். யோகநாதன், க. நகுலகுலசிங்கம், சு. சசீந்திரன், சே. செண்பகவரதன், கா. பகீரதன் ஆகியோருடன் உருவாக்கப்பட்ட நிர்வாகசபையும் ஏனையோர் பலர் அங்கத்தவர்களாகவும் இணைந்து கொண்டனர்.*

*எமது சங்கத்தின் நோக்கமானது இன்றைய ஈழத்தின் இன்னல்களின் மத்தியிலும் இலட்சியத்துடன் முன்னேற முயல்கின்ற இளம் சமுதாயத்தின் அத்தியாவசிய தேவைகளை உடனுக்குடன் இயன்றவரை நிறைவேற்றி நாளைய சமுதாயம் நலமுடன் வாழ வழிவகுப்பது. அதற்கென நன்மைபயக்கும் நற்பணிகளில் ஈடுபட்டுள்ளோம். நிலையான சொத்துக்களைச் சேகரிப்பது, நிரந்தர வைப்பு நிதியை உருவாக்குவது, அழியாத செல்வமாம் கல்வியைத் தடையின்றி கற்பதற்கு வழிவகிப்பது போன்ற செயற்பாடுகளில் ஒவ்வொருவரும் பங்களிப்பதன் மூலம் எல்லோரும் எல்லாமே பெறவேண்டும். ஈழத்தில் இல்லாமை இல்லாத நிலை வரவேண்டும் என்பதுவே எமது இன்றைய முயற்சியாகும்.*

*அளவெட்டி நலன்புரி நிலையங்களின் நலன்களை கருத்திற்கொண்டு சுவிஸ் வாழ் அளவெட்டி மக்களும் அருணோதயாக் கல்லூரி பழைய மாணவர்களும் எமது நண்பர்கள் அனைவரினதும் ஆக்கபூர்வமான கருத்துக்களையும் உணர்வு பூர்வமான ஒத்துழைப்புக்களையும் உங்களிடம் நாடி நிற்கின்றோம்.*

**செ. சிவபாலன்.**
*தலைவர்*
ALAVEDDY NALANPURI SANGAM,
U.B.S. BANK - ADLISWIL,
293 - 809540. 40X.

## கும்பழாவளைப் பிள்ளையார் கோவில் பிரதம குருவிடமிருந்து...

ஓம் அஸதோ மா ஸத்கமய,
தம் ஸோ மா ஜ்யோதிர்கமய,
ம்ருத்யோர் மா அம்ருதம் கமய.

இச் சுலோகத்தின் பொருள்:
அசத்திலிருந்து (நிலையில்லாததிலிருந்து) சத்துக்கு (நிலையுள்ளதற்கு) என்னை இட்டுச்செல்.
இருளினின்று என்னை ஒளிக்கு அழைத்துச்செல்.
சாவினின்று என்னைச் சாகாமைக்கு அழைத்துச்செல்.

ஓம். மூவகையிலும் சாந்தி நிலவுக.

உடலையும் உயிரையும் ஒருசேர வளர்த்து வளம்படுத்தவல்லது கல்வி கேள்விகளால் வரும் அறிவே. இதனால் கல்வி நிறுவனங்களின் அத்தியாவசியம் ஒருவாறு ஓர்ந்து உணரப்படும்.

அளவெட்டி மக்கள் இலௌகீக ரீதியாகிலுஞ்சரி, ஆத்மீக ரீதியாகிலுஞ்சரி, சகல துறைகளிலும் சென்றவிடமெல்லாம் சீரோடும் சிறப்போடும் வாழ்கின்றனர். கலை, கலாச்சாரம், பண்பாடு யாவற்றிலும் முன்னணியில் நிற்கின்றனர். இவ்வாறு இருப்பதற்குக் காரணம் யாதாக இருக்க வேண்டுமெனச் சிறிது சிந்திப்போமாயின், அங்கு விளங்குகின்ற ஆலயங்களும் கல்விக் கூடங்களுமேயாகுமென்பது தெற்றெனப் புலப்படும்.

பண்டுதொட்டு அளவெட்டி வடக்கிலுள்ள சீனன் கலட்டி ஞானோதய வித்தியாசாலையும் சதானந்த வித்தியாசாலையும் தெற்கிலுள்ள அருணாசல வித்தியாசாலையும் நாடறிந்த பண்டிதர்களையும் தமிழ் விற்பன்னர்களையும் பயிற்றித் தந்தன. கலை கலாச்சாரங்களிலும் அப்படியே. இவ்விரு வித்தியாசாலைகளுக்கும் மத்தியில் அமைந்துள்ள அருணோதயக் கல்லூரி, தமிழில், சைவத்தில் மட்டுமல்ல, ஆங்கிலத்திலும் விளையாட்டுத் துறையிலுங்கூட புகழ்பூத்த பேரறிஞர்களையும் விளையாட்டு வீரர்களையும் ஆக்கித் தந்துள்ளது; தருகின்றது.

அவ்விதமே எதிர்காலத்திலும் பயிற்றித்தரும் என்ற எதிர்பார்ப்போடு அருணோதயா (அதனை நிறுவிய அருணாசல உடையாரது தூய உள்ளம் போல்) எல்லாத் துறைகளிலும் வீறு நடையோடு முன்னேறி, ஆல் போல் தழைத்து அறுகு போல் வேரூன்றி வளர்ந்து சகலருக்கும் நன்மை பயக்க வேண்டுமெனக் கும்பழாவளைப் பெருமானை இதய சுத்தியோடு பணிந்து, வணங்கி, வேண்டி, எனது மனமார்ந்த நல்லாசிகளைக் கூறி அமைகின்றேன்.

சர்வ மங்களானி பவந்து.

**இ. சோமசுந்தரேஸ்வரக் குருக்கள்**

# நாம் அருணோதயத்தின் பிள்ளைகள்



**"நீங்கள் உலகுக்கு ஒளியாய் இருக்கிறீர்கள்**
**மலைமேல் இருக்கும் ஊர் மறைவாய் இருக்க முடியாது,**
**இவ்வாறு உங்கள் ஒளி மனிதர் முன் ஒளிர்க!**
**அப்பொழுது எல்லோரும் உங்கள் நற்செயல்களைக் கண்டு கடவுளைப் போற்றிப் புகழ்வார்கள்."**

இவை இறைமைந்தன் இயேசு கூறிய வார்த்தைகள்.

இன்று நாம் உலகுக்கு ஒளியாக நின்று வழிகாட்டுகின்றோமென்றால் அதற்குக் காரணம் அருணோதயக் கல்லூரிதான். இன்று அளவெட்டி ஊர் மலைமேல் இருக்கும் ஊர்போல் மங்காப்புகழ் பெற்று விளங்குவதற்கும் காரணம் அருணோதயக் கல்லூரிதான். எங்கள் நற்செயல்களைக் கண்டு மக்கள் எல்லாரும் இறைவனைப் போற்றுகின்றார்கள் என்றாலும் அதன் அடித்தளமும் அருணோதயக் கல்லூரிதான்.

அருணோதயக் கல்லூரி என்ற பெயரை உச்சரிக்கும் போதெல்லாம் பெற்றெடுத்து, தாலாட்டி, சீராட்டி வளர்த்தெடுத்த அன்னையின் பெயரை உச்சரிப்பது போன்ற ஒரு பாச உணர்வு நெஞ்சிலே உதிப்பதை உணர்கிறேன். அறிவோடு கூட அன்பையும் பாசத்தையும் நேசத்தையும் ஊட்டி ஒழுக்க சீலராய் நம்மை உயர்த்தி வைத்த அருணோதயக் கல்லூரியாம் எம் அன்னைக்கு எம் இதய நன்றிகள்.

புலம்பெயர்ந்த போதும் தம் நிலைக்குக் காரணமான தம் கல்லூரியை மறக்க முடியாமல் மலர் வெளியிட்டுத் தம் நன்றியை வெளிப்படுத்தி நிற்கும் கனடா வாழ் முன்னாள் அதிபர்கள், ஆசிரியர்கள், பழைய மாணவர்கள், நலன்விரும்பிகள் அனைவரையும் நன்றியுணர்வோடு பாராட்டுகிறேன். உங்கள் பங்களிப்பினால் இன்று எம் கல்லூரி புதுப்பொலிவு பெற்றுக் காட்சியளிக்கிறது என்பதையும் மகிழ்ச்சியோடு தெரிவிக்கின்றேன். உங்கள் கல்லூரி மீது நீங்கள் கொண்டுள்ள அன்பும் மதிப்பும் எதிர்காலத்தில் இன்னும் பெருகும் என்பது எனது நம்பிக்கை.

இறைவனின் அருளினாலும் ஆசியினாலும் நீங்கள் அனைவரும் நிரம்பப்பெற்று அமைதி வாழ்வு வாழ்ந்து உலகுக்கு நற்கனி கொடுத்து நாம் அருணோதயத்தின் பிள்ளைகள் என்பதைப் பறைசாற்றி வாழ வாழ்த்துகிறேன்.

இறைவன் உங்களை ஆசீர்வதிப்பாராக!

**அருட்திரு. பத்திநாதர் யோசப்தாஸ் ஜெபரட்ணம்**
விரிவுரையாளர்,
புனித சவேரியார் பெரிய குருமடம்,
கொழும்புத்துறை,
யாழ்ப்பாணம்.

# வாழ்த்துரை



ஈழவள நாட்டின் வடபால் அமைந்த அளவெட்டி நன்னகரைத் தாயகமாகக் கொண்ட, தற்காலம் கனடா நாட்டில் குடியமர்ந்த மக்களுக்கு எனது மனங்கனிந்த வாழ்த்துக்களைக் கூறுவதில் பெருமகிழ்ச்சி அடைகின்றேன்.

அளவெட்டி நோயாளர் நலன்புரிச் சங்கத்தின் ஊடாக அவர்கள் வழங்கிய நிதி உதவியை மூலதனமாகக் கொண்டு புதிய காணி கொள்வனவு செய்யப்பட்டதோடு அளவெட்டி வைத்தியசாலைக்குப் புதியதோர் வெளிநோயாளர் கட்டிடமும் அமைக்கப்பட்டுள்ளது. இதனால் எமது வைத்தியசாலைக்குச் சகல வசதிகளும் கொண்ட ஒரு வெளிநோயாளர் பிரிவு ஏற்படுத்த வாய்ப்புக் கிட்டியுள்ளது.

கனடா வாழ் மக்களின் அன்பும், ஆதரவும், தாய் நாட்டில் கொண்டுள்ள அக்கறையுமே இவ்வாறு சிறுதுளி பெரு வெள்ளம் போல் திரண்டு எமது நீண்ட நாள் கனவு நனவாகி இன்று ஒரு பூரணமான வைத்தியசாலையை இவ்வூர் மக்கள் பெறக்கூடியதாக இருந்தது.

இப்புண்ணிய காரியத்தில் ஈடுபட்டு உழைத்த ஒவ்வொரு அன்பருக்கும் அளவெட்டி வாழ் மக்கள் தங்கள் மனம் நெகிழ்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றனர். அளவெட்டி அரசினர் மத்திய மருந்தகத்தையும் அதனுடன் கூடிய பிரசவ விடுதியையும் புதிய பொலிவுடன் விளங்கச்செய்து அதன் மூலம் நோயாளர்களுக்கு அரும்பெரும் சேவையாற்றிய அனைவருக்கும் இறை ஆசி வேண்டி மீண்டும் நன்றியை தெரிவித்துக் கொள்கின்றேன்.

பயன் தூக்கார் செய்த உதவி நயன் தூக்கின்
நன்மை கடலிற் பெரிது.

**வை. யோகேஸ்வரன்**
அரசினர் வைத்தியசாலை,
அளவெட்டி.

# அருணோதயா பழையமாணவர் சங்கம் (கனடா) உதயம்

***சிங்காரி அருணாசலம்***



*புலம் பெயர்ந்து கனடா வாழ் ஈழமக்கள், தாம் கல்விபயின்ற பாடசாலை வளர்ச்சிக்காகவும், அபிவிருத்திக்காகவும் பழையமாணவர் சங்கங்களை உருவாக்கினார்கள். அப்படி உருவாகிய பழைய மாணவர் சங்கங்களில் அருணோதயாவும் ஒன்று. தற்போது கனடாவில் 28 பழைய மாணவர் சங்கங்கள் உள்ளன. அருணோதயப் பழைய மாணவர் சங்க உதயத்திற்கு முன்னின்று உழைத்தவர் திரு. ப. சிதம்பரசிவன் அவர்கள். அவருக்கு அனைவர் சார்பிலும் எனது நன்றி. ஆரம்பத்தில் தனது இல்லத்தில் சில பழைய மாணவர்களைக் கூட்டி ஆலோசனைக் கூட்டம் ஒன்றை நடத்தினார். பின் முன்னாள் அருணோதய அதிபர் திரு. வி. கந்தவனம் அவர்களின் உதவியை நாடினார்கள். அவரும் கட்டாயம் ஓர் பழைய மாணவர் சங்கம் உருவாக்க வேண்டியதன் அவசியத்தை வலியுறுத்தி, அதற்குத் தன்னால் இயன்ற உதவியை செய்வேன் என்றும் உறுதி அளித்தார். பின்னர் 16.10.94ல் திரு. வி. கந்தவனம் தலைமையில் ஓர் அங்குராப்பணக் கூட்டம் நடைபெற்றது. அங்குரார்ப்பணக் கூட்டத்தில் பழைய மாணவர்கள், பெற்றோர், அன்பர்கள், அனுதாபிகள் கலந்து கொண்டனர். சபையின் அங்கீகாரத்துடன் 'அளவெட்டி அருணோதய கல்லூரி பழைய மாணவர் சங்கம்' (கனடா) என்ற பெயருடன் ஒன்பது அங்கத்தவர் கொண்ட தற்காலிக நிர்வாக சபை ஒன்று அமைக்கப்பட்டது. புதிய யாப்பு ஒன்று தயாரிக்கப்பட்டு சபையின் அங்கீகாரம் பெற்றது.*

*08. 01. 1995 முதலாவது பொதுக் கூட்டம் நடைபெற்று பதின்மூன்று அங்கத்தவர் கொண்ட நிர்வாகசபை ஒன்று தெரிவு செய்யப் பட்டது. இந்நிர்வாக சபை கல்லூரியின் வளர்ச்சிக்கும், அபிவிருத்திக்கும் பல திட்டங்களை உருவாக்கியது. இத் திட்டங்கள் நடைமுறைப்படுத்தப்பட அனைவரும் உதவி செய்தனர். பழையமாணவர், பெற்றோர், அன்பர்கள், ஆதரவாளர்கள் அனைவரின் முயற்சியாலும், ஆதரவாலும் சங்கம் முன்னேறியது.*

*13. 08. 1995ல் அளவெட்டி அருணோதயக் கல்லூரி நூற்றாண்டு விழா மலர் வெளியீடு ஒன்று நடைபெற்றது. 08. 06. 1996ல் நடைபெற்ற பொதுக் கூட்டத்தில் சபையின் அங்கீகாரத்துடன் யாப்பில் சில மாற்றங்கள் செய்யப்பட்டன. பழையமாணவர் சங்க நிதிக்காக 'மகா நதி' என்ற திரைப்படம் வெலிங்டன் சினிமாவில் 27. 10. 1996ல் திரையிடப்பட்டது. 19. 04. 1997ல் பொதுக் கூட்டம் நடைபெற்று நிர்வாக சபை மாற்றம் பெற்றது. பின் 1999ல் நிர்வாக சபை மாற்றம் பெற்றது. 1997ஆம் ஆண்டு தொடக்கம் 1999 வரையில் நிர்வகித்த நிர்வாகசபையினர் மிகுந்த கஷ்டங்கள் மத்தியில் கல்லூரியின் தேவைக்கேற்ப நிதியுதவி வழங்க உழைத்தனர். கல்லூரியின் திருத்த வேலைகளுக்கும், கிணறு துப்பரவு செய்வதற்கும் நிதி அவசர தேவையாக இருந்தது. அத்துடன் இடவசதியை கருத்தில் கொண்டு அயலில் உள்ள காணியை வாங்கி கல்லூரி வளவு விஸ்தரிப்பதற்குரிய ஒழுங்குகள் செய்யப்பட்டன. அத்துடன் நின்று விடாது அளவெட்டி மக்கள் நலன் கருதி தற்போது இயங்கிவரும் பிரசவ விடுதி, மருத்துவ மனை இரண்டையும் விஸ்தரிப்பதற்கு நிதி உதவி வழங்கப்பட்டது. நிர்வாக சபையினர், பழைய மாணவர்கள், பெற்றோர், அன்பர்கள், ஆதரவாளர்கள் அனைவரது ஒத்துழைப்பிலும் இச்சங்கம் துரித முன்னேற்றப் பாதையில் சென்று கொண்டிருக்கிறது. மற்றைய பழைய மாணவர் சங்கங்களைப் போல் எமது சங்கத்தை மேலும் முன்னேற்றப் பாதையில் கொண்டு செல்ல ஒத்துழைப்பு வழங்குமாறு அனைவரையும் தாழ்மையுடன் கேட்டுக் கொள்ளுகிறேன். நன்றி.*

**சிங்காரி அருணாசலம்**

*அ. அ. க. ப. மா. சங்க முன்னாள் தலைவர்.*

# முகிழ்முகம்

"I pity the poor immigrant
who wishes he'd
stayed home ...."
-Bob Dylan

அளவையூர் மக்களும் அளவெட்டி அருணோதயக் கல்லூரிப் பழைய மாணவர் சங்கக் கனடாக் கிளையும் வழங்குகிற இந்த மலர், ஈழத் தமிழ் மக்கள் மீது திணிக்கப்பட்ட, யுத்தம் புலம் பெயர்வு என்வற்றின் அவலம், அனுபவம் மற்றும் அவற்றூடாக நாம் மீண்டும் உயிர்த் தெழுந்த கதையின் ஒரு அத்தியாயம் ஆகும். ஆங்கிலக்கவி பாடுவது போல ஊரிலேயே தங்கியிருக்கலாமே என்ற ஆதங்கமும் இந்த மலரின் இதழ்களில் படிந்து கிடப்பதை நீங்கள் உணரக் கூடும்.

அருணோதயக் கல்லூரிப் பழைய மாணவர் சங்கத்தின் கனடாக் கிளையினரால் நடத்தப் பெறும் அருணோதயம் என்னும் விழாவும், விழாவில் வெளியிடப்படும் மலரும் இம் முறை விரிவு பெற்று அளவெட்டி முழுவதையுமே இயன்றவரை உள்ளடக்கிய ஒரு சமூக வரலாற்று ஆவணமாகப் பரிணாமம் பெற்றுள்ளது. ஈழத் தமிழர்களுடைய சமூக, அரசியல், பண்பாடு, பொருளியல் வரலாறுகள் பற்றிய பதிவுகளும் ஆவணங்களும் பெருமளவுக்குப் பேணப்படாமலே போயின. பேணப்பட்டவையும் யுத்தத் தீயில் அழிந்து போயின. இத்தகைய சூழலில் இயலுமானவற்றை உரிய முறையில் பதிவு செய்வதன் அவசியத்தை உணர்ந்தமையால், எம்மால் முடிந்த அளவுக்கு ஒரு ஆரம்ப முயற்சியாகப் 'பூச்சொரியும் பொன்னொச்சி மரத்தை' இன்று தருகிறோம்.

அகதிகளாக உலகப் பந்தின் எல்லாப் பாகங்களிலும் வீசி எறியப்பட்டுக் கிடந்தாலும், இந்தப் புலம் பெயர்வு எமக்குத் தந்திருக்கிற சில சாதகமான வாய்ப்புக்களைப் பயன் படுத்தி எமது ஊருக்கும், எமது ஊர் வழியாக விரியும் எமது தேசத்துக்கும் பயன்படக் கூடிய வகையில் நாம் ஈடுபாட்டுடன் பணிபுரிய முடியும் என்பது நாங்கள் அனைவரும் அனுபவத்தால் உணர்ந்ததுதான். அந்த வகையில் எமது கல்லூரி என்ற வட்டம் எமது ஊர் என்று தனது விட்டத்தை அகலித்துக் கொண்டிருக்கிறது.

கல்லூரிக்கும், ஊருக்கும் அபிவிருத்தி வேலைகள் என்று நாம் செய்ய நினைத்திருப்பவை அநேகம், செய்து முடித்திருப்பவை சொற்பம். எனினும் எமது முயற்சிகளிலிருந்து நாம் உணர்ந்து கொண்டிருக்கும் முக்கியமான பாடம் ஒன்றிருக்கிறது. அதுதான் காந்தி தன்னுடைய இலட்சியக் கனவாகக் கண்ட, கிராமங்களின் தன்னிறைவு என்பதை நாம் எய்த முடியும் என்பது. எம்மால் முடிந்த அபிவிருத்தி வேலைகளை புலம்பெயர்ந்த நாடுகளிலிருந்து செய்வது மிகவும் அவசியமானதும் அதே நேரம் பொருளியல் ரீதியாகச் சாதுரியமான ஒரு நடவடிக்கையும் ஆகும்.

ஈழத் தமிழ் மக்களைப் பொறுத்தவரை ஊர் ரீதியாகவும், கல்லூரி ரீதியாகவும் அவர்கள் சிறு சிறு அணி(ல்)களாக இத்தகைய நிர்மாணத்துக்கு உதவுவது மிகவும் பொருத்தமானதும் ஆக்க பூர்வமானதுமான ஒரு முன்னெடுப்பு. அவ்வகையில் தேசக் கட்டுமானத்துக்கு எம்மாலான சிறு பங்களிப்பே இந்த மலரும் எமது சங்கத்தின் அபிவிருத்தி முயற்சிகளுமாகும்.

அளவெட்டியின் பெருமையையும் கீர்த்தியையும், அங்கு வாழ்ந்த, வாழ்கிற கலைஞர்கள், அறிஞர்கள், கல்வியாளர்கள் பிற துறைகளில் புகழ் பூத்த பலரின் ஆவணங்களை இயன்றவரை இந்த மலரில் இணைத்துள்ளோம். பல தகவல்கள், ஏராளமான சமூக வரலாற்றுக் குறிப்புகள் விடுபட்டுப் போயுள்ளன என்பதையும் நாம் ஒப்புக் கொள்ள வேண்டி இருக்கிறது. எனினும், முழுமையைத் தேடுகிற முயற்சியில் நாம் தொடர்ந்தும் முனைப்பாக இருக்கிறோம். எதிர்வரும் மலர்கள் இன்னும் செழுமையாகவும் இன்னும் வனப்பாகவும் மிளிரும் என்று நம்புகிறோம்.

விடுபட்டுப்போன தகவல்கள், சேர்க்கப்பட வேண்டிய விடயங்கள் பற்றி எங்களுக்கு அறியத் தரவேண்டும் என உங்களை அன்புடன் உரிமையுடனும் கேட்டுக் கொள்கிறோம்.

**பத்மநாதன் சிதம்பரசிவன்**
**கந்தையா அரவிந்தன்**
**சுப்பிரமணியம் திலகேஸ்வரன்**

*மலர்க் குழு*

“வேரும் விழுதும் இழந்தாலும்
போரால் முகங்கள் தொலைந்தாலும்
ஈரக் கனவுகள் உலராது
மீளத் துடிப்போம் உயிரோடு”

"நீரோங்கு வயலினோடு சோலை சூழும்
நிறை அறிவின் பெரியர்கள் வாழ் நீர்மைசான்ற ஊர். . . ."

# எங்கள் அளவெட்டி

"யாழைக் கொணர்ந்திங்கு மீட்டியதால் ஒரு யாசகன் மன்னனிட மிருந்தோர் பரிசாகப் பெற்ற'' யாழ்ப்பாணத்தினது அனைத்துலக விமான நிலையத்தின் காத்திருக்கும் மண்டபத்திலிருந்து இதை எழுதுகிறேன். இந்த விமான நிலையத்தில் வந்திறங்கும் பேராசிரியர்கள், அனைத்துலக விஞ்ஞான மேதைகள், துறைநுட்ப வல்லுநர்கள், உலக வர்த்தகப் பிரமுகர்கள், தமிழ்க் கணினி உலக ஜாம்பவான்கள் ஆகியோர் மீதான எனது கரிசனை சொற்பமல்ல. ஆனால் எனது உடனடிக் கரிசனையெல்லாம் எனது கிராமத்திலிருந்து புலம்பெயர்ந்த தலைமுறையினரின் வழித்தோன்றல்கள் மீதுதான். அளவெட்டி என்ற தொல்பொருட் காட்சியகத்துக்கு அவர்களை அழைத்துச் செல்கிறேன். நீங்களும் என்னோடு வருகிறீர்களா?

- செ. குமாரசாமி



யாழ்ப்பாணத் தலைநகரிலிருந்து நேர் வடக்கே அமைந்துள்ள பாரிய துறைமுக நகரமாகிய காங்கேசன்துறை செல்லும் பன்னிரண்டு கட்டை நீளமான நெடுஞ்சாலை, யாழ்ப்பாணக் குடாநாட்டை மேற்கு, கிழக்கு என இரு பகுதிகளாக வெட்டுகின்றது. சாலையில் ஆறாம் கட்டையளவில் வருகின்றது, சுன்னாகம் சந்தி. இங்கிருந்து, மேற்கேயுள்ள கந்தரோடை ஸ்கந்தவரோதயாக் கல்லூரியைத் தாண்டியதும் அளவெட்டிக்குள் நுழையும் வீதி எமது கிராமத்தின் பெருவெட்டான தெற்கெல்லையாகி மாகியப்பிட்டிச் சந்திக் கூடாகக் காரைநகரை நோக்கிச் செல்லுகின்றது. ஒன்பதாம் கட்டையளவில் உள்ளது தெல்லிப்பளைச் சந்தி. இங்கிருந்து மேற்கேயுள்ள மகாஜனாக் கல்லூரியைத் தாண்டிய பின், அளவெட்டிக்குள் நுழையும் வீதி, கிராமத்தின் பெருவெட்டான வடக்கெல்லையாகி, மேலே சிறுவிளான், பண்டத்தரிப்பு ஊடாகக் காரை நகரை நோக்கிச் செல்லும். ஏழாம் கட்டையளவில் வருகின்றது மல்லாகம் சந்தி. இங்கிருந்து மேற்கே செல்லும் வீதி அளவெட்டி - மல்லாகம் சுடலையைத் தாண்டிப் பின்னர் அளவெட்டித் தபாற் கந்தோரையும் அருணோதயக் கல்லூரியையும் மருவித் தொடர்ந்து, மாகியப்பிட்டிச் சந்தி, சங்கானைச் சந்தை, மூளாய் வைத்தியசாலை ஊடாக காரைநகரை அடையும்.

## செ. குமாரசாமி

**இலங்கைப் பாராளுமன்றத்தில் தமிழ், ஆங்கில இணை வேக உரைபெயர்ப்பாளராக கடமையாற்றுகிறார். அப்பலோ 11 விண்வெளிப் பயணம் பற்றி இலங்கை வானொலியில் இவர் செய்த நேர்முக உரைபெயர்ப்பு மிகப் பிரபலமானது. இதன் காரணமாக 'அப்பலோ குமாரசாமி' என்றும் ஒருகாலம் அழைக்கப்பட்டவர்.**

எமது கிராமத்தின் பரப்பளவு சுமார் ஒன்பது சதுரமைல். கிராமத்தின் வடகிழக்கு எல்லைக்கப்பாலிருந்து திரளும் மழைகாலப் பெருவெள்ளம் வடக்கு அளவெட்டியிலுள்ள அம்பனை, அழகொல்லை வயல் வெளிகளைச் சுவற வைத்து மீறி, தெற்கேயுள்ள பனாக்கைக் குளத்தை முட்ட வைத்துப் பெருகி, கந்தரோடைக் குள வயல்களுக்கும் நீர் பாய்ச்சித் தொடர்ந்து, தென்மேற்காகக் கட்டுடைக்கூடாக விரைந்தோடி அராலித்துறையை அண்டிய கடலில் சங்கமிக்கும். இதுதான் யாழ்ப்பாணத்தின் ஒரேயொரு ஆறு - வழுக்கை ஆறு. கந்தரோடையை மருவிய ஆற்றுப்படுக்கையில் யாழ்ப்பாணப் பல்கலைக்கழக வரலாற்றுத்துறை ஆய்வாளர்கள் இரண்டாயிரம் ஆண்டுப் பழமை வாய்ந்த உரோம சாம்ராச்சியத்து நாணயங்களையும் சிதைந்த மரக்கலப் பகுதிகளையும் அகழ்ந்தெடுத்துள்ளார்கள். சில மாதங்களுக்கு முன்னர் வந்த பத்திரிகைச் செய்தி இது. இங்கே நிலைத்திருந்த கந்தரோடை இராசதானி பற்றியும் கடல் வாணிபத்தால் செழிப்புற்றிருந்த இந்தப் பிரதேசத்தின் மகிமை பற்றியும் இளந்தலை முறையினருக்கு வழுக்கை ஆறு கதை கதையாகக் கூறும்!

> நாடென்ப நாடா வளத்தன; நாடல்ல
> நாட வளந்தரும் நாடு.
>
> - திருக்குறள் 739.

(நாடென்பர் எதனை? அலைந்து திரிந்து தேடாது நாடாது இருக்கவும் வாழ்க்கை வளங்களை மக்களுக்குத் தானாகவே வழங்கவல்ல நாடுதான் நாடு. அலைந்து, வருந்தி நாடும்போது தான் வளங்களை வழங்கும் ஒரு நாடு நாடேயல்ல).

வாணிப வளத்தை வழங்கிய வழுக்கை ஆறு 'நீரோங்கு வயலினொடு சோலை சூழும்' அளவெட்டியின் இன்னுமொரு பொருளாதாரச் செழுமைக்கும் பின்னணி ஆயிற்று. வழுக்கை ஆற்றை மருவியுள்ள தாழ்ந்த பகுதிகளான அம்பனை, அழகொல்லை, பனாக்கைக் களிமண் வயல் வெளிகள் எமது ஆதார உணவுக்கான நெல்மணியை அள்ளிக் குவிக்கின்றன. வயல் வெளிகளுக்குச் சமாந்தரமாக மேற்கே நீண்டிருக்கும் மேட்டுப் பகுதி எங்கள் செம்பாடு. விரிந்து பரந்து கிடந்த செம்பாட்டு வெளியில் மழையை நம்பி நாமாக விளைவிக்கும் பயிர் வரகு. தானாக விளையும் பயிர் குமிட்டில். மழைகாலத்தின் அபூர்வ கொடையான சுவைமிக்க இந்தக் குமிட்டில் கீரை கிராமத்துக் குழந்தையினது தேர்ந்தெடுத்த அவசர இரும்புச் சத்துணவு.

கோடைப் பயிர்ச்செய்கையைப் பெருக்கும் பணியினால், அருகிவரும் வரகுக்காணிகளில் இன்று புதுக்கிணறுகள் பெருகியுள்ளன. தினை, சாமி, குரக்கன், பயறு, உழுந்து போன்ற உப உணவுப் பொருட்களையும் செழிப்பான காய்கறிவகைகள், பழவர்க்கங்கள், வெங்காயம், இஞ்சி, மஞ்சள், கடலை போன்ற துணை உணவுப் பொருட்களையும்



எமது செம்பாடு எமக்குச் செம்மையாகத் தருகின்றது. உணவு உற்பத்தியில் நாம் தன்னிறைவு கொண்டவர்கள்.

நெல் அறுவடையை அடுத்துக் கோடை வயல் வெளிகளில் பெருவெட்டுப் பயிராகப் படரும் பசுங்கொடிகளுக்கிடையே வத்தகை, வெள்ளரிப் பழங்கள் மண்டிக் கிடக்கும். யாழ்ப்பாணத்துக் கொடும் வெய்யிலுக்குள் எம்மை இருத்திவிட்ட பரமன் ஓர் அற்புத (தாக) சாந்தியாக இவற்றையும் படைத்தானே! பனங்கட்டி கொறித்தபடி வெள்ளரிப்பழம் சுவைக்கும் நாள் இனி எந்நாளோ?

ஏழை விவசாயிகளின் ஒரேயொரு காசுப்பயிராக விளங்கியது 'மலையாளம் புகையிலை'. ஐம்பதுகளில் இந்திய அரசு இறக்குமதியைத் தடைசெய்ததும் வினைவளம் மிக்க நம்மவர் திராட்சைக் கொடியில் கண் வைத்தனர். படருவதையே இயல்பாகக் கொண்ட திராட்சை, படரவைப்பவரின் கைவன்மையால் கிராமம் அனைத்திலும் பரவிப் படர்ந்தது. பணமுமோ பெருகிப் புரண்டது.

வகையிலும் ஊட்டத்திறனிலும் ஏருழவர் சாதித்த உணவுத்தன்னிறைவைப் பூரணப்படுத்துபவர்கள் எமது கிராமத்தின் கடலுழவர்கள். அருகிக் கொண்டே போகும் 'கீழிச் சந்தை', 'இறால் மடம்' ஆகிய இடப்பெயர்கள் கிராமத்தின் பொருளாதார ஆய்வாளர்களுக்குரியதோர் தகவல் ஊற்று.

ஐம்பதுகளில் 'மலையாளம் புகையிலை வியாபாரக் கம்பனி*' வீழ்ச்சியடைந்ததும் கிராமத்தில் சுருட்டுக் கொட்டில்கள் பெருகின. தென்னிலங்கையின் மூலை முடுக்குகளிலுள்ள 'யாழ்ப்பாணம் சுருட்டுக் கடை'களும் பெருகின. அண்மைக் காலங்களில் இந்தச் சந்தையும் வறண்டு பேயிற்று. ஆயினும் இன்னும் நீடிக்கும் 'சுருட்டுக் கொட்டிலடி' என்ற இடப் பெயர் எங்கள் கிராமத்தின் வரலாற்று ஏடுகளில் ஒன்றாக அமையும். மறைந்து வரும் சமூக அமைப்பொன்றில், அதன் கோட்பாடுகளுக்கமைய, சமுதாயத்தின் பல்வகைத் தேவைகளையும் சந்திக்கவல்ல தொழில்களும் கிராமத்திலேயே கிடைத்தன. 'அந்நியச் செலாவணி எதுவும் கரையும் வாய்ப்பு' இருக்கவில்லை. சமூகக் கோட்பாடுகள் இன்று தகர்ந்து கொண்டிருந்தாலும் சமூகவியல் வரலாற்று ஆய்வாளர்களுக்கு அளவெட்டியின் குறிச்சிப் பெயர்கள் ஒரு தகவல் மையமாக நீளும்.

இயற்கை வளமும் மனித வளமும் வழிந்தோடும் ஒரு சிறிய புவியியல் அலகு அளவெட்டி. ஆயினும் நிலவளம் நீர்வளம் பேணுவதில் விவேகம் நிறைந்த நம்முன்னோர் தோண்டிவைத்த கேணிகளை, நீர்வள இயல் இத்துணை வளர்ந்திருக்கும் ஒரு காலத்தில், அவிவேகம் நிறைந்த நாம் மூடிவருகிறோம். எங்கே-யாயினும் ஓர் இடத்தில் எழுதி வைக்க வேண்டிய ஒரு வேதனை இது. அப்பொழுதுதான் அடுத்த தலைமுறையில் 'கேணிக்கரை' வைரவர் கோயிலுக்கும் 'கேணிப்பிட்டி' சுடலைக்கும் ஏன் அந்தப் பெயர்கள் வந்தன என்ற கேள்வியைக் கேட்காது விடுவார்கள்.

**...ஆயினும் நிலவளம் நீர்வளம் பேணுவதில் விவேகம் நிறைந்த நம்முன்னோர் தோண்டிவைத்த கேணிகளை, நீர்வள இயல் இத்துணை வளர்ந்திருக்கும் ஒரு காலத்தில், அவிவேகம் நிறைந்த நாம் மூடிவருகிறோம். எங்கே-யாயினும் ஓர் இடத்தில் எழுதி வைக்க வேண்டிய ஒரு வேதனை இது.**

அருள் பொலியும் எமது கிராமத்தில், நாலு திசைகளிலும், எல்லைக் காவலாக நாலு பிரதான கோவில்களை நம்முன்னோர் நாட்டினார்கள். கிழக்கிலும் மேற்கிலும் குருக்கள் கிணற்றடிப் பிள்ளையாரும் பெரியதம்பிரானும். தெற்கே வெளிவயல் மாரியம்மன். வடக்கே தவளக்கிரி முத்துமாரி அம்மன். இந்த அம்மன் மகத்துவம் பற்றி:

"வடபாலும் தென்பாலும்மாய் மகிமையுடன் நீ இருந்தே
இடையிலுள்ள அளவைநகர் இன்பமுறக் காப்பவளே"

என்றும்,

"தவளக்கிரி பதியும் தண்மையுறு வெளிவயலும்
பவளநிகர் அளவை நகர் பக்குவமாய்க் காப்பவளே"

என்றும் நம் முன்னோர் ஒருவர் பாடிவைத்த இவ்வரிகள் செல்லரித்த பழம் பிரசுரம் ஒன்றில் காணப்பட்டவை.

சோழ இளவரசி மாருதப்புரவீகவல்லி தன் குதிரை முகம் மாறியதையொட்டி வழுக்கை ஆற்றோரம் கட்டியதாகக் கூறப்படும் ஏழு பிள்ளையார் கோவில்களுள் மூன்று எமது கிராமத்துக்குள் அமைந்தன. வடக்கு எல்லையில் அழகொல்லைப் பிள்ளையார்; தெற்கில் பெருமாக்கடவைப் பிள்ளையார்; கிராமத்தின் நடுநாயகமாக வீற்றிருக்கிறார் கும்பழாவளைப் பிள்ளையார். குதிரை (மா) முகம் விடுபட்ட இடத்தைக் குறிப்பதான 'மாவிடுதிட்டி' என்ற குறிச்சி இவரது

*Jaffna - Travancore Tobacco Trading Company*

அயலில் இன்றும் நிலைத்திருக்கின்றது. சோழ இளவரசி அளவெட்டியின் பழமைக்கு ஒரு சாட்சி. சோழரின் ஆட்சிக்காலம் சுமார் பத்து நூற்றாண்டுக்கு முற்பட்டது.

சமயத் தொழிற்பாடுகளிலிருந்து சமுதாய உறவாடல்களை ஊக்குவிக்கும் வகையில், வடக்கிலுள்ள முத்துமாரி அம்மன் மானம்பூ வாழை வெட்டுவதற்குத் தெற்கே கும்பழாவளைப் பிள்ளையார் கோவிலுக்கு வருவாள். ஊர் முழுவதும் ஒரே திருவிழாக் கோலந்தான். கூட்டிப் பெருக்கி அழகாகத் தண்ணீர் தெளித்திருக்கும் ஒழுங்கைகள் அடங்கலும் மகரதோரணம் தொங்க, துஷ்ட நிக்கிரக வெறி ததும்ப, அதற்கேற்ற மேளவெறி முழங்க, அம்பாள் விரைவதும் பின்னர் வெற்றிக் களிப்புடன், அதற்கேற்ற மேள ஒலி முழங்க அம்மாள் மீள்வதும் ஆண்டுக்கொரு முறை கிராமத்து ஒழுங்கை அனைத்தையும் சிலிர்க்க வைக்கும் ஒரு பெருவிழா. திரும்பும் வழியில் அம்பாள் ஐயனார் கோவிலில் வீரக்கொலு அமர்ந்து இளைப்பாறிப் போவாள். அத்துடன் முடிவதில்லை திருவிழா. படலைக்குப் படலை வைக்கப்படும் கும்பம் குத்துவிளக்கு மேசையில், வகை வகையாகக் குவித்து வைக்கப்படும் சுண்டல், அவல், மோதகம், வடை எல்லாம் ஆண்டுக்கொரு முறை ஓசியில் 'கொட்டிச் சிந்தி' சுவைப்பதும் ஒரு தனிச்சுவையன்றோ! ஒரு தனி விழாவன்றோ!

சமயத் தொழிற் பாடுகளிலிருந்து சமுதாய உறவாடல்களை ஊக்குவிக்கும் வகையில், வடக்கிலுள்ள முத்துமாரி அம்மன் மானம்பூ வாழை வெட்டுவதற்குத் தெற்கே கும்பழாவளைப் பிள்ளையார் கோவிலுக்கு வருவாள். ஊர் முழுவதும் ஒரே திருவிழாக் கோலந்தான்.

பங்குனி மாதம் ஒவ்வொரு திங்கட்கிழமையும் கோவில்களில் முறை வைத்துக் குளிர்த்தி விழா நிகழும். இரண்டாவது திங்களில் தவளக்கிரி அம்பாள் கோவிலில் நிகழும் குளிர்த்தி ஊரனைத்தையும் தழுவிய ஒரு பெரும் எடுப்பு. குளிர்த்தி விழாக்களில் சோற்றுக் குழையலைக் 'கொட்டிச் சிந்தும்' உரிமை அதனை வினியோகம் செய்யத் துடித்து முன்வரும் பெருந்தகைகளுக்கு மட்டுமே உரியது!

சுமார் எண்பது ஆண்டுகளுக்கு முன்னர் நிறுவப்பட்ட சைவ வாலிப சங்கம் இளைஞர்களுக்குச் சமய அறிவுப் போட்டிகளையும் வளர்ந்தோர்க்குச் சைவ சித்தாந்த வகுப்புகளையும் நடத்தி வந்தது. புராண படனம், சமய குரவர்களின் குருபூசை ஆகியவற்றை முறைவைத்துப் பல்வேறு கோவில்களிலும் நடத்தும் ஒழுங்கை மேற்பார்வை செய்து வந்தது.

பதினாறாம் பதினேழாம் நூற்றாண்டுகளில் யாழ்ப்பாண



தவளக்கிரி முத்துமாரி அம்மன் கோவில்

இராச்சியம் போர்த்துக்கீசர், ஒல்லாந்தர் கெடுபிடிக்குள் வீழ்ந்த பொழுது தேசாதிபதிகளின் நேரடிக்கவனிப்பில் வைக்கப்பட்ட மகத்துவம் அந்தக் காலத்து அளவெட்டிக்கும் கிடைத்தது. யாழ்ப்பாண மன்னன் பரராசசேகரன் தமிழ் நாட்டில் சிதம்பரம் நடராசருக்கு அண்மையாக 'இராசாக்கள் தம்பிரான் மடம்' என்றோர் மடத்தை நிறுவினான். பராமரிப்பதற்காக மானியமாக வழங்கிய கிராமங்களுள் அளவெட்டியும் ஒன்று. நடராசருக்குத் தருமசாதனஞ் செய்த காணிகள் பெருமாக்கடவைப் பிள்ளையாரையும் தவளக்கிரி அம்பாளையும் மருவிய பகுதிகளிலும் ஏராளம் இருந்தன - ஆட்சி உரித்தின் பேரில் உறுதி முடிப்புக்காரர் தோன்றும் வரை! பரராசசேகரனின் ஆட்சிக்காலம் 15ஆம் நூற்றாண்டு!

எமது கிராமத்துக்கும் தமிழ் நாட்டுக்குமிடையே நிலவிய தொடர்புகள் பற்றி, மறையும் தலைமுறையினர் கதையாகக் கூறுவர். திருவண்ணாமலையிலிருந்து ஊர்காவற்றுறை ஊடாகப் பேரின வெள்ளை எருத்து மாடுகள் இறக்குமதி செய்யப்பட்டன. தோட்டத்து வேலைகளை முடித்துக் கொண்டு இரவிரவாகப் படகுகளிற் சென்று அங்குள்ள கோவில் திருவிழாக்களில் பங்குபற்றிவிட்டு மறுநாள் ஊர் திரும்பும் கதைகளையும் கூறுவர். இவ்வகையில் ஆனி உத்தரத்தில் நிகழும் நடராசரின் ஆருத்திரா தரிசனத்துக்காக நீரிணையைக் கடந்து நம்மவர் போய் வருவது ஒரு பக்தி நிறைந்த மத அனுட்டானமாக இருந்து வந்திருக்கிறது. யாழ்ப்பாணத் தமிழர்களுக்கும் தில்லை நடராசருக்குமிடையே இன்று குறுக்கே நிற்கின்றது ஒரு நவீன நந்தி - இலங்கைத் திருநாட்டின் கடவுச்சீட்டு.

கிராமத்தின் அருள் மரபினால் கவரப்பட்ட ஓர் அமெரிக்கர் தனது ஹான்சன் என்ற பெயரைச் சுப்பிரமுனியர் என மாற்றி அளவெட்டியில் ஓர் ஆச்சிரமத்தையும் நடத்திவந்தார் - பிரச்சினைக் காலம் வரை.

எமது கிராமத்தவர்களுள் கிறீஸ்தவ சகோதரர்களும் குறிப்பிடக் கூடிய தொகையிலுள்ளார்கள். தென்னிந்திய திருச்சபை உட்பட மூன்று தேவாலயங்கள் இங்கே உண்டு.

கிராமத்தில் அருணோதயக் கல்லூரி உட்பட ஏழு



சீனன்கலட்டி ஞானோதயா வித்தியாசாலை புனரமைக்கப்படுகிறது.

பாடசாலைகள். ஆயினும் எமது மாணவ மணிகளின் மகிமை வெளியுலகை அடைவதில் எமது எல்லைகளை மருவி அமைந்த மகாஜனக் கல்லூரியும் ஸ்கந்தவரோதயக் கல்லூரியும் ஆற்றிய பணி மறக்க முடியாதது. வடபாலிலுள்ள ஒரு நூற்றாண்டுப் பழமைவாய்ந்த அளவெட்டிச் சீனன் கலட்டித் தமிழ்க் கலவன் பாடசாலை (ஞானோதயா), தமிழ் இலக்கண இலக்கிய அறிவூட்டலில் யாழ்ப்பாணம் எங்கணும் பெரும் பயபக்திக்குரியதாக விளங்கியது. தீவுப்பகுதி உட்பட வெளியூர்களிலிருந்து இங்கு வந்த மாணவர்கள் அந்தக் காலத்திலேயே விடுதிகளில் தங்கியிருந்து அறிவைத் தேடினார்கள். மரபு பேணத் தவறாத சீனன்கலட்டிப் பாடசாலை இடப்பெயர்வு அமளிக் காலத்திலும் மாபெரும் பாடசாலைகளுடனும் போட்டியிட்டு, மாவட்டச் சங்கீதப் போட்டிகளில் கீழ்ப்பிரிவு, மத்திய பிரிவு, மேற்பிரிவு ஆகிய மூன்று பிரிவுகளிலும் மூன்று முதற் பரிசுகளையும் தட்டிக் கொண்டது பதிவேடுகளில் பாராட்டப் படவேண்டிய ஒரு சாதனை. சிறு பாதம் தூக்கிச் சின்னநடை நடந்து நாம் ‘ஆனா’ ‘ஆவன்னா’ படித்த அந்தப் பாடசாலையின் படியில் எமது பாதம் இனிமேல் படிய முடியாது. யுத்த தேவதைக்கு நாம் வழங்கிய சோகக் காணிக்கை இது!

சரசுவதி குடிகொண்டிருந்த எமது கிராமத்தில் தமிழ் இலக்கண இலக்கியப் புலமையிலும் வடமொழிப் பாண்டித்தியத்திலும் கடல் கடந்த புகழீட்டிய அறிஞர்கள் பலர் வாழ்ந்தார்கள்.

“வைத்திய நாத முனிவர் - யாழ்ப்பாணத்துள்ள அளவெட்டி என்னும் ஊரில் உதித்த சைவ வேளாளர். வடமொழி தென்மொழி நன்குணர்ந்தவர். தமிழில் செய்யுள் ரூபமாக வியாக்கிரபாத புராணம் பாடியவர்”
இச்சான்றிதழ் பொறிக்கப்பட்டிருக்கும் இடம் மதுரைத் தமிழ்ப் பேரகராதி.

கடந்த நூற்றாண்டின் முற்பகுதியில் தமிழ்ப்புலமையிலும் கவி வன்மையிலும் மிக்கவராயிருந்து ‘கைலைப் புராணம்’ என்ற அறநெறி நூலைத் தமது 27வது வயதில் இயற்றிப் புகழ்பெற்ற ஒருவர் சுவாமி சிவசத்தா. ஆங்கிலப் புலமையாலும் நாவன்மையாலும் சைவ நெறியைத் தென்கிழக்காசிய நாடுகளில் பரப்பும் பணியில் ஈடுபட்டவர். கேணிக்கரை வைரவர் ஆலயத்துக்கருகே இவர் நிறுவிய ‘திருவடி நீழல்’ கால வெள்ளத்தினால் இன்று நலிவுற்றிருக்கிறது.

எங்கள் கிராமத்தின் அணிகலன்களில் இன்னுமொருவர் சீனன் கலட்டித் தமிழ்க் கலவன் பாடசாலையில் கல்வி கற்றுத் திருநெல்வேலி சைவாசிரிய பயிற்சிக் கலா-சாலையில் உப அதிபராயிருந்த திரு. பொ. கைலாசபதி என்ற சைவசித்தாந்த மேதை. இந்தத் துறையில் இவர் விட்டுச்சென்ற ஆராய்ச்சிக் குறிப்புகளை ஆய்வு செய்யும் பொருட்டு யாழ்ப்பாணம் பல்கலைக்கழகம் ஓர் ஆராய்ச்சிப் பிரிவை நிறுவியுள்ளது. இவர் அளவெட்டி ஈன்ற ‘சோக்கிரதீஸ்’

சிறு பாதம் தூக்கிச் சின்னநடை நடந்து நாம் ‘ஆனா’ ‘ஆவன்னா’ படித்த அந்தப் பாடசாலையின் படியில் எமது பாதம் இனிமேல் படிய முடியாது. யுத்த தேவதைக்கு நாம் வழங்கிய சோகக் காணிக்கை இது!

தமிழ், சமஸ்கிருதப் புலமை, சைவ நெறிப் பிரசங்க வன்மை ஆகிய வற்றில் தமிழ் நாட்டு ஆதீனங்களிலும் புகழ் பெற்றிருந்த ஒருவர் தவள-க்கிரி முத்துமாரி அம்பாள் ஆலயக் குருக்களாக இருந்த வீரசைவப் பெரியார் சிவத்திரு சி. மாணிக்கத் தியாகராச பண்டிதர். சிலேடை வெண்பா உட்படப் பல இலக்கியங்கள் படைத்தவர். சேர். பொன்னம்பலம் இராமநாதனின் இலக்கியச் சகபாடி.

> ‘தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்வு இலாச்
> செல்வரும் சேர்வது நாடு’.
>
> - திருக்குறள் 731.

தற்காலத் தமிழ் இலக்கியப் பரப்பிலும் எம்மவர் தம் மரபு வழி மணம் வீசத் தவறவில்லை. இரசிகமணி கனக செந்திநாதனின் கருத்தைக் கவர்ந்த நம்மவர் மூவரை இவ்விடத்தில் கூற வேண்டும்.

## மும்மணிகள்

எழுத்தாளர் உலகில் பல முனைகளிலும் பிரகாசித்தவர் அ. ந. கந்தசாமி. ‘கவீந்திரன்’ என்ற புனைபெயரில் கவிதை வடித்தவர், எமிலி சோலா போன்ற பிறமொழி நாவல்களைத் தமிழாக்கிப் பிரபலமடைந்தவர்; தீவிர கம்யூனிஸ்ட் எழுத்தாளர்; கட்சிப் பத்திரிகையின் ஆசிரிய குழுவினர்; மத்திய குழு உறுப்பினராக உயர்ந்தவர்.

அடுத்தவர் நாற்பதுகளில் பூத்த மறுமலர்ச்சிப் பத்திரிகையின் தாபக உறுப்பினர், அ. செ. முருகானந்தம். ஈழகேசரி, வீரகேசரி, சுதந்திரன் ஆகிய பத்திரிகைகளிற் பணியாற்றியவர். தமிழ் நாட்டில் வெளிவந்த சிறுகதைத் தொகுப்பொன்றில், அந்தக்காலத்து அதிசயமாக, இடம் பெற்ற தனது ‘மனித மாடு’ என்ற சிறுகதை மூலம்

புகழ்பெற்றவர்.

மூன்றாமவர் து. உருத்திரமூர்த்தி - 'மஹாகவி.' அசாதாரணமான தன்னம்பிக்கை காரணமாக, ஆரம்பத்தில் இவர் புனைந்து கொண்ட பெயர் 'பண்டிதர்'. பண்டிதரின் பரிணமிப்பே 'மஹாகவி.' ஏனைய இருவரும் ஒவ்வொரு பத்திரிகையைச் சார்ந்து வளர்ந்தவர்கள். கொம்பர் எதுவுமில்லாது வானுயர்ந்த கவிஞர், 'மஹாகவி.' மூவரும் நெருங்கிய உறவினர்கள். மஹாஜனக் கல்லூரியில் வளர்ந்தவர்கள். இரசிகமணி இவர்களை 'மஹாஜனா தந்த மும்மணிகள்' என்றார்

அளவெட்டி தந்த நாலாவது மணி ஒன்றையும் இங்கே குறிப்பிட வேண்டும். அனைத்திலங்கை நாடகப் போட்டிகளில், அடுத்தடுத்த ஐந்து நீண்ட ஆண்டுகளாக மஹாஜனக் கல்லூரியின் கழுத்தில் தங்கப் பதக்கங்களைத் தங்க வைத்தவர் கல்லூரி ஆசிரியர், நாடக ஆசான், கவிஞர் செ. கதிரேசர்பிள்ளை. கல்லூரி அவரைத் தக்கவகையில் கௌரவிக்கத் தவறவில்லை.

அளவெட்டி தந்த நாலாவது மணி ஒன்றையும் இங்கே குறிப்பிட வேண்டும். அனைத்திலங்கை நாடகப் போட்டிகளில், அடுத்தடுத்த ஐந்து நீண்ட ஆண்டுகளாக மஹாஜனக் கல்லூரியின் கழுத்தில் தங்கப் பதக்கங்களைத் தங்க வைத்தவர் கல்லூரி ஆசிரியர், நாடக ஆசான், கவிஞர்
செ. கதிரேசர்பிள்ளை.

இந்த நால்வரும் - பெருமை தான் - எனது கிராமம்; எனது குறிச்சி; எனது காலம்.
மஹாகவி எனது சகமாணவன். குற்ற முடைத்தோ இக் கூற்று?

## சோதிடமும் வைத்தியமும்

யாழ்ப்பாணம் எங்ஙனும் பயபக்தியுடன் மதிக்கப்பட்ட பாடசாலையாக விளங்கியது சீனன் கலட்டித் தமிழ்க் கலவன் பாடசாலை. கணித ஆசிரியராக இங்கே பிரபலம் பெற்றிருந்த ஓர் ஆசான் சோதிடம் மீது வளர்ந்த ஆர்வம் காரணமாகத் தொழிலை விட்டு விலகிச் சோதிட ஆய்வுகளில் ஈடுபட்டார். சகபாடியாக ஒத்தாசை வழங்கிய ஒரு சோதிடர் அருணோதயா அதிபர் திரு. த. கணபதிப்பிள்ளை (ஹெட் மாஸ்ரர்). 'சோதிடவாசகம்' போன்ற தொடர் நூல்கள் வெளிவந்தன. இளைப்பாறுகை பெற்றதும் முழு நேரச் சோதிடராக வளர்ந்து, சோதிட கணித பாகத்தில் பெரும் வியப்புக்குரியவராகித் தனது பெயரையும் அளவெட்டியின் புகழையும் உயர்த்திவிட்டவர் நாடறிந்த சோதிடர், அமரர் திரு. மு. சின்னப்பு. தனது மறைவுக்குப் பின்னரும் அதே இடத்தில் கிராமத்தின் சோதிட மரபு தொடர வேண்டும் என்ற இவரது விருப்பத்தைத் தொழிற் படுத்தி வருகிறார் இவரது சிஷ்யன் திரு. அ. பொன்னுத்துரை. இவர்கள் கைக் கொள்வது திருக்கணித பஞ்சாங்கம். பிரபல்யம் பெற்ற இன்னுமொரு அளவெட்டிச் சோதிடர், ஆசிரியர், அருட்கவி திரு. சீ. வினாசித்தம்பி.

இயற்கை வளமும் மனித வளமும் எழுப்பி வைக்கும் ஒரு புவியியல் அலகில் வைத்திய வளம் ஒன்று வறிதாகிவிட முடியுமா? சிறுபிள்ளை வைத்தியம், கண்வைத்தியம், முறிவு தறிவு வைத்தியம், விஷக் கடி வைத்தியம் என்று பல்வேறு துறைகளிலும் பெயர்பெற்ற வைத்தியர்கள் கிராமத்தின் பல்வேறு குறிச்சிகளிலும் பரவியிருந்தார்கள். வெளியூர்களிலிருந்து மாட்டு வண்டில்களில் வந்து வைத்தியரின் வளவிற்குள் இருக்கும் கொட்டில்களில் தங்கியிருந்து வைத்தியம் செய்வித்துச் செல்லுவது மறையுந் தலைமுறையினருக்கு ஒரு பரிச்சயமான காட்சி. பரம்பரை வைத்தியக் குடும்பங்களைச் சேர்ந்த காற்சட்டைத் தலைமுறையினர் சிலர் அந்தந்தத் துறைகளில் மரபு பேணிவருவது கவனத்துக்குரியது.

## மாணவர் மாண்பு

வெளியுலகின் கவனத்தை எஞ்ஞான்றும் ஈர்ப்பதே எமது கிராமத்தின் மிடுக்கு. எமது மாணவர் நால்வரின் பங்களிப்பு ஒன்றைக் குறிப்பிட வேண்டும். மஹாஜனக் கல்லூரி, ஸ்கந்தவரோதயக் கல்லூரி, யாழ்ப்பாணக் கல்லூரி ஆகியவற்றிற்கூடாகப் பல்கலைக்கழகம் புகுந்த இந்த நால்வரும் - சாத்தாகலட்டி க. சந்திரன் (மஹாஜனா), சீனன்கலட்டி சி. சுப்பிரமணியம் (மஹாஜனா), த. சிவசுப்பிர மணியம் - தெற்களவெட்டி (ஸ்கந்தா), சண்முகநாதன் - முருக்கடி (யாழ்ப்பாணக் கல்லூரி) விஞ்ஞானச் சிறப்புப் பட்டதாரிகளாக முதலாம் வகுப்பில் ஒரே சமயத்தில் சித்தி பெற்றார்கள். அளவெட்டி வடக்குச் சன சமூக நிலையத்தில் பாராட்டுக் கூட்டம் நிகழ்ந்தது. மூன்று கல்லூரிகளினது அதிபர்களும் பாராளுமன்ற உறுப்பினரும் 'பழம் பசளையிலிருந்து விளைந்த புதுத் தழிர்கள்' மீது புகழ்மலர் சொரிந்த பொழுது, மேடையில் பெருமையுடன் தலைமை தாங்கிக் கொண்டிருந்தவர் யாழ்ப்பாண அரசாங்க அதிபர் - அளவெட்டி திரு. மயில்வாகனம் சிறீகாந்தா!

## நவீன காலத்தில்

நவீன உலகம் வளர்த்து விட்ட துறையாற்றல்களின் கைவரிசையில் என்ன சோடை? இரண்டாவது உலக மகாயுத்த காலத்தில் (1939 - 1945) உணவு விநியோக நெருக்கடிகளுக்குப் பரிகாரம் தேடும் முயற்சியில் நாட்டில் அறிமுகஞ் செய்யப்பட்டன கூட்டுறவுச் சங்கக் கடைகள். அனைத்திலங்கை ரீதியில் பாராட்டுப் பெற்றது 'அளவெட்டிக் கூட்டுறவு இயக்கம்'. இதன் நினைவாக நிறுவப்பட்ட பலகையிலுள்ள எழுத்துக்களை வாசித்தால் 'கூட்டுறவாளர் வீதி' என்று ஒலிக்கும்.

சுருங்கிவரும் நவீன உலகில், வெவ்வேறு மொழிகளைப் பேசுவோரிடையே நடைபெறும் மாநாடுகள், பேச்சுவார்த்தைகளில் நேரச்சுருக்க உத்தியாக வளர்ந்து விட்ட ஒரு தொழில் இணைவேக உரைபெயர்ப்பு*. விரைப்பான இந்தத் தொழிலில் அநாயாசமாக உரைபெயர்க்கவல்ல ஒரு சிலரில்

*Simultaneous Interpreting
( in contrast to the simpler form of consecutive Interpreting)

எமது கிராமத்தவரும் ஒருவர். அனைத்துலக மாநாடுகளிலும் அனுபவம் பெற்ற இவர் விசேடமாகத் தெரிந்தெடுக்கப்பட்டுத் 'திம்பு பேச்சுவார்த்தை'களில் தமிழ் - ஆங்கில உரை பெயர்ப்பாளராகப் பணியாற்றியவர்.

## கலைப் பூங்கா

அருளும் பொருளும் அறிவும் பெருகும் மண்தான் கலைகளின் விளைநிலம். கரகம், காவடி, நடனம், நாட்டியம் என்று கலைகள் நர்த்தனம் புரிய, மேளதாளம் கூடிமுழங்க, நாதஸ்வரம் பொழியும் கானமழையில் ஊறிச் சிவந்திருக்கும் செம்மண் பூமி அளவெட்டி. ஆலயத் தொண்டாக வளர்ந்து இசைவேளாளர் மத்தியில் கூத்தஞ்சீமாக் குறிச்சியில் ஒரு காலத்தில் ஒடுங்கிக் கிடந்த இசை, இன்று கிராமம் எங்ஙனும் பரந்து பலதரப்பினரையும் தழுவி வளர்ந்து விட்டது. இசை ஆசிரியர்கள், வாத்திய விற்பன்னர்கள், சங்கீத பூஷணங்கள், வானொலிக் கலைஞர்கள் என்று மல்கிக் கிடக்கும் கிராமம் அளவெட்டி. இத்தகைய இளங் கலைஞர்கள் திருவிழாக் காலங்களில் கும்பழாவளையானின் முன்வீதியில், மாஞ்சோலையின் கீழிருந்து, ஒலிபெருக்கி வாயிலாகப் பொழியும் தெய்வ கீதங்கள் காதைத் துளைக்கவில்லையா? நெஞ்சை நிறைக்கவில்லையா?

தவில் நாதஸ்வர இசையில் நாடறிந்த சிங்கங்கள் அளவெட்டி. தவிலரசன் தட்சணாமூர்த்தி, நா. குமரகுரு, நா. க. பத்மநாதன், செ. சிதம்பரநாதன், இ. தேதீஸ்வரன் போக நாதஸ்வரக் கலைஞர்கள் பஞ்சாபிகேசனும் ம. பொ. பாலகிருட்ணனும் கூத்தஞ்சீமா நாயனக்காரர் பழம்பெரும் மாணிக்கத் தாத்தாவின் குடும்பத்தில் பெண் எடுத்தவர்கள். இவர்கள் எப்படிப் புறவெட்டியோ?

## நாடகம், கரகம், காவடி

அளவெட்டி நாடக அரங்குகளை இரசிக்கும் அயலூரவர்களின் மாட்டுவண்டில்கள் அந்தி மயங்கும் வேளையிலேயே வந்து சேரத் தொடங்கிவிடும். பொழுது புலரும் வரை நீடிக்கும் நாடகங்களில், நள்ளிரவின் அமைதிக் கூடாக, உச்சஸ்தாயியில், பனந்தோப்பின் வட்டுக்களைக் கிழித்து, வானோடு சங்கமிக்கும் பாட்டுக்கள், புலர்பொழுதில் ஊர் மீளும் இரசிகர்களின் பாதையில் மீண்டும் கானமழையாகப் பொழியும். இந்தச் சேதிகளுக்குச் சாட்சி கூறும் சின்னமொன்றை வடக்கேயுள்ள கேணிப்பிட்டிச் சுடலையில் இன்றும் காணலாம். மாணிக்கத்தியாகராச பண்டிதரின் சமாதிக்கருகேயுள்ள ஒரு கல்லறையில் பொறித்திருக்கும் வாசகம் இது: அண்ணாவியார் வல்லிபுரம். உடுக்கு வாத்தியத்திலும் ஒரு வல்லுநர் இவர். சுமார் 60 ஆண்டுகளுக்கு முன்னர் மஹாஜனா சபை மண்டபத்தில் மேடையேறிய 'கற்பகதரு' என்ற நாடகம் யாழ்ப்பாணம் அனைத்தையுமே ஒரு குலுக்கு குலுக்கிவிட்டது. அருகிவரும் உள்ளூர்க் கலைகளை வளர வைத்த உபவேந்தரின் முனைப்பினால் பேராதனைப் பல்கலைக் கழகத்தில் வைத்துக் கௌரவிக்கப்பட்ட இன்னுமொரு மூத்த உடுக்கு விற்பன்னர் திரு. வை. சிதம்பரப்பிள்ளை. புலப்பெயர்வை

**அளவெட்டி நாடக அரங்குகளை இரசிக்கும் அயலூரவர்களின் மாட்டுவண்டில்கள் அந்தி மயங்கும் வேளையிலேயே வந்து சேரத் தொடங்கிவிடும். பொழுது புலரும் வரை நீடிக்கும் நாடகங்களில், நள்ளிரவின் அமைதிக் கூடாக, உச்சஸ்தாயியில், பனந்தோப்பின் வட்டுக்களைக் கிழித்து, வானோடு சங்கமிக்கும் பாட்டுக்கள், புலர்பொழுதில் ஊர் மீளும் இரசிகர்களின் பாதையில் மீண்டும் கானமழையாகப் பொழியும்.**

உள்ளூரிலேயே அலைந்து தீர்த்த இந்த வயோதிபக் கலைஞர் அண்மையில் அக்கராயன் குளப் பிரதேசத்தில் சிவபதமடைந்த பொழுது அவருக்கு வயது 95.

அம்பாள் தேவிக்குரிய கரக ஆட்டத்தில் கம்பத்தின் மேலும் கத்தியின் நுனியிலும் உரலின் மீதும் உருளும் போதும் நின்று, உடுக்கின் வெறியொலி உந்த, தாளம் தவறாது, தலையில் தாங்கிய கரகம் தளம்பாது, நர்த்தனமாடிப் பெருமை சேர்த்த ஒருவர் கரகக்கார ஐயாத்துரை அவர்கள். கரகத்தில் ஒரு ஜாம்பவான். இளந் தலைமுறையினருள் அண்மைக் காலம்வரை கரக ஆட்டத்தை நினைவூட்டி வந்த ஒரு கலைஞர் தம்பையப் புலம் விநாயகலிங்கம் அவர்கள். கொழும்பு நகரில் அளவெட்டிக் கிராமத்துக்குப் பெருமிதத்தை ஈட்டித் தந்த ஒரு சம்பவம்:

கொழும்பு: அளவெட்டி வளர்ச்சிக் கழகத்தின் கலைவிழா. மேடையின் விளிம்பில் சமாந்தரமாக விரித்த சேலை; அதன் அந்தத்தில் ஒரு சட்டை. காவடி ஆட்டக்காரர் ஒருவர் மேடையின் ஒரு புறத்திலிருந்து படுத்தபடி உருண்டுருண்டு அந்தச் சேலையையும் உடுத்துக் கொண்டு சட்டையையும் போட்டுக் காட்டினார். மண்டபம் பொங்கி வழிந்த சனத்திரளின் கைதட்டலினால் சரசுவதி மண்டமமே அதிர்ந்தது! படுத்திருந்தபடியே நிமிர்த்தி வைக்கப்பட்ட தலையில், நர்த்தனமாடிக் கொண்டிருந்த காவடி, சபையின் பூரண நிசப்தத்துக்கும் பெரும் அங்கலாய்ப்புக்கும் மத்தியில், தாளம் பிசகாது, தொடர்ந்து நர்த்தனமாடிக் கொண்டிருந்தது. பாராளுமன்ற உறுப்பினர்கள், அமைச்சர்கள், அரச உயர் அதிகாரிகள், வெளிநாட்டுத் தூதுவராலயப் பிரமுகர்கள் கூடியிருந்த சபையில் காவடிக்காரர் அளவெட்டி த. சிவராசாவை ஆரத் தழுவத் தவறியவர்கள் யாருமில்லை. (கொழும்பு - அளவெட்டி வளர்சிக் கழகத்தின் தலைவராக இருந்தவர் இராணி அப்புக்காத்தாக உயர்ந்து, கிராமத்துக்கு மதிப்பேற்றித் தந்த கியூ. சி. இரங்கநாதன் அவர்கள்)

தவளக்கிரி முத்துமாரி அம்மாளை மருவிய பகுதிகளில் காவடி கட்டி வாடகைக்கு விடுபவர்கள் இன்று மறந்த கதை. மௌனக்காவடி, ஆட்டக்காவடி, பாட்டுக்காவடி என்று மேளவாத்தியங்களுடன் அங்கிருந்து மாவிட்டபுரம் கந்தனை நோக்கிய நடைப் பயணம் எல்லாம் பழங்கதை. கிராமத்தின் தனியடையாளங்களை எல்லாம் அழிய விட்டுக்கொண்டே போகிறோம். யாரொடு நோக? இன்னுமொரு உப வேந்தர் தோன்றமாட்டாரா?

## இசைக் காற்று

பாடம் என்று முறையாகப் பயிலாது, தனது சொந்த ஊக்கத்தினால், இசை கொழிக்கும் கிராமத்தின் காற்றை உறிஞ்சி, இசையுலகில் தனக்கோர் இடத்தை ஏற்படுத்திக் கொண்டவர், 'அறுத்து உறுத்து' சொல்விளங்க, பொருள் துலங்க, நெஞ்சை அள்ளும் வகையில் தேவாரம் திருவாசகம் பாடி, வானொலியிலும் புகழ் பெற்றிருந்தவர், இளம் வயதிலே மறைந்து விட்ட ஒருவர், மின்சாரப் பொறியியலாளர் திரு. அ. வேல்சாமி. பல காலம் தொடர்ந்து அவருக்கு அஞ்சலி செலுத்தி வந்தது இலங்கை வானொலி. அமைதி தவழும் விடியற்காலை வேளைகளில், வடக்கு அளவெட்டியிலுள்ள சில பாதைகள், ஒழுங்கைகளுக் கூடாகத் தமது சொந்த அலுவலில் உலவி வரும் ஒருவர், வந்த அலுவலையும் மறந்து கந்தர்வ கானலோகத்தில் மிதந்து மகிழ முடியும். பாரதியார் கூறியதைப் போல இது 'உண்மை, வெறும் புகழ்ச்சி இல்லை'. வாருங்கள் அளவெட்டிக்கு - வந்து ஒரு முறை பாருங்கள் டிக்கற் இன்றி.

கலைப்பூங்காவில் இன்னுமொரு துறை மலர் வினைஞர்களின் கைத்திறமை. மாலை, சரம், பூசாந்திரம், சாத்துப்படி, திருத்தொங்கல், படித்தொங்கல், தண்டிகை, சப்பறம், மணமகளின் தலைச்சோடனை என்று வகை வகையான வடிவங்களில் வெறும் மென் மலர்களைக் கொண்டு தம் கை வண்ணம் காட்டும் மென்கரத்தோர் வதியும் குறிச்சி தவளக்கிரி. மணவறை, மணிச்சப்பறம், சிகரம், கார்ச் சோடனை போன்ற அலங்கார வகைகளை ஆக்கிப் படைக்கும் வல்லவர்களை நாடி வெளியூரார் வருவார்கள். பணப் புரள்வும் பெருகும். வண்ண மலர்கள், குழை தழைகளைக் கொண்டு இக்கலைஞர்கள் அமைக்கும் பூங்காவனத்தின் வனப்பை பூங்காவனத் திருவிழாவில் கண்டு மலைக்கலாம்.

## சிற்பம், சித்திரம்

சிற்பம், சித்திரம் ஆகிய துறைகளிலும் கிராமம் தன் சிறப்பைக் காட்டத் தவறவில்லை. தினகரன் பத்திரிகையில் ஓவியனாகப் பிரபல்யம் பெற்றிருந்தவர் திரு. ந. தட்சணாமூர்த்தி. பெருமாக்கடவைப் பிள்ளையாரின் சுவர்களில் புராணக்கதைகளை உயிராக்கி விட்ட ஆசிரியர் பொன்னம்பலம் இந்தத் துறையில் ஓர் ஆதவன். தன் முயற்சியால் வளர்ந்து கிழக்கிலங்கைக் கோவில்கள் பலவற்றில் தன் கைவரிசையைக் காட்டியிருப்பவர் சிற்பாசாரியார் திரு. க. முருகையா. இன்னுமொரு பிரபல்ய ஓவியர் மத்திய கல்லூரி ஆசிரியர் திரு. செ. சிவப்பிரகாசம். இவர் நடத்தும் சிவசாயி சித்திரக் கோட்டமும் சிற்பசாலையும் இடம் தவறி யாழ்ப்பாணப் பட்டணத்துக்குள் அமர்ந்து விட்டது. இந்த நிலையம் புலம் பெயர்வது எப்போது - அளவெட்டியை நோக்கி?

## மாட்டுச் சவாரி

விவசாயத்தில் மாடு போல உழைப்பவை வண்டிலும் மாடும். இவற்றையே எம்மூரான், சிக்கனமாக, தனது பொழுது போக்குக்கும் கருவியாக்கிக் கொண்டான். மாட்டுச் சவாரிப் போட்டிகள் சனிக்கிழமைகளில் கிரமமாக நிகழும். தூரத்து ஊர்களிலிருந்தும் வண்டில்கள் வரும். தெல்லிப்பளை - பண்டத்தரிப்பு வீதியில் அம்பாள் கோவிலடியிலிருந்து மேற்கே கிராயிட்டி வைரவர் கோவில் வரையுள்ள வீதி சனப் புழக்கம் குறைந்த தனிமையான பாதுகாப்பான பகுதி. அரசின் அனுசரணையுடன் சவாரி ஓட்டத்துக்காக 'வெள்ளை றோட்டாக' விடப்பட்டுள்ளது. வீதி ஓரங்களில் இரசிகர் கூட்டம் சீக்காய் அடிக்கும். வேக மாடுகள் குறுக்கே இழுத்தால்? - இந்தப் பயம் மேலோங்க 'எண்ணித்துணிபு கொள்ளும்' இரசிகர்கள் வீதி மருங்கிலுள்ள கிளுவை வேலிகளுக்குப் பின்னால் பயமில்லாது வரிசை கொள்வர். பேரார்வ இரசிகர்களுக்குத் தனியிட வசதியுண்டு. வீதியோரம் இரு மருங்கிலும் அழகான வரிசைகளில் வானோங்கி நிற்கும் பனைமரங்களில் ஏற்ற, ஏற்ற உயரங்களில் இவர்கள் தொங்கிக் கொண்டிருப்பர். பொங்கும் ஆர்வத்திற் கேற்ப, முன்னேறி வரும் மாடுகளைப் பற்றிய அவர்களின் விமர்சனங்கள் வாயையும் மீறிப் பிரவகிக்கும்.

பனை உயரத்திலிருந்து வெளிவரும் வார்த்தைகள் றோட்டின் வளைவிற்கு அப்பால் அங்கலாய்த்துக் கொண்டிருக்கும் இரசிகர்களுக்கு ஓர் இதமான நேர்முக வர்ணனை. போட்டிக்குப் பொருந்திக் கொள்வதில் ஏற்படும் முன்னோடிப்

**மாட்டுச் சவாரிப் போட்டிகள் சனிக்கிழமைகளில் கிரமமாக நிகழும். தூரத்து ஊர்களிலிருந்தும் வண்டில்கள் வரும்.**



**பேரார்வ இரசிகர்களுக்குத் தனியிட வசதியுண்டு. வீதியோரம் இரு மருங்கிலும் அழகான வரிசைகளில் வானோங்கி நிற்கும் பனைமரங்களில் ஏற்ற, ஏற்ற உயரங்களில் இவர்கள் தொங்கிக் கொண்டிருப்பர்.**

பேச்சுவார்த்தைகள், அவற்றிலிருந்து பிறக்கும் வெப்பதட்ப சம்பவங்கள் இந்த றோட்டு வளைவுக்கு அப்பால் திரண்டிருக்கும் இரசிகர்கள் அறிய முடியாதவை தான். பரவாயில்லையே! சூடுபறக்கும் போட்டிகளின் முடிவுகளை முதன்முதலிலேயே அறியவரும் பாக்கியத்துக்கு ஈடு இணை வேறேது? தலைவாசல் இளையதம்பி, சயிலர் சின்னத்தம்பி, நாகமணி, இராசையா வாத்தியார் ஆகிய பெயர்கள் மாட்டுச்சவாரி இரசிகர்கள் வாயில் என்றும் அடிபடும் பெயர்கள் சில.

சனப் புழக்கம் குறைந்த இந்தக் கிராயிட்டி றோட்டு பல ஆண்டுகளுக்கு முன்னர் இடம்பெற்ற சம்பவம் ஒன்றை நினைவுபடுத்தும்.

கச்சேரி வாசற் சத்தியாக்கிரகம் இராணுவ பலங் கொண்டு முறியடிக்கப்பட்டது. ஊரெங்கணும் வன்முறை தலைகாட்டிற்று. தடுப்புக்காவலில் இடப்பட்ட தந்தை செல்வா வன்செயலில் ஈடுபட வேண்டாம் என்றும் அமைதியாய் இருக்கும்படியும் உருக்கமான வேண்டுகோள் ஒன்றை விடுத்திருந்தார். இந்த வேண்டு கோளையும் மீறிய ஒரு சம்பவத்தில் இராணுவத்துக்கு முதன் முதல் உயிரிழப்பு ஏற்பட்டது. பின்னர் தலத்தைப் பார்வையிட்ட 'இலண்டன் டெய்லி ரெலிகிறாப்' நிருபர் - பெயர் 'ஸ்டீபன் பாபர்' ஆக இருக்க வேண்டும் - "தமிழர்களின் முதற் பழிவாங்கற் சம்பவம் இது" என்று வர்ணித்தார். இது வரலாறு.

## கடன் ஒன்று தீர்ப்போம்

தன்னிறைவான சமுதாய வாழ்க்கையை உறுதி செய்ய வல்ல புவியியல் உட்கட்டமைப்பைக் கொண்டது எமது கிராமம். இயற்கை அன்னையின் இந்தக் கொடைக்கு நன்றி செலுத்தும் வகையிலும் எங்கள் அடுத்த தலைமுறையினரின் சேமத்தை உறுதி செய்யும் வகையிலும் நாம் ஆற்றவல்ல பணி ஒன்று உண்டு.

தூர்ந்து போகும் வழுக்கை ஆறு மீட்டெடுக்கப்பட வேண்டும். சக்திக்கப்பாற்பட்டது என்று மனம் சோர்பவர்களுக்கு, தற்போதைக்கு, விட்டுக் கொடுப்போம். சக்தி வளத்துக்கு உட்பட்ட ஒன்று உண்டு.

பனாக்கைக் குளத்தைப் மிகப்பெரிதும் அகலமாக்குவோம்; மிக மிக ஆழமாக்குவோம். தோண்டிய மண்ணை அள்ளிப் பரந்த குளக்கட்டைச் சமைப்போம். இந்தக் குளக்கட்டிலே நூற்றுக்கணக்கில் நேரடிப் பயன் தரும் வேம்பு, இலுப்பை போன்ற பெரு விருட்சங்களை நிரையாய் நாட்டுவோம். கிராமத்தின் பல்வேறு குறிச்சிகளையும் அடையாளம் காட்டும் வகையில் அந்தந்தக் குறிச்சியிலிருந்து கன்றுகளைப் பெறுவோம். மரங்களுக்கிடையே சிறு சிறு மலர்ச்சோலைகளை அமைப்போம். குளத்தோரம் கொக்குகள் குவியும். சோலையுள்ளே பறவையினம் பாடும்; குயில் கூவும். இந்த மனோரம்மியமான இயற்கைச் சூழலில் கிராமத்தின் முதியோர் கூடியிருந்து சமயம் தத்துவம் விவாதிப்பர். கிராமப் பற்று வளரும்; கிராமம் முற்றும் வளரும்.

இந்த அழகியல் அம்சம் ஓர் இடைநேர் விளைவு. காத்திரமான விளைவுகள் மிகப்பல. பாரிய நீர்த்தேக்கம் ஒன்றின் பயனாக எந்தக் கடும் கோடையிலும் எங்கள் பனாக்கை வயல் வெளிகள் பச்சைப் பசேலென்று இருக்கும். பணமும் புரளும். சூழலியல் மேன்மையுறும். எல்லாவற்றிற்கும் மேலாகக் கிராமத்தின் நீரியல் வளத்தை நிரந்தரமாக நிச்சயப்படுத்த வல்ல ஓர் உபாயம்; கிராமத்தின் கிணறுகளில் கடல் நீர் மட்டம் உயரவிடாத ஓர் அணை; ஆங்காங்கே மோட்டுத்தனமாக நாம் மூடிவிட்ட கேணிகளை மீட்பதும் இதற்கு ஒரு துணை. இந்த மகத்தான முயற்சிக்கு வேண்டிய பொறியியல் மூளைவளம் எமது கிராமத்து விண்ணர்களிடையே கிடைக்க முடியும். நிதிவளம் வழங்கவல்ல காருண்ய நிறுவனங்களுக்குப் பஞ்சமில்லை.

இளந்தலைமுறையினரே! பிறந்த மண்ணுக்கு ஆற்ற வேண்டிய ஒரு கடன்! உங்கள் முன் உள்ள ஒரு சவால்!!

எந்தத் துறையிலும் எந்தக் கிராமத்திலிருந்தும்
எந்த இரவலும் நாடாதும்,
எல்லாத் துறையிலும் எந்தக் கிராமத்துக்கும்
எந்தத் துணையையும் வழங்கவும் வல்ல
வளம் பல கொண்ட கிராமம் அளவெட்டி!

பண்டைத் தமிழ் இலக்கியங்கள் பாராட்டும் பழுதிலா விழுமியங்களுக்கு உயர்ந்து -

**அறம்** ஆற்றி
**பொருள்** ஈட்டி
**இன்பம்** காணும்
**வீடு** அளவெட்டி

மீண்டும் அதன் இன்னிசை ஓங்கவேண்டும்!
மீண்டும் எம்மவர் கூட வேண்டும்!



**...இந்த வேண்டு கோளையும் மீறிய ஒரு சம்பவத்தில் இராணுவத்துக்கு முதன் முதல் உயிரிழப்பு ஏற்பட்டது. பின்னர் தலத்தைப் பார்வையிட்ட 'இலண்டன் டெய்லி ரெலிகிறாப்' நிருபர் - பெயர் 'ஸ்டீபன் பாபர்' ஆக இருக்க வேண்டும் -**



**"தமிழர்களின் முதற் பழிவாங்கற் சம்பவம் இது" என்று வர்ணித்தார். இது வரலாறு.**

ஓவியம்: T.S. Bose

# அளவெட்டி தந்த அறிவுச் செல்வம்



**1969ம்** ஆண்டு நடைபெற்ற அருணோதயக் கல்லூரியின் 75ஆவது ஆண்டு விழாவின்போது வெளிவந்த 'அருணோதயம்' மலரில் 'அளவெட்டி தந்த அறிவுச் செல்வம்' என்ற தலையங்கமுடைய ஒரு கட்டுரை இருக்கிறது. அதை எழுதி மலருக்கு உபகரித்தவர் திருநெல்வேலிச் சைவாசிரிய கலாசாலையில் நீண்ட காலம் தமிழ்ப் பேராசிரியராயிருந்த பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளை அவர்கள். 'அளவெட்டி தந்த அறிவுச் செல்வம்' என்று பண்டிதமணி குறிப்பிட்டது சைவாசிரிய கலாசாலையில் 1930 முதல் 1957 வரை உப அதிபராயிருந்த திரு. பொ. கைலாசபதி அவர்களையேயாகும். திரு. கைலாசபதி அவர்கள் நீண்டகாலம் திருநெல்வேலியிலேயே வாழ்ந்தார். 1957இல் ஓய்வுபெற்றபின் தமது சொந்த ஊராகிய அளவெட்டியில், கல்லூரிக்கு அருகாமையில் நரசிங்கவைரவர் கோயிலுக்கு முன்னால் இருக்கிற வீட்டில் வசித்து வந்தார். 1961 நவம்பரில் இறைவனடி சேர்ந்தார்.

அக்காலத்தில் தாய்நாட்டிலும் சேய்நாட்டிலும் தமிழறிவில் தமக்கு ஒப்பாரும் மிக்காரும் இன்றித் திகழ்ந்த சுன்னாகம் குமாரசாமிப்புலவர், ஆறுமுகநாவலரின் பெறாமகனும் மாணவனுமாகிய நல்லூர் த. கைலாசபிள்ளை, வித்துவான் சுப்பையாபிள்ளை ஆகியோரிடம் முறைப்படி தமிழ் கற்றவர் பண்டிதமணி அவர்கள். திரு. கைலாசபதி அவர்கள் தமிழ்ப் பாடசாலையில் 7ஆம் வகுப்புவரை படித்தபின் ஆங்கிலம் படிக்கத் தொடங்கி இலண்டன் பல்கலைக்கழக விஞ்ஞானப் பட்டதாரி ஆனவர். 1934ஆம் ஆண்டு ஒரு விடுமுறைக்காலத்தில் இருவரும் கீரிமலையில் கிருஷ்ணபிள்ளை மடத்தில் சில நாட்கள் தங்கியிருந்தார்கள். பண்டிதர், உப அதிபரிடம் ஆங்கிலம் படிப்பதற்காகவும் உப அதிபருக்குத் தொல்காப்பியம் என்னும் மிகப்பழைய தமிழ் இலக்கணத்தைச் சொல்லிக் கொடுப்பதற்காகவுமே அங்கு போயிருந்தார். பண்டிதர் பரீட்சைக்குத் தான் படித்த தொல்காப்பியக் குறிப்புகளை விரித்து வைத்துக் கொண்டு பண்டிதர் முதல் நாட் பாடத்தை ஆரம்பித்தார். உப அதிபர் இடைமறித்துத் தொல்காப்பியம் பற்றி அவருக்குக் கூறத் தொடங்கினார். "அன்று தொடக்கம் இன்று வரை நான் உப அதிபரிடம் தமிழ் படித்துக் கொண்டிருக்கிறேன்" என்று உபஅதிபர் ஓய்வு பெற்ற நாட்களில் பண்டிதமணி கூறியிருக்கிறார். அன்றியும் "மதிப்புக்குரிய எனது தமிழாசிரியர்களிடம் நான் படித்தது நூல்களின் சொற்பொருளைத்தான். நூல்களின் உண்மையான உட்பொருளை (அது இறைச்சிப் பொருள் எனவும் வியஞ்சகம் எனவும் கூறப்படும்) நான் அறிந்தது உப அதிபரிடந்தான்" என்றும் பண்டிதமணி கூறியிருக்கிறார். ஆனபடியினாலேதான் பண்டிதமணி தமது வாழ்க்கையில் நிகழ்த்திய மிகப் பிரதானமான பேச்சில் (D.LITT பட்டம் கிடைத்த பொழுது யாழ் பல்கலைக்கழகத்தில் பேசிய பேச்சு) உபஅதிபரைப் பற்றியே பேசியிருக்கிறார். 1978ஆம் ஆண்டு இலங்கைப் பல்கலைக்கழகம் "இலக்கிய கலாநிதி" (D.LITT) என்னும் விருதை வழங்கிப் பண்டிதமணியைக் கௌரவித்தது. இலங்கைப் பல்கலைக்கழக வேந்தராகிய ஜனாதிபதி கொழும்பில் வழங்கிய அப்பட்டத்தைப் பண்டிதமணி கொழும்பு சென்று நேரில் பெற்றுக் கொள்ள முடியாமலிருந்தமையால், அப்பொழுது யாழ் வளாகத் தலைவராயிருந்த பேராசிரியர் சு. வித்தியானந்தன் பெற்றுக் கொண்டு வந்து யாழ் வளாகத்தில் இராமநாதன் மண்டபத்தில் எடுத்த பெருவிழாவில் வழங்கிக் கௌரவித்தார். பல அறிஞர்கள் பாராட்டுரை வழங்கினார்கள். பட்டத்தைப்பெற்றுக் கொண்டு பண்டிதமணி வழங்கிய பதிலுரையில் கூறியவை இவை:

இந்தப் பரமேஸ்வரா வளாகத்தை எண்ணும் போது ஒரு புத்துணர்ச்சி உண்டாகி விடுகின்றது. இவ்வளாகம் புண்ணியாத்மாவான மகா புனிதர் ஒருவரின் பாதங்கள் தீண்டிய இடம். என்னைப் பொறுத்த வரையில் இது ஒரு மகா புனிதஸ்தலம். "திரிகரண சுத்தியும் காரிய சித்தியும் அருள்வாய்" என்ற குறிக்கோள் மந்திரத்தோடு தோன்றியது பரமேஸ்வரா. 1923ல் அங்கே உயர்தர விஞ்ஞான வகுப்பு ஆரம்பிக்கப்பட்டது. அவ்வகுப்பிற் சேர்ந்து படிக்கும் பொருட்டு, மேற்குறிப்பிட்ட குறிக்கோள் மந்திரத்துக்கு நல்ல உதாரணம் என்று சொல்லத்தக்க ஒருவர் வந்து சேர்ந்தார். அவரே அந்த மகா புனிதர். அவரை இங்கே என் கண்கள் நிறையக் கண்டேன். 'கண்டனன் கற்பினுக் கணியைக் கண்களால்' என்கின்ற அநுமான் கூற்று நினைவுக்கு வருகின்றது.

அவர் நூதனமான ஒரு பிறவி. அவரது தோற்றம் பிரத்தியேகமானது. உயரம் அகஸ்தியரை நினைவு படுத்துவது. மிகமிக மிருதுவான

தேகம். எண்ணத்தக்க சில மயிர்களாலான குடுமி. மிக்க தேஜஸ். ஆழ்ந்த சிந்தனை. இவை ஓரளவு குறிப்பிடத்தக்கவை. வகுப்பிலும் வெளிவிடுதியிலும் தாமரையிலையில் நீர் போல் அவர் வாழ்ந்து வந்தார். காலம் பறந்தது. 1930ல் அவர் விஞ்ஞான பட்டதாரியாய்த் திருநெல்வேலிச் சைவாசிரிய கலாசாலையில் உப அதிபர் ஆனார். எனக்குப் பேரானந்தம். அவருடன் ஒருங்கு வாழும் பாக்கியமும் கிடைத்தது. கிடைத்தும் என்னை? அந்த மகானால் அடையக்கடவ பயனை அடைந்தாயா? என்று என்னை நானே இன்றும் கேட்டுக்கொண்டிருக்கிறேன். அவர் தர்மம் என்ற வாளின் கூர்மையில் சஞ்சரிப்பவராயிருந்தார். தம் தேவைக்கு மற்றவரை அவர் தீண்டுவதில்லை. குறிப்பறிந்து செய்பவரைத் தடுப்பதுமில்லை. எவனொருவன் மற்றவர்களைத் தீண்டாமல் வாழ்கிறானோ, அவன் மற்றவர்களால் தீண்டப்படான் என்பது அவர் கண்ட முடிபுகளில் ஒன்று.

அவர் இரவில் போசனத்தின் பின் பெரும்பாலும் தனியிடம் நாடிச் சென்று விடுவார். சில சமயம் விடிந்தும் வருவார். மனத்தோடு போரிடுபவராயிருந்தார்.

1934ல் மனத்தை வெற்றி கொண்டுவிட்டார் என்பதைப் பிற்காலத்திலே தான் அறிந்தேன். பரமாணுத்துணை மாசு மனத்திற் புகுந்தாலும் பெரிய உண்மைகள் மறைந்து பாழ்பட்டுவிடும் என்பது அவரது ஸ்திரமான கருத்து. மனம் மாசகன்று மனக்கண் திறந்தவர்கள் முன்னிலையில் வெளிக் கண்கள் படுகுருடுகள் என்பது தெட்டத் தெளியத் தெரிந்தது.

**முகத்துக் கண்கொண்டு காண்கின்ற மூடர்காள்**
**அகத்துக் கண்கொண்டு காண்பதே ஆனந்தம்.**

என்பது திருமந்திரம். அகத்துக்கண் - மனக்கண். மனக்கண் வெளித்தவர்கள் புத்தகங்களைப் படிக்கிற முறையே வேறு. ஒரு பக்கத்தில் ஒரு சொல் வாசித்தாற் போதும். அத்தியாயங்களின் தலையங்கங்களே போதியனவாகலாம்.

அவரை ஒரு கலைக் களஞ்சியமாகவே பாவித்தேன். அருமை தெரியவில்லை. அவர் ஒரு ஏலாவாளி. ஏலாவாளிகள் சமயப் போக்குள்ளவர்களாய்க் காலங் கழிக்கிறார்கள் என்ற எண்ணமே எனக்கிருந்தது.

தேவைகளைப் பூர்த்தி செய்வதற்கு அந்த மகானைப் பயன் படுத்திக் கொண்டு, ஜனநாயக உலகில் பறந்து கொண்டிருந்தேன். பெருங் கண்டனக்காரன் என்ற பழிச் சொல்லும் எனக்குக் கிடைத்தது. அஞ்ச வேண்டியதற்கும் அஞ்சாத முரட்டுப் போக்கும் போதியளவு இருந்தது.

1942ஆம் ஆண்டளவில் வாசிப்புக்கள் போய்ச் சிந்தனை உலகில் அவர் ஆழ்ந்திருந்தார். அப்பொழுது தோல்விகளின் மேல் தோல்விகள் எனக்குக் கிடைத்தன. அதன் பயனாக அந்த முனிவரை மெல்ல அணுகினேன். அவர் சொல்லுவது எனக்கு எட்டவில்லை.

**மகட்குத் தாய்தன் மணாளனோ டாடிய**
**சுகத்தைச் சொல்லென்றால் சொல்லுவ தெங்ஙனே**

என்பது மேற்குறிப்பிட்ட திருமந்திரத்தின் பிற்பாகம். அதுதான் நினைவுக்கு வருகின்றது. எட்டாத போதும் அவர் சொல்லுவதை எழுதுவதென்று துணிந்தேன். அவர் தமது சாதனைக்கோ என்னவோ சொல்லிக் கொண்டேயிருப்பர். பத்து வீதத்துக்கு மேல் எனக்கு விளங்குவதில்லை. ஏன் இவற்றைச் சொல்லுகிறார் என்று எண்ணுவதுமுண்டு.

சில சமயம் ஒரு விக்கல் எழுந்து தடைசெய்யும். அப்பொழுது மௌனமாய் விடுவார். சில கருத்துக்களைக் கிரகிக்கப் பெரிய கணித அறிவு தேவையாயிருந்தது. நல்ல வேளை கணிதம் வல்ல இருவர் சமயப் போக்குள்ளவர்கள் அவரைத் தொடர்ந்து அந்தக்கரண விருத்திகளை விளக்கும் படங்கள் வரைந்ததுண்டு. "அப்படங்களுக்கு விளக்கந்தர முடியுமா?" என்று விஞ்ஞான கலாநிதியான பேராசிரியர் ஒருவர் வினாவியதுண்டு. அப்பொழுது கணித மகாமேதையான இராமாநுஜத்தை அவருக்கு ஞாபகப்படுத்த நேர்ந்தது. பாரிய கணக்குகள் இராமாநுஜத்துக்கு மனக்கணிதமாயிருக்கும். உடனே மறுமொழி சொல்லிவிடும். நூறுபடி போட்டுத்தான் அந்த மறு மொழியின் உண்மையைக் கணித மேதைகள் ஒருவாறு விளங்கிக் கொள்ளமுடியும். அப்படியும் முடியாத கணித முடிபுகளை விளங்கிக் கொள்ள முடியாதாயினும், அவற்றைப் பேணிப் பாதுகாத்து வைத்திருக்கின்றார்கள்.

இவ்வாறேதான் இம் மகானின் சிந்தனைகளும் பரம உண்மைகள். பேணிப்பாதுகாத்து வைக்க வேண்டியவைகள்.

இவ்வளவு தூரம் அந்த மகானைப்பற்றிச் சொல்லுவதன் காரணம் வெளிப்படை. பரமேஸ்வரா வழங்கிய தத்துவ ஞானியைப் பற்றி வேறெங்கேதான் சொல்லுவது?
இவ்வளாகம் சமய பீடத்தின் ஓர் அங்கமாக அவரது தத்துவ ஞான சரித்திரத்தையும் ஆயிரக்கணக்கில் அவர் கண்ட உண்மைகளையும் ஏற்றவாறு அமைத்துப் பாதுகாத்துப் பேணுவது சாலவும் நன்று என்பது என் தாழ்மையான அபிப்பிராயம்.

அவரது சிந்தனைகள் எவ்வித சிக்கல்களையும் முட்டின்றி விடுவிக்கக் கூடியவைகள். அவரது சரித்திரமும் வெளிப்படையான சில கருத்துக்களுமே மனக்கவலை மாற்றும் மருந்துகளாய் அமையும். ஜனநாயக அலைகள் தாக்காமலே வாழ்க்கைக்கு வழிகாண உதவும்.

இவ் வளாகத்திலும் ஏனைய வளாகங்களிலும் பயிலும் தமிழிலக்கிய மாணவர்களுக்குச் சிறப்பாகவும், ஏனையவர்களுக்குப் பொதுவாகவும் தமிழ் பற்றி ஒன்று சொல்ல விரும்புகிறேன்.

இவ் வளாகத்தோடு தொடர்புபட்டவரான அந்த மகான் தமிழிலே பதினெட்டு வகைத் தமிழ் சொல்லுகின்றார். முதலாவது தமிழ் வாகடத் தமிழ். அப்பால் புராணத் தமிழ், சிவத்தமிழ் என்றிங்ஙனம் பலவேறு வகை சொல்லுகிறார். அவற்றுள் சங்கத் தமிழ் என்பதும் ஒன்று.

இப்பொழுது இங்கே வழங்கிய பாராட்டுரைகளை அந்த மகானுக்கே அர்ப்பணம் செய்கின்றேன். பாராட்டியவர்களுக்கும் சபையோருக்கும் அன்பார்ந்த வணக்கம்.

■ ■ ■

# கைலாசபதியின் மெய்ப்பொருள் உலகம்



**கொலைகளில் பெரிய கொலை அறிவுக் கொலை.
கொன்று சடமாக்கிய அறிவு ஒருவனை உயர்த்துவது எங்ஙனம்?**

***-பொ. கைலாசபதி***

மகான் என்றும் நடமாடும் கலைக் களஞ்சியம் என்றும் பெரிய சிந்தனையாளர் என்றும் யாழ்ப்பாணத்துக் கல்விக் கலைஞர்களால் போற்றப்பட்டவர் பொ. கைலாசபதி அவர்கள். திருநெல்வேலிச் சைவாசிரிய கலாசாலையில் இருபத்தெட்டு வருடங்கள் உப அதிபராக அவர் பணிபுரிந்தார்.

பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளையின் மெய்யியல் சிந்தனைகளுக்கு மூலம் கைலாசபதி அவர்களின் ஆழ, அகலம், விரிவு அனைத்தும் ஒருங்கே வாய்க்கப்பெற்ற சிந்தனைகளாகும். கைலாசபதி அவர்கள் தனக்கு நடத்திய பாடங்கள் "ஆயிரத்துக்குக் குறையா" என்று எழுதுகிற பண்டிதமணி, கைலாசபதி அவர்களை நெற்றிக் கண்ணர் என்று குறிப்பிடுவார். தமிழ் அறிவுலகத்தின் கவனம் கைலாசபதி அவர்களை நோக்கி இன்னும் திரும்பவில்லை. அதற்கொரு காரணம் கைலாசபதி அவர்களின் சிந்தனை வெளித்தெரிய வரவில்லை என்பதுமாகும்.

கைலாசபதி அவர்களின் மெய்யியல் சிந்தனைகள் அவரால் ஒரு போதுமே நூல் வடிவில் எழுதப் பெறாதவை. வாய்மொழியாகக் கைலாசபதி அவர்களிடம் பாடங் கேட்டவர்களுக்கு ஆற்றொழுக்குப் போல வழங்கப்பட்டவை. சைவாசிரிய கலாசாலையில் தன்னுடைய மெய்யியல் சிந்தனைகளைப் பற்றிய பாடங்கள் எதனையும் அவர் நடத்தியதாக இல்லை. தன்னை விரும்பி வந்து பாடங் கேட்ட சிலருக்கு அவர் தனிப்பட்ட முறையில் வழங்கியதே அவருடைய சிந்தனைகள். இந்த விடயத்தை இவரிடம் பேசலாம் என்று அவருக்குத் தோன்றுகிறபோது அவ் விடயம் பற்றி ஆழமாகப் பேசுவார். இப்படிப் பாடங் கேட்டவர்களுள் பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளை, அளவெட்டி ஆசிரியர் ச. பரநிருபசிங்கம், பண்டிதர் வேதநாயகி, காசிப்பிள்ளை உபாத்தியாயர், ஆசிரியர் துரைரத்தினம் ஆகியோர் முக்கியமானவர்கள். கைலாசபதி அவர்களிடம் கேட்ட பாடங்கள் குறித்துப் பண்டிதமணி எழுதி எடுத்த குறிப்புகள் முப்பத்தொரு கையேடுகளில் இருந்தன. அவற்றைத் தொகுத்துப் பதிப்பித்து **பொ. கைலாசபதி அவர்களின் சிந்தனைகள்** என்ற நூலாக யாழ்ப்பாணப் பல்கலைக் கழகம் 1994 இல் வெளியிட்டுள்ளது. இந்த நூலின் பதிப்பாசிரியர்கள் பேராசிரியர் சு. சுசீந்திரராசாவும் ஆசிரியர் ஆ. சபாரத்தினமும் ஆவர். எழுநூறு பக்கங்களில் பொ. கைலாசபதி அவர்களின் சிந்தனை விரிந்து கிடக்கிறது. இவற்றைவிட கைலாசபதி அவர்கள் எழுதியவை என இப்போது கிடைக்கப் பெறுபவை, 1933ஆம் ஆண்டு வெளியான யாழ்ப்பாணத்துக் கலாநிலையத்தின் வெளியீடாகிய 'ஞாயிறு' இதழ்களில் அவர் எழுதியுள்ள 'தமிழகத்துத் தருக்க நூல் வளர்ச்சி' எனும் கட்டுரை, மற்றும் 1934ஆம் ஆண்டு வயாவிளான் வாலிப தூதனில்

வெளியான 'உண்மைச் சமயமும் கட்டுச் சமயமும்' எனும் கட்டுரை.

கைலாசபதி அவர்களின் மெய்யியல் சிந்தனைகளைப் பற்றிய சுருக்கமான ஆனால் தெளிவான ஒரு கட்டுரை, அவரது சிறப்பு மாணாக்கரான ஆசிரியர் ச. பரநிருபசிங்கம் அவர்களால் 1991ஆம் ஆண்டு யாழ்ப்பாணப் பல்கலைக் கழகத்தில் வாசிக்கப்பட்டது. பின்னர் இது, **பொ. கைலாசபதியும் பொருளாராய்ச்சியும்** என்ற தலைப்பில் பல்கலைக்கழக் கலைப் பீட வெளியீடாக 1994இல் பதிப்பிக்கப்பட்டது. கைலாசபதி அவர்களின் மெய்யியல் சிந்தனைகளுக்கு ஒரு நுழைவாயிலாகக் கொள்ளத் தக்கது இந்த நூல். கைலாசபதி அவர்களின் சிந்தனை மையத்தைக் கோவைப்படுத்திச் சாமானியர்களும் கிரகிக்கும்படி எழுதப்பட்டுள்ளது ஆசிரியர் ச. பரநிருபசிங்கத்தின் கட்டுரை. இந்த நூலின் வழி நின்று கைலாசபதி அவர்களின் சிந்தனைகளை விரிவாகவும் விளக்கமாகவும் எழுதுவதென்பது ஒரு பெரிய பணி. அந்தப் பணி இப்போதுதான் துவங்கியிருக்கிறது. 'பொ. கைலாசபதி அவர்களின் சிந்தனை' என்று வெளியாகியிருக்கும் நூலில் கிடைக்கக் கூடிய குறிப்புக்களை வாசிக்கிற ஒருவருக்கு கைலாசபதி அவர்களின் சிந்தனையின் ஆழம், விரிவு, தீட்சண்யம் என்பன பிரமிப்புத் தருவன. பண்டிதர் மு. கந்தையா அவர்கள் எழுதியுள்ள **கைலாசபதி ஸ்மிருதி** எனும் நூல் யாழ்ப்பாணப் பல்கலைக் கழக வெளியீடாக அண்மையில் வந்துள்ளது என்பதும் குறிப்பிடத்தக்கது.

தூய கணிதம், பிரயோக கணிதம், தருக்கவியல் என்பனவே கைலாசபதியவர்கள் படித்துப் பட்டம் பெற்ற பாடங்கள். எனினும் வடமொழி, தமிழிலக்கண இலக்கியங்கள், சைவ சித்தாந்தம், ஆங்கிலம், மற்றும் மேலைத் தேயச் சிந்தனைகள், புத்தம், சமணம் போன்ற பல்வேறு துறைகள், தத்துவங்கள் பற்றிய கைலாசபதி அவர்களின் புலமை ஆழமானது. ஓரிரு வசனங்களில் அல்லது ஓரிரு சொற்களில் தனது கருத்தையும் விமர்சனத்தையும் தாக்கமாகவும் தெளிவாகவும் சொல்லிவிடுகிறார் அவர்.

"அன்புக்கு விரோதமான அறிவு, விஞ்ஞான அறிவு" என்பார் அவர்.

"பொருளைப் பொருளாகக் காண்பது ஆரியம்; அன்பு நடை தமிழ்; அன்புப் பிழை தமிழ்த் திரிபு" என்று கைலாசபதி அவர்கள் சொல்கிறபோது இக் கூற்றுக்களுக்குப் பின்னால் இருக்கக் கூடிய ஆழ்ந்த சிந்தனையையும் சீரிய பகுப்பாய்வையும் நாம் உய்த்துணர்ந்து கொள்ள முடியும்.

காந்தி, அரவிந்தர், புத்தர், போன்றோர் பற்றிய கைலாசபதியவர்களின் சிந்தனைகளும் விமர்சனமும் கூரியது மட்டுமன்றி அவருடைய விமர்சனத் தளங்களின் மெய்யியல் பலத்தையும் காட்டி நிற்கின்றன. விவாதத்திற்குரிய பல சிந்தனைகளையும் பதித்து விட்டுச் சென்றிருக்கிறார் கைலாசபதி அவர்கள்.

குடத்துள் விளக்காக இருந்த பல சிந்தனையாளர்கள், மெய்யியலாளர்களின் பணியும், எழுத்தும், இனங்காணப்பட்டு, மீள்வாசிப்புச் செய்யப்படுகிற காலம் இதுவாகும். அந்த வகையில் தமிழ் நாட்டில் பண்டிதர் அயோத்திதாசரின் சிந்தனைகள் பெருந்திரட்டாக இரு தொகுதிகளில் நூல் வடிவம் பெற்றுள்ளன. எங்களுக்குக் கிடைத்திருக்கிற கைலாசபதியவர்களின் சிந்தனைத் துளிகளைத் தொகுத்து விளக்கங்களோடு விரிவாகப் பதிப்பிப்பது அவசியமான ஒரு தேவையாகும்.

அவருடைய சிந்தனைத்துளிகள் சிலவற்றை இந் நூலில் ஆங்காங்கே தூவியிருக்கிறோம். அவை சிறு பொறிகள் என்று எண்ணத் தக்கவை. அவற்றுக்குப் பெருங்காட்டையும் எரித்துத் தீர்க்கிற வல்லமை உண்டு.

## கைலாசபதியின் சிந்தனைத் துளிகள்:

- உணர்ச்சி - கருத்து - அறிவு, மூன்றின் கூட்டே பாஷை.
  உணர்ச்சி மிகுதிப்பட்டது தமிழ்;
  கருத்து மிகுதிப்பட்டது ஆரியம்.
- அவித்துவான் இருளில் கிடக்கிறான்;
  வித்துவான் அதிலும் மோசமான இருளில் விழுகிறான்.
  வேதாந்தி சத்தியத்தைக் கொல்கிறான்;
  சித்தாந்தி சத் - தைக் கொல்கிறான்.
- உவந்து ஊட்டுவது பெரிய காரியம்.
- பாலைக்கு நிலம் இல்லை
  பந்தங்களை விட்டுப் பிரிவதே பாலை.
- புத்தம் சட உலக வர்ணனை போன்றது;
  முழுதும் பொய் என்பது மாயா வாதம்;
  நமக்குச் சாதகம் என்ன என்று சிந்திப்பது சைவம்.



**"பொருளைப் பொருளாகக் காண்பது ஆரியம், அன்பு நடை தமிழ். அன்புப் பிழை தமிழ்த் திரிபு" என்று கைலாசபதி அவர்கள் சொல்கிறபோது**



**இக் கூற்றுக்களுக்குப் பின்னால் இருக்கக் கூடிய ஆழ்ந்த சிந்தனையையும் சீரிய பகுப்பாய்வையும் நாம் உய்த்துணர்ந்து கொள்ள முடியும்.**

# இசை உலகின் முடிசூடா மன்னன்

## அளவையூர் தட்சணாமூர்த்தி

அளவையூருக்குப் புகழ் சேர்த்துத் தந்தவர்களில் அளவையூரில் வாழ்ந்த, வாழுகின்ற மங்கல இசைவித்துவான்கள் முதலிடம் வகிக்கின்றனர். இவ் வரிசையில் இணுவிலில் பிறந்து, அளவையூரில் வாழ்ந்து இறையருள் பெற்ற, ஈடு இணையற்ற தவில் மேதை "லயஞான குபேர பூபதி" தட்சணாமூர்த்தி போற்றுதற்குரியவர். இவர் இணுவிலில் வாழ்ந்த பிரபல இசைக் குடும்பமாகிய விஸ்வலிங்கம் தவிற்காரருக்கும் ரத்தினம் அம்மாளுக்கும் 26.08.1933ல் பிறந்தார். இவரை ஒரு சிறந்த தவில்மேதையாக்க வேண்டும் என்று விரும்பிய தந்தை இளவயதிலேயே இவருக்கு தவில் கற்றுக் கொடுக்கலானார். அன்று வாழ்ந்த பிரபல தவில் வித்துவான்களாகிய என். சின்னத்தம்பி, பி.எஸ். ராஜகோபால், காமாட்சி சுந்தரம் பிள்ளை ஆகியோரிடம் அனுப்பித் தவில் பயிற்றுவித்தார். ஒரு நாளைக்கு 16 மணிநேரம் சாதகம் செய்வித்தார். தட்சணாமூர்த்தி எட்டு வயதினிலேயே கச்சேரி செய்ய ஆரம்பித்து விட்டார்.

இந்தியாவில் உள்ள பிரபல தவில் மேதைகளிடம் தனது மகன் வித்துவத்துவம் பெற வேண்டும் என எண்ணிய தந்தை, தட்சணாமூர்த்தியை அக்காலத்தில் பிரபல தவில் மேதையாகிய நாச்சியார் கோவில் ராகவப் பிள்ளையிடம் குருகுல வாசம் செய்து தவில் பயிலச் செய்தார். சுமார் ஒன்றரை வருட காலப் பயிற்சியின் பின் இவரது குரு "உனக்கு இனி சொல்லித் தர என்னிடம் ஒன்றும் பாக்கியில்லை. ஒரு அபிப்பிராயம் காதிலே விழுவதற்குள் உனது கைகளில் அது ஒலித்து விடும்படியான கடவுளின் வரப்பிரசாதம் பெற்ற நீ ஊருக்குத் திரும்பலாம். மகோன்னதமான பெயரும் புகழும் உன்னை வந்து சேர அதிக காலம் இல்லை" என ஆசீர்வதித்து இலங்கைக்குத் திருப்பி அனுப்பி வைத்தார். இக் காலத்தில் இவருடைய தந்தை இறைவனடி எய்தியதனால் இவர் மூத்த சகோதரி கணேஷ் குடும்பத்துடன் வாழ்வதற்காக அளவையூருக்குக் குடிபெயர நேரிட்டது.

இவர் பிரபல தவில் வித்துவான்களாகிய யாழ்ப்பாணம் காமாட்சி சுந்தரம்பிள்ளை, இணுவில் சின்னத்தம்பி, பி. எஸ். ராஜகோபால், இந்தியாவிலிருந்து வருகை தந்த மிகப்புகழ் பெற்ற தவிற்காரர்களாகிய நாச்சியார் கோவில் ராகவப்பிள்ளை, திருமுல்லைவாயில் "லயபிண்டம்" முத்துவேற்பிள்ளை, திருவிழந்தூர் ராமதாஸ்பிள்ளை, வலங்கைமான் சண்முகசுந்தரம்பிள்ளை, வடபாதி மங்கலம் தட்சணாமூர்த்திப்பிள்ளை, கும்பகோணம் தங்கவேற்பிள்ளை, நீடா மங்கலம் சண்முக வடிவேல் முதலியோருடனும், பிரபல நாதஸ்வர வித்துவான்களாகிய யாழ்ப்பாணம் முருகையாபிள்ளை, சீர்காழி திருநாவுக்கரசுப்பிள்ளை, நாதஸ்வர உலகிலே ஜோதியாக விளங்கிய திருவாடுதுறை ராஜத்தினம் பிள்ளை, திருவெண்காடு சுப்பிரமணியம் பிள்ளை, குழிக்கரைப் பிச்சையாபிள்ளை, காரைக்குறிச்சி அருணாசலம்பிள்ளை, டாக்டர். ஷேக். சின்ன மௌலானா, திருவிடை மருதூர் வீரஸ்வாமிப் பிள்ளை, திருவீழிமழலை கோவிந்த ராஜபிள்ளை சகோதரர், செம்பொன்னாறு முத்துக் குமாரசாமிப்பிள்ளை சகோதரர்கள், சிதம்பரம் ராதா கிருஷ்ணபிள்ளை, திருமெய்ஞ்ஞானம் பல்லவி நடராஜ சுந்தரம் பிள்ளை, தருமபுரம் கோவிந்த ராஜபிள்ளை, கோட்டூர் ராஜரத்தினம் பிள்ளை, நாமகிரிப்பேட்டை கிருஷ்ணண், வேதாரணியம் வேதமூர்த்தி, மதுரை சேதுராமன் சகோதரர்கள், பி. எஸ். ஆறுமுகம் பிள்ளை, அளவையூர் என். கே. பத்மநாதன், எம். பி. பாலகிருஷ்ணன், எம். பஞ்சாபிகேசன் முதலியோருக்கும் தவில் வாசிக்கும் வாய்ப்பு பெற்றவர். மேற்குறிப்பிட்ட இசை ஞானிகளுடன் பல தடவைகள் தவில் வாசித்துப் பெற்ற அனுபவத்தால் இவருடைய ஞானம் மெருகூட்டப்பெற்று பிரகாசிக்கத் தொடங்கியது.

மேற் கூறப்பட்ட தவில் நாதஸ்வர மேதைகள் எமது ஊர் ஆலய உற்சவங்களுக்கு வந்திருந்த போது, தட்சணாமூர்த்தி அவர்கள் இவர்களுடன் தவில் வாசித்ததையும், அவர்களால் புகழ்ந்து பேசப்படுவதையும் அளவையூரில் வாழ்ந்து அனுபவித்தவர்கள் உண்மையில் பேறுபெற்றவர்கள்.

1959ஆம் ஆண்டு மார்கழித் திங்களில் இவர் இந்தியாவுக்குச் சென்ற பொழுது, பல சபாக்களில் இசைக்கச்சேரிகள் நடந்து கொண்டிருந்தன. தட்சணாமூர்த்தி இந்தியாவில் இருப்பதை அறிந்த இவருடைய உயிர் நண்பரான நீடா மங்கலம் சண்முக வடிவேல் அன்று இரவு சென்னைத் தமிழ்ச் சங்கத்தால் நடத்தப்படும் இசை விழாவில் காரைக்குறிச்சி அருணாசலம் பிள்ளையின் நாதஸ்வரக் கச்சேரியில் தன்னுடன் தவில் வாசிக்கும்படி கேட்டுக் கொண்டதுமல்லாமல், அன்றைய கச்சேரியை ஆரம்பித்து வைக்கும் கௌரவத்தையும் கொடுத்தார். தட்சணாமூர்த்தியின் தவில் ஒலிக்கத் தொடங்கியதும் இசை மேதைகளாலும், இசைப் பிரியர்களாலும் நிறைந்து வழிந்த மண்டபம் "சபாஷ்" கூறி கரகோசம் செய்தது. வழக்கமாக 12 மணிக்கு முன் ஒலி பரப்பை நிறுத்திக் கொள்ளும் அகில இந்திய வானொலி, தட்சணாமூர்த்தி, சண்முக வடிவேல் தவில்காரர்களின் லயவின்யாசத்தின் விறுவிறுப்பால் கவரப்பட்டு கச்சேரி முடியும் வரை அதனை ஒலி பரப்பி இவர்களைக் கௌரவித்தது மறக்க முடியாத ஒரு சம்பவமாகும்.

தட்சணாமூர்த்தி என்ற இறையருள் பெற்ற, அருமை மிக்க, விலை மதிப்பற்ற, தவில் பொக்கிஷத்தைத் தமிழ் நாட்டுக்கு அறிமுகம் செய்து வைத்த பெருமை வெள்ளை உள்ளம் படைத்த நீடா மங்கலம் சண்முக வடிவேலு அவர்களுக்கு மட்டுமே உண்டு. இவர்களுடைய நட்பு, தெய்வீகமானது. அக் காலத்தில் இலங்கையிலிருந்து இந்தியாவுக்கு அழைக்கப் பட்டுக் கௌரவிக்கப்பட்ட இசைக் கலைஞர்களுள் மூத்தவர், சங்கீத பூஷணம் வித்துவான் சண்முகரத்தினம் அவர்கள் (பரமேஸ்வராக் கல்லூரி ஆசிரியர்). அடுத்தவர், தவில் மேதை தட்சணாமூர்த்தி அவர்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

இவர் அளவையூரில் வாழ்ந்த செல்லத்துரை தவிற்காரரின் மகளான மனோன்மணியைக் காதலித்து கைப் பிடித்தார். இவர்களுக்கு இரண்டு பெண்களும் மூன்று ஆண் பிள்ளைகளும் உளர். இவர் சரித்திரம் காணாத உயர்வை எட்டிக் கொண்டிருப்பதை ஜீரணிக்க முடியாத சக கலைஞர்கள் பலரால் மறைமுகமான தொல்லைகளுக்கு ஆட்பட நேர்ந்தது. இதனால்



**" உனக்கு இனி சொல்லித் தர என்னிடம் ஒன்றும் பாக்கியில்லை. ஒரு அபிப்பிராயம் காதிலே விழுவதற்குள் உனது கைகளில் அது ஒலித்துவிடும் படியான கடவுளின் வரப்பிரசாதம் பெற்ற நீ ஊருக்குத் திரும்பலாம். மகோன்னதமான பெயரும் புகழும் உன்னை வந்து சேர அதிக காலம் இல்லை."**

மனவேதனையும் விரக்தியுமடைந்த தட்சணாமூர்த்தி தனது குடும்பத்துடன் இந்தியாவிற்கு இடம் பெயர்ந்து வசிக்கலானார். இந்தியாவில் வசித்த காலமே இவருடைய வாழ்வின் பொற்காலமாகும். எம்மவர்கள் இந்தியாவுக்குச் சென்று வாழவும் கலையை வளர்க்கவும் பாலம் அமைத்து அறிமுகம் செய்து வைத்த பெருமையும் தட்சணாமூர்த்தி அவர்களுக்குச் சேரும்.

இந்தியாவிலுள்ள இசை விமர்சகர் ஒருவரால் மங்கல இசை மன்னர்களின் வரிசையில் அளவெட்டித் தட்சணாமூர்த்தியைப் பற்றிக் கூறப்பட்டவை இதோ:

தவில் வித்வான்களின் திறமை பலவகைப்பட்டது. சிலருக்கு லய சம்பந்தமான கணக்குகளில் நிறைந்த புத்திசாலித்தனமிருக்கும். ஆனால் கரத்திலே வேகம் அல்லது பேச்சு அதிகம். ஆனால் விவகாரப் புலமை குறைந்து காணப்படும். சிலர் உருப்படிகளுக்குப் பொருத்தமாக வாசிப்பதில் தேர்ந்திருப்பார்கள். அதிநுட்பங்களில் போதிய திறமையிருக்காது. இந்த எல்லா அம்சங்களையும் முழுமையாகப் பெற்ற தவிற்கலைஞர்களை விரல் விட்டு எண்ணிவிடலாம். அவ்வகைப்பட்ட மிகச்சிலரில் நீடாமங்கலம் மீனாட்சிசுந்தரம் பிள்ளைக்கு அடுத்துச் சொல்லக்கூடிய ஒரே வித்துவானாகத் திகழ்ந்தவர் தட்சணாமூர்த்தி. கடுமையான அசுர சாதகமும் பலவகைப்பட்ட திறமை செறிந்த நாதஸ்வரக் கலைஞர்கள் பலருக்கு வாசித்து வாசித்துப் பெற்ற அனுபவமும், இவற்றுக்கெல்லாம் மேலாக இறைவனின் அருட்கொடையும் தட்சிணா மூர்த்திக்கு ஈடிணையற்ற பெரும் ஸ்தானத்தைத் தேடித்தந்தன. வயதிலோ, அனுபவத்திலோ தன்னைவிட மூத்தவர்களுக்கு மிகுந்த மரியாதை கொடுக்கும் பண்பாளராக விளங்கிய தட்சணாமூர்த்தி எப்பேர்ப்பட்ட லயவிசேடங்களையும், எந்தத் தாளத்திலும், எத்தனை வேகத்தில் வேண்டுமானாலும் மணிக்கணக்கில் வாசிக்கும் வல்லமை பெற்றிருப்பவர்.

தனக்கு விருப்பமான தாளத்தில் தனக்குச் சௌகரியமான காலப்பிரமாணத்தில் 'தனி' வாசிப்பவரல்ல அவர். நாதஸ்வரக்காரர் ராக ஆலா பனையின்போதோ, கீர்த்தனையிலோ அல்லது பல்லவியிலோ, எப்போது "லயவின்யாச"த்துக்கு இடமளிக்கிறாரோ, அப்போது அதே காலப் பிரமாணம் சிறிதும் சிதையாமல், நாணயத்துடன் தட்சிணாமூர்த்தி லயவின்யாசம் செய்வதே வழக்கம்.

"என்ன பல்லவி" என்று நாதஸ்வரக்கலைஞரிடம் முன்னதாகவே கேட்டுக் கொள்வது, "இன்ன" கீர்த்தனையில் லயவின்யாசம் கொடுக்குமாறு முன்பே தெரிவித்துக் கொள்வது - இவையெல்லாம் தட்சிணாமூர்த்தியிடம் என்றுமே காணப்பட்டதில்லை. சாதாரணமாகத் தட்சணாமூர்த்தி பங்குபெறுகின்ற லயவின்யாஸ நிகழ்ச்சிகள். குறைந்தது இரண்டு மணிநேரத்துக்காவது அமையும். ஒரு சமயம் புதுக்கோட்டையில் திருமெய்ஞ்ஞானம் நடராஜ சுந்தரம் ஐந்துமுறை தட்சணாமூர்த்தி லயவின்யாசம் நிகழ்த்தினார். அன்றைய தினம் முதல் லயவின்யாசம் "இந்த பராகா" (நாதநாமக்கிரியா) என்ற கீர்த்தனையின் அதி துரித கால ஸ்வரப்பிரஸ்தாரத்துக்குப் பின்பு நடைபெற்ற சிறப்பினைக் கேட்டுய்த்தவர்களுக்கு அதுவொரு மறக்கமுடியாத லயவின்யாச நிகழ்ச்சியாகும். வடபாதி மங்கலம் தட்சணாமூர்த்திப்பிள்ளையும், யாழ்ப்பாணம் தட்சணாமூர்த்தியும் அன்று தவில் வாசித்தனர்.

கண்டமோ, சங்கீர்ணமோ, எந்தக் கதியை அமர்த்திக் கொண்டாலும் கடைசிவரை, மோஹரா, கோர்வையுட்பட அந்தக் கதிக்கான சொற்களைக் கொண்டே, தட்சணாமூர்த்தி முடிப்பார். சங்கீர்ண கதி, அவருக்கு மிகவும் விருப்பமானவொன்று. கடுமையான சந்தத் தாளங்களில் லயவின்யாசம் செய்வது அவருக்குத் தேனில் தோய்த்த பலாச்சுளை.

'சங்கீர்ணம்' என்ற தாளஜாதியை மகேந்திரவர்மபல்லவன் என்ற மன்னன் தோற்றுவித்ததாகவும், அதன் காரணமாகச் சங்கீர்ண ஜாதிப் புலி என்ற சிறப்புப் பெயர் பெற்றதாயும் கூறப்படும். தட்சணாமூர்த்தி, மற்றொரு மகேந்திரவர்மனாகப் பதினொரு அட்சரமுடைய தாளஜாதியை உருவாக்கிப் பலமுறை அதில் 'தனி' வாசித்திருக்கிறார். அரித்துவாரமங்கலத்தில் நடைபெற்றவொரு கச்சேரியில் இந்த ருத்ரகதியில் சுமார் மூன்று மணிநேரம் தட்சணாமூர்த்தி தவில் வாசித்ததைக் கேட்ட நாதஸ்வரத் தவில் வித்வான்களும், ரசிகர்களும் இந்தப் புதுமையான சிறப்பையும் தட்சணாமூர்த்தியின் மேதாவிலாசத்தையும், இயன்றளவிலும் புகழ்ந்து கூறுகின்றனர். இதைப் போன்றே, பதின்மூன்று மற்றும் பதினாறு அட்சரங்களைக் கொண்ட கதிகளையும் உருவாக்கி அவற்றில் மிகச் சரளமாகத் தவில் வின்யாசம் செய்வார் தட்சணாமூர்த்தி.

அவருடைய வாசிப்புத் திறமையைப் பரீட்சைக்குள்ளாக்க எண்ணி எத்தனையோ பல்லவி மேதைகள், எந்தக் கலைஞரும் எளிதில் புரிந்து கொள்ள முடியாத அளவுக்குக் கடினமான பல்லவிகைளத் தயார் செய்து கொண்டு வந்தபோதெல்லாம் தட்சணாமூர்த்தி ஒரு முறை அப்பல்லவியை காதில் வாங்குவார். மறுகணமே



**வழக்கமாக 12 மணிக்கு முன் ஒலி பரப்பை நிறுத்திக் கொள்ளும் அகில இந்திய வானொலி, தட்சணாமூர்த்தி, சண்முக வடிவேல் தவிற்காரர்களின் லயவிஞ்ஞாசத்தின் விறுவிறுப்பால் கவரப்பட்டு கச்சேரி முடியும் வரை அதனை ஒலி பரப்பி இவர்களைக் கௌரவித்தது மறக்க முடியாத ஒரு சம்பவமாகும்.**

அது அவரால் தயாரிக்கப்பட்ட பல்லவி போலாகிவிடும். திருமெய்ஞ்ஞானம் நடராஜசுந்தரம் பிள்ளை, தர்மபுரம் கோவிந்தராஜபிள்ளை போன்ற பல்லவி வல்லுனர்கள் தட்சணாமூர்த்திக்குக் கற்பூர மூளை என்று போற்றியிருக்கின்றார்கள். இரண்டுங்கெட்டான் காலப்பிரமாணத்திலும் தண்ணீர் பட்டபாடு என்பது போல் தட்சணாமூர்த்தி வாசிப்பதை எண்ணுகையில் எல்லாம் பிரமிப்பைத்தான் உண்டுபண்ணுகிறது என்று மூத்த நாஸ்வரக்கலைஞர் சிதம்பரம் ராதாகிருஷ்ணபிள்ளை வியந்து பாராட்டுவதுண்டு.

சேலத்தில் ஒரு இசைக்கலைஞர் வீட்டுத் திருமணம். மாப்பிள்ளை அழைப்பு நடைபெற்ற போது தட்சணாமூர்த்தியின் தவில் வாசிப்பைக் கேட்பதற்காகவே மங்களூர் ஐதராபாத் போன்ற நெடுந் தொலைவிலுள்ள ஊர்களிலிருந்து அழைப்பில்லாமலேயே சுமார் ஆறாயிரம் பேர் வந்து கூடிவிட்டனர். தவிலிசைவிருந்தோடு திருமணக்கூடத்து விருந்தையும் இவர்கள் சுவைத்ததன் விளைவாகக் காலை உணவு முதல் மற்ற நாட்களுக்கான அரிசி மளிகை முதலியவற்றை எல்லாம் விடியற்காலையில் அவசரமாகக் கடையைத் திறக்கச் செய்து வாங்கிவரவேண்டிய நிலையேற்பட்டதும் ஒரு விந்தையான சம்பவம்.

தட்சணாமூர்த்திக்கு தவில் வாத்தியம் யாருடையதாயினும், அல்லது எப்படிப்பட்டதாயினும் பரவாயில்லை. அதை வைத்துக்கொண்டே சிறப்பாக வாசித்துவிடுவார். இந்தியாவுக்கு வந்து போவது வழக்கம். அப்போதெல்லாம் பெரும்பாலும் விமானத்தில் தன் தவிலை எடுத்துக்கொண்டு வருவதில்லை. ஒரு சமயம் கேரள மாநிலம் தலைச்சேரிக்கு அருகிலுள்ள ஜகந்நாதர் கோவிலில் வாசிப்பதற்காக இலங்கையிலிருந்து தட்சணாமூர்த்தி வந்திருந்தார். அவருக்காகத் தவிலொன்றைத் தயாராக வைத்திருப்பதாகச் சொல்லியிருந்த கலைஞர்கள் சிலர் தம் வாத்தியம் திருப்தியாக இல்லை என்பதால் கொண்டு வரவில்லை. சீவேலியின்போது கோவிலைச் சேர்ந்த தவிற்கலைஞர் வாசித்துக் கொண்டிருந்த தவிலைக் கேட்டு வாங்கிக் கொண்டார் தட்சணாமூர்த்தி. இந்த தவிலில் மூட்டுக்கள் பிடி குறைவாக உள்ளன. கோவிலில் தினந்தோறும் வழிபாடுகளின் போது தட்டுவதற்கு மட்டுமே ஏற்றதான இந்த வாத்தியத்தை நீங்கள் வாசிப்பதா? என்று அந்தக் கோவிற்கலைஞர் சொன்னபோது, தட்சணாமூர்த்தி "பரவாயில்லை! எனக்கு இது போதும்" என்றுவிட்டார். மன்னார் குடி பரமசிவம் பிள்ளை என்ற நாதஸ்வரக்கலைஞர் மல்லாரியை வாசிக்கத் தொடங்கினார். எதிரிலிருந்த கலைஞர்களின் தவில் வாத்தியங்கள், அதிகமான பிடியுடன் கணகணவென்று ஒலியெழுப்பின. தட்சணாமூர்த்தியின் தவிலோ, மந்தமாகச் சொத்தென்ற ஓசையை எழுப்பியது. சுமார் அரை மணி நேரம் கழித்தபின் தட்சிணாமூர்த்தியின் தவில் கணகணவென்றும், எதிரிலிருந்த கலைஞர்களின் வாத்தியங்களைவிடப் பெருமளவிலும் ஒலிக்கத் தொடங்கியது. கோவிற்கலைஞருக்கு இது தாம் கொடுத்த தவில் தானாவென்ற ஆச்சரியம்.

குன்னியூர் பண்ணையார் வீட்டுத்திருமணம். மன்னார்க்குடியில் திருமெய்ஞ்ஞானம் நடராஜசுந்தரம் பிள்ளையின் மேளக்கச்சேரி. அவ்வூருக்குச் சென்றபின் ஒரு நண்பரிடம் தனக்குத் தவில் வேண்டுமெனக் கேட்டார் தட்சணாமூர்த்தி. அந்த நண்பருக்கோ தவிலைத் தரவேண்டுமென்ற ஆவல். ஆனால் வாத்தியம் அவருக்கே திருப்தியாக இல்லாதபோது தட்சணாமூர்த்திக்கு எவ்வாறு தருவது? "பரவாயில்லை. எனக்கு இதுபோதும்" என்ற தட்சணாமூர்த்தியின் வழக்கமான வார்த்தைக்குப்பின் அந்தத் தவில் கொண்டு வரப்பட்டது. ஆஹா! தட்சணாமூர்த்திக்கு எதிரே அமர்ந்துள்ள இளைஞரின் தவில் எப்படிக் கேட்கின்றது? இப்படிப்பட்ட பெருங் கூட்டத்தில் இந்தத் தவிலை வைத்துக் கொண்டா இவர் வாசிப்பது? இது தட்சணாமூர்த்தியின் ரசிகர்கள் மனத்திலிருந்த எண்ணம். கச்சேரி பிரிபோணி வர்ணத்துடன் தொடங்கப் பெற்றுச் சுமார் ஒருமணிநேரம் ஓடிவிட்டது. இதென்ன தட்சணாமூர்த்தி இத்தனை நேரம் வாசித்துக் கொண்டிருந்த அதே தவிலா இப்படி பெருமளவில் ஒலிக்கிறது. மற்ற கலைஞரின் தவில் மந்தமாகவும், இது பளிச்சென்றும் இருக்கிறதே. கேட்டுக் கொண்டிருந்த ரசிகர்களுக்கு மட்டுமல்ல அங்கு கூடியிருந்த அத்தனை கலைஞர்களின் முகத்திலும் வியப்பின் அறிகுறி. ஆம்! தன்கையின் தன்மையென்ன, தவிலில் பொருத்தப்பட்டுள்ள தோலின் தன்மையென்ன, தவிற் கட்டையின் நாதம் எத்தகையது என்றெல்லாம் அறிந்திருப்பது தவிற்காரனுக்குரிய இலக்கணம் என்று நூல்கள் விரித்துரைப்பதற்கொப்ப, அண்மைக்காலத்தில் இவ்விலக்கணத்தை நன்கறிந்திருந்த கலைஞனாகத் தட்சணாமூர்த்தி இருந்த காரணத்தினாலேதான் அவர் இரவலாகப் பெற்று முழக்கிய தவில் வாத்தியங்கள் கூடச் சிறப்பாக ஒலித்தன.

புகழ்மிக்க பாடகர்கள் சிலர் தம் கச்சேரியில் தவில் வாசிக்க வேண்டுமென்று தட்சணா மூர்த்தியிடம் பலமுறை கேட்டுக் கொண்டனர். தவில் என்பது நாதஸ்வரம் ஒன்றுக்கு மட்டுமே பக்கவாத்தியமாக அமைந்து தொன்மைக்காலந்தொட்டே பெரியோர்களால் பேணிப் பாதுகாக்கப்பட்ட தென்பதால் இந்த மரபைப் பாழாக்கத்தனக்கு விருப்பமில்லையென்று கூறிவிட்ட



**...நெடுந்தொலைவிலுள்ள ஊர்களிலிருந்து அழைப்பில்லாமலேயே சுமார் ஆறாயிரம் பேர் வந்து கூடிவிட்டனர். காலை உணவு முதல் மற்ற நாட்களுக்கான அரிசி, மளிகை முதலியவற்றை எல்லாம் விடியற் காலையில் அவசரமாகக் கடையைத் திறக்கச் செய்து வாங்கி வரவேண்டிய நிலையேற்பட்டது.**

தட்சணாமூர்த்தி, தன் இறுதி மூச்சுவரை இந்தக் கொள்கைப் பிடிப்பிலிருந்து தளராதிருந்தார். அக்காரணத்தினால் நாதஸ்வரத்தைத் தவிர வேறெந்த வாத்தியத்துக்கோ அல்லது வாய்ப் பாட்டுக்கோ அவர் தவில் வாசித்ததில்லை.

யாருடனும் அதிகமாகப் பேசமாட்டார் தட்சணாமூர்த்தி. பிற கலைஞர்களின் வாசிப்பைப் பற்றித் தன் கருத்தை வாய்விட்டுக் கூறவும் மாட்டார். நல்ல எதிர்காலத்துக்குரிய சிறப்பு அம்சங்கள் கொண்டவராயும், அடக்கமும், பண்பும் நிறைந்தவராயுமிருக்கும் இளைஞர்களைத் தன்னுடன் வாசிக்கச் செய்து ஊக்குவிப்பதோடு அவர்களுக்கு எழும் ஐயப்பாடுகளை நீக்கவும் செய்வது அவரது வழக்கம். தாம் புதியதாக கற்பனை செய்கின்ற கோர்வை நடை முதலியவைகளை அவர்களுக்குக் கூறுவதிலும் தட்சணாமூர்த்தி விசாலமான உள்ளங் கொண்டவர். அதே சமயம் அவரை முன்கோபக்காரர் என்று சிலர் கருதுவதுண்டு. ஒருகலைஞன் தகுதியின் அடிப்படையில் அல்லாது அவன் எவ்வாறோ வெறும் புகழுக்காய் போற்றுவோரைக் கண்டால் அவருக்குப் பிடிக்காது. லயத்தின் நுட்பங்கள் அறியாமல் ரசிகர் என்ற பெயரைப் பெற்றுவிடும் எவரேனும் எந்தக் கலைஞரைப் பற்றியும் சிறப்பாகவோ, தாழ்வாகவோ விமர்சனம் செய்தால் அவருக்குக் கோபம் பீறிட்டெழும்.



**சுமார் இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பே, மூன்று அல்லது நான்கு மணி நேரக் கச்சேரிக்குத்-தவில் வாசிப்பதற்குக் குறைந்த பட்சம் ஆயிரத்து ஐந்நூறு ரூபாய் சன்மானம் வாங்கிய முதல் தவிற்கலைஞர் அளவெட்டி தட்சணாமூர்த்தியே ஆவார்.**

ஒரு சமயம் சென்னையிலிருந்து வெளியாகும் ஆங்கிலத் தினசரியின் ஆசிரியர் குழுவைச் சேர்ந்த பிரமுகர் ஒருவர் தட்சணாமூர்த்தியைச் சந்திக்க வந்திருந்தார். பேச்சுவாக்கில் "பழனி சுப்பிரமணிய பிள்ளை பெரிய வித்வான்தான். ஆனால் பாலக்காடு மணிஅய்யர் வாசிப்பு மிகவும் உயர்வானது. இதுபற்றி உங்கள் கருத்தென்ன?" என்று கேட்டுவிட்டார். தட்சணாமூர்த்தியின் கண்களோ சிவந்து விட்டன. "லயமென்றால் என்னவென்று உனக்குத் தெரியுமா? மிருதங்கத்தைப் பற்றித்தான் உனக்கென்ன தெரியும்? அந்த மேதைகளின் பெயர்களை உச்சரிக்கக் கூடத் தகுதியில்லாதிருக்கையில் அவர்களுடைய தாரதம்மியத்தை எடைபோட்டுப் பார்க்கிறாயா? முதலில் இந்த இடத்தைவிட்டு எழுந்திரு" என்று ஒற்றை மொழியில் கூச்சலிட்டு அந்தப் பிரமுகரை விரட்டியடித்து விட்டார்.

எந்த விஷயத்திலுமே அவர் மிகவும் கண்டிப்பானவர். தன் கௌரவத்துக்குச் சிறிதளவேனும் குறைவேற்படுமென்ற கட்டம் உருவாகுமானால், அவர் அசுரனாக ஆகிவிடுவார். கச்சேரி மேடைகளில் அனுசரிக்கப்பட வேண்டியதும், அங்கே அமர்ந்துள்ள பிற கலைஞர்களிடம் ஒருவருக்கிருக்க வேண்டியதுமான மரியாதை கொடுக்காமல் தனக்கு எவரும் நிகரில்லையென்ற அகந்தையுடனும், ஆர்ப்பாட்டத்துடனும் மேடையில் உட்கார்ந்து, மற்றோர் மீது அலட்சியப்பார்வை விடுபவர்களின் பெயரைக் கேட்கவும் தட்சணாமூர்த்தி கூசுவார். அவ்விதக் கயவரோடு, தானும் சமமாக மேடையிலமர்வதென்பது, தன் கலைக்குத் தானே இழைக்கும் அநீதியென்றே அவர் கருதுவார். "தம்மிற் பெரியார் தமரா ஒழுகுதல் வன்மையு ளெல்லாந் தலை" என்னும் வள்ளுவர் வாய்மொழிக்கு எடுத்துக்-காட்டாக விளங்கியவர். தரக்குறைவான முறையில் சொற்களை தவிலில் வாசிக்கும் சிலரைக் காணும்பொழுது தட்சணாமூர்த்தியின் உள்ளம் அளவில்லாத் துயருறும். பிடிவாத குணம் நிறைந்தவராக அவர் இருந்தாலும் அவருடைய அன்புக்கும், மதிப்புக்கும் பாத்திரமாயிருப்பவர்கள் கிழிக்கும் கோட்டினை தாண்டியவரல்லர்.

சுமார் இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பே, மூன்று அல்லது நான்கு மணி நேரக் கச்சேரிக்குத் தவில் வாசிப்பதற்குக் குறைந்த பட்சம் ஆயிரத்து ஐந்நூறு ரூபாய் சன்மானம் வாங்கிய முதல் தவிற்கலைஞர் அளவெட்டித் தட்சணாமூர்த்தியே ஆவார். அவரைப் பின்பற்றி இன்று பல தவிற் கலைஞர்கள் பெருந்தொகை பெறுவதற்கு வித்திட்ட பெருமை அவரையே சாரும்.

நீடாமங்கலம் மீனாட்சிசுந்தரம் பிள்ளையினால் தவில் வாத்தியத்திற்கு இடப்பட்ட பாட்டை மேலும் விரிவாக்கி, அழகுபடுத்தியதன் மூலம் தவிற்கலைக்கு, உலகில் உன்னதமான ஸ்தானத்தையும், தவிற்கலைஞர்களுக்கான மதிப்பையும், கௌரவத்தையும் வளர்த்ததோடு, முன்னேற்றப் பாதையில் நடைபோடும் கலைஞர்கள் பலரும், வழிகாட்டியாகத் தன்னைக் கொள்ளுமளவுக்குள்ள மாபெரும் நிலையையும், புகழையும் பெற்றிருந்தார். தட்சணாமூர்த்தியுடன் தவில் வாசிக்க வேண்டிய கட்டங்களில் மற்ற தவிற்கலைஞர்கள் யாவருமே மனத்தில் பெருங்கலக்கமுறுவது சகஜம். ஆனால் தன்னுடன் வாசிக்கும் கலைஞரை, ரசிகர்கள் குறைத்துக் கருதுமளவில் தனக்குத் தெரிந்ததை எல்லாம் வாசித்துவிடும் குணம் தட்சணாமூர்த்தியிடம் இருந்ததேயில்லை. மாறாகத் தன்னுடன் வாசிக்க நேரும் மிகச் சாதாரணக் கலைஞரையும், தனக்கு ஈடானவர் போலக் காட்டுவதே அவரது வழக்கம். இது போன்ற நன்மனத்தை மற்றக் கலைஞர்களிடம் காண்பதரிது. மலேசியா, சிங்கப்பூர், போன்ற நாடுகளில் எல்லாம் தவில் வாசித்துப் பெரும்புகழும், விருதுகள் பலவும் பெற்றார்.

கற்பனைச் சுரங்கம், கரவேக கேசரி, தவில்

வாத்திய ஏகச்சக்கிராதிபதி, லயஞானகுபேர பூபதி முதலியன தட்சணாமூர்த்தி பெற்ற பட்டங்களுட் சில. அவர் பெற்றுள்ள எல்லாப் பட்டங்களையும் வரிசைப்படுத்துவோமானால் அப்பட்டியல் நீண்டு கொண்டேபோகும். தனியாகத் தவிற் கச்சேரி செய்ய வேண்டுமென்றும், கேட்கின்ற தொகை தருவதாயும், பலர் அவரை வற்புறுத்தினர். நாதஸ்வரம் ஒன்றை ஏற்பாடு செய்யுங்கள், அந்த வாத்தியத்தில் ஏதேனும் வாசித்த பின்பே நான் தனிவாசிப்பேன். ஏனென்றால் தவில் ஒரு பக்கவாத்தியந்தானே என்று அவர் கூறுவார். இவ்விதமாகவும் பல லய வின்னியாசங்களைத் தட்சணாமூர்த்தி நிகழ்த்தியிருக்கிறார். லயவாத்தியமான மிருதங்கத்தில் ஒப்பற்ற ஸ்தானம் வகித்தவர்கள், பாலக்காடுமணி அய்யரும், பழனி சுப்பிரமணிய பிள்ளையும். தட்சணாமூர்த்தியின் தவில் வாசிப்பைக் கேட்டுவிட்டுத் தட்சணாமூர்த்தி உலகத்தின் எட்டாவது அதிசயம் என்று மணி அய்யரும், ஒருமுறை மனதால் நினைத்தாலே நம்மை வியப்பில் ஆழ்த்தும் மேதை என்று சுப்பிரமணிய பிள்ளையும் புகழாரம் சூட்டியுள்ளனர்.

ஒரு சமயம் சில கலைஞர்கள் ஒரு வீட்டின் திண்ணையிலமர்ந்து உரையாடிக்கொண்டிருந்த போது, பேச்சு தட்சணாமூர்த்தியைப் பற்றித் திரும்பியது. நம்மை அவருடைய வாசிப்பு பிரமிக்கச் செய்கின்றது. ஆனால் சட்டென்று புரிவதில்லை என்று ஒருவர் சொன்னார். அப்போது அவ்வீட்டின் உட்புறத்திலிருந்து வெளியே வந்த திருத்துறைப் பூண்டி சொக்கலிங்க நாதஸ்வரக் காரர் என்ற வயது முதிர்ந்த கலைஞர், “அவன் வாசிப்பு தெய்வீகமானது, அவனே கடவுளின் அவதாரம் தெரியுமா?” என்றார். அவரைப் பின்தொடர்ந்து அவ்வீட்டினுள்ளிருந்து வெளிப்பட்ட லயப்பிண்டம், தவில் வித்வான் திருமுல்லைவாயில் முத்துவேற்பிள்ளை “தட்சணாமூர்த்தி வாசிப்பதைப் புரிந்து கொள்ளும்படியான தவிற்காரன் இப்போதைக்கு எவரும் இருப்பதாக எனக்கே தெரியவில்லை. அவன் வாசிப்பு உனக்குப் புரியாமலிருப்பதில் அதிசயம் என்ன?” என்று சென்னார். இவற்றைவிட மேலான பாராட்டு இருக்க முடியுமா?

சக்கரவர்த்தி அக்பரின் அவையிலிருந்த இசைமேதையான தான்ஸேனைப்றி எழுதும்போது அபுல்பஸல் ஆயிரம் ஆண்டுகட்கு முன்பும் தான்ஸேனைப் போன்ற கலைமேதை இருந்ததில்லை; இனி வரவிருக்கும் ஆயிரம் ஆண்டுகளிலும் ஒருவர் இருக்கப்போவதில்லை என்று குறிப்பிட்டுள்ளார். வடஇந்திய இசையில் தான்ஸேனுக்கிருந்த இத்தகு சிறப்பைத் தவிலிசையில் பெற்றவர் யாழ்ப்பாணம் தட்சணாமூர்த்தி என்பது மறுக்கமுடியாத உண்மை. உண்மையென்பது பலருக்குக் கசப்பாயிருக்கக் கூடுமெனினும், அது ஆதவனுக்கொப்பானது. திரை போட்டு அதை மறைத்துவிட எவராலும் ஆகாது. தவில் என்ற சொல் இப்பூவுலகில் நிலவும் வரையிலும், தட்சணாமூர்த்தியின் பெயரும் விளங்குமென்பதில் சிறிதும் ஐயமில்லை.

கள்ளம் கபடமற்ற உள்ளமும் உண்மையை எந்த இடத்திலும் தயங்காமல் கூறும் உன்னத திறமும் கொண்ட தட்சணாமூர்த்தி ஒரு சிறந்த இனிய நண்பனும் கூட. பணத்துக்காகவோ, பட்டத்துக்காகவோ தனது கலையையோ, தலையையோ சாய்க்காத ஞான மிடுக்குடன் வாழ்ந்த அடங்காத வணங்காத, ஒரு தமிழ்க் கலைஞன்.

சில காலம் நோய் வாய்ப்பட்டிருந்த தட்சணாமூர்த்தி அவர்கள் 13.05.1975இல் தனது நாற்பத்திரண்டாவது வயதில் அளவையூரில் இறைவனடி சேர்ந்தார். நல்லவர்களை, வல்லவர்களை இறைவன் தன்னிடம் இளமையில் அழைப்பது நியதி.

இவருடைய இறுதி யாத்திரையில் அளவையூர் காணாத சனசமுத்திரம் பல ஊர்களிலிருந்து வந்து கௌரவித்தமை மறக்க முடியாத சம்பவமாகும். இவரின் இழப்பைத் தாங்க முடியாது ஏங்கிய துணைவியார் 14.06.1975இல் தானும் இவரைப் பின் தொடர்ந்தார். ‘இணை பிரிந்து அன்றிற் பறவை உயிர் வாழ்வதில்லை.’

இவருடைய மகனான திரு. உதயசங்கர் இன்று யாழ். பல்கலைக் கழக இசைப் பீடத்தால் கலாநிதிப் பட்டம் சூட்டிக் கௌரவிக்கப்பட்ட மேதையாக இருப்பதும் எமக்கும் எம் ஊருக்கும் பெருமைக்குரியதே.



**தட்சணாமூர்த்தியின் தவில் வாசிப்பைக் கேட்டுவிட்டுத் தட்சணா மூர்த்தி உலகத்தின் எட்டாவது அதிசயம் என்று மணி அய்யரும், ஒருமுறை மனதால் நினைத்தாலே நம்மை வியப்பில் ஆழ்த்தும் மேதை என்று சுப்பிரமணிய பிள்ளையும் புகழாரம் சூட்டியுள்ளனர்.**



**தொகுப்பு: சிவசம்பு கந்தசாமி**

இளைப்பாறிய பிரதம பரிசோதகர் - இரும்புப் பாதை.
புகையிரத இலாகா, இலங்கை

# அரை நூற்றாண்டுக்கு முன்பு அளவெட்டி: சில நினைவுகள்




மேற்படி தலைப்பிட்டு இக் கட்டுரையை ஆரம்பிக்கும் போது மனத்தில் பலவிதமான உணர்ச்சி-கள் ஏற்படுகின்றன. அவற்றைப் புறம்தள்ளி, பழைய நினைவுகளை மீட்கும்போது அளவற்ற மகிழ்ச்சியும் அதே நேரம் ஒரு வித ஆதங்கமும் ஆற்றாமையும் ஏற்படுகின்றன.

அந்தக் காலத்து அளவெட்டி சகல வளங்களும் கலைகளும் நிறைந்த ஒரு அழகான கிராமம். மக்கள் அமைதியாகவும் ஆனந்தமாகவும் வாழ்ந்து வந்தனர். துணிவகைகள், மசாலா பொருட்கள், மீன், மண்ணெண்ணை தவிர்ந்த மற்றவை எல்லாவற்றிலுமே தன்னிறைவு பெற்ற கிராமம். அரிசி, மரக்கறி, பழவகைகள், வெங்காயம், மிளகாய் போன்றவை தவிர இறைச்சிக்கு ஆடு, கோழியும் போதைக்குக் கள்ளும் புகைத்தலுக்குப் புகையிலையும் கூட அங்கேயே கிடைத்தன. பிணி வந்தால் அவற்றை நீக்குவதற்குத் தலை சிறந்த வைத்தியர்களும் பலவகை மருந்து வகைகளும் அங்கேயே கிடைத்தன. ஆதலால் அது ஒரு தன்னிறைவு பெற்ற கிராமமாகவே திகழ்ந்தது.



செ. சிவலிங்கம்

அருணோதயக் கல்லூரிப் பழைய மாணவர் சங்கத் தலைவர், கனடா (1997-1998). இலங்கை சுகாதாரத் திணைக்களத்தில் பணியாற்றியவர்.

இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் அளவெட்டியில் வாழ்ந்தவர்கள் பாக்கியசாலிகள். இடைக்காலத்தில் வாழ்ந்த என்போன்றவர்களுக்கு இரண்டும் கெட்டான் நிலை. இறுதிப் பகுதியில் வாழ்ந்தவர்கள் அனுதாபத்திற்-குரியவர்கள். எமது நாடு சுதந்திரம் பெற்றது 1948ஆம் ஆண்டில். 1952ல் தலை தூக்கிய இனவெறி 1956ஆம் ஆண்டில் முழுமை பெற்றது. அதனால் 1956ஆம் ஆண்டிற்கு முன்பு எமது கிராமத்து நிகழ்வுகள் சிலவற்றை எமது இளம் சந்ததியினர் அறியும் வண்ணம் இங்கே தருகின்றேன்.

இரண்டாம் உலக மகா யுத்தத்தின் தாக்கம் எமது கிராமத்திலும் உணரக் கூடியதாக இருந்தது. சிங்கப்பூர், மலாயா, பர்மா போன்ற நாடுகளிலிருந்து ஆயிரக்கணக்கான யாழ்ப்பாண மக்கள் சொந்த ஊர்களுக்குத் திரும்பியிருந்தனர்.

தொழில் நிமித்தம் கடல் கடந்து சென்றவர்கள் மிகவும் பாதிப்படைந்த நிலையில் வந்திருந்தனர்.

அளவெட்டிக்கும் பலர் திரும்பியிருந்தனர். திரும்பிவர முடியாதவர்களும் பலர் அந்த நாடுகளில் இருந்தனர். அவர்களின் நிலை என்ன என்பதை அறிய அவர்களின் உறவினர்களுக்கு ஒரே ஒரு வழிதான் இருந்தது. அது சிங்கப்பூரிலிருந்து கிடைத்த வானொலி அறிவித்தல்கள் தாம். அப்போது அளவெட்டியில் ஒரே ஒரு வானொலி தான் இருந்தது. அது வெள்ளியம்பத்தையில் திரு. சிதம்பரப்பிள்ளை மாஸ்டர் வீட்டில் இருந்தது. பனை மரத்தில் அன்ரனா கட்டி கார் பட்டரி மூலம் இயங்கிய அதன் ஒலிபரப்பைக் கேட்கக் கூட்டம் அலைமோதும். நான் சிறுவனாக இருந்தபோது அங்கு சென்று வேடிக்கை பார்த்தது நினைவிற்கு வருகிறது.

உலக யுத்தம் எமது நாட்டில் பல மாற்றங்களை ஏற்படுத்தியது. இறக்குமதிகளுக்குத் தடை ஏற்பட்டதால் உணவு உடை போன்றவற்றிற்குப் பலத்த தட்டுப்பாடு நிலவியது. முதன் முதலாக கூப்பன் முறை அறிமுகமாகியது. ஒவ்வொருவருக்கும் உணவுக் கூப்பன், சீலைக் கூப்பன் வழங்கப்பட்டு அதன் மூலம் பொருட்கள் விநியோகிக்கப்பட்டன. இவற்றை அமல் படுத்தக் கூட்டுறவுச் சங்கங்கள் தோற்றுவிக்கப்பட்டன. துணிவகைகள் மிகவும் குறைவாகக் கிடைக்கப் பெற்றமையால் அவை குலுக்கல் முறையில் விநியோகிக்கப்பட்டன. மகாஜனசபை மண்டபத்தில் நடைபெற்ற குலுக்கலுக்கு மக்கள் கூட்டம் அலைமோதும். இந்தக் கால கட்டத்திலேதான் யாழ் மக்களுக்கு கோதுமை மா, பாண், தேயிலை போன்றவையும் அறிமுகமாகின. அதுவரை காலமும் அவைபற்றி அறிந்திராத மக்கள் உணவுத் தட்டுப்பாட்டின் நிமித்தம் புதிய உணவு முறைகளைப் பழகவேண்டியதாயிற்று. கோதுமை மாவில் பிட்டு, இடியப்பம், ரொட்டி முதலியன செய்யவும் மக்கள் பழக்கப் படுத்தப்பட்டனர். இந்த மா ஒருவகை துணிச் சாக்குகளில் வரும், அவற்றைச் சாரமாகவும் படுக்கை விரிப்புக்களாகவும் பாவிக்கும் நிலைமைக்கு ஏழை மக்கள் தள்ளப்பட்டனர்.

**அப்போது அளவெட்டியில் ஒரே ஒரு வானொலி தான் இருந்தது. அது வெள்ளியம்பத்தையில் திரு. சிதம்பரப்பிள்ளை மாஸ்டர் வீட்டில் இருந்தது. பனை மரத்தில் அன்ரனா கட்டி கார் பட்டரி மூலம் இயங்கிய அதன் ஒலிபரப்பைக் கேட்கக் கூட்டம் அலைமோதும்.**

உணவு, உடை முதலிய பொருட்களின் தட்டுப்பாட்டினால் முதல் முதலாகக் கள்ளச் சந்தை வியாபாரமும் குடா நாட்டில் அறிமுகமாகியது. அதன் ஒரு அங்கமாக இந்தியாவிலிருந்து கடத்தல் வியாபாரமும் உதயமானது. இக்கால கட்டத்திலேதான் எமது மக்களுக்குத் தேயிலையும் அறிமுகமாகியது. யுத்தத்தினால் ஏற்பட்ட கப்பல் தட்டுப்பாட்டால் ஏற்றுமதியாகாமல் தேங்கிக் கிடந்த தேயிலையை உள்ளூரிலேயே சந்தைப்படுத்த தேயிலைக் கட்டுப்பாட்டுச் சபை சகல உத்திகளையும் கையாண்டது. அதில் ஒன்றுதான் இலவச தேநீர் விநியோகம். கிராமங்கள் தோறும் ஆட்கள் நியமிக்கப்பட்டு, அவர்கள் மூலம் தேநீர் தயாரிக்கப்பட்டு காலையில் வீடுகள் தோறும் இலவசமாக விநியோகிக்கப்பட்டது.
அந்தக் காலத்தில் அளவெட்டியில் ஒரு ஆங்கில பாடசாலையும் பல தமிழ்ப் பாடசாலைகளும் இயங்கிவந்தன. இவை யாவும் தனியாருக்குச் சொந்தமானவை. மாணவர் தொகைக்கேற்ப அரச மானியம் கிடைக்கும். மற்றைய வரவு செலவுகள் நிர்வாகத்தைச் சேர்ந்தவை. 1961ல் பாடசாலைகள் அரசுடைமை ஆகும் வரை இதே நிலைதான். மாணவர்கள் முதலில் தமிழ்ப் பாடசாலைகளில் கல்வி கற்று மூன்றாம் வகுப்பிற்குப் பின்தான் ஆங்கிலப் பாடசாலையில் சேரமுடியும். ஆதலால் தமிழ்ப் பாடசாலைகளில் மூன்றாம் வகுப்புப் படித்துவிட்டுத்தான் பலர் அப்போது அளவெட்டி ஆங்கிலக் கலவன் பாடசாலையாகவிருந்த அருணோதயாவிற் சேர்ந்தனர். மற்றும் பலர் மகாஜனா, ஸ்கந்தா போன்றவற்றிலும் வசதி படைத்தோர் நகரப் பாடசாலைகளிற்கும் சென்றனர். 1948ஆம் ஆண்டு வரை அருணோதயாவில் எட்டாம் வகுப்பு மட்டுமே இருந்தது. 1950ஆம் ஆண்டு முதலில் அங்கிருந்து எஸ். எஸ். சி. பரீட்சைக்கு மாணவர்கள் தோற்றினர். அந்த ஆண்டுப்பரீட்சையில் சித்தியடைந்தவர்களில் நானும் ஒருவன். அந்த நாட்களில் ஒருவர் எஸ். எஸ். சி. சித்தியடைந்தால் முழுக் கிராமமுமே அவரைப்பற்றி அறியும். ஏனெனில் அப்பரீட்சை ஒருவரின் வாழ்க்கையில் முக்கியமான நிகழ்வு. காரணம் அரச உத்தியோகம் உத்தரவாதம்!

இலங்கைப் பல்கலைக்கழகம் உதயமானது 1940களிலேதான். அதன் ஆரம்பகாலங்களிலே அளவெட்டியிலிருந்து சிலர் தெரிவாகி கொழும்பு சென்றனர். மகாஜனாவிலிருந்து ஏ. வேல்சாமி, ஸ்கந்தாவிலிருந்து ரி. கந்தசாமி முதல் மாணவர்களாக பல்கலைக்கழகம் சென்றனர். மருத்துவக் கல்லூரிக்கு என். கனகசபை, யாழ்ப்பாணக் கல்லூரியிலிருந்து திருமதி. தெய்வேந்திரன் ஆகியோர் முன்னோடிகள். திரு. சண்முகநாதன் யாழ்ப்பாணக் கல்லூரியிலிருந்து பொறியியற்பீடத்திற்கு சென்று அங்கு முதன்மையாகத் தேறி அங்கேயே சில காலம் விரிவுரையாளராகக் கடமை புரிந்தவர். அந்தக் காலத்தில் மருத்துவக் கல்லூரிக்குத் தெரிவாவதற்கு மூன்று பரீட்சைகளில் சித்தியடைய வேண்டும். முதலில் Theory, பின்பு கொழும்பு சென்று செய்முறைப்பரீட்சை. இவையிரண்டிலும் சித்தியடைந்தால் பின்பு நேர்முகப்பரீட்சை. அப்போது தரப்படுத்தல் முறை அறிமுகமாகாதபடியால் தமிழ் மாணவர்கள் பலர் மருத்துவக் கல்லூரிக்குச் செல்லக்கூடியதாக இருந்தது.

பழைய நினைவுகளை மீட்கும்போது ஆலய உற்சவங்களை மறக்கமுடியாது. பங்குனியில் மருதடி விநாயகர் உற்சவத்தில் தொடங்கி புரட்டாதி வல்லிபுர ஆழ்வார் திருவிழா வரையான ஆறு மாதகாலமும் குடா நாடு முழுவதுமே கலகலப்பாக இருக்கும். இதற்குப் பின்னணியாக அப்பருவங்களில் யாழ்ப்பாணத்தில் வீசும் சோளகக் காற்று விளங்கும். இந்த ஆறுமாத காலமும் இந்தியாவிலிருந்து சிறந்த தவில், நாதஸ்வர வித்துவான்கள் வரவழைக்கப்பட்டு யாழ்ப்பாணத்தில் முகாமிட்டிருப்பர். இவர்களுடன் சின்னமேளம் என்று அறியப்பட்ட பெண் நாட்டியக் கலைஞர்களும் இங்கு வந்து முகாமிடுவர். அளவெட்டி ஆலயங்களில் திருவிழாக்கள் மிகச் சிறப்பாக நடைபெறும். கும்பழாவளை விநாயகர் ஆலயத் திருவிழாக்கள் பெரிய அளவில் நடைபெறும். இந்தியாவில் புகழ் பெற்ற ரீ. என். ராஜரத்தினம்பிள்ளை, திருவெண்காடு சுப்பிரமணியம்பிள்ளை, ஏ. கே. சீ.



நடராஜன், காருகுறிச்சி அருணாசலம், குளிக்கரை பிச்சையப்பா, வேதாரணியம் வேதமூர்த்தி போன்றவர்கள் இவ்வாலயத்தில் கச்சேரி செய்தவர்களில் சிலர். இறுதியாக 1966ஆம் ஆண்டு ஏழாம் திருவிழாவில் ஷேக். சின்ன மௌலானாவின் கச்சேரியின்போது அளவெட்டிக்கிராமமே மக்கள் கூட்டத்தினால் திணறியது. அக்காலத்து யாழ்ப்பாண தவில், நாதஸ்வர வித்துவான்களை நினைவு கூர்ந்தால் அது தனிக் கட்டுரையாக அமையும்.

எமது கிராமத்திற்கு ஒலிபெருக்கி அறிமுகமாகியது அளவெட்டி வடக்கு தவளக்கிரி முத்துமாரியம்மன் கோவில் திருவிழா ஒன்றின்போதுதான். அங்கும் திருவிழாக்கள் மிகவும் விமரிசையாக நடைபெறும். இதே ஆலயத்தில் நடைபெற்ற இன்னுமொரு திருவிழாவில் நிஜக் குதிரைகள் பூட்டிய சப்பரத்தில் அம்பாள் வீதி வலம் வந்த நிகழ்ச்சியும் இடம் பெற்றது. அத்துடன் இசை நிகழ்ச்சிகள் முடிவுற்று சுவாமி வெளி வீதிவலம் வரும்வரை ஒலி பெருக்கி மூலம் பாடல்கள் ஒலிபரப்பப்பட்டதும் முதலில் இந்த ஆலயத் திருவிழா ஒன்றின்போதுதான்.

இசை நிகழ்ச்சிகள் தவிர பந்தல் சோடனை, மின் விளக்குகள், வாணவேடிக்கை என்பன திருவிழாக்களுக்கு மேலும் மெருகூட்டும். சிகரங்கள், சப்பறங்கள் வீதிகள் தோறும் நிறுவப்பட்டு இடையில் குலையுடன் கூடிய வாழை மரங்கள் கட்டப்பட்டு மின்விளக்குகளால் அலங்கரித்து கோவில் வீதிகள் இந்திரலோகம் போல் காட்சியளிக்கும்.

இத்திருவிழாக்களைக் கண்டு களிக்கவென்றே பிற ஊர்களில் தொழில் புரியும் அளவெட்டி மக்கள் ஊருக்கு வருவார்கள். நண்பர்கள் சந்திப்பும் உறவினர் உறவாடலும் ஒரே கோலாகலமாக இருக்கும். ஒவ்வொரு ஆலயத் திருவிழா முடிவுற்ற அடுத்த சனிக்கிழமை ஏதாவது ஒரு கோவிலில் வேள்வி நடக்கும். வெளியூரிலிருந்து வருபவர்கள் வேள்வி முடிந்துதான் ஊர் திரும்புவார்கள். கும்பழாவளை ஆலயத் திருவிழா முடிவுற்ற அடுத்த வாரம் கவணாவத்தை வைரவர் ஆலய வேள்வி நடைபெறும். நூற்றுக்கணக்கான ஆடுகள், கோழிகள் அங்கு பலியிடப்படும். அவற்றை ஒரு கை பார்க்காமல் நாம் கொழும்பு திரும்புவதில்லை.

1948ஆம் ஆண்டிற்கு முன்பு இந்தியா போய்வருவதற்குக் கடவுச் சீட்டோ, விசாவோ வேண்டியிருக்க வில்லை. பாய்க்கப்பல், தோணி போன்றவை மூலம் யாழ்ப்பாணம் - இந்தியா போக்குவரத்து மிகவும் சாதாரணமாக நடைபெற்றது. இங்கிருந்து பிற்பகல் புறப்பட்டு வேதாரணியத்தில் திருவிழா பார்த்துவிட்டு அதிகாலையில் மீண்டும் யாழ்ப்பாணம் திரும்புவது சர்வ சாதாரணம். அதே போன்று இந்தியாவிலிருந்தும் வியாபாரிகள் இங்கு வந்து முகாமிடுவதும் வழக்கம். புடவை வியாபாரிகள் இங்கு வந்து கிராமங்களில் சில வீடுகளின் விறாந்தைகளில் தங்கி அயல் கிராமங்களில் வியாபாரம் நடத்திவிட்டு இரவு திரும்புவர். சமைத்து சாப்பிட்டு காலைக் கடன்களை பனை வெளிகளிலும் பொதுக் கிணறுகளிலும் முடித்து, துணிகளை விற்பனை செய்யும் அதே நேரம் சில சீன வியாபாரிகளும் பெரிய துணி மூட்டைகளை முதுகில் சுமந்து கிராமம் கிராமமாகச் சென்று "சீலைப் புடவோய்" என்று கூவிச் சீன நாட்டுத் துணிகளை விற்பனை செய்வர்.

ஒவ்வொரு வருடமும் கார்த்திகை விளக்கீட்டின் போது திருவண்ணாமலையில் மாட்டுச் சந்தை நடைபெறும். அதன்போது யாழ்ப்பாணத்திலிருந்து சிலர் அங்கு சென்று மாடுகள் வாங்கி வத்தைகள் மூலம் கொண்டு வருவர். அவை ஊர்காவற்றுறை துறைமுகத்தை வந்தடைந்ததும் 14 நாட்கள் *Quarantine* வைக்கப்பட்டு அவற்றிற்கு நோய் இல்லை என்றானதும் உரியவர்களிடம் ஒப்படைக்கப்படும். அம்மாடுகளை வடக்கன் மாடுகள் என்று

**போக்கு வரத்திற்கும் மாடுகள்தான் பயன்படுத்தப்பட்டன. பலவகையான மாட்டு வண்டிகள் பாவனையிலிருந்தன. வசதி படைத்தவர்கள் சொந்த வண்டில் மாடு வைத்திருந்தனர். மற்றவர்களுக்கு வாடகை வண்டி கிடைக்கும். வெளியூர்களில் தொழில் புரிந்தவர்கள் மல்லாகம் புகையிரத நிலையத்திற்கு மாட்டுவண்டியிலேயே செல்வர். யாழ்நகரில் அலுவல்கள் இருப்பவர்களும் மாட்டுவண்டியிலேயே செல்வர்.**

அழைப்பர். அவை வெள்ளை நிறத்தில் உயரமாக, நீண்ட கொம்புடன் அழகாக இருக்கும். அவற்றில் சில சவாரிக்கு பயன்படுத்தப்படும். அவற்றிற்கு நல்ல ஊட்டம் கொடுத்துப் பழக்கியபின் சவாரிகளில் ஓட விடுவர். அளவெட்டியில் கிராயிட்டி வீதியிலும், பனாக்கை வயல் பரவையிலும் வண்டில் சவாரிகள் நடைபெறும்.

போக்கு வரத்திற்கும் மாடுகள்தான் பயன்படுத்தப்பட்டன. பல வகையான மாட்டு வண்டிகள் பாவனையிலிருந்தன. வசதி படைத்தவர்கள் சொந்த வண்டில் மாடு வைத்திருந்தனர். மற்றவர்களுக்கு வாடகை வண்டி கிடைக்கும். வெளியூர்களில் தொழில் புரிந்தவர்கள் மல்லாகம் புகையிர நிலையத்திற்கு மாட்டுவண்டியிலேயே செல்வர். யாழ்நகரில் அலுவல்கள் இருப்பவர்களும் மாட்டுவண்டியிலேயே செல்வர். அவசரமில்லாத நாட்களும் பிரயாணங்களுமாதலால் 'பட்டணம்' போய் வருவது முழு நாள் பயணமாக இருக்கும்.

அப்போதெல்லாம் சயிக்கிள் வண்டிகளும் மிகக்குறைவு. அவற்றை வாடகைக்கு விடுவதற்கென்றே சில நிலையங்கள் இருந்தன. நான் அறிய மணிக்கு இருபது சதமும் முழு நாளுமென்றால் ஒரு ரூபாவும் வாடகை. ஓடிப் பழகுவதற்குத் தனியாக வண்டிகள் வாடகைக்கு இருக்கும். கோவில் வீதிகளில் ஓடிப்பழகி ஒரு முறை கீரிமலைக்குப் போய் வந்தால் அதுவே ஒரு ஆண்மகனுக்கான அங்கீகாரம். அப்போதெல்லாம் பெண்கள் சைக்கிள் வண்டிகளைத் தொட்டேயிருக்கமாட்டார்கள்.

ஒருசிலரிடம் மட்டும் மோட்டார் வாகனங்கள் இருந்தன. மேற்பக்கம் திறக்கக்கூடியதாகவும், நீளவாக்கில் மிதிபலகைகளுடனும் அவை வடிவமைக்கப் பட்டிருந்தன. திருமண ஊர்வலங்களுக்கும் கடும் நோயாளிகளை மானிப்பாய் வைத்தியசாலைக்குக் கொண்டு செல்வதற்கு மட்டுமே அவை பெரும்பாலும் பயன்படுத்தப் பட்டன. ஒரேயொரு பஸ்வண்டி சிலகாலம் அளவெட்டி - யாழ்ப்பாணம் சேவையில் இருந்தது. அதன் ஓட்டுநர் சின்னத்துரை என்பவர். தற்போதைய தபால் நிலையத்திற்கு அருகாமையில்



**கோவில் வீதிகளில் ஓடிப்பழகி ஒரு முறை கீரிமலைக்குப் போய் வந்தால் அதுவே ஒரு ஆண்மகனுக்கான அங்கீகாரம். அப்போதெல்லாம் பெண்கள் சைக்கிள் வண்டிகளைத் தொட்டேயிருக்கமாட்டார்கள்.**

கணேசமளிகை என்றொரு பெரிய வர்த்தக தாபனம் இருந்தது. அதன் அருகிலிருந்துதான் பஸ் புறப்படும். அப்போதெல்லாம் பஸ் நிறுத்தங்கள் கிடையாது. பிரயாணிகள் எங்கு வேண்டுமென்றாலும் நின்று நிதானமாக ஏறிச் செல்ல முடியும். சில பிரபலர்களின் வீட்டுவாசலில் நின்று அவர்கள் வரும்வரை காத்திருக்கவேண்டியும் ஏற்படும். வண்டியினுள்ளே நீள வாக்கில் மரவாங்கு பொருத்தப்பட்டிருக்கும். பின்புறமாக உள்ள படிகளின் மூலம் ஏறி ஜன்னல் ஓரத்தில் அமர்ந்து ஆறுதலாக வேடிக்கை பார்த்தபடியே பிரயாணம் செய்யலாம்.

அளவெட்டி மகாஜனசபை மண்டபம் 1930களின் நடுப்பகுதியில் கட்டப்பட்டது. ஒரு செல்வந்தரால் உபகரிக்கப்பட்ட காணியில் அப்போது இளைஞர்களாக இருந்த பொன்னையா மாஸ்டர் B.Sc, செல்லத்துரை மாஸ்டர் போன்றவர்களின் முயற்சியால் இம்மண்டபம் அமைக்கப்பட்டது. ஆரம்ப காலங்களில் அங்கு ஒரு நூல் நிலையமும் வாசிகசாலையும் செயற்பட்டன. வீரகேசரி, தினகரன், இந்து சாதனம் மற்றும் சில மாத வாரப்பத்திரிகைகளும் வைக்கப்பட்டிருக்கும். அத்துடன் இந்த மண்டபத்தில் நாடகங்கள் நடைபெறும். 1947ஆம் ஆண்டு தேர்தலின் போது இம்மண்டபத்தில் நடைபெற்ற அகில இலங்கை தமிழ் காங்கிரஸ் கட்சியின் ஒரு கூட்டத்திலேயே திரு ஜீ. ஜீ. பொன்னம்பலம் மூலம் தந்தை செல்வா அளவெட்டி மக்களுக்கு அறிமுகமானார். அதே கூட்டத்தில் அறிமுகமானோர்களில் திருவாளர்கள் கு. வன்னிய-சிங்கம், ஈ. எம். வி. நாகநாதன், ஏ. வி. குலசிங்கம், வி. குமாரசாமி போன்றோரும் அடங்குவர். ஒவ்வொரு தொகுதியிலும் வெவ்வேறு தினங்களில் தேர்தல் நடைபெற்றதாலும் தேர்தல் சட்டம் இலகுவாக இருந்ததாலும் 1947ஆம் ஆண்டு தேர்தல் ஒரு திருவிழா போன்றே நடந்தேறியது.

எமது கிராமத்தில் தைப்பொங்கலுடன் ஆரம்பமாகும் கலகலப்பு அடுத்த மாரி காலம் வரை தொடரும். அதற்கிடையில அரிவு வெட்டு (நெல் அறுவடை), சூடு மிதி, ஏர் பூட்டு ஆகிய நிகழ்வுகள் சித்திரை புத்தாண்டுவரை தொடர்ந்து பின்னர் ஆலய உற்சவங்கள், வேள்விகள், வண்டிச்சவாரி போன்ற நிகழ்வுகள் மக்களை மகிழ்வித்த வண்ணம் இருக்கும்.

அளவெட்டி சகல வளங்களும் நிறைந்த ஒரு கிராமம். மக்கள் மிகவும் அமைதியாகவும் ஒருவருக்கு ஒருவர் அனுசரணையாகவும் வாழ்ந்தனர். மற்றவர்களின் இன்பத்திலும் துன்பத்திலும் பங்கு கொண்டனர். ஒருவர் நோய் வாய்ப்பட்டால் அயலவர் வந்து ஆறுதல் கூறித் துன்பத்தைப் போக்குவர். வீடு வேய்தல், நெல்

அறுவடை, வேலியடைத்தல், சூடுமிதித்தல் போன்றவை சிரமதான முறையில் நடைபெறும். வெளியூர் பிரயாணங்களின்போதும் பலர் ஒன்று சேர்ந்தே செல்வர். நயினாதீவு, செல்வச்சந்நிதி, வல்லிபுரக்கோவில் முதலிய ஆலயங்களுக்குக் குடும்பங்கள் ஒன்று சேர்ந்து செல்வது வழக்கம். இதில் குறிப்பிடக்கூடியது வல்லிபுரக்கோவில் தீர்த்தோற்சவப் பிரயாணம். பலகுடும்பங்கள் ஒன்று சேர்ந்து மாட்டு வண்டில்களில் சென்றுவருவர். சமையற் பொருட்கள், பாத்திரங்கள் கூடவே எடுத்துச் செல்லப்படும். அச்சுவேலி, பருத்தித்துறை சந்தைப்பகுதிகளில் சமைத்து உண்டு இளைப்பாறிச் செல்வர். அப்போது நிலவு காலமாதலால் இம் மூன்று நாள் பயணம் மிகவும் ரம்மியமாக இருக்கும்.

அளவெட்டிக் கிராமம் தனது கலைச் செல்வங்கள் மூலம் யாழ்குடா நாட்டிலேயே மிகவும் பிரபல்யமாக விளங்கியது. கல்வி, விவசாயம் (புகையிலை), மருத்துவம், ஆன்மீகம், நாதஸ்வரம் - தவில், நாடகம், நாட்டியம், சோதிடம், சப்பரம், சாத்துப்படி, சிகரம், கரகம், காவடி, சமையல், போன்ற சகல கலைகளிலும் வளம் பெற்றிருந்த கிராமம் இன்று சின்னாபின்னப்பட்டுக் கிடக்கின்றது. அங்கு மீண்டும் ஒரு பொற்காலம் ஏற்பட்டு, சற்று மங்கியிருக்கும் புகழ் மீண்டும் வெளிச்சத்திற்கு வரும் என்பதில் எவ்வித மாற்றுக் கருத்தும் கிடையாது. அப்போது,

“எந்தையும் தாயும் மகிழ்ந்து குலாவி
இருந்ததும் இந்நாடே - அதன்
முந்தையர் ஆயிரம் ஆண்டுகள் வாழ்ந்து
முடிந்ததும் இந்நாடே - அவர்
சிந்தையில் ஆயிரம் எண்ணம் வளர்ந்து
சிறந்ததும் இந்நாடே.........”

என்று நாம் மகிழ்வது போன்று எமது பிற்காலச் சந்ததியினரும் பாடி மகிழவேண்டும் என்பதே எமது அவா.



---

# அளவிலாப் புகழுடைய
# அளவையூர்

ஆதியாம் வரலாற் றின்முன் அருந்தமி ழறிஞ ரெல்லாம்
மாதியா கங்கள் செய்து மருவிடும் யாழ்ப்பா ணத்தில்
கோதிலா வரிசை பெற்றுக் குலவிடு மளவை யூரே
தீதிலா வளம்பெற் றென்றும் திகழ்ந்திடு மென்பர் தேர்ந்தோர்.

வயலொரு பாலுஞ் சோலை வளமொரு பாலு மாக
இயலுநன் மாட கூடக் கோபுரக் கோயி லோர்பால்
பெயரினாற் பயிர்க ளோங்கிப் பிறங்குசார் நிலங்க ளோர்பால்
அயலெலாங் கலைக்கூ டங்கள் அமைந்தவூ ரளவை யூரே.

கணபதி கோயில் நான்கும் காக்கும் மால் கோயி லொன்றும்
மணமதி லன்னை கோயில் மாண்பிரண் டெல்லை யாகக்
கணமெலாங் காக்குஞ் சூல காலபை ரவர்க்கோ ரெட்டும்
துணைமுத லியவேட் கொன்றும் ஐயனார்க் கொன்றுந் தோன்றும்.

பெருமரு ணோத யப்பேர் பிறங்குகல் லூரி தொட்டு
அரியசீ னன்க லட்டி அருளரு ணாச லத்தை
மருவிடு சதாநந் தாவும் மற்றைக்கேல் வத்தை யோடு
மொருகுண திசையிற் பள்ளி யொன்றும்நற் கலைவ ளர்க்கும்.

கோயில்கள் தோறும் பூசை குறைவற நிகழும் கண்டு
வாயில்கள் தோறும் மக்கள் வரம்பெறக் காத்தி ருப்பர்
தாயெனுந் தமிழும் சான்ற ஆங்கில மொழியும் கற்றுத்
தூயநன் னெறிகொள் மக்கள் துயர்துடைத் திருப்ப ரென்றும்.

பண்டிதர் புலவ ரோடு பலதுறை வித்து வான்கள்
தண்டமிழ் சமய வாழ்வுத் தொண்டுகள் தொடர்வ தாலே
எண்டிசை போற்ற விவ்வூ ரிருத்தலா லுலகி லுள்ளோர்
கண்டுகண் டிவ்வூர் நோக்கிக் கால்வைப்பர் கருத்தி னோடே.

அளவையூர் வடபால் வாழ்ந்த அறிஞராம் வைத்திய நாதர்
களைகணாய்க் கிறீத்து வஞ்சேர் கனகச பைதன் னோடு
வளர்பெரு மாக்க டவ்வை வாழ்ந்த தி. சதாசி வையர்
தளர்விலிம் மூவர் தம்மை தகுதிசால் புலவ ரென்பர்.

பதிகங்க ளூஞ்ச லோடு பலபிர பந்தஞ் செய்து
துதிசபா பதியாம் பிள்ளை தேவியைப் பாடிச் சென்று
வதிகதி ரேச பிள்ளை வைத்திய லிங்கத் தாரும்
அதிசயப் புலவ ரென்பர் அளவைவாழ் அறிஞர் தாமே.

சரவண முத்துவோடு சண்முகஞ் சிவஞா னத்தார்
திரமுடை முருக ரோடு திண்ணிய ரிராம லிங்கர்
பெருமயில் வாக னத்தார் பேதின்றிப் புராணஞ் சொன்ன
ஒருவராஞ் சின்னத் தம்பி உண்மையா மன்பர் தாமே.

நாவல ரடிபின் பற்றி நடக்குமிவ் வளவை யூரில்
தாவில்நற் சான்றோர் மேலோர் தகவினா லுயர்ந்தோர் யாரும்
காவலர் போற்றும் வண்ணம் கணிப்புட னடத்த லாலே
பாவல ரளவை யூரைப் பாடியே புகழ்வா ரென்றும்.

**- புலவர் வை. க. சிற்றம்பலம்**

# கலைஞர் பலரைக் கண்டவூர் அளவெட்டி

அளவெட்டிக் கிராமம் பண்டு தொட்டே கலைகள் பலவும் பல்கிப் பெருகியவூர். இங்கு எமது பார்வைக்கும் கேள்விக்கும் எட்டாத காலத்தில் வாழ்ந்த கலைஞர்களைப் பற்றியறியக் கூடிய எந்த ஆவணமும் இல்லாமை எமது தவக்குறைவேயெனலாம். இசையால் திசை போகியவூர் அளவெட்டி. நாடகத் தமிழ் வீறு நடை போட்டு நிலவிய நாடு அளவெட்டி. தவில், நாதஸ்வரம் என்பவற்றின் உன்னத நிலையைக் கட்டிக் காத்தவூரும் அதுவே. புராணபடனக் கலையிலும் தேர்ச்சி பெற்ற பலர் வாழ்ந்த ஊரும் அதுதான். இன்றும் இந்தக் கலைகளின் அலை இங்கு வீசிக் கொண்டுதான் இருக்கிறது. எமக்குத் தெரிந்த வரையில் இக்கலைகளைத் தந்த மேதைகளை ஆவணப் படுத்தி வைப்பது எமது கடமையன்றோ?

முன்னொரு காலத்தில் அளவெட்டிக் கிராமத்தில் நாட்டுக் கூத்துக்களுக்குப் பெயர் பெற்ற நடிகர்கள் வாழ்ந்தார்களென்பதற்குச் சான்றுகள் உள. ஆங்காங்கு காலத்துக்குக் காலம் நாட்டுக் கூத்துகள் அரங்கேறியமையை எமது மூத்த சந்ததியினர் அறிவர். இன்னும் மதனகாமராசன் நாடகம், பதிவிரதை நாடகம், கண்டியரசன் நாடகம், பூதத்தம்பி நாடகம், ஏழுபிள்ளை நல்லதங்காள் நாடகம் என்பவற்றைப் பற்றிச் சொல்லி வாயூறுபவர்கள் எங்கள் கிராமத்தில் உளர். அவர்களும் போய்விட்டால் அளவெட்டியின் நாட்டுக் கூத்துக் கலையே மண்வாசனையுமற்று மறைந்து விடுமென்பதில் ஐயமில்லை.

நாடகக் கூத்து அதிகாரப்பட்ட படியால் அக்கூத்துப் பற்றி எமது முன்னோர் கூறிய விபரங்களையுந் தந்து வைக்க விரும்புகிறேன். நாடக அரங்கு வட்ட வடிவில் அமைந்திருக்கும். அரங்கின் மத்தியில் வாத்தியக்காரர், நாடக இயக்குனர், ஒளிவிளக்குகள், பிற்பாட்டுக்காரர் இன்னும் இன்றியமையாத சாதனங்களும் இடம் பெறக் காணலாம். நாடக பாத்திரங்களை ஏற்போர் தமது பாத்திரத்துக் கேற்ற உடையலங்காரங்களுடன் பிறிதோரிடத்திலிருந்து நாடக அரங்கில் நுழைவர். நடிகர் அரங்கின் நுழைவாயிலை அண்மித்தவுடன் அவரேற்ற பாத்திரத்தின் குணவியல்புகளைப் புலப்படுத்தும் வருதோற்றம் நாடக இயக்குனராற் பாடப்படும். வருதோற்றம் முடிந்தவுடன் நுழை வாயிலில் நின்ற நடிகர் அரங்கிற் குதிப்பர். அப்போது பாத்திரத்துக்கேற்ற ஆட்டம் இடம் பெறும். யமன் அரங்கில் தோன்றினால் பறக்கும் கம்பீரமான ஆட்டம் நிகழும். இயக்குனராகிய அண்ணாவியாரும் பல பக்கமுஞ் சரிந்து தாளத்தால் ஆட்டத்தை உசார்ப் படுத்துவர். பிராமணர் ஒருவர் தோன்றுவதானால் குந்தி மிதித்துக் குறுநடை போடும் மிருதுவான ஆட்டம் இடம் பெறும். பெண்ணொருத்தி தோன்றினால் நாணத்தோடு கூடிய நலஞ்சான்ற ஆட்டம் காட்சிதரும்.



பண்டிதர்
க. நாகலிங்கம்
இலக்கண வித்தகர்.
அளவெட்டி - மல்லாகம்
ப. நோ. கூ. சங்கத் தலைவராக நீண்டகாலம் பணிபுரிந்தவர். இப்போது நோயாளர் நலன்புரிச் சங்கத்தின் தலைவர். இவருடைய இலக்கண நூல், செந்தமிழ் இலக்கணம் விரைவில் வெளிவர உள்ளது.

அக்கால நாடகங்கள் கூத்து என்ற பெயராலேயே பேசப்பட்டனவாதலால் அங்கு ஆட்டம் முக்கிய இடம் பெற்றிருக்கும் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ? வட்டவடிவான மேடையைச் சுற்றி நாற்புறமும் சனத்திரள் கூத்தைப் பார்க்கக் குழுமியிருந்தால் நடிகரின் நடிப்பு, ஆட்டம் என்பன வட்டவடிவாக இடம் பெறும். நாடகத்தில் வரும் பாடல்கள், வசனம் என்பன உள்ளூர்க் கலைஞர்களாலேயே அமைக்கப்படும். அக்காலத்தில் ஒருவனின் பெருமையைக் காட்டுஞ் சாதனங்களிற் கூத்தும் ஒன்றாக விருந்ததால் கூத்தில் இடம்பெற மக்கள் போட்டிபோட்டு முன்வந்தனர். விவசாயிகள், கடற்றொழிலாளர், தச்சுவேலை புரிவோர், இசை வேளாளர் முதலிய பல வகுப்பாரும் கூத்தாடுவதில் பங்குபற்ற முனைப்பாக நிற்பர். கூத்தில் ஆண்களுடன் பெண்கள் சேர்ந்து நடிப்பதில்லை. பெண் பாத்திரங்களையும் ஆடவர்களே ஏற்று நடிப்பர். இன்று நாடகங்களிலும் சினிமாவிலும் இடம் பெறும் பாலியல் தொல்லைகள் அன்றைய நாட்டுக் கூத்துகளில் இடம் பெற்றது கிடையாது. ஆனால் சிறந்த நடிகரை நாடகம் பார்த்த யுவதிகள் விரும்பிக் கல்யாணஞ் செய்து கொண்டமை ஆங்காங்கு இடம்பெற்றதுண்டு. ஒருவர் தாங்கி நடிக்கும் பாத்திரம் மக்கள் உள்ளத்தைக் கவர்ந்தால் அவரின் இயற்பெயரின் முன் நாடகத்தாற் பெற்ற சிறப்புப் பெயர் நிலைத்து விடும். யமன் சின்னப்பு, வேடன் அம்பலம், பிராமணி வைத்தியலிங்கம் முதலிய பெயர்கள் எங்கள் கிராமத்தில் நிலைத்துள்ளன. அவர்கள் இறந்த பின்னும் அப்பெயர்கள் மறையாமல் உள்ளன.

நாடக இயக்குநர் அண்ணாவி என்று அழைக்கப்பட்டார். புகழ்பூத்த அண்ணாவிமார்கள் பலர் அளவெட்டியில் இருந்தனர். ஆனால் அவர்கள் எங்கு வாழ்ந்தார்கள் அவர்களுடைய சந்ததியினர் யார் என்ற வினாக்களுக்கு விடை கண்டறிய முடியாமலிருக்கிறது. ஆனால் அண்மைக் காலத்தில் வாழ்ந்த சில

அண்ணாவிமார்கள் இப்போது நம்மத்தியில் இல்லாத போதிலும் அவர்களை நன்கு தெரிந்தவர்கள் இன்னும் வாழ்கிறார்கள். அண்ணாவி இளையவர், அண்ணாவி வல்லிபுரம் என்போர் அண்மைக் காலம்வரை உயிருடன் இருந்தவர்கள். இவர்கள் நாடகங்களை நெறிப்படுத்துவதோடு காவடியாட்டம் முதலிய கலைகளையும் பயிற்றிக் கலைத் தொண்டாற்றினர். இவர்கள் சங்கீதம் பயிற்றுவதிலும் ஈடுபட்டனர்.

அளவெட்டியில் ஒருகாலத்திற் சிறந்திருந்த கலைகளில் கரகமும் ஒன்று. கரகக் கலையிற் சிறந்து விளங்கியவர் ஐயாத்துரை என்பவர். இவரின் கரகத் தேர்ச்சி காரணமாக இவர் 'கரக திலகம்' என்னும் பட்டத்தையும் பெற்றாரென்பர். அவருக்குப் பிறகு அக்கலையும் மடிந்து விட்டதென வருத்தத்துடன் கூறுவதைத் தவிர வேறு யாது செய்யவல்லோம்?

உடுக்கடித்துப் பாடுதலும் அண்மைக்காலம் வரை அளவெட்டி மக்கள் ஓம்பிய ஒரு கலையாக இருந்தது. விவாகம் முதலிய வீட்டுக் கொண்டாட்ட நிகழ்வுகளில் அக்காலத்தில் அக்கலை முக்கிய இடம்பெற்றிருந்தது. இக்கலையில் அண்மைக் காலம்வரை ஈடுபட்டு மறைந்த இருவரை நாம் அறிவோம். ஒருவர் அளவெட்டிக் கிராயிட்டியைச் சேர்ந்த சின்னத்தம்பி. மற்றவர் சிதம்பரப்பிள்ளை. இருவரின் மறைவோடு அக்கலையும் மீளாமடிவுற்றது என்றே கொள்ளலாம்.

நடிப்புத் துறையிலும் பலர் புகழுடன் வாழ்ந்தனர். மகாஜனக் கல்லூரி ஆசிரியராகவிருந்த தி. வெ. சுந்தரமூர்த்தி என்பவர் சிறந்த நகைச் சுவை நடிகர். அவர் நடிப்புத் துறையில் போதிய வாய்ப்புப் பெற்றிருப்பின் பிரபல தமிழ்நாட்டு நடிகர்களுக்கு இணையானவராக இருந்திருப்பர் என்பதில் ஐயமில்லை.

சிறந்த நடிகரும் நாடக எழுத்தாளரும் கவிஞருமான திரு. செ. கதிரேசர்பிள்ளையவர்கள் ஆசிரியராக இருந்து ஓய்வு பெற்றபின் தமது இரு கண்களையும் இழந்து விட்டார். கண்களுடன் இருந்திருப்பின் கலைத் துறையில் அவர் ஒரு சாதனையாளராக மிளிர்ந்திருப்பார் என்பதில் ஐயமில்லை.

நொத்தாரிஸ் ந. சபாபதிப்பிள்ளை இயற்றமிழ்ப் பாமாலைகள் பல புனைந்தவர். குலோத்துங்க பாண்டியன் வரலாற்றைத் திருவிளையாடற் புராணங் கூறும் வழியில் நாடகமாக்கித்தந்தவர். அந்த நாடகம் ஆயிரத்துத் தொளாயிரத்து நாற்பதாமாண்டளவில் அரங்கேற்றப்பட்டுப் பலரின் பாராட்டையும் பெற்றது.

பிரம்மஸ்ரீ. தி. சதாசிவ ஐயர் அவர்கள் ஆங்கிலம், தமிழ், சமஸ்கிருதம் என்னும் மும் மொழிகளிலும் வல்லவர். செய்யுள் இயற்றுவதிலும் வல்லவர். இருது சங்கார காவியம் என்னும் மகாகவி காளிதாசனின் காவியத்தைத் தமிழில் மொழி பெயர்த்து அர்த்தப்பட யாத்தவர். இவர் பொருமாக்கடவை விநாயகர் ஆலய உற்சவ காலத்தில் விநாயகப் பெருமான் பேரில் ஒவ்வொரு பதிகம் பாடுவது வழக்கம். அப்பதிகம் அச்சிட்டுக் கொடுக்கப்படும். அவை அனைத்தையும் பெற முடியுமாயின் ஒரு பிரபந்தத் திரட்டாக வெளிப்படுத்த முடியும்.

திருநெல்வேலி அரசினர் ஆசிரிய கலாசாலை உப அதிபராக இருந்த திரு. பொ. கைலாசபதி அவர்கள் சிறந்த கல்விமானும் சிந்தனையாளருமாவர். அவருடைய சிந்தனைகள் அடங்கிய 'கைலாசபதி ஸ்மிருதி' என்னும் நூல் யாழ்ப்பாணப் பல்கலைக்கழக வெளியீடாக அண்மையில் வெளியிடப்பட்டுள்ளது. அந்நூலில் சித்தாந்த நூல்களின் தெளிவான உயர்ந்த கருத்துக்கள் உள்ளனவென்பர். சந்தான குரவர் சரித்திரத்தைச் செய்யுள் வடிவில் வெளியிட்ட சற்குணசிங்க உபாத்தியாயரும் ஒரு சிறந்த புலவராவர். அவர் இயற்றிய பிற நூல்கள் பற்றிய விபரந் தெரியவில்லை.

கும்பழாவளைப் பிள்ளையார் பேரில் ஒரு பிரபந்தம் தொண்டர் சபையினரால் வெளியிடப் பட்டுள்ளது. அதில் சில பாடல்களைப் பாடியோர் பெயர் தெரியவில்லை. சில பாடல்கள் சிறந்த புலவர்களாகிய அபிராமிப்பட்டர் முதலியோரின் பாடல்களை ஒத்திருப்பது உண்மையே. இன்னும் எத்தனையோ கலைஞர்கள் வெளிச்சத்துக்கு வராமல் வாழ்ந்து மடிந்திருக்கலாம். அவர்களைப் பற்றி எதுவும் சொல்லமுடியாமைக்கு வருந்துவதைத்தவிர வேறு யாதும் செய்யவல்லோம் அல்லோம்.

இன்று அளவெட்டி மண்ணில் வாழ்ந்து கொண்டிருக்கும் கலைஞர்கள் பற்றியும் சில சொல்வது அவசியமெனக் கருதுகிறோம். அருட்கவி சீ. விநாசித்தம்பி அவர்கள் கலைஞர் மட்டுமல்லாமல் திருவருட் செல்வராகவும் விளங்குகிறார். அவர் இம்மெனும் முன்னே எழுநூறும் எண்ணூறும் என்ற காளமேகப் புலவர் வரிசையைச் சேர்ந்தவர். ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்னும் நாற்கவியும் பாடவல்லவர். அவர் புகழ் நீடுவாழ்க.

சிற்பக் கலைக்கே சிகரமாக இன்று விளங்குபவர் திரு செ. சிவப்பிரகாசம் அவர்கள். இவர் சிற்பக்கலைக்குச் செய்து வரும் தொண்டின் மூலம் மக்கள் மத்தியில் மங்காத இடத்தைப் பிடித்துள்ளார். ஈழநாட்டிற் பல பாகங்களிலும் அவருடைய சிற்பங்கள் உயிருள்ளன போலக் காட்சி தருகின்றன. அவர் நீண்ட நாள் வாழ்ந்து கலைத்தொண்டு பேண இறையருளை வேண்டுவோம்.

இணுவிலிற் பிறந்து அளவெட்டியில் மணம்முடித்த திரு. க. சிற்றம்பலம் அவர்களும் பல பிரபந்தங்களை இயற்றி வெளியிட்டுள்ளார். இன்னும் பல பிரபந்தங்கள் வெளிவராமலும் உள்ளன. அவர் தொண்டு நீண்டு செல்வதாக!

அளவெட்டியில் வாழ்ந்த, வாழ்கின்ற கலைஞர்கள் இன்னும் பலர் உள்ளனர். அளவெட்டி ஒரு கலைக் கிராமமாக மேலும் மேலும் சிறப்புற அளவெட்டி அருணோதயக் கல்லூரியின் பங்களிப்புப் பெரிதும் பயன்படுவதாகுக!





# சொலல் வல்லன், சோர்விலன் -வி.பி.

இலங்கைத் தமிழ் மக்களின் வரலாற்றை திரும்பிப் பார்க்கும் போது மறக்க முடியாத தலைவர்கள் சிலருள் வி. பி. என்று அன்புடன் அழைக்கப்படும் வி. பொன்னம்பலம் அவர்களும் ஒருவர். "நாமார்க்கும் குடியல்லோம், நமனை அஞ்சோம்" என்ற வரிகளை தனது வாழ்வின் தாரகமந்திரமாக கொண்டு வாழ்ந்தவர். இவர் 1930 மார்கழி 18ல் அளவெட்டிக் கிராமத்தில் வல்லிபுரம் - பொன்னம்மா தம்பதிகளின் மகனாகப் பிறந்தார்.

கல்வித்துறையிலும், அரசியற்துறையிலும் மட்டுமன்றி சமூக சேவையாளனாகவும், சீர்திருத்தவாதியாகவும் பல்லின மக்களின் நண்பனாக வி.பி என வாஞ்சையோடு அழைக்கப்பட்டு நன்மதிப்பைப் பெற்றார். கல்வித்துறைக்கு அவர் ஆற்றிய அரும் பெரும் தொண்டை ஆசிரிய, மாணவ சமுதாயங்கள் இலகுவில் மறந்துவிட முடியாது. சுன்னாகம், கந்தரோடை, ஸ்கந்தவரோதயக் கல்லூரியில் சேவையை ஆரம்பித்த வி. பி. அவர்களின் கல்விச்சேவை வன்னி வரை தொடர்ந்தது. பின்தங்கிய கிராமங்களை கல்வியறிவால் உயர்த்த வேண்டும் என எண்ணிய வி. பி. முள்ளியவளை மகாவித்தியாலய அதிபராகப் பதவியேற்று மிகத் திறமையாகவும், கடமையுணர்வுனும் செயற்பட்டு அப்பாடசாலையின் விருத்திக்கும் பாடுபட்டார்.

வி. பி. பொதுவுடமை அரசியல்வாதியாக விளங்கியவர். தலைசிறந்த பேச்சாளரும், பன்மொழிவல்லுநரும், அனுபவம் வாய்ந்த கூட்டுறவுவாதியும், தோழமைமிக்க சமூகத் தொண்டனுமாவார். பாட்டாளி மக்களின் நல்வாழ்வுக்காக, தாழ்த்தப்பட்ட மக்களின் மேம்பாட்டுக்காக, உரிமைக்காக அயராது உழைத்த வி. பி. இன ஒற்றுமைக்காகவும் பாடுபட்டார்.

யாழ். மண்ணில் இடதுசாரி இயக்கத்தின் ஆரம்பகாலம் வி. பொன்னம்பலத்தோடு பின்னிப் பிணைந்ததாகும். சமத்துவக் கோட்பாடுகளையும் முற்போக்குச் சிந்தனைகளையும் யாழ். கிராமிய மக்களும் சாதாரண தொழிலாளர்களும் புரிந்து கொள்ளும் வகையில் எளிய நடையில் எடுத்துக் கூறும் கவர்ச்சிகரமான பேச்சுக்கலை கைவரப் பெற்றவர் வி. பி. அவர்கள். இவரது பாணியே தனியானது. பேரினவாத, வகுப்புவாத அரசியலுக்கெதிராக மூர்க்கமாக குரல் கொடுத்த வி. பொன்னம்பலம் அக்காலத்தில் முற்போக்கு சிந்தனை கொண்ட இளைஞர்களின் நம்பிக்கைத் தூணாக திகழ்ந்தார். இலங்கைக் கம்யூனிஸ்ட் கட்சியின் செங்கொடிகளைத் தாங்கிய வண்ணம் யாழ். பிரதேசம் முழுவதும் கிராமம் கிராமமாகச் சென்று சோஷலிசக் கருத்துக்களைப் பரப்புவதில் முன்னின்று உழைத்த வி. பொன்னம்பலத்தை முற்போக்கு இடதுசாரிகள் எவரும் மறக்கவே மாட்டார்கள்.

சாதியின் பேரால் தாழ்தப்பட்ட மக்களுக்கு எல்லா இடங்களிலும் சமத்துவம் பேணப்பட வேண்டும் என்பதில் இவர் அயராது பாடுபட்டார். இம்மக்களுக்கு நன்மைகளை உருவாக்கித் தரவல்ல நடவடிக்கைகளில் தனது முழு கவனத்துடனும், அக்கறையுடனும் செயற்பட்டார். இவர் முன்னின்று நடத்திய போராட்டங்கள் என்றென்றும் நினைவு கொள்ளத்தக்கவை.

யாழ்ப்பாணத்தில் கூட்டுறவு இயக்கத்தை விரிவுபடுத்துவதில் இவரின் பங்கு அளப்பரியது. அங்கு பல கிராமங்களில் புதிதாகக் கூட்டுறவுச் சங்கங்களை அமைப்பதிலும் அவற்றின் நன்மைகளை சாதாரண மக்களுக்கு எடுத்து விளக்குவதிலும் அவர் முன்நின்று உழைத்தார். இவரைத் தலைவராகக் கொண்ட அளவெட்டி -

மல்லாகம் பலநோக்குக் கூட்டுறவுச் சங்கத்தின் நிர்வாகம் அளவெட்டி மத்திய ஐக்கிய பண்டகசாலைக்கென புதிய கட்டிடத்தை திறந்து வைத்தது. அளவெட்டியில் இருந்த பல பண்டகசாலைகள் இச்சங்கத்துடன் ஒருங்கிணைக்கப் பட்டன. சங்கம் விரிவடைந்தது. அதன் செயற்பாடுகளும் பெருகின. தொழிலாளர்களின் ஊதியமும் கணிசமான அளவு அதிகரிக்கப்பட்டது. மண்ணெண்ணெய் விநியோகத்திலும் சங்கம் ஈடுபடலாயிற்று. கிராமிய வங்கி முதலில் திறக்கப்பட்டது. வெங்காயக் கொள்வனவு விருத்தியடைந்தது. சங்கத்தின் இலாபமும் அதிகரிக்கத் தொடங்கியது. அளவெட்டிக் கிராமமே ஒரு கூட்டுறவுக் கிராமமெனக் கூட்டுறவுத் துறையினரால் அழைக்கப்பட்டது. அதன் செயற்பாடுகள் மல்லாகம் கிராமம்வரை இணைந்து விரிவுபடுத்தப்பட்டது. இவ்வாறு வி. பொன்னம்பலத்தின் துணிச்சலான செயற்பாட்டினாலும், விடாமுயற்சியினாலும் அளவெட்டி - மல்லாகம் ப. நோ. கூ. சங்கம் நாடுபூராவும் வியக்கத்தக்க அளவில் செயற்பட்டது எனலாம். வி. பொன்னம்பலம் கிராமசபைத் தலைவராக வருவதற்கும் அரிய பணிகள் பல புரிவதற்கும் அவரது கூட்டுறவுப் பிரவேசமே வழி வகுத்தது எனலாம். இவர் கிராமசபைத் தலைவராக இருந்த காலத்திலேயே அளவெட்டி சமாஜமண்டபம் நிர்மாணிக்கப்பட்டது என்பதும் குறிப்பிடத்தக்கது.

**'மக்கள் சேவையே மகேசன் சேவை' என்றெண்ணி சமூகத்தில் உள்ள தாழ்த்தப்பட்டவர்களின் பக்கம் நின்று அவர்களின் எதிர்கால முன்னேற்றத்திற்காகவும் பாடுபட்டவர்.**



வி. பொன்னம்பலம் அரசியல் வாழ்வில் நேர்மைமிகுந்த மனிதராகவே அனேகரால் மதிக்கப்பட்டார். "அவருடைய அரசியல் கருத்துக்களை நாங்கள் ஏற்றுக் கொள்ள மாட்டோம். ஆனால் அவர் நேர்மையானவர் என்பதை ஏற்றுக் கொள்வோம்" என அவரின் அரசியல் கருத்துக்கு மாறான கருத்துடைவர்கள் கூட வி. பி.யைப் பற்றி அளப்பரிய நம்பிக்கையும் மதிப்பும் வைத்திருந்தமை அவரின் சிறப்புக்களில் ஒன்று.

இவர் தமிழ் அரசியற் களத்தில் மட்டுமல்ல சிங்கள அரசியற் சூழலிலும் மிகவும் பிரபல்யமானவராகவே காணப்பட்டார். சிங்கள அரசியல்வாதிகளால் தமிழினத்திற்கு விமோசனம் கிடைக்காது என்று உணர்ந்த பின்பு, தமிழ் தேசிய இனத்தின் சுதந்திர பாதையில் தன்னையும் இணைத்துக்கொள்ள அவர் தயங்கவில்லை. "செந்தமிழர் இயக்கம்" என்னும் புதிய கட்சியை உருவாக்கி தமிழ் மக்களின் தேசிய நலனுக்காக குரல் கொடுத்த இவர் பின்னர் தமிழர் விடுதலைக் கூட்டணியுடனும் தன் இயக்கத்தை இணைத்துக் கொண்டார்.

**அவர் ஏழை, எளிய மக்களினதும் உழைப்பாளிகளினதும் தோழனாகவும் சாதி மத குல பேதமற்ற மக்களின் நண்பனாகவும் சமதர்ம அரசியல் அறிவாளனாகவும் திகழ்ந்தார்.**

எமது சமுதாயத்தில் நிலவும் பொருளாதார ஏற்றத் தாழ்வுதான் எல்லாப்பிரச்சனைகளுக்கும் காரணம் என்று வி. பி. கருதினார். சமுதாயத்தில் நிலவும் பொருளாதார ஏற்றத்தாழ்வு இயற்கையான ஒன்றல்ல. அது மனிதரால் தான் உருவாக்கப்பட்டது. இவ்வாறான பிரச்சினைகளை குறைத்துக் கொள்ள அரசியல் யந்திரம் தான் உதவ வேண்டும் என்பது அவரது கருத்து. இது இயற்கை இயலுக்கும் அமைந்தது. இது ஒரு விஞ்ஞான உண்மையும் கூட. நாம் சேவை செய்வது எமது சமுதாயத்தில் நிலவும் பலவேறு ஏற்றத்தாழ்வுகளினால் உருவான வெறுமையை நிரப்புவதற்கே என்றும் அவர் கூறியுள்ளார். அந்த வகையில், தான் கொண்ட சமூக அரசியல் சித்தாந்தம் அமைந்துள்ளது என்றும் பெருமைப்பட்டுள்ளார்.

வி. பொன்னம்பலம் அவர்கள் அரசியலில் குறுக்கு வழியைப் பின்பற்றவில்லை. அவ்வாறு இருந்திருப்பாரேயாயின் என்றோ அரசியில் கொடிகட்டிப் பறந்திருப்பார். ஆனால் அவர் தனது அரசியற் கொள்கை மேல் கொண்ட நம்பிக்கையாலும், பற்றினாலும் குறுக்குவழியில் போக விரும்பவில்லை. மக்கள் சேவையே மகேசன் சேவை' என்றெண்ணி சமூகத்தில் உள்ள தாழ்த்தப்பட்டவர்களின் பக்கம் நின்று அவர்களின் எதிர்கால முன்னேற்றத்திற்காகவும் பாடுபட்டவர். அவர் ஏழை, எளிய மக்களினதும் உழைப்பாளிகளினதும் தோழனாகவும் சாதி மத குல பேதமற்ற மக்களின் நண்பனாகவும் சமதர்ம அரசியல் அறிவாளனாகவும் திகழ்ந்தார். அத்துடன் அவர் முதலாளித்துவத்தின் அனைத்து அடக்குமுறைகளுக்குள் இருந்து மக்களை விடுவிக்கும் அரசியல் போக்கையே விரும்பி அதனோடு தன்னையும் இணைத்துக் கொண்டார்.

அவரின் அரசியல் வாழ்க்கை இலங்கையளவில் மட்டு குறுகிய ஒன்றன்று. உலகளாவிய ரீதியிலும் பல அரசியல் தொடர்பினைக் கொண்டிருந்தார். இலங்கையில் ஏற்பட்ட மாறுபட்ட போராட்ட சூழ்நிலை காரணமாக தனது விருப்பத்திற்கு மாறாக பெரும் துயரோடு சொந்த நாட்டை விட்டு இடம்பெயர்ந்தார். இருந்த போதிலும் இறுதி வரை தனது அரசியல் கருத்துக்களுடனேயே வாழ்ந்தார். தனது அரசியல் வாழ்வின் ஆசானும் ஸ்கந்தவரோதயக் கல்லூரியின் முன்னாள் அதிபருமான ஒறேற்றர் சுப்பிரமணியத்தின் இரங்கற் கூட்டத்தில் வி. பி. சிறப்புரையாற்றினார். அதை அவர் பெரும் பேறாவாவே நினைத்தார். இந்த மனிதன் இறுதியாக பேசிய வார்த்தைகள் காற்றோடு கலந்த அதே வேளை அவரும் எங்களிடம் இருந்து பிரிந்து நினைவுகளோடு கலந்தார்.

■■■

# இணையத்தில் அருணோதயம்




www.alaveddy.com

alaveddy@home.com




# Alaveddy

Abirami Raveendran

On the northern tip of Sri Lanka, in the Jaffna peninsula, sits a beautiful village full of palm trees and tasteful tropical fruits. Miles of beaches with white sands provide a striking contrast to the aquamarine waters of the Indian Ocean.

Alaveddy came to be affectionately called by this name mainly from the meaning of the two Tamil words, Alavu, and, etti. Because Alaveddy is a vast area, it is very difficult to measure (alavu) its area, and catching up (etti) with it in size is hard to do. Alaveddy is one of the largest villages in Sri Lanka.

Alaveddy is situated in the Jaffna district of the Northern province in the village council of Alaveddy - Mallakam. It is bordered on all sides by many villages. On the northern side Pannaalai, in the east Mallakam, in the south Mahiappity, and on the west Peruvizhan and Siruvizhan. The dimensions of this village is 2.5 x 2 miles approximately.

Alaveddy is known for its many facilities including schools and hospitals. In the central part of this village, there is a hospital, a maternity hospital, and a high school (Arunodhaya College). Six primary schools are spread out among the whole village for small children.

The people of Alaveddy are for the most part, very devoted to their religion, Hinduism. Inevitably, there are many temples situated in Alaveddy. The six main ones are: Thavalakiri Muthumariamman, Azhakollai Pillayar, Kurrukal Kinathadi Pillayar, Kumbalavallai Pillayar, Perumakadavai Pillayar, and Alaveddy South Muthumariamman. Many small Hindu shrines can be found in the back yards of houses. There are three churches also in the village.

On the eastern side of Alaveddy, there is the Pinakai lake spreading over many acres. This body of water proves to be very useful for agriculture. In the summertime, when the waters of the Pinakai lake have been dried up, the land is used for bullock cart races.

The majority of the housing in Alaveddy is made of brick. Small huts made of cadjans and palmyrah leaves are also not

uncommon.

Although Alaveddy is a relatively small area compared to the whole of Sri Lanka, it is composed of three different types of soil: red soil, clay, and a mixture of the two. Agriculture is an active industry that takes place mainly in the red portion of the land.

The water generated from human made wells is used as drinking water in this village. Wells are very popular in Alaveddy with every house usually having one. The majority of the people engage in farming / agriculture.

The leading profession in the village is farming. Farming includes cultivation and raising barn animals such as sheep, goats, and cows. Farmers cultivate tobacco, onions, and other vegetables. Other professions include goldsmith, cigar manufacturing, toddy tapping, teaching and technical work. Alaveddy exports the vegetables cultivated by the local farmers, and also the manufactured cigars. Along with this variety of professions, a small number of people are great masters of traditional Tamil instruments, which include the Nadhaswaram and Mellam (drum).

In Alaveddy, a variety of modes of transport are used. Locally and from town to town, government buses are often used. Private vans are also popular. Cars and motorcycles are common as well. To get around within the village, bicycles are the number one mode of transport. Although, hardly used by the common people, bullock carts can also be seen mainly for the purpose of agriculture.

The population of Alaveddy was about 10,000 before the negative effects of the war took its toll. Of this, 55% was composed of male, and the remainder were females.

Many schools are attended by pupils for primary learning: Arunodhaya College, Gnanodhaya Padasaalai, Sathanantha Vithiyasaalai, Karuvepilam Tamil Kalavan Padasaalai, Arunasalam Vithiyasaalai, Kelvathai Tamil Kalavan Padasaalai, and Alaveddy South Catholic Padasaalai. Arunodhaya College is the only school in Alaveddy that can be attended for advanced learning.

A great number of Tamil students in Alaveddy were entering university in the past years, but after standardisation rules were set by the government in the 1970's, the numbers have drastically dropped. Because of the large group of Tamil students achieving ideal results, and entering the universities, the government decided to set a limit on the number of students entering from each region. This discouraged many students and became the prime reason for students joining the militant movements. 'Why bother studying when there's no chance of getting into university?' was the feeling that is ever so present among these youths.

Of the many ancestors, who once lived in Alaveddy, Arunasalam Udayaar is one who had great influence on the village. He was born approximately in the middle of the nineteenth century. He is believed to have devoted much of his time to education. He wanted all the people in Alaveddy to have an equal chance at acquiring a proper education. In 1894, he founded Arunodhaya College. This school has been the centre of astonishing results for 106 years now. Later on, he also founded Arunasalam Vithiyasaalai for the people of the south. These two famous schools are continuously spreading Mr. Arunasalam's good name.

Alaveddy is one of the leading villages in which the arts (music, dance, drama) are well performed and taught. Many famous musicians who play the Thavil, Nadhaswaram and sing Sangeetham are from Alaveddy as well.

From providing many facilities to its people to enjoy life, to standing proud when one of its inhabitants accomplishes a great deed, my mother land, Alaveddy always will be, in my heart, a tropical paradise.





**Abirami Raveendran came to Canada in 1989 as a six - year old. She is a Grade 12 student at Woburn Collegiate Institute in Toronto.**

# அளவெட்டிக் கிராமத்தில் இசைக்கலை வளர்ச்சி

**யாம்** வாழ்ந்த பிரதேசம் அளவெட்டி. அண்ணாவிமார் எனப்பெயர் பெற்ற நாடக அறிஞர்களும் இசையில் பெயர் பெற்ற நல்லறிஞர்களும் வாழ்ந்த பூமி. இசைக்கலை அன்று வசதியாக வாழக்கூடிய வருவாய் தரும் ஒரு கலையாக இருக்கவில்லை. அதனால் பரம்பரைத் தொழிலாக அதைக் கொண்டவர்களைத் தவிர இசைக்கலையில் பரவலான நாட்டங் கொள்வோர் அரியர். அண்ணாமலைப் பல்கலைக் கழகம் சங்கீதத் துறைக்கு முக்கியம் கொடுத்த காலத்தில் யாழ்ப்பாண மாணவர்களும் சிலர் அங்கு பயிற்சி பெற்று வெளியேறினர்.

அளவெட்டி சதானந்த வித்தியாசாலை அதிபராக இருந்த திரு. அ. பொன்னுத்துரை அவர்கள் தமது பாடசாலை மாணவர்கள் பல துறைப் பயிற்சி பெற வேண்டுமென்னும் விருப்பமுடையவர். அதனால் சங்கீதம், நடனம், நாடகம், நெசவு, பன்னவேலை என்பவற்றுக்கு முக்கியத்துவம் கொடுத்திருந்தார். அவருடைய கிருபாகடாட்சம் என்மேலும் தாவியது. எனது ஆரம்ப சங்கீதக் கல்விக்கு வித்திட்டது சதானந்தா வித்தியா-சாலையும், அதிபர் திரு. அ. பொன்னுத்துரையும் என்றால் மிகையாகாது. சங்கீதத் துறையால் வாழ்க்கையில் முன்னேறலாம் என்று எண்ணாம-லிருந்த எனக்கும் அத்துறையில் நாட்டமேற்பட்டது.



**வி. கே. நடராசா**
**(சங்கீதபூஷணம் - தேனிசைவாரிதி)**

அதிபர் அவர்களின் தூண்டுதலால் நான் இந்தியா சென்று சங்கீதம் படிக்கவேண்டிய நிலை உருவாகியது. நான்கு ஆண்டுகள் கற்று சங்கீத பூஷணம் பட்டத்தைப் பெற்றேன். அக்காலத்தில் பட்டங்கள் அரிதாக இருந்த-படியால் பட்டத்தின் பெயரால் ஆட்களை அழைப்பது வழக்கம். பி. ஏ. எனக் கனகசபை என்பவரையும், பீ.எஸ்.சி எனச் சிதம்பரப்பிள்ளை ஆசிரியரையும் அழைத்தது போல என்னையும் சங்கீதபூஷணம் என்ற பெயரால் குறிப்பிட்டனர். அளவெட்டியில் முதன்முதலில் சங்கீதபூஷணப் பட்டம் பெற்றவன் நானாகவேயிருந்தேன்.

இசைக்கலைக்கு இலங்கை அரசாங்கமும் ஒரு முக்கிய இடங்கொடுக்க முற்பட்டது. இசைக்கலை பயின்றவர்களுக்கென ஒரு சம்பளத்திட்டம் வகுத்தது. அது மட்டுமல்லாமல் நடனக் கலைக்கும் இடம் கிடைத்தது. நடனக் கலையும், சங்கீதக் கலையும் பரீட்சையில் பாடமாகவும் ஆக்கப்பட்டன. இந்நிலையில் சங்கீத ஆசிரிய நியமனம் எனக்குக் கிடைத்தது. சங்கீதங் கற்க விரும்பியோருக்கு உதவ எனக்கு வாய்ப்பும் கிடைத்தது.

அளவெட்டியில் வாழ்ந்த பல பெரியார்கள், முக்கியமாக திரு. செ. மயில்வாகனம், திரு. மு. செல்லையா ஆசிரியர் என்போர் என்னையுஞ் சேர்த்து ஒரு இசைக்கலை மன்றத்தை ஆரம்பித்து இசைத்துறை வளர்ச்சிக்கு வித்திட்டனர். இவ்விசைக்கலை மன்றம் ஆண்டுதோறும் இசைவிழா எடுத்து இசையின் பெருமையைக் கிராம மக்கள் எல்லோரும் அறிய வழி சமைத்தது. இசைக்கலை மன்றத்தின் மூலம் நடைபெற்ற சங்கீத வகுப்புக்களில் பலர் முன்வந்து கல்வி பயின்றனர். வட இலங்கைச் சங்கீத சபையாரால் நடத்தப்படும் பரீட்சையில் மாணவர்கள் ஆண்டு 1 தொடக்கம் ஆண்டு 6 வரை பரீட்சைகளில் தேர்ச்சிபெற்று திறமைச்சான்றுப் பத்திரங்களைப் பெற்றுவந்தனர். ஆசிரியர் பிரிவுப் பரீட்சைகளில் சித்தியடைந்த மாணவர்கள் இன்று 48 பேர் இசை ஆசிரியர்களாகக் கடமை புரிகிறார்கள். முக்கியமாக, வை. கணேசலிங்கம், திருமதி விமலாதேவி நாகேஸ்வரன், திருமதி திருமகள் இராமச்சந்திரன் என்பவர்கள் சங்கீத ஆசிரிய ஆலோசகர்களாகக் கல்வி நிலையங்களில் பணியாற்றுகின்றனர். அமெரிக்கா, கனடா, இலண்டன், சுவிஸ், பிரான்ஸ், அவுஸ்திரேலியா போன்ற வெளிநாடுகளிலும் எமது மற்ற மாணவர்கள் இசை வளர்ப்பது கண்டு நான் பெருமகிழ்ச்சி அடைகிறேன்.

இசைத் துறையில் பட்டம் பெற்றோர்க்கு கலை, விஞ்ஞானப் பட்டதாரி ஆசிரியர்களுக்கு உரிய வேதனம் வழங்கப்படுவதால் இத்-துறையை நாடுவோர் தொகை அதிகரித்து வருகிறது. இசைக்கலைகளில் தேர்ச்சி பெறுவோர் தொகை அதிகரித்தாலும் இசைத் துறை வளர்ச்சி பெறுகிறதோவென்பது கேள்விக்குறியாகவே நிற்கிறது. பட்டமுண்டு, சம்பளம் வருகிறது என்ற அளவோடு தமது துறையை மேலும் ஆழ, அகலங் கொண்டதாக்க இசையாசிரியர்கள் முயலாமை வேதனை தருவதொன்றாகவே இருக்கிறது. பாடத் தெரியாத, சம்பளம் பெறும், இசைப் பட்டதாரிகளும் இருக்கிறார்கள் என்ற பேச்சும் அடிபடுவதை நாம் அறிவோம்.

வாழ்க்கையில் மகிழ்ச்சியையும், பண்பாட்டையும் தரவல்ல இசைக்கலையை, அப்பண்பு நோக்கி மேலும் வளர்க்கவேண்டியது அவசியமென்பதை இத்துறையில் பட்டம் பெறுவோர் சிந்திக்கக் கடவர். இசை என்பது இறைவனுடன் இசைவிப்பது என நல்லறிஞர் கூறக் கேட்டிருக்கிறோம். ஆதலால் இக்கலையை ஆலயங்களில் பரப்ப இசைவாணர் சுயநலத்தைப் பெரிது படுத்தாமல் முன்வரவேண்டும். இன்று அளவெட்டிக் கிராமம் இசைவல்லவர் பலரைக் கொண்டதாய் மிளிர்ந்தாலும் மேலும் வளர்ச்சி பெறுவது அவசியம். இசைக்கலை மன்றத்தைப் புத்துயிர் பெறச் செய்து இசையை வளர்ப்போம். எனது இசை வளர்ச்சிக்கு வித்திட்ட அளவையூர்ப் பெருமக்களுக்கே என் பெருமை உரித்தாகும்.



# ARUNODHAYA COLLEGE SPORTS DEVELOPMENT (1956-1971)

During the earlier half of the 20th century, sports facilities at Arunodhaya College were very limited. Interest among the students was low too. Mr.K.Nagamany (Y.M.C.A. trained) joined the school as a physical education teacher. Under his guidance, interest among students thrived and Arunodhaya's sporting prowess grew. The facilities, in terms of sporting fields, improved greatly. Late Mr. S. Sivasubramaniam, principal of Arunodhaya College (1949-1968) and Mr. Segaram (Secretary of the meet) were instrumental in these development.

It gives me great pride to highlight some of our college's sports achievements during this excision period.

### Soccer:

In 1957, Arunodhaya entered a first XI team for the soccer tournament organised by the Jaffna School Sports Association (J.S.S.A.). Arunodhaya fared well that year. The team defeated the defending champions, Jaffna Central College, by one goal to nil. The results for 1957 were three wins an one loss.

In the following year, Arunodhaya entered the Second XI team in the J.S.S.A. tournament. The Second XI won the championship in 1960 and 1971. In 1963, 1965, 1966 and 1967the team were group champions, but were eliminated in the finals. Arunodhaya's Third XI entered the tournament for the first time in 1966 and were group champions in 1966 and 1967. These teams played a number of friendly and tournament matches and did well.

### Hockey:

Arunodhaya began playing hockey in 1965 and did extremely well in the tournament organised by the Jaffna Schools Hockey Association (J.S.H.A.) Our second XI team were the undefeated champions for several years. A number of our players represented the J.S.H.A. in the First XI and Second XI teams at the Hockey Nationals. Of particular mention is P. Sithamparasivan who captained the second XI team in 1968 for the Nationals held in Matale. Another player, R.Sivarajah, was part of the Ceylon schools team that played against the Pakistan schools team.

### Athletics:

Arunodhaya conducted athletic meets annually, overseen by Mr. Segaram, Secretary of the Meet. Records indicate that this tradition extends as far back as 1946. At this time, our college produced some fine athletes. Our athletes took part in the Zonal Athletic Meets and won places.

### Cricket:

Cricket was also introduced in our college, but it failed to thrive due to the inadequate facilities. The school team played a number of friendly matches.

### Physical Training Competitions:

Arunodhaya participated in the physical training competitions conducted by the Department of Education and were group champions and runners-up in the finals several times in the senior and intermediate divisions. Arunodhaya became the national champions under the direction of Mr.Thambithurai who succeeded Mr. K. Nagamany.

Mr. K. Nagamany served at Arunodhaya College for fifteen years (1956-1971). He is currently an Assistant Lecturer at the University of Jaffna, a post he has held since 1998.

**K. Retnavel**
**Sydney, Australia.**



**Hockey First Eleven - 1968**

# மஹாகவி கவிதைகளில் வாழ்வியல் முனைவு

- அ. புராந்தகன்

**இது** நடந்தது 1968ஆம் ஆண்டளவிலாக இருக்கலாம் என்று நினைக்கிறேன். நாங்கள் அப்பொழுது சிறுவர்கள். நாங்கள் என்றால் நான், ஆதவன், பாண்டியன், சேரன், சோழன், வதனி, இந்துமதி, இனியாள் ....... இப்படிப் பலர். மஹாகவியினுடைய கவிதைகளை மனப்பாடம் செய்து கவியரங்கங்கள் செய்வது, கையெழுத்துப் பத்திரிகை நடத்துவது, நாடகங்கள் போடுவது என்று எமது சிறு பிராயம் இலக்கியமாகக் கழிந்து கொண்டிருந்த ஒரு காலம். ஒரு முறை கூட்டுறவாளர் தின விழாவின் நாடகப் போட்டியில் எமது நாடகம் பரிசொன்றைப் பெற்றது. அதனை இயக்கியவர், சிறந்த நாடகாசிரியரும், நெறியாளரும் ஆகிய கவிஞர், திரு. செ. கதிரேசர்பிள்ளை அவர்கள். நாடகம், மஹாகவியின் 'கோலம்' என்ற பாநாடகம். இந்த வெற்றிக் களிப்போடு நடிகர்கள், உதவியா-ளர்கள் எல்லோரும் கூடியிருந்த ஒரு மகிழ்வான மாலைப் பொழுது. கூடவே மஹாகவியும் இருந்தார். இருந்தாற் போல் மஹாகவியினுடைய மகள் அப்பாவைப் பற்றிப் புகழ ஆரம்பித்து விட்டார். "என்னுடைய அப்பா பெரிய ஆள். . . . அவர் ஒரு மஹாகவி. . . . அவரை மிஞ்ச ஆராலும் முடியாது" இப்படியாக. இதனைக் கேட்டுக் கொண்டிருந்த ஒருவர் மஹாகவியைப் பார்த்து 'என்ன உங்கள் பிள்ளை இங்கிதம் தெரியாமல் இப்படிச் சொல்கிறாளே. இப்படியா பிள்ளைகளை வளர்ப்பது?' என்று கேட்டார். அதற்கு மஹாகவியின் பதில் இவ்வாறு அமைந்தது: "அவளுக்கென்ன தெரியும்? பாவம் சின்னப்பிள்ளை. ஊரிலை உலகத்திலை கதைக்கிறது அவளுடைய காதிலும் விழுந்திட்டுதாக்கும்...... கேட்டுச் சொல்கிறாள். நான் என்ன செய்ய?"

இதை அவர் அப்பொழுது நகைச்சுவையாகக் குறிப்பிட்டிருந்த பொழுதிலும் ஊரிலும் உலகிலும் பேசப்படுகிற ஒரு கவிஞராகவே அவர் வாழ்ந்து மறைந்தார் என்பது யாவரும் அறிந்ததே. நேர்முகப் பரீட்சை ஒன்றின்போது 'ஈழத்தின் தலை சிறந்த கவிஞர் என யாரைக் கருதுகிறீர்கள்' என்று இவரைக் கேட்டதற்கு 'து. உருத்திர மூர்த்தி' என்று பதில் அளித்ததாக ஒரு கதையையும் நான் கேள்விப்பட்டதுண்டு. மஹாகவியின் இயற் பெயர் உருத்திரமூர்த்தி. ஆரம்பத்தில் 'பண்டிதன்' என்றும் பிறகு 'மஹாகவி' என்றும் இவர் இட்டுக் கொண்ட புனை பெயர்கள் கூட ஒரு வகையில் அதீத தன்னம்பிக்கையின் வெளிப்பாடுகளே எனக் கூறுவாரும் உளர். எது எவ்வாறாயினும் வாழ்வின் மீதான பற்றுதலையும், எதிர் காலத்தின் மீதான நம்பிக்கையையும், எத்தகைய இடர் வரினும் அவற்றை உதைத்து வெல்வதற்கான முனைப்பையும் அவருடைய படைப்புகளில் நிறைய இடங்களில் காணலாம்.

'மப்பன்றிக் கால மழை காணா மண்ணிலே' - 'சப்பாத்தி முள்ளும் சரியாக விளையாத ஒரு தறையிலே - அந்தப் பாறை பிளந்து பயன் விளைக்கும்' ஊரானைப் பற்றிச் சொல்கிறது 'மீண்டும் தொடங்கும் மிடுக்கு' என்கிற சிறு கவிதை. 'கிள்ளி முகர்ந்து கிறு கிறுத்துப்' போகும் படிக்கு 'ஆட்டத்து மங்கையர் போல் கதிர்கள் சூடி அங்கு மொய்த்து நின்ற" நெற்பயிரை 'கொள்ளை போல் வந்து கொடுமை விளைத்து' வெள்ளம் விழுங்கி விடுகிறது. இங்கே கவிஞர் சொல்ல வந்த முக்கியமான விடயம் இதுதான் -

". . . .பின்னர் அது
வற்றியதும், ஓயா வலக்கரத்தில் மண்வெட்டி
பற்றி, அதோபார், பழையபடி கிண்டுகிறான்.
சேர்த்தவற்றை
முற்றும் சிதறவைக்கும் வானத்தைப்
பார்த்தயர்ந்து நிற்கும் பழக்கமற்றோன்
வாழி, அவன்
ஈண்டு முதலில் இருந்தும் முன்னேறுதற்கு
மீண்டும் தொடங்கும் மிடுக்கு!"

'சிறு புல்' என்பது இன்னொரு கவிதை. எந்தப் பசுமையையுமே எதிர்பார்க்க முடியாத 'கிடுகிடுத்துக் கொண்டிருக்கும் பாட்டையிடை' 'கல்லடுக்கி மேலே கனத்த உருளைகளைச் செல்லவிட்ட' ஒரு வீதியின் இடுக்கிலும் 'இருகைத்தளிர் நீட்டி' ஒரு 'புல்' வளர முடியும் என்பது மஹாகவியின் கவிப்பொருள் ஆயிற்று. புள்ளி அளவில் கூட ஒரு உயிர் வாழ்கிறதே என்ற பிரமிப்பும் தற்செயலாக அதன் அழிவிற்குத் தான் காரணமாகி விட நேர்ந்த கழிவிரக்கமுமே அவருடைய 'புள்ளி அளவில் ஒரு பூச்சி' என்ற கவிதையில் வெளிப்படுகிறது. இப்படியாக அவருடைய சிறு சிறு கவிதைகளில் காணப்படுகிற வாழ்வியல் முனைப்பின் ஒரு வகை வியாபகமே 'சடங்கு', 'ஒரு சாதாரண மனிதனது சரித்திரம்' போன்ற காவியங்களிலும் இழையோடியிருக்கிறது. மஹாகவியே கூறியிருப்பதைப்போல 'திட்ட மிட்ட செயல் சில ஆற்றி வெற்றி அடைந்தவன் வீர காவியம்' ஆகிய 'கலட்டி'யே பின்பு

'கண்மணியாள் காதை' என்ற வில்லுப்பாட்டாக உருவாகிற்று. அவருடைய பா நாடகங்களின் நாடக மாந்தர்களும் இதனைப் பல இடங்களில் பிரதிபலிக்கின்றனர்

"என்றோ ஒரு நாள், இருந்து பார் மாணிக்கம்,
நின்றந்தக் கோயில் நிமிர்ந்து, நெடுந் தூரம்
பார்த்துப் பயன்கள் விளைக்கின்ற கோபுரமும்,
வேர்த்துக் கலைஞர் விளைத்த மணி மண்டபமும்,
வீதிகளும், நூறு விளக்கும், பரதத்தின்
சேதிகளைக் கூறும் சிலம்புச் சிறுபாதம்
ஆடும் அரங்கும், அறிந்து சுவைஞர்கள்
நாடிப்புகுந்து நயந்திட நீ சோமனுடன்
ஊதும் குழலில் உயிர் பெற்று உடல் புளகித்து
ஆதி அறையில் அமரும் கடவுளுமாய்
என்றோ ஒரு நாள் எழும்பும், இருந்து பார்!"

என்று 'கோடை'யில் பஞ்சையர் மூலமாக ஒலிக்கிற குரலில், இன்றைய போராட்டச் சூழலிலும் பொருந்தக் கூடிய ஒரு நம்பிக்கைத் தொனியை அவதானிக்கலாம். இதே நாடகத்தில்,

"நாமும் நமக்கோர் நலியாக் கலை உடையோம்!
நாமும் நிலத்தினது நாகரிக வாழ்வுக்கு
நம்மால் இயன்ற பணிகள் நடாத்திடுவோம்!
சும்மா இரோம்!"

என்று மாணிக்க நாயனக்காரர் பேசுவதும்,

"உண்மை கொடிதே! உலகில் அதனுடனே
போரிட்டு வாழப் புகுந்தோம். கலங்குவதோ?
வீரிட்டலறி விழுந்து புரளுவதோ?
பார் எட்டுத் திக்காய்ப் பரந்து கிடக்கிறது . . . .!"

என்று கமலி எழுச்சியுறுவதுவும் மேலும் சில உதாரணங்கள்.

'புதிய தொரு வீடு' நாடகத்தில் இடி, மின்னல், புயல் விளைத்த அனர்த்தங்களின் மத்தியில் அகதியாகிப் போய்விட்ட ஒரு சூழ்நிலையிலும்,

"வாழவல்ல ஓர் உலகைக் கண்டோம்,
புயல் ஒன்றின் ஊடாக"

என்று மறைக்காடர் கூறுகிற பொழுதிலும் சரி,

"காற்றினால் உலைக்கப்பட்டுக்
கழுத்தினைக் குனிந்து சாம்ப,
நேற்றைய மழைக்கு வந்த
நெடும் புல்லோ நாங்கள் அப்பு?"

"வேருக்குள் உறுதி கொண்ட
வேம்புகள் மனிதர்"

- என்று மறைக்காடரும் மாசிலனும் சம்பாஷிக்கிற இடத்திலாயினும் சரி, நான் ஆரம்பத்தில் குறிப்பிட்ட, வாழ்வின் மீதான பற்றுதல், எதிர்காலத்தின் மீதான நம்பிக்கை, மற்றும் வாழ்வியில் முனைப்பு என்கிற அம்சங்கள் வெளிப்படுவதை ஒருவர் எளிதில் இனங்கண்டு கொள்ள முடியும்.

இவ்வாறான கவிதைகளில் இருக்கிற இன்னொரு சிறப்பம்சம் என்னவென்றால் இந்த உணர்வு பிரச்சாரப் பாங்காகவோ, வெறும் கோஷங்களாகவோ அல்லாமல் அவற்றின் யதார்த்தப் பண்பு கெடாமல் அதே வேளை ஆழ்ந்த பாதிப்புத் தருவனவாக மஹாகவி அவற்றை அமைத்திருப்பதுவே ஆகும்.



மஹாகவி உருத்திரமூர்த்தி

வாழ்க்கையில் சஞ்சலங்களும், தோல்விகளும், தோல்வியின் பாற்பட்ட சோர்வுகளும் வருகிற பொழுதுகளில் இத்தகைய கவிதைகளை மீட்டுப் பார்ப்பதென்பது மனதிற்கு ஒத்தடம் தந்து புதுத் தென்பை அளிப்பது போல இருப்பது, என்னுடைய அநுபவம்.



# அருணோதயக் கல்லூரிச் சரித்திரச் சுருக்கம்




**1894**ல் ஓர் ஓலைக் கொட்டிலில் ஆரம்பிக்கப்பட்ட பாடசாலையே வளர்ச்சிபெற்று அருணோதயக் கல்லூரியாக இன்று விளங்குகிறது. நிலத்தையும் கொட்டிலையும் உபகரித்து ஆசிரியர்களையும் நியமித்து ஆரம்பித்து வைத்தவர் அருணாசல உடையார் அவர்கள். ஆரம்பகால ஆசிரியர்கள் திரு. மு. செல்லப்பாச்சட்டம்பியார், திரு. அ. பரமுச் சட்டம்பியார் என்னும் இருவருமே. அவர்கள் தமிழ், சமயம், நல்லொழுக்கம் ஆகியவற்றையே படிப்பித்தார்கள். 1898ல் சின்னத்தம்பிச் செட்டியாரைத் தலைமையாசிரியராகப் பெற்று ஓர் ஆரம்ப ஆங்கிலபாடசாலை ஆயிற்று. செட்டியார் சென்னைபட்டினத்தில் ஆங்கிலம் கற்றவர். சிறந்த ஆங்கில ஆசிரியர். அக்காலத்தில் கல்விப் பரிசோதகராயிருந்தவர் லெம்பிறிகென் என்ற ஆங்கிலேயர். அவர் செட்டியாருடைய மாணவர்களைப் பரீட்சித்துப் பார்த்து மிக்க திருப்தியும் மகிழ்ச்சியுமடைந்து "உதவி நன்கொடை பெறும் பாடசாலையாகத் தரம் உயர்த்தப்படலாம்" எனச் சிபார்சு செய்தார். அப்பொழுது செட்டியாருக்கு உதவியாகத் திறமையுடன் கற்பித்தவர்கள் திரு. அ. பொன்னம்பலம், திரு. இளையதம்பி, திரு. க. இளையதம்பி, திரு. க. அப்பாக்குட்டி ஆகியோர். பாடசாலை ஐந்தாம் வகுப்புவரை திறமையாகச் செயற்பட்டமையால் படித்தவர்கள் பலர் தென்னிலங்கையில் தேயிலைத் தோட்டம், தென்னந் தோட்டங்களிலும் பர்மா, மலேசியாவிலும் உத்தியோகம் பெற்று வாழ்ந்தார்கள். அவர்கள்தான் அளவெட்டியில் முதலில் கல்வீடு கட்டியவர்கள்.

செட்டியார் இளைப்பாறியபின் திரு. க. குமாரசாமி, திரு. க. முத்துசுவாமி ஆகியோர் தலைமை ஆசிரியர்களாயிருந்தனர். சண்டிருப்பாய் கல்வளையைச் சேர்ந்த திரு க. சோமசுந்தரம் பி.ஏ. அவர்கள் 1913ல் தலைமை ஆசிரியரானார். அவருடைய தலைமையில் 6ஆம், 7ஆம், 8ஆம் வகுப்புகள் ஆரம்பிக்கப்பட்டுக் கல்லூரி வளர்ச்சியடைந்தது. அவருக்கு உதவியாயிருந்து கல்லூரியை வளர்த்த நல்லாசிரியர்கள் திருவாளர்கள் ரி. வி. செல்லப்பா, த. தியாகராசா, இ. இராசையா, வீ. பாலசுந்தரம், சீ. இளையதம்பி, மு. வயிரமுத்து, அ. வைத்தியலிங்கம், க. சற்குணசிங்கம், யே. கே. கென்ஸ்மன், இ. தாமோதரம்பிள்ளை, அ. சுப்பையா, த. செல்லையா, த. சின்னத்தம்பி, ப. மு. செகராசசிங்கம், ச. மயில்வாகனம் ஆகியோர். 1919ல் திரு. சோமசுந்தரம் அவர்கள் மாற்றம் பெற்றுச்செல்ல திரு. த. சின்னத்தம்பி அவர்கள் தலைமை ஆசிரியரானார். 1920ல் உடையார் மறைந்துவிட்டபடியால் அவருடைய மகன் சுப்பையா அவர்கள் பாடசாலையை நிர்வகிக்கும் பொறுப்பை ஏற்றுக்கொண்டார். ஆரம்பத்தில் அவர் அங்கே ஆசிரியராயிருந்த படியால் திரு. இ. இராசையா முகாமையாளராய்ச் செயற்பட்டார்.

**ஆரம்பகால ஆசிரியர்கள் திரு. மு. செல்லப்பாச் சட்டம்பியார், திரு. அ. பரமுச் சட்டம்பியார் என்னும் இருவருமே. அவர்கள் தமிழ், சமயம், நல்லொழுக்கம் ஆகியவற்றையே படிப்பித்தார்கள்.**



திரு. சின்னத்தம்பி (கணபதிப்பிள்ளை உபாத்தியாயர்) அவர்கள் தலைமை ஆசிரியராயிருந்த காலமே பாடசாலையின் 'பொற்காலம்' எனத் தகும். ஆற்றல் மிக்க ஆசிரியராகிய அவர் காலத்தில் கல்வித்தரம் உயர்ந்தது. நல்ல ஆசிரியர்கள் நியமிக்கப்பட்டனர். புதிய கல்வி முறைகள் புகுத்தப்பட்டன. சமய அடிப்படையில் கல்வியிலும் ஒழுக்கத்திலும் ஏற்படுத்திய நல்மாற்றங்கள் இன்றும் நிலைபெற்று மாணவர்க்கு நன்மை பயக்கின்றன. கல்வி முறையில் சிரத்தையுள்ள பல கல்விமான்கள் பாடசாலை வேலைகளைப் பார்த்துப் போற்றினர். இவர் காலத்தில் கொழும்பு விவேகானந்தசபையார் நடத்திய சமய பாடப் பரீட்சையில் எமது கல்லூரி மாணவர்கள் பல பரிசில்களைப் பெற்றனர். இருமுறை மேற்பிரிவில் தங்கப் பதக்கப் பரிசில்களைப் பெற்றுள்ளனர். 1929ல் பெண்பிள்ளைகளும் பாடசாலையில் சேர்க்கப்பட்டார்கள். அதனால் 'அளவெட்டி கலவன் ஆங்கில பாடசாலை' எனப் பெயர் மாற்றமடைந்தது. செல்வி ஏ. சி. கூல் முதல் ஆசிரியையாக நியமிக்கப்பட்டார். முன் கூறப்பட்டவர்களைவிட திருவாளர்கள் சே. தியாகராசா, த. பொன்னம்பலம், ச. பொன்னம்பலம், வெ. பரநிருபசிங்கம், வ. தில்லை நடேசபிள்ளை, மா. பீதாம்பரம், மு. மயில்வாகனம், ச. கோபாலபிள்ளை, வெ. சந்திரசேகரா ஆகியோரும் இவர்காலத்தில் சிறந்த ஆசிரியர்களாய்த் திகழ்ந்தார்கள்.

**திரு. த. சின்னத்தம்பி (கணபதிப்பிள்ளை உபாத்தியாயர்) அவர்கள் தலைமை ஆசிரியராயிருந்த காலமே பாடசாலையின் "பொற்காலம்" எனத் தகும். ஆற்றல் மிக்க ஆசிரியராகிய அவர் காலத்தில் கல்வித்தரம் உயர்ந்தது. நல்ல ஆசிரியர்கள் நியமிக்கப்பட்டனர். புதிய கல்விமுறைகள் புகுத்தப்பட்டன.**

1939ல் திரு. சின்னத்தம்பி அவர்கள் இளைப்பாறிய பின் காரைநகர் திரு. பி. நவரத்தினம் எம். ஏ. அவர்கள் சுமார் ஒரு வருடகாலம் தலைமை ஆசிரியராயிருந்தார். 1940ல் திரு. எஸ். கிருஷ்ணசாமி ஐயர் பி. ஏ. அவர்கள் தலைமையாசிரியரானார். 1944ல் திரு. சுப்பையா அவர்கள் இறந்தமையால் பாடசாலைப் பொறுப்பை அவருடைய மகன் சிவசுப்பிரமணியம் அவர்கள் ஏற்கவேண்டியவரானார். அவர் அப்பொழுது பல்கலைக்கழக மாணவனாயிருந்த படியால் சிலகாலம் க. சின்னத்தம்பி அவர்களும் பின்னர் திரு. இ. வைத்தியலிங்கம் அவர்களும் முகாமையாளராக இருந்தனர்.

1949ல் கிருஷ்ணசாமி ஐயர் மாற்றலாகிச் செல்ல திரு. ச. சிதம்பரப்பிள்ளை (பொன்னையா மாஸ்டர்) அதிபரானார். 1947ல் பாடசாலை உரிமைக்காரராகிய சு. சிவசுப்பிரமணியம் அவர்கள் பல்கலைக்கழகப் படிப்பை முடித்து பி.எஸ்.சி. பட்டம் பெற்றுக் கொண்டுவந்து அங்கே உப அதிபராகக் கடமையாற்றத் தொடங்கினார். அதிபர் சிதம்பரப்பிள்ளையின் தலைமையில் கல்லூரி வளர்ச்சிபெற்று முன்னேறத் தொடங்கியது. 1945 அக்டோபரில் நடைமுறைக்கு வந்த இலவசக் கல்வித் திட்டம் காரணமாக மாணவர் தொகை நாளுக்கு நாள் அதிகரித்தது. புதிய மண்டபம் கட்டி முடிக்கப்பட்டது. அதிபரின் முயற்சியால் எஸ்.எஸ்.சி. வகுப்பு ஆரம்பிக்கப்பட்டு 1950ஆம் ஆண்டுப் பரீட்சைக்கு முதன் முதல் தோற்றிய மாணவர் பலர் சித்தியடைந்தனர். விஞ்ஞான கூடங்கள் கட்டப்பட்டு இரசாயனம், பௌதிகம், தாவரவியல், விலங்கியல் ஆகிய பாடங்கள் கற்பிக்கப்பட்டன. நூல்நிலையம் ஒன்று ஆரம்பிக்கப்பட்டு விருத்தி செய்யப்பட்டது. 1951ல் கல்லூரி இரண்டாந்தர அந்தஸ்துக்கு உயர்த்தப்பட்டமையால் திரு. சிவசுப்பிரமணியம் அதிபராகவும் திரு. சிதம்பரப்பிள்ளை உப அதிபராகவும் கடமையாற்றத் தொடங்கினர். அப்பொழுதுதான் தாபகரை நினைவு கூருமுகமாக அருணோதயக் கல்லூரி என்ற பெயர் சூட்டப்பட்டது. கீழே பாலர் வகுப்பு முதலான வகுப்புகளும் மேலே உயர்தர கலை, விஞ்ஞான வகுப்புகளும் தொடங்கப்பட்டன. விளையாட்டு மைதானம் விஸ்தரிக்கப்பட்டு எல்லாவித விளையாட்டுக்களிலும் பயிற்சியளிக்க வசதி செய்யப்பட்டது. இக்காலப்பகுதியில் திரு. செ. மயில்வாகனம் அவர்கள் முகாமையாளராயிருந்தார். 1961ல் அரசாங்கம் பாடசாலைகளைப் பொறுப்பேற்கும் வரை அவரே முகாமையாளராயிருந்தார். 1968ன் பிற்பகுதியில் திரு. சிவசுப்பிரமணியம் பதவி உயர்வு பெற்று விக்டோரியாக்

# முன்னாள் அதிபர்கள்



திரு. S.. கிருஷ்ணசாமி ஐயர் B.A. (MAD)



திரு. P. நவரத்தினம் M.A.



திரு. க. சோமசுந்தரம் B.A.

கல்லூரி அதிபராகச் செல்ல மீண்டும் திரு. சிதம்பரப்பிள்ளை அவர்களே அதிபராகப் பணிபுரிந்து 9.9.69ல் இளைப்பாறினார். அதே வருடத்தில் கல்லூரிப் பவளவிழா வெகு சிறப்பாகக் கொண்டாடப்பட்டது.

க.பொ.த. பரீட்சைகளிலும் வடமாகாண ஆசிரியர் சங்கப் பரீட்சைகளிலும் அருணோதய மாணவர்கள் எப்பொழுதும் சிறந்த பெறுபேறுகளைப் பெற்றிருக்கிறார்கள். விளையாட்டுத் துறையில் கல்லூரி அடைந்த உயர்ச்சி மிகவும் வியக்கத்தக்கது. வட பெரும்பாகத்திலுள்ள எல்லாக் கல்லூரிகளுடனும் அருணோதயா மாணவர் போட்டியிட்டு மகத்தான வெற்றிகளை ஈட்டியுள்ளனர். பல முறை உதைபந்தாட்டக் கோஷ்டி எமது பிரிவில் முதலிடத்தைப் பெற்றிருக்கிறது. ஒருமுறை மாகாணவீரர் தகுதியையும் பெற்றது. கொக்கி விளையாட்டிலும் நமது கோஷ்டிகள் வருடாவருடம் வியக்கத்தக்க வெற்றிகளை அடைந்திருக்கின்றன. 1968ல் பதினேழு வயதுக்குட்பட்டோர் பிரிவில் அருணோதயக் கோஷ்டியே முதலிடத்தைப் பெற்றது. அவ்வீரரில் இருவர் மாத்தளையில் நடை-பெற்ற தேசியக் கொக்கிப் போட்டியில் யாழ்ப்பாணப் பிரிவுக் கோஷ்டிக்குத் தலைவராகவும் கோல் காப்பாளராகவும் பங்குபற்றியமை குறிப்பிடத்தக்கது.

எமது மாணவரின் கிருஷிக முயற்சி எல்லோராலும் போற்றப்பட்டது. வட இலங்கைச் சங்கீத சபையின் பரீட்சைகளில் எல்லாப்பிரிவிலும் பல மாணவர் வருடாவருடம் தோற்றிச் சித்தியெய்தினர். சங்கீத முதன்மைக்கு அளிக்கப்படும் லேடி இராமநாதன் கேடயத்தைப்



**ஆசிரியர் குழு 1969**



**திரு. நா. அ. சுப்பையா**
கல்லூரி ஸ்தாபகரின் புதல்வரும், முன்னாள் உரிமையாளரும்



**திரு. சு. சிவசுப்பிரமணியம்**
கல்லூரி ஸ்தாபகரின் பேரனும், முன்னாள் அதிபரும்

பெற்ற பெருமையும் அருணோதயாவுக்குண்டு.

1953 தொடக்கம் யாழ்ப்பாணத்து 37வது சாரணர்படை கல்லூரியில் தொண்டாற்றியது. எந்தச் சாரண வீரரும் பெறக் கூடிய அதி உயர்ந்த இராணிச் சாரணச் சின்னத்தை 1968ல் பெற்றமை பாராட்டுக்குரியது. சித்திரக்கலையிலும் அருணோதயா வியத்தகு சாதனைகளைப் புரிந்துள்ளது. மேல் வகுப்பு மாணவர்கள் யாழ். ஆரிய திராவிட பாஷாபிவிருத்திச் சங்கம் நடத்திய பிரவேச பண்டித பரீட்சைக்குத் தோற்றி மிகத்திறமையான சித்திபெற்றனர் என்பதும் குறிப்பிடத்தக்காகும்.

திரு. சிதம்பரப்பிள்ளை அவர்கள் 1969ல் ஓய்வுபெற்றபின் சுமார் ஒருவருடகாலம் திரு. அ. விஸ்வநாதன் பதிலதிபராகக் கடமையாற்றினார். பின்பு அதிபராக வந்தவர் திரு. சு. ஆனந்தக் குமாரசாமி அவர்கள். அவர் கல்லூரி அபிவிருத்திக்குப் பல வழிகளிலும் முயற்சி செய்தார். இவர் காலத்தில் அருணோதயா அபிவிருத்திச் சபை கொழும்பில் ஆரம்பிக்கப்பட்டது. மறைந்த திரு. செ. இரங்கநாதன் தலைவராயும், திரு. பொ. நல்லையா செயலாளராயும் தெரிவு செய்யப்பட்டார்கள். மிகக் குறுகிய காலத்தில் ஆனந்தக் குமாரசாமி இடமாற்றம் பெற்றார். அப்பொழுது சிலகாலம் திரு. மு. கதிர்காமசேகரம் அவர்கள் பதிலதிபராயிருந்தார். அவரையடுத்து அவரிடம் படித்தவராகிய கவிஞர் வி. கந்தவனம் சொற்பகாலம் அதிபராயிருந்தார். இவருடைய முயற்சியால் கல்லூரியின் ஆரம்ப பாடசாலைக் கட்டிடம் புதிதாகக் கட்டி முடிக்கப்பட்டது. இவர் விரைவில் அரசினரால் இடமாற்றம் செய்யப்பட்டது மாணவர்க்கும் பெற்றோருக்கும் மிகவும் ஏமாற்றமாயிருந்தது. அடுத்து அதிபரானவர் திரு மு. இராசரத்தினம் எம்.ஏ அவர்கள். இவர்காலத்தில் 1975, 76ல் மாத்திரம் நடைபெற்ற என்.சீ.ஜீ.ஈ. பரீட்சையில் பல மாணவர்கள் மிகத் திறமையான சித்தி பெற்றார்கள். 1978ல் திரு. வி. சிவசுப்பிரமணியம் அவர்கள் அதிபரானார். இவர் காலத்தில் வளர்ந்தோர் கல்வித்திட்டம் ஆரம்பிக்கப்பட்டது. பல ஆண்டு காலம் நடைபெறாமலிருந்த க.பொ.த. உயர்தர விஞ்ஞான வகுப்புக்குப் புத்துயிர் கொடுத்து இயங்கச்செய்த பெருமை இவருக்குரியது. திரு. சின்னப்பு தம்பதியரின் புலமைப் பரிசில் திட்டத்தைப் பொறுப்பேற்றுத் திறம்பட நடத்திய பெருமையும் இவருக்குரியது.

அளவெட்டியில் பிறந்து வளர்ந்து மலேசியாவில் வாழ்ந்த திரு. க. சின்னப்பு அவர்கள் கீழ்வகுப்புத் தொடக்கம் க.பொ.த. உயர்தர வகுப்புவரை ஒவ்வொரு வகுப்பிலும் முதன்மை பெறும் மூவருக்கு வட்டிப்பணத்திலிருந்து பரிசு வழங்குவதற்கென ஒரு பெருநிதியை இராமக்கிருஷ்ண மிஷனிடம் முதலீடு செய்திருக்கிறார். வருடந்தோறும் பரிசளிப்பு விழா சிறப்புற நடப்பதற்கு வேண்டிய நிதியும் அந்த வட்டிப் பணத்திலிருந்து கிடைப்பதற்கு வழி செய்திருக்கிறார். திரு சின்னப்பு அவர்களைப் பின்பற்றி மலேசியாவிலிருந்த அவருடைய மைத்துனர் தி. சரவணமுத்து அவர்களும் கல்லூரிக் கணக்கில் ஐம்பதாயிரம் ரூபாவை முதலீடு செய்துள்ளார். இம் முதலீட்டின் வட்டியிலிருந்து ஆண்டுதோறும் பல்கலைக் கழகம் செல்லும் வசதி குறைந்த மாணவருக்கு நிதியுதவி வழங்கவேண்டும் என்பது நிபந்தனையாகும்.

01. 08. 1980ல் திரு. ந. சிவபாதம் அவர்கள் அதிபரானார்.

இவர்காலத்தில் கல்லூரிக்கு மின்சாரவசதி, தொலைத்தொடர்பு வசதி என்பன கிடைத்தன. இரு மேல் மாடிக்கட்டிடங்கள் அமைக்கும் பணி ஆரம்பமானது. நாட்டின் நிலைமை காரணமாக 15. 06. 1992ல் கல்லூரி இடம் பெயர்ந்து இராமநாதன் கல்லூரியில் தஞ்சமடையவேண்டி வந்தது. 01. 10. 93ல் திரு. சிவபாதம் பதவி உயர்வுபெற்றுச் செல்ல திரு. அ. சிறீக்குமாரன் அதிபரானார். இவருடைய பதவிக் காலத்திலும் கல்லூரி சில சாதனைகளை நிலை நாட்டியுள்ளது. 01. 07. 1997ஆம் ஆண்டு இவர் பதவி உயர்வு பெற்று இடமாற்றம் பெற்றுச் செல்ல திரு. மகேந்திரராசா அவர்கள் அதிபர் பொறுப்பை ஏற்றார். 01. 10. 1997ல் அருணோதயக் கல்லூரி அளவெட்டியில் பழைய இடத்தில் இயங்கத் தொடங்கியது. பூர்த்தி செய்யப்படாமலிருந்த மாடிக் கட்டிடங்கள் பூர்த்தி செய்யப்பட்டுக் கல்லூரி புதுப் பொலிவுடன் காட்சியளிக்கிறது. அதிபரின் நிர்வாகத்தில் கற்பித்தல் சிறப்பாக நடைபெறுகிறது என்பதைப் பரீட்சைப் பெறுபேறுகள் நிரூபிக்கின்றன. கனடாப் பழையமாணவர் சங்கத்தின் நிதியுதவியினால் நீர்த்தாங்கி அமைக்கப்பட்டுக் குழாய் மூலம் குடிநீர் வசதி வழங்கப்பட்டுள்ளது. அன்றியும் நீண்ட காலமாகக் கல்லூரி விளையாட்டு மைதானத்துடன் இணைக்கப்பட வேண்டும் என்று பலரும் விரும்பிக்கொண்டிருந்த காணியும் திரு. ஆ. பொன்னப்பலம் குடும்பத்தினரின் நிதியுதவியால் வாங்கிச் சேர்க்கப்பட்டுள்ளது. புதிய நூற்றாண்டில் எமது கல்லூரித் தாய் மேன்மேலும் வளர்ந்து சிறப்புற்று ஓங்க எல்லாம் வல்ல இறைவனை முன்னிட்டு எல்லோரும் எம்மாலியன்றதைச் செய்வோமாக!



---

# பிரம்மஸ்ரீ தி. சதாசிவஐயர் அவர்கள்



அளவெட்டி பெருமாக்கடவைப் பிள்ளையார் கோயில் பழம் பெருமை பெற்றது. பத்தொன்பதாம் நூற்றாண்டின் நடுப்பகுதியில் அக்கோயிலின் அர்ச்சகராயிருந்தவர் தியாகராசக் குருக்கள் அவர்கள். அந்த நூற்றாண்டின் பிற்பகுதியில் அவருக்குப் புத்திரராகப் பிறந்தவர்தான் திரு. சதாசிவ ஐயரவர்கள். அவர் இளமையில் அருணோதயாவின் ஆரம்பகாலத்தில் அங்கு கற்றவர். பின்னர் ஸ்கந்தாவில் கற்றிருக்கக் கூடும். அக்காலத்தில் கல்கத்தா பல்கலைக்கழகத்தின் B.A. பரீட்சையில் தேறிப் பயிற்றப்பட்ட ஆங்கில ஆசிரியராய் மல்லாகம் ஆங்கில பாடசாலையில் தலைமையாசிரியராயிருந்தவர். 1910ஆம் ஆண்டளவில் ஆங்கில இலக்கணப் புத்தகம் ஒன்று எழுதி வெளியிட்டவர். பின்னர் கல்விப் பரிசோதகராக அரசாங்க சேவையில் சேர்ந்து கல்வி உலகில் பிரசித்தி பெற்றிருந்தார். மாவட்டக் கல்வி அதிகாரியாக வட, கீழ் மாகாணங்களில் சிறந்த சேவையாற்றினார். தமிழ், ஆங்கிலம், சமஸ்கிருதம் ஆகிய மும் மொழிகளிலும் பாண்டித்தியம் பெற்றிருந்தார். யாழ்ப்பாணம் ஆரியதிராவிட பாஷாபிவிருத்திச் சங்கத்தின் தோற்றத்திலும் வளர்ச்சியிலும் பெரும் பங்கு வகித்தார். சங்கத்தின் செயலாளராகப் பல்லாண்டுகள் பணிபுரிந்தார். இரு மொழிகளிலும் பிரவேச பண்டித, பாலபண்டித, பண்டித வகுப்புப் பரீட்சைகள் வருடந்தோறும் நடைபெற்றன. இருமொழிகளினதும் விருத்திக்காகச் சுன்னாகத்தில் பிராசீன பாடசாலையைத் தொடக்கி நிர்வகித்தார். அங்கே வித்துவான் கணேசையர் தலைமையில் தமிழும் வியாகரணசிரோன்மணி சீத்தாராம சாஸ்திரிகள் தலைமையில் சமஸ்கிருதமும் படித்த பலர் பண்டிதர்களானார்கள். காளிதாசன் சமஸ்கிருதத்தில் இயற்றிய மேகதூதம், இருதுசங்காரம் ஆகிய காவியங்களைத் தமிழில் பாடியிருக்கிறார்.





# புதை குழியிலிருந்து...

## புவனன்

**....நாம் அன்றாட வாழ்வில் இயல்பாகவே உச்சரித்த பல சொற்கள் இன்று புதியவைகளாக எம்மை திடுக்கிட வைக்கின்றன. ஆயினும் கீறல்களாக மின்னலிடும் சில வரிகளையாவது தோண்டி எடுத்துப் பதிவாக்க முயல்கிறேன்.**

பழைய நினைவுகளை மீட்டிப் பார்த்தல் என்பது மனசுக்கு எவ்வளவு இதமானதோ அந்த அளவுக்கு மனதை வருத்துவது; ஏக்கத்தை விதைப்பது.

பல ஆயிரம் மைல்களைக் கடந்துவிட்ட நிலையிலும் மனது இன்றுவரை எங்கள் கிராமங்களிலேயே வாழ்ந்துகொண்டிருக்கிறது என்பதற்குச் சுற்றிச்சுற்றி வரும் கனவுகளே சாட்சி.

வாழ்வின் நெருப்போட்டத்தில் மறக்கமுடியாத பல முக்கிய பக்கங்கள்கூட சிதைந்து அழிந்துகொண்டு போகின்றன. நாம் அன்றாட வாழ்வில் இயல்பாகவே உச்சரித்த பல சொற்கள் இன்று புதியவைகளாக எம்மை திடுக்கிட வைக்கின்றன. ஆயினும் கீறல்களாக மின்னலிடும் சில வரிகளையாவது தோண்டி எடுத்துப் பதிவாக்க முயல்கிறேன்.

றலி, றோட்மாஸ்ரர், ஈஸ்ரேண், ஏசியா, லுமாலா எனத் தொடர்ந்த, இன்னும் தொடரும் சைக்கிள்களின் வரிசையில் எனது சைக்கிள் ஈஸ்ரேண். காலமும் அதுதான். இப்போது அந்த ஈஸ்ரேணில் எனது

நல்ல வெள்ளம் போட்டால் எத்தனை சுவர் விழுகுதோ எத்தினை வீடழியுதோ எங்கட மனம் மட்டும் நல்லாவிரிஞ்சு வெள்ளம்வர வழிவிடும்.



மழைகாலம் கொண்டாட்டந்தான். அம்பனை றோட்டில நெஞ்சளவு தண்ணிகூட ஒருக்கா வந்தது. கிணறுகளெல்லாம் முட்டிப்போகும்.

கிராமத்தை மீண்டும் வலம் வரப்போகிறேன். விரும்பினால் நீங்களும் வரலாம். ஆட்சேபனையில்லை. வயல்வெளிகள் குச்சொழுங்கைகள், மண்திட்டிகள் எல்லாம் சைக்கிள் சீரற்று எஃறிப்பாய்வது தவிர்க்க முடியாதது. வீடுகள் கோபுரங்கள் மேலெல்லாம் தாண்டிக் குதிக்கும். ஏக்கங்கள் பெருமூச்சுகள், விசும்பல்கள் எல்லாமே வரும். நான்மட்டும் அதற்குப் பொறுப்பாளியல்ல.

புஸ்பி சொன்ன காரணத்தை இப்ப நினைக்க வயிறு வெடிக்குது. பொன்னிப்புலம் தரையில சின்னட்டி ரெனிஸ் பந்தை வைச்சு ஒரு மணித்தியாலம் உருட்டியதில் விளானர் எங்களை 2 - 0 கோல் கணக்கில் வென்று போட்டார்கள். புஸ்பி வந்து காதுக்க சொன்னான் 'நீங்கள் முதலியார் கோயிலடி கிளப் எண்டு உங்கட கிளப்புக்கு பேர் வைச்சதாலதான் தோத்தனீங்கள்' எண்டு. அப்ப அருணோதயாவில் நாங்கள் நாலாம் வகுப்பு படித்துக்கொண்டிருந்தோம்.

பொன்னிப்புலம் கிறவுண் தாண்டி பனையளுக்கால சைக்கிள விடுங்கோ. முள்ளுகள் இருக்கு, கவனம். கொஞ்சம் தள்ளி எட்டி நிண்டு பார்த்தாலும் தெரியும். அதுதான் பெரியாம்பிரான் கோயில். பெரியதம்பிரான் தான் மருவி பெரியாம்பிரானாயிருக்கவேணும். இந்தக் கோயில் பற்றி கன பயங்கர கதைகள் இருக்கு. இஞ்சாலை கொஞ்சம் தள்ளி அரசடி வைரவ கோயிலும் இருக்கு. பெரியாம்பிரான் கோயில் தோட்ட வெளிக்குள்ள இருக்கிறதால இப்ப நினைக்கவும் கொஞ்சம் பயமாகத்தான் இருக்கு. இந்தக் கோயிலுக்கு முதன்முதல் என்ர பூட்டப்புவோடதான் போனனான் எண்டு சொன்னால் உங்களுக்கு நம்பக் கஷ்டமாயிருக்கும். அவர் சாகேக்க அவருக்கு சரியா நூறு வயது. இந்த கோயில்ல வருசாவருசம் அமளியா குளுத்தி நடக்கும். இரவு நாடகங்கள் நடக்கும். நாங்கள் கூத்து கூத்து எண்டு சொல்ற இசை நாடகத்தை முதன்முதலா இங்கதான் பார்த்தனான்.

கூத்து எண்ட உடன அம்மாள் கோயிலையும் ஒருத்தராலயும் மறக்கேலாது. அம்மாள் கோயில் நாலாந் திருவிழாவும் கூத்தும் ஊருக்கு ஒரு சிறப்புத்தான். இவ்வளவு அழிவுகளுக்குப் பிறகும் இன்னும் கனபேருக்கு இந்தச் சிறப்பையெல்லாம் ஒத்துக்கொள்ள மனம் ஒப்பாது.

ஒருமுறை நாலாந் திருவிழாவண்டு கூட்டணிக் கூட்டமொண்டு அம்மாள் கோயிலுக்கு முன்வளவில போட்டவை. சனம் இங்க மாறி அங்க மாறி ஓடித்திரிஞ்சது. அதேநேரம் அந்த கலைஞர்களைப் பிரிச்சு முட்டி மோதவிட்டது பெரியாக்கள் எண்டு சொல்லப்படுறவை செய்த அநியாயம்.

இந்தக் காலத்திலதான் அடங்காத் தமிழன் சுந்தரலிங்கத்தின், ஆலயப்பிரவேச அட்டகாசங்களும் நடந்தது. கும்பழாவளைப் பிள்ளையார் கோயிலுக்க 'ஆக்கள்' இண்டைக்கு போகப்போகினம் எண்டு சொல்லி நாங்களெல்லாம் காவல் நிண்டு சுந்தரலிங்கமும் வந்து ஆக்கள் போன கையோட கோயில் கழுவின தெல்லாம் நல்லா ஞாபகம் வருகுது.

தயவு செய்து இப்ப எல்லாரும் சைக்கிள விட்டு ஒருக்கா இறங்குங்கோ. முழங்கால்ல இருந்து கண்களை இறுக்கி மூடித் தியானியுங்கோ.

வீடுவாசலெல்லாம் விட்டிட்டு அகதிகளா ஓடுறது...தென்மராட்சி, கிளாலி, வன்னிக் காட்சிகளெல்லாம் மனத்திரயில விரியுதோ?

ஓ.கே. ஓ.கே. இனி எழும்பி வாருங்கோ.

எங்கட ஊருக்கு ஒரு முக்கிய சிறப்பு வழுக்கியாறு. யாழ்ப்பாணத்தில ஓடுற ஒரே ஒரு ஆறான வழுக்கியாறு எங்கட ஊருக்காலதான் பாயுது.

வாருங்கோ வெள்ளவாய்க்கால் பக்கம் போவம்.

மழைகாலத்தில மட்டுந்தான் இந்த ஆறு பாயும். நல்ல வெள்ளம் போட்டால் எத்தனை சுவர் விழுகுதோ எத்தினை வீடழியுதோ எங்கட மனம் மட்டும் நல்லாவிரிஞ்சு வெள்ளம்வர வழிவிடும். மழைகாலம் கொண்டாட்டந்தான். அம்பனை றோட்டில நெஞ்சளவு தண்ணிகூட ஒருக்கா வந்தது. கிணறுகளெல்லாம் முட்டிப்போகும். எவ்வளவு செழிப்பு. சின்னசின்ன பொந்துகளில நிக்கிற வால்பேத்தையள பிடிச்சுக்கொண்டுபோய் மீன்குஞ்செண்டு வளர்க்கிற அமளியளும் நடக்கும். சுருட்டுக் கொட்டில் கடையடி, சதானந்தா ஒழுங்கையெல்லாம் வெள்ளம் ஓடிப்பாயிற காட்சி கண்கொள்ளாக் காட்சி. வெள்ள வாய்க்காலால ஓடுற வெள்ளம் பினாக்கை வெளிக்குள்ளதான் தங்கும்.

இதுதான் எங்கட பினாக்கை குளம். கோடையில வயலுகள் உறிஞ்சிக் கொழுக்க, ஊர்செழிக்கும். பினாக்கை தன்னாரம் வத்தும்.

தயவுசெய்து கொஞ்சம் விலத்தி நில்லுங்கோ! தயவுசெய்து... தயவுசெய்து...!

மைலண்ணை தெரியிறாரல்லே. மாட்டுச்சவாரி நடக்குது பாருங்கோ! எங்கையெங்கையோ மூலையள்ள இருந்தெல்லாம் லொறியில மாடுகள் வந்திறங்கும். ஒவ்வோரு கோடையும் பினாக்கை களைகட்டும். சங்கம் சவாரி நடத்தினாலும்

மைலண்ணை மட்டும் இல்லையெண்டால் இந்தச்சவாரி கொஞ்சம் 'கஷ்ரம்' எண்டுதான் எனக்குப் படுகுது.

அங்கால பாருங்கோ! வயல்வெளிக்கால பெருமாக்கடவை பிள்ளையார் கோயில் தெரியுது. கோயிலுக்குக் கொஞ்சம் முன்னுக்குத்தான் இறைவன் அண்ணையும் உமா அண்ணையும் சுடுபட்டுக் கிடந்தவை. இப்ப இதைவிட எத்தினையோபேரை ஊர் காவுகுடுத்திட்டுது. ஆனால் அந்த நேரம் ஊரை உறையவச்ச சாவுகள். மரண தண்டனைக்கும் மணிலாக் கயிறுக்கும் விடை கொடுக்க வேணுமெண்டு மனச்சாட்சியோட போராடிக் கொண்டிருக்கிற இந்தநேரத்தில இப்பிடியான தண்டனைகளும் நியாயமற்றவை எண்டதை நாங்கள் உணர்ந்து கொள்ளவேண்டும்.

வாருங்கோ, கனநேரம் நிக்கேலாது. பிறகு தேவையில்லாத பிரச்சினையளும் வரும்.

ஊரில கவனிக்கப்பட வேண்டிய முக்கியமான விசயங்களில மூண்டு பள்ளிக்கூடங்கள் மிக முக்கியமானவை. சதானந்தா, சீனன்கலட்டி, கருவேப்பிலம். அருணாசல வித்தியாசாலை அருணோதயாவோட சேர்ந்தது. தெற்கிலயும் சின்னப் பள்ளிக்குடம் ஒண்டு இருக்கிறதா நினைவு. எங்கட ஊரில படிச்சு பிறகு பெரிசா வாறவையள் எல்லாம் இந்த சுக்குட்டிப் பள்ளிக்குடத்திலதான் பணிசும் திண்டு 'அ' எழுதிறவை. அங்கை முன்னுக்கு வாறவை-யெல்லாம் பிறகு இங்கிலீசுப் பள்ளிக்குடத்துக்கு - அருணோதயாவுக்குப் போகுடுவினம். பிறகு அங்கையும் முன்னுக்கு வாறவையை மகாஜனாவும் ஸ்கந்தாவும் விழுங்கிப்போடும். இப்பிடித்தான் ஊர், படிப்பில முன்னுக்கு வாறவையெண்டாலென்ன பந்தடில முன்னுக்கு வாறவையளெண்டாலென்ன யாரையும் உரிமை கொண்டாட முடியாமல் திண்டாடும்.

நீர் படித்த பாடசாலையின் பெயரென்ன? யாருக்காவது சுக்குட்டிப் பள்ளிக்குடத்தின் பெயர் மறந்தும் ஞாபகம் வருமா? ஆனால் இந்தச் சுக்குட்டிப் பள்ளிக்குடங்கள் தாயைப்போல் பொறுமையாக மனதுக்குள் பெருமை கொள்ளும்.

நானும் எல்லோரையும் போல கல்பணிஸ் திண்டு 'அ' எழுதினது சதானந்தா வித்தியாசாலையில-தான். பிறகுதான் இங்கிலீசுப் பள்ளிக்குடத்தில. அப்ப எங்கட முதல் வாத்தியார் நாகநாத வாத்தியார். அவர் இப்ப இல்லை. குருக்க-கிணத்தடி பரமேஸ்வரி ரீச்சர், பிறகு சின்னப்பிள்ள ரீச்சர் - இவயளிட்ட படிச்சனான். பக்கத்து வீட்டு மனோன்மணி ரீச்சரை மறக்கேலுமா? அவவின்ர கிணறுதானே எங்கட கிணறு.

பின்னடியில சதானந்தாவோடு இறுக்கமானவன் சந்தோசம். சந்தோசம் எனக்குப் பக்கத்து வீடு. ஆறேழு வருசத்துக்குப் பிறகு தாய்தேப்பனுக்குப் பிறந்த மூண்டாவது பிள்ள. ஒரே ஒரு ஆம்பிளப்பிள்ள. தாய்தகப்பன் நல்ல செல்லம். எனக்கும் பக்கத்து வீட்டுக் கண்ணனுக்கும் ஏனோ அவனைப்பிடிக்காது. தகப்பன் உடம்புக்கு நல்லமெண்டு அவனுக்கு கொஞ்சம் கள்ளும் குடுப்பார். எங்கட கண்டறியாத ஒழுக்கக் கோட்பாடுகள்ள இதெல்லாம் அபத்தம். அவன் வீட்டுக்கு வந்தால் அடிப்பம். இரகசியமா நுள்ளுவம். அவனும் நெளிஞ்சு நெளிஞ்சு கொண்டு திரிவான். அழுவான். அம்மாட்ட முறையிடுவான்.

கொழும்பில இருந்து கணேஸ்வரிரீச்சர் சதானந்தாவுக்கு வந்தபிறகு இங்கிலீஸ்ல கொஞ்சம் முன்னேற்றம். சிவகுமார் எண்ட சந்தோசமும் இங்கிலீஸ் பேச்சுப் போட்டிகளில வட்டார மாவட்டப் போட்டிகளில பரிசெடுத்து சுக்குட்டிப் பள்ளிக்குடத்துக்குப் பேரெடுத்துக் குடுத்திருக்கிறான். எல்லாரையும் போல இவனும் பிறகு அருணோதயாவுக்குப் போய் பிறகு



**எங்கட ஊரில படிச்சு பிறகு பெரிசா வாறவையள் எல்லாம் இந்த சுக்குட்டிப் பள்ளிக்குடத்திலதான் பணிசும் திண்டு 'அ' எழுதிறவை. அங்கை முன்னுக்கு**



**வாறவையெல்லாம் பிறகு இங்கிலீசுப் பள்ளிக்குடத்துக்கு - அருணோதயாவுக்குப் போயிடுவினம். பிறகு அங்கையும் முன்னுக்கு வாறவையை மகாஜனாவும், ஸ்கந்தாவும் விழுங்கிப்போடும்.**

**அந்த அமைதியெல்லாம் போச்சு. சிகரம், சப்பறம், மணவறை, கண்ணன் கோஷ்டி, ரங்கன் கோஷ்டி, சின்னமணி, சின்னமேளம், எங்கட**



**கடலக்கார ஆச்சியள், தும்புமிட்டாஸ் எல்லாம் எங்களுக்கு எட்டாத தூரமாய் போச்சு. வடக்கு வீதி மேளச்சமா இதயத்தை பிழிந்தெடுக்குது.**

இயக்கத்துக்குப் போய் பிறகு அவனை இந்தியன் ஆமி கொண்டுபோட்டுதாம். ஆனால் தாய் சரசக்கா தன்னுடைய ஒரே மகன் திரும்ப வருவான், வருவான் என்று இன்றுவரை காத்திருக்கின்றாவாம். அடேய் சந்தோசம்! உனக்காக இப்ப கண்கள் கசியுதடா!

சதானந்தாவுக்கு கொஞ்சந் தள்ளி கும்பழாவ-ளைக்கு முன்னுக்கு கோணேசக்கா ரீச்சர் வீடு. கனபேற்ற கல்வி விருத்தியடைய உதவியாக இருந்தவ. முந்தி கொட்டில் வீடு. மாறிமாறி சனமும் படிப்பும். அது ஒரு படிப்புக் கொட்டில்தான். ஒருநாள் அவவின்ர வீட்டுக்கும் பொறாமையில யாரோ நெருப்புவைச்சு வீடு முழுக்க எரிஞ்சுபோச்சு. அப்ப நாங்கள் அவவிட்ட படிச்சுக் கொண்டிருக்கிறம். வீட்டுக்கு நெருப்பு வைக்கிற அளவுக்கு ஊரில ஒரு மூலக்குள்ள பொறாமைத்தீ இருந்துதானே இருக்கு.

இந்தியன் ஆமி காலத்து ஊரடங்குச்சட்ட நேரத்தில தெல்லிப்பழை ஆஸ்பத்திரிக்கு போட்டு வாற இடத்தில ஆமிசுட்டு அராஜகத்துக்கு சாட்சியாகிப்போனா எங்கள் கோணேசக்கா ரீச்சர். பாதங்களில் மலர்தூவி வணங்குகிறேன்.

ஊருக்கு முக்கிய சிறப்பு கோயில்கள்தான். அழகொல்லை கொடியேறத் தொடங்கினால் பிறகு கும்பழாவளை, பிறகு பெருமாக்கடவை, பிறகு அம்மாள் கோயில். பிறகு எல்லாம் முடிய கவுணாவத்தை.

ஆட்டைக் கட்டிவைச்சுப்போட்டுத்தானே எல்லாரும் விரதம் பிடிக்கிறனியள் எண்டு எங்கட வாத்தியார் ஒராள் பகிடி விடுறதும் இப்ப ஞாபகம் வருகுது. திருவிழாக் காலமும் ஆடிக் காற்றும் இனி எங்களுக்குத் திரும்பவே திரும்பாது. இண்டைக்கு கோயில்ல சாமி காவுறதுக்கு ஆக்கள் இல்லை எண்ட செய்தி எவ்வளவுக்கு நெஞ்ச விறைக்க வைக்குது.

அந்த அமைதியெல்லாம் போச்சு. சிகரம், சப்பறம் மணவறை, கண்ணன் கோஷ்டி, ரங்கன் கோஷ்டி, சின்னமணி, சின்னமேளம், எங்கட கடலக்கார ஆச்சியள், தும்புமிட்டாஸ் எல்லாம் எங்களுக்கு எட்டாத தூரமாய் போச்சு. வடக்கு வீதி மேளச்சமா இதயத்தை பிளிந்தெடுக்குது. இனி பூங்காவனம் முடிய அதிஸ்டலாபச் சீட்டுக் குலுக்கி சைக்கிளுக்கு காவல் நிக்கமாட்டம். பல முட்டாள்தனமான விசயங்கள்கூட எவ்வளவு புனிதமாய் சூதுவாது அறியாதவைகளாய் பிரகாசிக்கின்றன. விஞ்ஞானம் எவ்வளவுதான் வானோங்கி வளந்துகொண்டு போனாலும் கிராமத்து மணத்தையும் இனிமையையும் நெருங்க முடியாது. அதிலும் நாங்கள் எங்கள் இனிமையை இழந்துவிட்டோம் என்று நினைக்கிறபோது ஏக்கத்தில் நெஞ்சே அடைக்கிறது.

ஒருக்கால் வாங்கோ டச்சுறோட் பக்கம் போட்டு வருவம். இதிலயும் ஒரு வாசிகசாலை இருக்கு. செல்வரத்தினம் அண்ணை இருக்கிறாரோ தெரியேல்லை. வி. பொன்னம்பலம் - முன்னுக்குத்-தான் இவற்றை வீடு. இவராலயும் ஊருக்கு ஒரு பெயர் இருக்கு. வாழுற காலத்தில அவரவர்களின் மதிப்பை சமூகம் உணர்ந்து கொள்ளுறதில்ல. அவர்களைச் சரியான முறையில பயன்படுத்திக் கொள்றதுமில்லை. அன்றைய தியாகிகள் இன்றைய துரோகிகள் என்றால் அன்றைய துரோகிகள் இன்றைய தியாகிகள் என்றொரு 'லொஜிக்'கலான முடிவுக்கும் வரலாம் தானே. தவறிழைக்காத மனிதர்களே இருக்கமுடியாது. வி. பொன்னம்பலம் அவர்களும் இதுக்கு விதிவிலக்-கல்ல. ஆனால் இடதுசாரிச் சிந்தனையாளர்களது எண்ணப் போக்குகள் எங்கள் சமூகத்தால் நிராகரிக்கப்பட்டது கவலைக்குரிய விடயம். வி. பி. அவர்களை நினைக்கும் போது எனக்கு பாலகிட்டி என்றழைக்கப்படும் பாலகிருஷ்ணன் அண்ணனும் நினைவுக்கு வருகிறார். பண்டிதர் நாகலிங்கம் அவர்களின் வீட்டுக்கு அருகில் இவருடைய வீடு. வி. பி. அவர்களுடன் திரிந்தார் என்ற காரணத்-திற்காக இவருக்குப் பைத்தியக்காரப் பட்டம் கட்டி இவரை விலத்தி வைத்தது எங்கள் சூழல். ஆனால் அந்தச் சிறிய வயதில் இவர் கதைத்துத் திரிந்த பசுமைப் புரட்சி, விவசாயம் போன்ற இன்ன பிற விடயங்களெல்லாம் இன்று அவர் மீது மரியாதையாக மேலெழுகின்றன.

கனடாவில் காலமான வி. பொன்னம்பலம் அவர்களுக்கு ஊர்மக்கள் சார்பாக தலை தாழ்த்தி அஞ்சலிக்கிறேன்.

இன்னும் நிறைய இடங்கள் இருக்கு பாக்கிறதுக்கு. ஒத்துக்கொள்றன். ஆனால் முடியேல்ல. கால் உழையுது. இப்ப உங்களக் கனடாவிலும் திருப்பிக்கொணந்து விட்டிருக்கிறன் எண்டு நினைக்கிறன். இன்னொருக்கா........ சந்தர்ப்பம் கிடைச்சா போய்வருவம். ஓ.கே.!



**புவனன் என்ற புனைபெயரில் எழுதிவருபவர் மனோகரன். பரிஸ் நகரத்திலிருந்து வெளிவரும் 'அம்மா' என்ற இலக்கிய சஞ்சிகையின் ஆசிரியர்.**

# மூன்றாவது மணி கழன்றது.




## காலமாகி வந்த கதை-01

பஞ்சம் பாடாய்ப் படுத்திக்கொண்டிருந்த காலம் ஒன்று இருந்தது. துரைராசண்ணை கடைக்கு ஓடுவோம். விடிய ஆறு மணிக்குப் போனால் ஒன்பது மணிக்கு இடையில் பாண் வரும். சில வேளைகளில் கிடைக்கும் - கிடைக்காமலும் போகும். கிடைக்காமல் போனால் பொன்னாரண்ணையின் தோட்டத்திற்கு போக வேணும். மர வள்ளிக் கிழங்கு பிடுங்கித் தருவார். செம்பாட்டுச் சேறு காலில் அப்ப, காத்து நின்று மர வள்ளிக்கிழங்கு வாங்கிச் செல்வோம். கால் கழுவி கிழங்கு அவித்து பள்ளிக்கூடம் போக நேரம் போய்விடும்.

ஓட்டம்.

அம்மா அரிசிமா தேடித் திரிந்து விட்டு இருந்திருந்து புட்டு அவிப்பா. அம்மா செய்கிற பிழை இதுதான். ருசியாக கறிகளை வைத்து விடுவா. சொல்லப்போனால் மீன்குழம்பு. ராசலிங்கத்திடம் வாங்கிய மீனில் குழம்பு புட்டுக்கு விட்டுச் சாப்பிட்டால் சோக்காய் இருக்கும். கோப்பையில் அள்ளி அள்ளி புட்டுப் போட்டுச் சாப்பிட ஆசை. ஆனால் மற்றவர்களும் சாப்பிட வேண்டும். அம்மா மீன் குழம்பு வைக்காமல் விட்டிருக்கலாம்.

ஒரு சனிக்கிழமை.

நன்கு முதிர்ந்து, கனிந்த, கப்பல் வாழைப்பழங்கள் கிடைத்தன. அம்மா அரிசிப்புட்டு அவிச்சா. அம்மம்மா புட்டுடன் வாழைப்பழத்தை பிசைஞ்சு சாப்பிட்டா. பல்லில்லாத பொக்கை வாய்க்கு அது பதமாக இருந்தது. அம்மம்மா, "பிள்ளை, இன்னும் கொஞ்சம் புட்டுத்தருவியே" என இரங்கி அம்மாவிடம் கேட்டா. இப்படிக் கேட்ட போது அம்மாவின் முகத்தைப் பார்க்க எனக்கு முடியவில்லை. அம்மம்மாவின் முகத்தையும் பார்க்க முடியவில்லை.

இப்போது நினைக்கிற போது கண்கள் கலங்குகின்றன. அவை பஞ்சப்பட்ட தினங்கள்.

1974ஆம் ஆண்டில், விடியலில் பனி பெய்து கொடுத்து மத்தியான வெய்யில் காங்கைகளை வீசிக்கொண்டிருந்த முற்பகுதிக்காலம். இந்த நாட்களில் சங்கக் கடையின் வாசலில் பாணுக்கு நீண்ட "கியூ" நின்றது. நீண்டது என்றால் சங்கக் கடையில் இருந்து அம்மாள் கோவில் வரை நீண்டிருக்கும். கிழமையில் இரண்டு தரம் இப்படித்தான். எனக்கு முன்னால் ஒருவர் நிற்பார். அல்லது எனக்குப் பின்னால் அவர் நிற்பார். அவரது கொட்டிலும் சங்கக் கடைக்கும், அம்மாள் கோவிலுக்கும் இடையில் தான் இருந்தது. அவரும் அவரது அம்மாவும் அதில் இருந்தனர். அது எனக்குத் தெரியும். அவர் ஒற்றை வேட்டியுடன் நிற்பார். ஒழுங்கான வேட்டி அல்ல. அளவெட்டிக்குரிய செம்பாட்டு ஊத்தை வேட்டி. சேட் இல்லை. ஊரும், வயிறும் வெக்கையில் எரிகிற போது சேட் எதற்கு? சாடையாக கூனியபடி நிற்பார். வயிறு எக்கியிருக்கும். என் பிடரியில் அவர் மூச்சு படுகின்ற போது அவர் வாயில் இருந்து மெல்லிய மணம் வீசும். எனக்குப் பிடித்த மணம். வெத்திலை பாக்கு சப்பிய வாயில் இருந்து வீசுகிற மணம் அது. ஓடிப்போய் வீட்டில் ஒரு வாய் வெத்திலை போடவேண்டும் என்று ஆசை எழும். வெத்திலை பாக்கும் மரக்கறிகளும் மாத்திரம் தான் கூப்பன் இல்லாமல் எடுக்கலாம். எங்கள் தோட்டங்களில் விளையும் செத்தல் மிளகாய்க்கும் கூப்பன் இருந்தது.

கூப்பனில்லாமல் இருந்த இன்னொன்று பசி! பசி வயிற்றில் நெருப்பாக எரிந்தது!

அப்படித்தான் ஒற்றை வேட்டி கட்டி ஒல்லியான அவரும் நின்றார். என்னுடனும், அவருடனும் நீண்ட 'கியூ'வில் கொஞ்சம் முந்தியே வந்தபடியால் முன்னால் நின்று பாண் வாங்கிப்போன ராசம்மாக்காவின் பாணை சைக்கிளில் சென்ற ஒருவன் பறித்துக் கொண்டோடினான். ராசம்மாக்கா றோட்டின் கரையிலிருந்து மண் அள்ளித் திட்டினார். பிறகு பசித்ததோ? இரவைக்கு என்ன சாப்பாடு என்று யோசித்தாரோ? அல்லது மத்தியானமும் சாப்பிடவில்லைத் தானோ? என்னமோ றோட்டின் கரையில் குந்தியிருந்து ராசம்மாக்கா அழுதார். நான் அறிய பின்னேரத்துப் புழுதி கலந்த வெயிலுக்கு அவர் இருந்து அழுதது சோகத்தைச் சொன்ன ஓவியமாக இருந்தது.

யாவற்றையும் குறிக்க வேண்டிய காலம் வந்து விட்டது. இதை இப்போது நான் குறிக்கின்றேன். ஆனால், எனக்கு முன்னால் நின்றவர் (அல்லது பின்னுக்கு நின்றவர்) இதை எழுதக் கூடிய வல்லமை பெற்றிருந்தார். அது அப்போது எனக்குத் தெரியாது. ஆனால், இப்போது தெரியும். அவரால் எழுதியிருக்க முடியும். 'காளிமுத்துவின் பிரஜா உரிமை' அல்லது 'புகையில் தெரிந்த முகம்' எழுதத் தெரிந்த அவரால் இதனை எழுத முடிந்திருக்கும். ஆனால், எழுதவில்லை. அதனை அவர் எங்கும் எழுதியதாகவும் ஞாபகமில்லை.



## இரவி அருணாசலம்

**எழுபதுகளின் பிற்பகுதியில் அளவெட்டியில் இருந்து வெளியான குறிப்பிடத் தகுந்த சிறு சஞ்சிகையான 'புதுசு'வின் ஆசிரியர்களுள் ஒருவர். தமிழாசிரியர். 'சரிநிகர்' இதழின் ஆசிரியர் குழுவில் பணியாற்றியவர். இப்போது இலண்டனில் மையங் கொண்டிருக்கும் ஐ.பி.சி. வானொலியில் பணியாற்றுகிறார். நல்ல நாடக நடிகர். நவீன தமிழின் முக்கியமான சிறுகதையாளர்களுள் ஒருவர்.**

அந்த ஒற்றை வேட்டி, ஒல்லியான வயிறு, எக்கிய சாடையான கூனல் விழுந்த அந்த ஆள் ஆரென்று எனக்குப் பிறகு தெரிந்தது.

அது தெரிய ஐந்து வருடங்கள் ஆயிற்று. எங்களது மகாஜனாக் கல்லூரியில் நடைபெற்ற சிறுகதைப் போட்டியில் எனது "அபத்தம்" சிறுகதை முதலிடம் பெற்றது. நடராஜா மாஸ்ரர் (மயிலங்கூடலூர் பி. நடராசன்) "உங்களின்ர கதையைச் 'செலக்ற்' பண்ணினவர், உங்களைச் சந்திக்க வேணுமெண்டு விரும்புறார்" என்றார். நான் போய்ச் சந்தித்தேன். அவர் பாணுக்கு கியூவில் என் பிடரியில் மூச்சுப்பட நின்றவர். அட கடவுளே! அவரா இவர்? வெத்திலை பாக்குச் சப்பிய வாயுடன், மணத்துடன் நின்ற அவரா இவர்? என்னால் அப்போது அதனை நம்பமுடியவில்லை. அளவெட்டி அப்போது இந்தக் கலைஞனை மதிக்காமல் இருந்தது. அதுதான் எனக்கும் அவரைத் தெரியாமல் இருந்தது.

அவர் எனது கதையைப்பற்றிச் சொன்னார். "நல்ல கதை, இந்த நடைதான்....... ஒரு 'விறிஸ்ஸா' நடை உமக்கு வருது" என்றார். எனக்கு "விறிஸ்ஸா" எழுத்து நடை எப்படியிருக்கும் என்று தெரியவில்லை. "எனக்கு விளங்கேல்லை" என்றேன். "ஒழுங்கான நடை இல்லை. விசயத்தைச் சொல்ல வந்து, அங்கை இங்கையெண்டு நடை வாறது" என்றார். எனக்கு 'விறிஸ்ஸா' என்ற சொல்லு பிடித்துப்போயிற்று. ஆனால் வாழ்க்கை அப்படி ஆகிப்போவது யாருக்குத்தான் பிடிக்கும்? அவரது வாழ்க்கை அப்படித்தான் ஆனது. 'விறிஸ்ஸா' வாகிப் போனது.

அவர் 'ஈழநாடு' பத்திரிகையில் வேலை செய்திருந்தார். நான் சந்தித்த போதில், வேலையை விட்டுவிட்டார். விட்டு விட்டதற்கான காரணத்தைச் சொன்னார். இழுப்பு நோய் அவரை வீட்டில் இருக்க வைத்து விட்டது. போய் பஸ் ஏற ஊர்ப்புழுதி விடுவதில்லை. இழுப்பு இன்னும் அதிகமாகும். பகல் பதினொருமணிக்கு வீட்டின் முன்னால் இருந்த வாசிகசாலையில் அவர் பத்திரிகை வாசிக்கக் காணலாம். அவரை 'அவர்தான்' என்று தெரிந்த காலத்தில்

பாணுக்கு கியூ இல்லாமல் போய்விட்டது. ஆயினும் அவரை மூன்று இடத்தில் நான் கண்டேன். முன்னால் இருந்த மணியண்ணை கடையில் கண்டேன். அவரின் கொட்டிலில் நான் அவரைக் கண்டேன். ஏதோ விருப்பம் உந்தி, அவரது கொட்டிலுக்குப் போகும் சந்தர்ப்பங்களில் அவரது வாழ்வை நான் கண்டேன். அது எளிமையானதாகவும், இனிமையானதாகவும் இருந்தது. அப்படித்தான் நான் நினைத்தேன். சின்னச் சின்னக் கிண்ணங்களில் கறிகள் இருந்தன. கிண்ணங்கள் ஒன்றிரண்டுதான் இருக்கும். சிலவேளை, அக்கிண்ணம் ஒன்றில் சம்பல் இருந்தது. அக்கொட்டிலில் மச்சம் இருந்ததாக நான் அறியேன். சிறுபானையில் வெள்ளைப்பச்சை அல்லது குத்துப்பச்சை அரிசியில் சோறு. அது புக்கை வடிவில் இருந்தது ஞாபகம். இருவருக்கான உணவு. இவை எனக்கு எளிமையாகவும் இனிமையாகவும் இருந்தன. ஆனால் அதற்குள் ஏதும் வாழ்வின் குரூரம் இருந்ததோ, அதுவும் எனக்குத் தெரியாது.

ஆனால் அவரது 'மனித மாடு' சிறுகதைத் தொகுப்பு வெளிவந்த போது இந்த வாழ்வின் குரூரங்கள் அவரது எழுத்தில் தென்படவில்லை. அது எனக்கு ஆச்சரியமாக இருந்தது. அழகை யாசிக்கின்ற கலைஞனாகத்தான் அக்கதைகளில் அவரை நான் தரிசித்ததாக எனக்கு இப்போது ஞாபகம். அத்தொகுப்பு இப்போது என் கையில் இல்லாததால் இதனை நான் உறுதியாகக் கூற முடியவில்லை.

'விறிஸ்ஸா' வாகிப் போனது அவரது படைப்புகளும் தான். அவரது கதைகளை வாசிக்க நான் ஆவலுடன் கேட்டேன். அவர் 'ட்ரங்குப்பெட்டி' யைத் திறந்து காட்டினார். 'புகையில் தெரிந்த முகம்' தொடர்கதையின் சில துண்டுகள் மாத்திரந்தான் இருந்தன. (இதனை எழுதுகின்ற போது என்னையிட்டு நான் என்னுள் சிரிக்கின்றேன்.) 'பல கதைகள் தொலைந்து போய்விட்டன' என்று கவலையோடு அவர் சொல்லவில்லை. 'அது அப்படித்தான் நடக்கும்' என்ற தொனிதான் அவர் குரலில் இருந்தது. அவர் ட்ரங்குப்பெட்டிக்குள் இருந்தனவெல்லாம் முற்றுப்பெறாத காகிதங்களே. எனக்கு அது அவரது முழுமை பெறாத வாழ்வைக் குறித்தது. அவரது வாழ்வு ஒழுங்காக இல்லை. 'விறிஸ்ஸா' வாகித்தான் இருந்தது.

நாங்கள் நால்வர் 'புதுசு' தொடங்கிய போது அவரிடம் எழுதப்பட்டிருந்த ஒரு கதை கேட்டோம். 'ஒன்றுமேயில்லை' என்று சாதாரணக் குரலில் கூறினார். எப்போதோ 'ஈழநாடு' பத்திரிகையில் தொடராக எழுதியிருந்த 'பசுந்தளிர்' என்னும் தொடர் வெளியீட்டில் இருந்து இதுவரை தொலைக்கப்படாதிருந்து, தப்பிப்பிழைத்த ஒரு துண்டை எடுத்துத் தந்தார். 'புதுசு' முதலாவது இதழில் முதன்மைச் சங்கு முழக்கி வெளிவரும் அரிதான தொடர் சிறுகதையாக நன்றியுடன் அதனை பிரசுரித்திருந்தோம். இறுதியாக 'இன்றைக்கெல்லாம் அவர் பேனாவுக்கு ஓய்வு' என்று அதில் எழுதியிருந்த வரிகளை, கும்பழாவளைப் பிள்ளையார் கோவில் காலை பத்துமணிப் பூசையில் மணி ஒலி கேட்கிறபோது அளவெட்டி 'ஜெயா' அச்சகத்தில் 'புறூஃவ்' பார்த்த நினைவு எல்லிப்போலை வளவின் அணிஞ்சில் பழம் போல இனித்து நெஞ்சில் எழுகின்றது.

அப்பாவுடன் கதைக்கின்ற பொழுது இவர் பற்றிய என் ஆச்சரியங்களை ஒரு நாள் கூறினேன். அப்பா இன்னொரு கதைகூறி என்னை மேலும் ஆச்சரியத்திற்குட்படுத்தினார். அவரது முதலெழுத்துக்களின் பெயர்களை விரித்துக் கூறச் சொன்னார்.

முருகானந்தம் என்ற பெயர் மட்டுந்தான் எனக்குத் தெரிந்தது. 'அளவெட்டி செல்லக்கண்ணு முருகானந்தம்' என்றார். இதில் ஆச்சரியப்பட என்ன இருக்கின்றது? அப்போது சொன்னார்: "செல்லக்கண்ணு எண்டது முருகானந்தத்தின்ர அம்மாவின் பெயர்".

எனக்கு இப்போதுதான் ஆச்சரியம் தொற்றிக் கொண்டது. தாயாருடைய பெயரை தன் முதல் எழுத்தாகக் கொள்ள வேண்டிய அக்காலத்தைய ஒரு சமூக யதார்த்தத்தை அப்பா சொன்னார். நான் ஆச்சரியப்பட்டேன். நான் கண்டு கேட்டிராத உண்மை அப்போது எனக்கு உறைத்தது.

இப்போது அவரின் படைப்புக்களை முழுமையாகப் பார்த்துக் கொள்ள எனக்கு ஆசை. அவர் இந்த உலகிற்கும், தனது பெயரிற்கும் விட்டுச் சென்றுள்ள சொத்துக்கள் அவைதாம். அவற்றில் தான் அவர் வாழ்வு குறிக்கப்பட்டிருக்கின்றது.

மகாஜனக் கல்லூரி பழைய மாணவர் சங்கத்தினது பாரிஸ் கிளையினர் அவரது தொகுப்பொன்றை வெளியிடுவதற்காக கொழும்பிலுள்ள பத்திரிகையாளரும், நாடகக்காரருமான ஒருவரிடம் காசு அனுப்பியிருந்தார்கள் என்று கேள்விப்படுகின்றேன். அவரது படைப்புகள் தொகுப்பாக வெளிவரும் தானோ? அக்காசிற்கு என்ன நடந்ததோ? ஒன்றுமே தெரியாது. வந்தால் துயரிலும் ஒரு மகிழ்வு.

இன்றைக்கல்ல, இறந்த போதல்ல, அன்றைக்கே, 1980களிலேயே அவர் பேனாவுக்கு ஓய்வு. கவலை இவை தாம். தொய்வு நோயால் வருந்தி, வறுமையால் நலிந்து, இலங்கையின் தமிழ் மக்கள் அல்லாடிய நேரத்தில் அல்லல் பட்டு, கைதடி வயோதிபர் மடத்தில், தன் இறுதிக் காலத்தைக் கழித்து, பின்னர் திருகோணமலையில் அவர் காலமாகிப்போன செய்தி நெஞ்சையும் நம் வாழ்வையும் துயரால் கசியச் செய்கிறது. இலங்கைத் தமிழ் இலக்கியத்தின் மறு மலர்ச்சிக் காலத்தை உருவாக்கியவர், அந்தக் காலத்தில் தமிழிலக்கியத்தில் பெருஞ் சக்தியாக உருவெடுத்தவர், வரலாற்றில் இன்னொருவராகிக் கரைந்து போனார். இறப்பிலும் பார்க்க அவர் வாழ்வில் பட்ட இன்னல்கள்தாம் இன்னும் இன்னுமென்று கவலையைத் தருகின்றது.

'மகாஜனா'வின் மும்மணிகள் என விதந்துரைக்கப்பட்டவர்களில் (மஹாகவி, அ. ந. கந்தசாமி, அ. செ. முருகானந்தம்) மூன்றாவது மணியும் கழன்று வீழ்ந்து விட்ட கவலையையே நான் சொன்னேன்.

இராசி. அருணாசலம்.



# இதயத்தை உறையவிட்டு: இறைவனும் உமாவும்

**"....மரணம் திடீர்திடீரெனத் தலைகாட்டும் போதெல்லாம் எனக்கு இப்போது பயம் ஏற்படுவதில்லை. எல்லாவற்றையும் எதிர்பார்த்துக் கொண்டு எதற்கும் சித்தமாகக் காத்திருப்பதில் ஒரு நிம்மதி புலப்பட்டு அவ்விதமே இருந்து வருகிறேன்......."**

இந்த வரிகள் உமைகுமாரனின் நாட்குறிப்பின் கடைசிப் பக்கத்தின் கடைசி வரிகள். பதினெட்டு ஆண்டுகளுக்கு முன்பு கொல்லப்பட்டு, அளவெட்டி மக்களின் இதயங்களில் மட்டுமன்றி ஈழத் தமிழ் மக்களின் இதயங்களில் எல்லாம் நீங்கா நினைவுகளாக உறைந்து விட்டவர்கள் இறைகுமாரனும் உமைகுமாரனும்.

தமிழ் மக்களின் அரசியல் சமுதாய முன்னேற்றங்களில் மிக அக்கறையுடன் பங்கு பற்றிய எமது கிராமத்தவர்களில் இவர்கள் குறிப்பிடத்தக்கவர்கள். இவர்கள் இணைபிரியாத நண்பர்களாக இருந்து தமது சமுதாயத்தின் விடிவிற்காகவும் குறிப்பாக அளவெட்டி கிராம வளர்ச்சிக்காகவும் தங்களை அர்ப்பணித்த தியாகத் தூண்கள். இருவரும் இலட்சிய வீரர்களாக வாழ்ந்தார்கள். கொள்கையில் பற்று, மன உறுதி, மக்களோடு இனிமையாகப் பேசும் சுபாவம், இது போன்ற பல அரிய அம்சங்களே இவர்களை மற்றவர்களில் இருந்து உயர்த்திக் காட்டியது.

அளவெட்டிக் கிராமத்தின் அனைத்து நடவடிக்கைகளிலும் இருவரின் பங்களிப்பு அளப்பரியது என்றே சொல்ல வேண்டும். அமைப்பு வடிவங்களிலும், ஸ்தாபனங்களை நெறிப்படுத்தி நடத்துவதிலும், கட்டுப்பாடு பேணி நின்ற முறையும் இவர்களின் தலைமை தாங்கும் திறனுக்கு மேலும் மெருகூட்டுவதாகும்.

இறைகுமாரன் மாணவப் பருவத்திலிருந்தே ஒரு போராளியாக வாழ்க்கையை ஆரம்பித்தவர். தமிழ்பேசும் மக்கள் மீது கட்டவிழ்த்து விடப்பட்ட ஒடுக்கு முறைக்கு எதிரான போராளியாகக் களத்தில் குதித்த அவர், போராளிகளுள் தலைசிறந்த போராளிக்கு இருக்க வேண்டிய சகல அம்சங்களையும் கொண்டிருந்தார். தனது போராட்ட காலங்களில் பல புதிய பாடங்களை கற்றுக்கொண்டவர் என்பதை அவரது பின்னைய கால சிந்தனைகளிலும் செயற்பாடுகளிலும் காணக்கூடியதாக இருந்தது.

தான் சரியெனக் கொண்டிருந்த கருத்துக்களை மூலைமுடுக்கெல்லாம் சென்று மக்கள் மத்தியில் அவற்றை எடுத்து விளக்கி, அரசியல் விழிப்புணர்ச்சிக்காக உழைத்த இறைகுமாரன் வாய்ப்புக் கிட்டும்போதெல்லாம் வெளிநாட்டிலும் தக்க பிரசாரம் செய்து தமிழர்கள் நிலையை வெளிப்படுத்தி வந்தார்.

ஒருவர் எவ்வளவு உயர்வான கருதுக்களைக் கொண்டிருந்த

போதிலும் அக்கருத்துக்களை மக்கள் விமர்சித்து விவாதிப்பதற்கான ஒரு சந்தர்ப்பத்தை ஏற்படுத்த முடியவில்லையென்றால் அக்கருத்துக்களால் எதுவிதப் பலனும் இல்லை. இதை நன்றாக உணர்ந்திருந்த இறைகுமாரன், எந்த விதமான கருத்தென்றாலும் அதை மக்களிடம் எடுத்துச் சொல்வதில் கூடிய அக்கறை காட்டினார். எந்தக் கருத்தென்றாலும் மக்களின் விவாதத்திற்கு விடப்படவேண்டும் என்பதில் பரிபூரண நம்பிக்கை கொண்டிருந்தார். இதனால் மக்களோடு நெருக்கமான தொடர்பு அவருக்கிருந்தது.

1981ஆம் ஆண்டு மே மாதம் 31ஆம் திகதி இரவு அரச காவல் படையினர் தமிழர் விடுதலைக் கூட்டணி காரியாலயத்தை எரியூட்டிய போது நண்பர்களை அழைத்து தீயை அணைத்தது அவரது துணிச்சலுக்கு எடுத்துக்காட்டு.

உமாவின் சிந்தனைகளும் செயற்பாடும் இறைவனின் செயற் திறனுக்குப் பக்கபலமாக இருந்து வந்தன. தான் கொண்டிருந்த விடுதலை உணர்வை, உமா செல்லும் இடமெல்லாம் வெளிப்படுத்தியதோடு, புத்திசாதுர்யமும், மதிநுட்பமும் கொண்டு செயற்பட்டு வந்ததை பலரும் நன்கறிவார்கள். விவசாயத்துறையில் ஈடுபட்ட உமைகுமாரன் ஈழத்தின் பொருளாதார அமைவு பற்றி அதிக அக்கறையும் ஆர்வமும் கொண்டிருந்தார். உயர்வான சிந்தனைகளையும் இலட்சியங்களையும் கொண்டிருந்த போதும் உமைகுமாரனது வாழ்வு மிகவும் எளிமையானதாகவே இருந்தது. இரண்டு உடுப்புக்களை மட்டும் தனது சொந்தமாக வைத்திருந்தது, அவற்றைத் தானே துவைத்து உடுத்துவது, இரவுப் படுக்கையை தலையணை, படுக்கை விரிப்பு எதுவுமின்றி வெறும் பாயில் உறங்குவது, சுவையூட்டப் படாத சாதாரண உணவுகளையே உண்பது, தனது தலைமுடியை தானே வெட்டுவது மொத்தத்தில் தனது தேவைகளை மிக மிகச் சொற்பமாகவே வைத்திருப்பது போன்ற அவரது பழக்கங்கள் ஆச்சரியத்தை ஊட்டுவன. பொதுக் கூட்டங்களிலும் எதற்கும் அஞ்சாது, தனது நிலைப்பாட்டைத் தெளிவுபடுத்தும் வகையில் அவர் பலவிதமான கேள்விக்கணைகளைத் தொடுத்து நிற்பார். இரவுபகலாக இருவரும் இன விடுதலையே உயிர் மூச்சாகக் கொண்டு செயற்பட்டார்கள்.

இருவரும் மக்களுடனே மக்களுக்காகவே வாழ்ந்தார்கள். தமிழினத்தின் விடுதலையே தமது உயிர்மூச்சாகக் கொண்டு தமிழினத்தின் தலைவர்களாகக் கருதப்படுபவர்களுக்கு, அவர்களது வெற்றிக்காகத் தமது வாழ்வைப் பூரணமாக அர்ப்பணித்துப் பணிபுரிந்தவர்கள். தமிழினத்தின் பிரச்சினையை மிகத் தெளிவாக ஆராய்ந்தவர்கள். தமிழினத்தின் பிரச்சினைக்குத் தமிழீழத்தை தீர்வாக ஏற்றுக் கொண்ட போதும், சிங்கள மக்கள், தமிழ் மக்களுடன் இணைந்து வாழ விரும்பினால் அதற்கான ஒரு சூழல் பேச்சுவார்த்தைகளின் ஊடாக உருவாக வேண்டும் என்பதில் அக்கறையாக இருந்தார்கள்.

தமிழ் இளைஞர் பேரவை மூலமும், தமிழ் இளைஞர் பேரவை (விடுதலை அணி) மூலமும் இளைஞர் குரல் என்ற பத்திரிகையையும், சதுரங்கமா?, நாம் செல்கின்றபாதை விடுதலைப்பாதையா?, போன்ற பிரசுரங்களையும் வெளியிட்டு தமிழ் மக்களிடையே விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தினார்கள்.

மட்டக்களப்பு மாவட்டம் சூறாவளியின் அனர்த்தத்தினுள் சிக்குண்டபோது நூற்றுக்கணக்கான தொண்டர்களையும் இலட்சம் ரூபா பெறுமதியான பொருட்களையும் சேகரித்து மட்டுநகருக்கு அனுப்பும் பணியைத் தாமே முன்னின்று செய்த திறமையை அளவெட்டி மக்களோ அல்லது தமிழ் மக்களோ மறந்து விட முடியுமா?

1980இல் பல்கலைக்கழக தரப்படுத்தலுக்கெதிராக மாணவர்கள் தொடர்ச்சியாக ஏழு நாட்கள் பாடசாலைப் பகிஷ்கரிப்பை நடத்தியபோது மாணவர்களுக்குத் தமது பூரண ஒத்துழைப்பை வழங்கி வடக்கு, கிழக்கு எங்கும் ஒரு நாள் பூரண ஹர்த்தாலை வெற்றிகரமாக நடத்தி தலைவர்கள் எனச் சொல்லப்படுகிறவர்களையே சிந்திக்க வைத்தார்கள். இருவரும் விடுதலைப் போராட்ட வரலாறுகளில் ஆயுதப் போராட்டத்தின் பங்கை அறியாதவர்களல்ல. அவர்கள் தமிழீழ விடுதலை ஆயுதப் போராட்டம் மூலமே சாத்தியமாகும் என்ற உறுதியான கருத்தையுடையவர்கள். ஆனால் தெளிவான வழிகளை முன்வையாது, மக்களை விடுதலைப் போராட்டத்தில் ஈடுபடுத்தாது ஒரு சிலர் மட்டும் ஆயுதங்களை ஏந்துவது தமிழினத்தின் விடுதலைக்கு வழிவகுக்காது என்ற கருத்தில் உறுதியாக இருந்தார்கள்.

இவர்களது சிந்தனை குறுகிய வட்டத்திற்குள் முடங்கிக் கிடக்கவில்லை. தமிழரின் பாரம்பரிய தாயகங்களைப் பேரினவாதிகளின் விரிவாக்கல் நடவடிக்கைகளிருந்து விடுவிப்பதற்கான போராட்டத்தில் தம்மையே அர்ப்பணிக்கும் தியாக உணர்வோடிருந்த அதே வேளையில், இலங்கையின் பொருளாதாரத்தை வேரறுக்க வாய்பிளந்து நிற்கும் பல்தேசியக் கம்பனிகளின் கொள்ளைக்கார நோக்கத்தை அம்பலப் படுத்துவதற்காகப் பல கருத்தரங்குகளை ஒழுங்கு செய்து நடத்தினாகள். இந்து சமுத்திரத்தில் இராணுவத் தளங்களை அமைப்பதன் மூலம் கரையோர நாடுகளின் சுதந்திர வளர்ச்சிக்குக் குறுக்கே நிற்கும் அமெரிக்காவின் ஏகாதிபத்திய நடவடிக்கைகளுக்கு எதிராக அவர்களது குரல் ஒலித்தது. அரசாங்க ஊழியர்களின் 1980ஆம் ஆண்டுப் பொது வேலைநிறுத்தத்தின் வெற்றிக்காகவும் அதனோடு தொடர்பான சகல போராட்டங்களிலும் பூரணமாக ஒத்துழைத்த இவர்கள் உலகின் விடுதலை இயக்கங்கள் பற்றி அறிந்து கொள்வதில் அதிக ஆர்வம் காட்டினார்கள். இறைகுமாரன் பலஸ்தீன விடுதலை இயக்கத்தின் போராட்டம் பற்றி ஆழமான கட்டுரையொன்றை எழுதுவதற்கான தயாரிப்பு வேலைகளிலீடுபட்டுக் கொண்டிருந்த போதே அவர் எம்மிடமிருந்து பிரிக்கப்பட்டார்.

இவ்வாறாக இருவரின் சிந்தனைகளும் செயற்பாடுகளும் அசாதாரணமாகவே காணப்பட்டன. தங்களின் உழைப்பையும் உயிரையும் மக்களின் விடிவிற்காகவும், விடுதலைக்காகவும் முழுமையாக அர்ப்பணித்த மாமனிதர்களின் உயிர்களைக் கொலைஞர்கள் சூறையாடியது தமிழீழ விடுதலை வரலாற்றில் ஒரு பாரிய பின்னடைவாகும்.

மரணம் வாழ்வின் ஒரு முடிவல்ல
உங்கள் சொற்களை விடவும்
செயல்களை விடவும்
உங்கள் மரணம் மிகவும் வலியது.

# அருணோதயாவும் இடப்பெயர்வும்






சி. மகேந்திரராஜா
அதிபர்

எனது எண்ணங்கள் பின்னோக்கி 1992க்கு முன் செல்கின்றன. எமது பாடசாலை ஆரம்பப் பாடசாலை, மேல் நிலைப்பாடசாலை என இரு இடங்களில் இயங்கிக்கொண்டிருந்தன. அன்று 1237 மாணவர்களுடனும் 57 ஆசிரியர்களுடனும் இயங்கி வந்தது. அன்று கற்பித்த மலையாண்டி ஆசிரியை, சித்திரா ஆசிரியை, செல்லையா ஆசிரியர், சீதா ஆசிரியை, இராஜேந்திரா, இராஜரத்தினம், அருளம்பலம் ஆசிரியர்கள் போன்றோரை நினைத்துப் பார்க்கின்றேன். "என்ன காணும் செய்கிறீர் மகேந்திரன்?" என்று கேட்கும் மலையாண்டி ஆசிரியரின் குரல் இன்றும் காதில் ஒலிக்கிறது. இந்திர விழா போன்று நடைபெறும் பரிசளிப்பு விழாவில் சிவப்பிரகாச மாஸ்ரரும் செல்லையா ஆசிரியரும் ஓடித் திரிவது என்கண்முன் நிற்கிறது. வீ. கே. நடராஜா மாஸ்ரரின் சங்கீத ஒலி நரசிங்க வைரவரின் அருகில் இருக்கும் கொட்டிலில் கேட்பது இன்றுபோல் இருக்கிறது.

நிக்களஸ் மாஸ்ரரும் நானும் இரவுநேரப் பரிசளிப்பு விழாவின்போது எல்லைப்புறக் காவல்களில் உற்சாகமாக நிற்பது இன்று போல் இருக்கின்றது. 01. 01. 90ல் இராணுவ நடவடிக்கை காரணமாக வலிவடக்குச் சிதறுண்டு காணப்பட்டது. திடீரென திரு. சிவபாதம் அதிபர், "டச்சு ரோட்டில் ஆமி வந்துவிட்டான். என்ன செய்வது?" என்று கேட்டார். இந்த நேரம் அளவெட்டி ஊர் மக்கள் எல்லாரும் கைகளில் கிடைத்த பொருட்களோடு வேறு இடங்களை நாடினர். வந்த இராணுவம் சிறிது பின் நோக்கிச் சென்றது. ஆயினும் இடப் பெயர்வு நடந்துகொணடே இருந்தது. எமது பாடசாலை இயங்க முடியாத நிலைக்குத் தள்ளப்பட்டது. 15. 06. 92ல் எமது பாடசாலை இராமநாதன் கல்லூரியில் மாலை நேரப் பாடசாலையாக இயங்க ஆரம்பித்தது. நடராஜா மாஸ்ரர், சிவராஜா, பிரபாகரன், பத்மநாதன் ஆசிரியர்களோடு தளபாடங்களை ஏற்றிக்கொண்டு சென்றபோது கூடுதலான பொருட்கள் ஏற்றப்படாமலும் நூலகப் புத்தகங்கள், விஞ்ஞானகூடப் பாரிய மேசைகள், விஞ்ஞான உபகரணங்கள் போன்றன எடுத்துச் செல்ல முடியாத நிலையும் ஏற்பட்டது. கொண்டு சென்ற தளபாடங்களுடன் இராமநாதன் கல்லூரியிலேயே தற்காலிக கொட்டகை அமைத்து பாடசாலையை இயங்க வைத்தோம்.

**தளபாடங்களை ஏற்றிக்கொண்டு சென்றபோது கூடுதலான பொருட்கள் ஏற்றப்படாமலும் நூலகப் புத்தகங்கள், விஞ்ஞானகூடப் பாரிய மேசைகள், விஞ்ஞான உபகரணங்கள் போன்றன எடுத்துச் செல்ல முடியாத நிலையும் ஏற்பட்டது. கொண்டு சென்ற தளபாடங்களுடன் இராமநாதன் கல்லூரியிலேயே தற்காலிக கொட்டகை அமைத்து பாடசாலையை இயங்க வைத்தோம்.**

மாணவர் தொகை 400 ஆகக் குறைந்தது. ஆசிரியர் தொகையும் குறைந்தது. அன்று அதிபராக இருந்த சிவபாதம் மாற்றப்பட்டு திரு. ஸ்ரீக்குமரன் பதவியேற்றார். நான் இன்னொருபடி பின்னோக்கி 1988க்குச்செல்கிறேன். அவ்வருடம் ஆசிய அபிவிருத்தி வங்கி பாடசாலையைப் பார்க்க வந்தது. பாடசாலை சிதைவுற்றுக் காணப்பட்டதாலும், அதிபரின்




அதிபர் சிவசுப்பிரமணியம் வளவிற்கு அருகில் இருந்த தொடர் வகுப்பறைகள் புனர் நிர்மாணிக்கப்பட்டு வருகின்றன.

முயற்சியாலும் 1988ஆம் ஆண்டு இரு மாடிக் கட்டடங்கள் (130 x 20) (70 x 20) எமக்குக் கிடைப்பதற்கு வழி பிறந்தது. நல்ல நாளில் விநாசித்தம்பி ஆசிரியர் தலைமையில் சிங்கம் மாஸ்ரர், ஆறுப்பிள்ளை ஆசிரியர், பண்டிதர் ராஜரட்ணம், பண்டிதர் நாகலிங்கம் போன்றோர் அடிக்கல் நாட்டி கட்டிட வேலை நடைபெற்று கொண்டிருக்கும் வேளையில் இடப் பெயர்வு ஏற்பட்டது. மாடிக் கட்டிடங்கள் கீழ்ப்பகுதி அரைகுறையாக வேலை செய்யப்பட்ட நிலை. இந்நிலை மீளக் குடியமர்வு நிகழும்வரை காணப்பட்டது.

இராமநாதன் கல்லூரியில் இடம்பெயர்ந்த நாம் சிரமத்தின் மத்தியில் பாடசாலையை இயக்கிவரும் வேளையில் போக்குவரத்துக் காரணமாகவும், இடவிலகல் காரணமாகவும் பாடசாலையில் மாணவர் தொகை குறைந்து கொண்டே சென்றது. இந்தக் காலகட்டத்தில் 1994ல் எமது நூற்றாண்டு விழா எடுக்கப்படும் நிலை ஏற்பட்டது. இராணுவத்தின் பின்விலகலால் 94ஆம் ஆண்டு நூற்றாண்டு விழாவைச் சொந்த இடத்தில் கொண்டாடக் கூடியதாக இருந்தது. ஆயினும் பயம் காரணமாகவும் ஷெல் பீதி காரணமாகவும் மக்களின் இடப்பெயர்வு காரணமாகவும் எமது பாடசாலை தொடர்ந்து இராமநாதன் கல்லூரியில் இயங்கிவந்தது.

பின்பு 1995ல் இராணுவம் முன்னோக்கி வந்து எமது பாடசாலையை ஆக்கிரமித்துக் கொண்டது. இதே போன்று 30. 10. 95இல் வலிகாமம் இடப் பெயர்வு ஏற்பட்டது. நாங்கள் தென்மராட்சி, வடமராட்சிப் பகுதிகளை நோக்கிச் சென்று கொண்டிருந்தோம். திடீர் இடப்பெயர்வு காரணமாக மாணவர்களின் முக்கிய ஆவணங்களைத் தவிர ஏனைய பொருட்கள் யாவற்றையும் கைவிட்டு, சாவகச்சேரியில் இறிபேக் கல்லூரியில் பல பாடசாலைகள் சேர்ந்து மாலைநேரப் பாடசாலையாக இயங்கிவந்தது. அந்த நேரம் எமது பாடசாலை மாணவர்கள் ஐவர் மாத்திரமே கல்வி கற்றனர். மாணவர்களும் ஆசிரியர்களும் பாதுகாப்புக் கருதிச் சென்றார்கள். இது எமது பாடசாலையை நலிவுறச் செய்தது. பலர் யாழ் கடல்நீரேரியைக் கடந்து சென்றனர். எஞ்சியோர் யாழ் தென்மராட்சி, வடமராட்சியிலேயே இருந்தனர். இந்நிலையைத் தொடர்ந்து, இராணுவத்தின் அறிவிப்பால் 01. 06. 96ல் மீண்டும் மக்கள் வலிகாமத்தை நோக்கி இடம்-பெயர்ந்தனர்.

01. 06. 96ல் நானும் மீளக்குடியமர, பொருட்களோடு வந்தபோது எனது வீட்டுத் திறப்பை வாங்கி வருமாறு வீட்டார் சொன்னபோது ஆம் என்று சொல்லி விட்டு நேரடியாக இராமநாதன் கல்லூரிக்குச் சென்று, எமது பாடசாலை அலுவலகத்தைப் பார்த்தேன். அலுவலகம் உடைக்கப்பட்டு பொருட்கள் யாவும் சிதைக்கப்பட்டுக் குவிக்கப்பட்டிருந்தன. கதவில் சிங்கள சொற்களில் "அத்துலட்ட யண்ட தகனம்" என எழுதப்பட்டிருந்தது. ஆயினும் கடவுளை நினைத்துக் கொண்டு உள்ளே சென்றபோது ஆர்மோனியம் மீன் பெட்டியாக மாறிக்கிடப்பதையும், பாடசாலைக் கோவைகள் யாவும் கிழிக்கப்பட்டும், சிதைக்கப்பட்டும் வயலின் உடைக்கப்பட்டும் பெட்டிகள் வெறுமையாக இருப்பதையும் கண்டவுடன் என் மனம் ஒரு கணம் 'திக்' என்று இருந்தது.

இந்த நிலையில் நாட்கள் தொடர்ந்தன. மக்கள் சிறிது சிறிதாக வரத் தொடங்கியதால் எமது பாடசாலையிலும் மாணவர்கள் மீளவும் வந்து சேர்ந்து 365 மாணவர்களுடன் இயங்கிக் கொண்டிருக்கிறது. ஆசிரியர்கள் பற்றாக்குறை காணப்பட்டது. அடிப்படை வசதிகள் இன்றி மாணவர்கள் அல்லலுறும் நிலை ஏற்பட்டது. இந்த நிலையில் 01. 01. 97ல் இருந்து வலிகாமம் மீள்குடியமர்வு ஆரம்பிக்கப்பட்டபோது எமது பாடசாலையையும் சொந்த இடத்திற்கு வரலாம் என



கனடாக் கிளையின் உதவியுடன் கொள்வனவு செய்யப்பட்ட காணி (சைவம் வளவு)

கூறியதற்கிணங்க, ஒருநாள் அதிபரும், நானும், பத்மநாதன் ஆசிரியரும், நடராஜா ஆசிரியரும், இன்னும் இருவரும் பாடசாலையை நோக்கிச் சென்றோம். மாகியப்பிட்டியிலிருந்து மலைவேம்படியூடாக வந்த பொழுது செட்டியார் கடை சிதைவுண்டு காணப்பட்டது. பத்மா ஆசிரியை வீட்டுக்கு கிழக்குப் பக்கமாகச் செல்ல இராணுவம் அனுமதிக்கவில்லை. எமது பாடசாலையின் விளையாட்டு மைதானத்தை ஊடறுத்துப் பாதுகாப்பரண்கள் அமைக்கப்பட்டிருந்தன. மைதானத்தின் வடக்குப் பக்கத்துக் கட்டிடத்தில் இராணுவம் நிலை கொண்டிருந்தது. மைதானம் முட்கம்பிகளாலும், மிதிவெடிகளாலும் நிரப்பப்பட்டுக் காணப்பட்டது. பத்மா ஆசிரியை வீட்டு ஒற்றையடிப் பாதை வழியாக வந்து மலைவேம்படிப் பக்கமாக நின்று எமது அதிபர் சிங்களத்தில் 'றாலாமி மாத்தையா'என்று கூப்பிடுகிறார் அதே நேரம் குரல் கேட்டு கொச்சைத் தமிழில் ஒரு இராணுவ வீரன் "அடோ நில் வாறேன்" எனக் கூறினான். "ஓய் நிவாரணம் கொடுக்கிறது நாளைக்கு இன்று ஏன் வந்தாய்" என்றான். அதற்கு தான் அதிபர் என்றும் எங்களை ஆசிரியர்கள் என்றும் அவர் சிங்களத்தில் அறிமுகப்படுத்தினார். உடனே வந்த இராணுவ வீரன் "பொட்டாக்கின்ன" எனக்கூறி "லொக்குமாத்தையாவைக்" கூட்டிவரச் சென்றான். சிறிது நேரத்தின் பின் அந்த முகாம் பொறுப்பாளர் வந்து சேர்ந்தார். நாங்கள் அறிமுகப்படுத்தி கதைத்தபோது, பாடசாலையை விட்டு தாங்கள் விலகப் போவதாகவும் எங்களை வந்து பாடசாலையை நடத்துமாறும் கூறினர். அங்கிருக்கும் மிதிவெடிகள் அகற்றப்பட்டு சீராக்கப்பட்டாலே நாங்கள் வருவோம் எனக் கூறி கதைத்து விட்டுச் சென்றோம்.

இவ்வாறு காலம் கடந்தது. அதிபர் அவர்களும் 01. 07. 97ல் யாழ். இந்துக் கல்லூரிக்கு மாற்றல் ஆகிச் சென்றுவிட்டார். பொறுப்புகள் யாவும் என் தலைமையில் வந்தது. இந்நிலையில் தான் பிரதேச செயலாளர் பாடசாலையைச் சொந்த இடத்திற்கு கொண்டு செல்லுமாறு வற்புறுத்தினர். கல்விப் பகுதியினரும் அவ்வாறே இறுக்கமாக நின்றபோது நான் மிகவும் வேதனையுடன் மிதிவெடிகளும், சிதைவுண்ட நிலையிலும் காணப்படுகின்ற போது பாடசாலையைக் கொண்டு செல்ல முடியாது எனவும் ஒருமாணவனுக்கு இழப்பு ஏற்பட்டால் நீங்களே பொறுப்பு எனவும் கூறினேன். ஆயினும் எனது சொல்லை ஏற்காது இறுக்கமாக நின்றதனால் 01. 10. 97ல் பாடசாலை மீளவும் சிதைவுண்ட கட்டிடங்களுக்குள் சொந்த இடத்தில் செயற்படத் தொடங்கியது. வகுப்பறைகள் வானத்தைப் பார்க்குமளவுக்கு ஓட்டைகளாக காணப்பட்டன. மைதானத்தில் இராணுவம் எழுப்பிய அரண்களால் எமது பாடசாலை இரு நாடுகள் போன்று காணப்பட்டது. அயற் காணிகள் யாவும் வன்னிக் காடுகள் போல் காட்சியளித்தன. எல்லா அறைகளும் கதவுகள் அற்ற நிலையில் காணப்பட்டன. எங்களுக்குத்தான் இந்த விதியென்றால் நரசிங்க வைரவருக்கும் அதே நிலைதான். வைரவரின் ஆலயம் சிதைவுண்டு வாகனமும் வெளியே கிடந்தது. ஓடுகள் அகற்றப்பட்டுச் சிதைவுற்றிருந்தன. பாடசாலை வளவில் காணப்பட்ட மலைவேம்பில் மிதிவெடி கவனம் என்ற அச்சுறுத்தற் பலகை தொங்கவிடப்பட்டிருந்தது. ஆலய முன்றலில் "மிதி வெடி கவனம்" என்ற சிவப்புக்கொடி பறந்து கொண்டிருந்தது. இந்நிலையில்தான் பாடசாலை இயங்க வேண்டியிருந்தது. ஒரு நாள் எங்கள் மனையியல் ஆசிரியை, இரு பெண்பிள்ளைகள் பாடசாலை முடிந்தவுடன் செல்வார்கள் எனக்கூறினார். ஏன் எனக் கேட்டேன். பிள்ளைகள் வெளியே செல்லமுடியாமல் வகுப்பிலேயே சிறுநீரைக் கழித்து விட்டார்கள் என்றார். இந்த நிலை சிறிது காலம் தொடர்ந்தது. இடைவேளை நேரத்தின்போது மைதானத்திற்குச் செல்லவிடாது, காவலில் நானும், உப அதிபரும் நிற்போம். சிறுவர்கள் எம் முன்னிலையில் சிறுநீர் கழிப்பதைக் காணக்கூடியதாக இருந்தது. எல்லாம் வல்ல நரசிங்க வைரவரை முதலில் நிர்மாணம் செய்யவேண்டும் என




முன்பு திறந்த வெளியரங்க மேடை இருந்த இடத்தில் நிர்மாணிக்கப்பட்ட கட்டடம்.

நினைத்து ஆலயங்களின் உதவியுடன் ரூபா 10,000 செலவில் புனர் நிர்மாணம் செய்தோம். ஒற்றை அடிப்பாதையைத் நிறந்து வடக்குப்புறத்தே இருக்கின்ற சிறுநீர் கழிக்கின்ற இடத்திற்கு மாணவர்கள் வரக்கூடியதாகச் செய்தோம். மைதானம் மிதிவெடிகள் எல்லாம் அகற்றப்பட்டு, மண்கள் நிரப்பப்பட்டு ரூபா 50,000 செலவில் புனரமைக்கப்பட்டது. இது எனது முயற்சியாலும், எனது உறவினரும் அன்றைய கல்விப் பணிப்பாளருமான திரு. சி. சிவராஜா அவர்களின் உதவியாலும் ஆசிய அபிவிருத்தி வங்கியின் உதவியுடனும் செய்யப்பட்டது. 365 மாணவர்கள் 780 மாணவர்களாக அதிகரித்தனர். 10 பேர் பல்கலைக்கழகம் செல்லும் அளவுக்குக் கல்விநிலை வளர்ச்சியுற்றது. ஆசிரியர்களின் தேவை நிறைவேற்றப்படுகின்றது.

ஒரு நாள் பண்டிதர் நாகலிங்கம் அவர்கள் ஒரு கடிதத்துடன் பாடசாலையை நோக்கி வந்தார். சிங்கம் மாஸ்ரர் கனடாவில் இருந்து ஒரு கடிதம் போட்டு இருப்பதாகவும், எமது பாடசாலைக்குப் பழைய மாணவர்கள் சேர்ந்து ஒரு தொகை அனுப்ப இருப்பதாகவும் அவர் கூறினார். தெல்லிப்பளை உதவி அரசாங்க அதிபர் காரியாலயத்தில் வேலைசெய்யும் சந்திரா அவர்கள் உதவியால் சிங்கம் மாஸ்ரரின் தொலைபேசி இலக்கம் கிடைத்தது. நம்பர் கிடைத்ததும் நான் சிங்கம் மாஸ்ரருடன் தொடர்பு கொண்ட பொழுது மிகவும் சந்தோசமான குரலில் பாடசாலையின் நிலவரம் பற்றிக் கேட்டு அறிந்ததோடு மிகவும் சந்தோசமான செய்தியையும் கூறினார். எமது பழைய மாணவர் சங்கம் உங்களுக்கு 3000 டொலர் சேர்த்து வைத்திருக்கிறார்கள் என்றும், 1,24,000 ரூபா சிதம்பரசிவன் அனுப்பி வைப்பதாகவும் கூறினார். யார் இந்த சிதம்பரசிவன், யார் அந்த கந்தசாமி என்பது தெளிவாகத் தெரிகிறது. மேற்கூறியவர்கள் அனைவரும் அருணோதயாவுக்கும் கனடாவுக்கும் பாலத்தை ஏற்படுத்தியவர்கள் எனக் கூறி மிகுதியைத் தொடர்கிறேன்.

நீண்ட பாலம் சுருங்கி இப்பொழுது நெருக்கமாக ஓடையாக மாறுகின்றது. முதல் அனுப்பிய பணத்தில் மாணவர்களின் தண்ணீர்த் தாகத்தை நீக்குவதற்கு நீர்த்தாங்கியைக் கட்டித் திருத்தியதோடு பைப்புக்களையும் போட்டு புதிதாக நீர் இறைக்கும் இயந்திரத்தையும் கொள்வனவு செய்தோம். மிகுதி 24,000 ரூபாவிற்கு பாடசாலை முகப்பு வளைவையும் செய்துமுடித்தோம். இது 01. 05. 98 இல் நடைபெற்றது. சிறிது காலத்தின் பின் எமது கனடா மைந்தர்களின் உதவியினால் ரூபா 1,38,000 நூலகத் தளபாடமும், ரூபா 38,000க்கு நூலகப் புத்தகங்களும் கொள்வனவு செய்யப்பட்டன. மீதி ரூபா 50,000 விளையாட்டு உபகரணங்களுக்கு ஒதுக்கப்பட்டது. உபகரணங்கள் கொள்வனவு செய்ததோடு பயிற்சியாளர் செலவும் போக மிகுதி ரூபா 25,000 கையிருப்பில் உள்ளது.

கடந்த காலங்களில் பழைய மாணவர் சங்கம் பெயரளவில் இருந்தது. 1994ம் ஆண்டு மீள் புனரமைப்புச் செய்து நூற்றாண்டு விழாக் கொண்டாடியும் நூற்றாண்டு மலரை வெளியிட்டதோடும் சபையின் நடவடிக்கைகள் தொடர்ந்து செய்ய முடியாமல் தடைப்பட்டது. இந்நிலை ஏற்படுவதற்குக் காரணம் இடப் பெயர்வாகும். இது 1998 வரை நீடித்தது. இந்நிலையில் 1999ஆம் ஆண்டு பழைய மாணவர் சங்கத்தை புனரமைப்புச் செய்தோம். புனரமைப்பின் பயனை இன்று அறுவடை செய்து கொண்டிருக்கின்றோம். நா. வேதநாயகம், சி. விக்கினராசா ஆகியோர் போசகர்களாகவும் ம. பத்மநாதன், க. நித்தியானந்தன் ஆகியோர் உபதலைவர்களாகவும். திரு. பொ. சுந்தரலிங்கம் சட்டத்தரணி, சி. கந்தசாமி ஆகியோர் செயலாளர்களாகவும், அ. மதிவதனன் (பி.கொம்) பொருளாளராகவும் மேலும் எழுவர் நிர்வாக சபை உறுப்பினர்களாகவும் உள்ளனர்.

புதிய பழைய மாணவர் சங்கம் நேரடியாகவே கனடா கிளையுடன் தொடர்பு கொண்டு இயங்கிவருகிறது. திரு.



சிவசுப்பிரமணிய மண்டப மேல்மாடியில் நூலகக் கண்காட்சி

சிதம்பரசிவனிடம் இருந்து கந்தசாமி அவர்களுக்கு ஒரு செய்தி கிடைத்தது. எமது பாடசாலைக்கு அருகில் உள்ள சைவம் நவரத்தினத்தாரின் காணியையும் வீட்டையும் வாங்கித் தருவதாக. சிங்கம் மாஸ்ரரும் எனக்கும் பண்டிதர் நாகலிங்கத்துக்கும் கடிதம் எழுதியிருந்தார். நாங்கள் மூவரும் (பண்டிதர் நாகலிங்கம், திரு. கி. மகேந்திரராசா, திரு. ம. பத்மநாதன்) சுழிபுரம் சென்று ஐயருடன் கதைத்து விலையை நிர்ணயித்தோம். இதன் பயனாக 6 பரப்பு காணியும் வீடும் 410,000 ரூபாவுக்கு கொள்வனவு செய்து பாடசாலைக்கு அன்பளிப்புச் செய்யப்பட்டது. இதனைத் தொடர்ந்து காணியைச் சுற்றி சுற்றுமதில் அமைப்பதற்கும் பழைய மாணவர் சங்கத்தின் அனுசரணையுடன் திரு. ஆறுமுகம் பொன்னம்பலம் குடும்பத்தினர் பணத்தை அனுப்பி வைத்தனர். தற்போது மதில் கட்டப்பட்டு திரு. ஆறுமுகம் பொன்னம்பலம், திருமதி. செல்லம்மா பொன்னம்பலம் ஆகியோரின் பெயர்கள் கட்டிடத்தில் சூட்டப்பட்டுள்ளன. ஆ ண்டு ஒன்றிற்கான சிறுவர் முற்றம் மலேசிய அன்பர் காலம் சென்ற சுவாமி பிரணவானந்தாஜியின் அன்பளிப்பினால் வேலை முடிவடைகிறது. இவ்வாறு கனடா மைந்தர்களின் பணி தொடர்ந்து செல்கின்றது.

பழைய மாணவர் எவராயினும் ஊருக்கு வந்தால் அவர்களைச் சந்தித்து பாடசாலைக்கு அழைத்து வருவது எமது கடமையாகும். அது ஏன், எதற்கு என்பது தெளிவாகத் தெரியும். அந்த ரீதியில் ஒரு நாள் பத்திநாதன் மாஸ்ரரின் மகன் விமலனும் பிள்ளைகளும் வந்தார்கள். விமலன் பாடசாலையைப் பார்த்து விட்டு, "சேர் நாங்கள் படிக்கும்போது இவ்வாறு இருந்திருந்தால் நாங்கள் வெளிநாட்டுக்குப் போயிருக்கமாட்டம்" என்றார். நான் உடனே கனடாவில் வாழும் அருணோதயத்தின் மைந்தர்களுக்குத்தான் இந்தப் பெருமை என்று கூறினேன். இதே போல் கனடாக் கிளையின் உறுப்பினர் ஐங்கரன் வந்து சைவத்தின் வீட்டைப் பார்த்து. சைவம் மேலே இருந்து பார்த்து தனது சொந்த வீட்டுக்கு மீளவும் வந்து வாழ்ந்தால் என்ன' என்று யோசிப்பார் என்று கூறினார். நான் அது பொன்னம்பலம் குடும்பத்திற்கே நன்றி சொல்ல வேண்டும் என்று சொன்னேன். இவ்வாறு பலரும் பலவிதமாகச் சொல்வதற்கு யார் காரணம் என்பது உங்களுக்குத் தெரியும். இது அருணோதயத்தின் வெளி நாட்டில் வாழும் பிள்ளைகளே காரணம். ஒரு நாள் பண்டிதர் நாகலிங்கம் காவல் நாயும் அற உறியும் அறுந்து விழுந்த பழமொழியைச் சொன்னார். அவர் இந்தப் பழமொழியை யாருக்காக உவமித்தாலும் வெண்ணெய் உறியை கனடாவில் வாழ் அருணோதய மைந்தர்களுக்கும் காவல் நாயை அருணோதயாவுக்கும் ஒப்பிடுகின்றார். உண்மையிலேயே அவ்வாறு சொல்வதற்குக் காரணம் திரு. சுந்தரலிங்கம், சி. கந்தசாமி ஆகியோரின் ஆலோசனையின் பேரில் திரு. சிதம்பர சிவனும், ஏனையோரும் எடுத்துச் செல்லுகின்ற நடவடிக்கையே இதற்குச் சான்றாகும்.

மறுபுறத்தில் மனையியல் கூடம் தளபாட உபகரணங்கள் இன்றி அவதிப்படுகின்றது. மரவேலைக் கூடம் சுத்தியலே இல்லாமல் சுருதி போய்க்கிடக்கிறது. மாணவர்கள் தங்களது அன்றாட தேவைகளை எழுதி படிப்பதற்கு இருக்க இடமின்றித் தவிக்கின்றனர். எல்லைப் புறங்கள் எதுவித பாதுகாப்புமின்றி 'ஓ' என்று காணப்படுகிறது. இவ்வாறு பல சீரழிவுகள்!

அருணோதயத்தின் மைந்தர்கள் தாய்ப் பற்றுடையவர்கள் என்பதை நிருபித்துக்காட்டிவிட்டார்கள். தாயையும், தான் படித்த பாடசாலையையும் மறந்தவன் வாழ்க்கையில் முன்னேற முடியாது. ஆனால் அருணோதயத்தின் மைந்தர்களோ அவர்களை மதித்து முன்னேறிச் செல்கின்றார்கள்.

தொடர்க பணி! வாழ்க அருணோதயம்! "எம் கடன் பணி செய்து கிடப்பதே."



# பெற்ற தாயும் பிறந்த பொன்னாடும்



**பெற்ற தாயும் பிறந்த பொன்னாடும்**
**நற்றவ வானிலும் நனி சிறந்தனவே**

என்ற கூற்றினைப் பலரும் கேட்டிருப்பர். ஆனால் அதன் உட்பொருளைச் சரிவர உணர்ந்தவராய் நம்மில் பலர் இருக்கவில்லை. இன்று கிராமத்தை விட்டு யாழ் பட்டினம்வரை வந்து பின் அங்கிருந்து கொழும்புவரை வந்து பின் அங்கிருந்து ஒருபுறம் நீர்கொழும்பு மறுபுறம் களுத்துறை என்று பலவீடுகள் மாறிமாறி வாழ்ந்து பல்வேறு லொட்ஜ்களில் ஓயாது தொலைபேசிகளைத் தட்டி தட்டி கைவிரலும் தேய்ந்துபோக, கனடா, அவுஸ்திரேலியா இங்கிலாந்து, நோர்வே, கொலண்ட் இப்படிப் பரதேசம் போனோரும் இன்னும் கப்பல்களிலும் கொள்கலன்களிலும் சட்ட விரோதமாக மூச்சுத்திணற நாடுவிட்டு நாடு அலையும் நம் தம்பியரும், இன்று பொன்னான மேற்படி வாசகத்தின் உட்பொருளை ஏதாவது ஒரு சந்தர்ப்பத்திலாவது உள்ளூர உணர்ந்து தம் உதடுகளால் பெற்றதாயையும் பிறந்த பொன்னாட்டையும் வாழ்த்தியிருப்பர். தம்மை விருந்தினராக அழைத்து, பின் விளக்கமறியலில் வைத்துள்ள பிள்ளைகள் காதுகளில் படாமல் பாத்றூம்களில் தனிமையில் இவ்வாசகத்தை உச்சரிக்கும் வயது வந்த தம்பதியினரும் இருக்கத்தான் செய்வார்கள். இதைக்காலத்தின் கோலம் என்பர் சிலர். விதியின் விளையாட்டென்பர் வேறுசிலர். உண்மையாக தாயக மண்ணையும், தமிழ் மொழியையும் தமிழர் தம் பழம்பெரும் பாரம்பரியத்தையும் மனதார நேசிப்பவர்கள் இதை மானிடத்தின் அங்கலாய்ப் பென்பதுதான் சரியென்பர்.

இங்குதான் குப்பரும் குப்பியும் என்ற சிறுகதையை நினைவூட்டுதல் பொருத்தமாகும். அந்த ஊர் வசதிகள் நிறைந்த பேரூர். அங்கு மாடமாளிகைகள், உயரிய வீடுகள், பல அடுக்கினாலாய பெருமனைகள், கோபுரங்கள் மிக்க கோவில்கள் எல்லாம் இருந்தன. இந்த ஊர் நடுவணாக ஒரு மலை. அம்மலையில் உச்சியிலே ஒரு குப்பம், மிகச்சிறிய குப்பம். காத்தும் மழையும் கடும் குளிரும் எம்மை வாட்டுகின்றதே. மலையின் அடிவாரத்தில் எத்தனை பெரிய வீடுகள், மாமனைகள். எமது வீடு இத்தனை சிறியதாய் இருக்கிறதே என்று குப்பி நிதமும் குப்பனுடன் மனம் நொந்து மனுமுணுப்பாள். குப்பன் இவற்றை காதில் வாங்கிக் கொள்வதில்லை. ஒருநாள் அடுத்த ஊரில் மாபெரும் திருவிழா அங்கு இந்திரவிழாபோல் ஏற்பாடுகள், இந்த ஊரார் எல்லோருமே அங்கு புறப்பட்டு விட்டனர். குப்பனும் குப்பியும் மலையை விட்டு இறங்கி, நடக்கலானார்கள். இரண்டு மூன்று மைல்கள் நடந்து களைத்தவர்கள் தெருவோரம் களை ஆறிவிட்டு திரும்பி தம் ஊரைப் பார்த்தனர். என்னே ஆச்சரியம்! அந்த ஊரில் உள்ள மாட மாளிகைகள் கூட கோபுரங்கள் திருக்கோவில் கோபுரங்கள் எவையுமே தெரியவில்லை. தெரிந்தது மலை. அம்மலை உச்சியிலே அரிக்கன் லாம்பு தொங்கும் அந்த குப்பம்...... இவைதான் குப்பனுக்கும் குப்பிக்கும் தெரிந்தன.
இப்போ குப்பன் குப்பியை நோக்கி "யாருடைய வீடு உயரமானது? நீ புகழ்ந்த மாட மாளிகைகள் எங்கே?" என்று வினவினான். குப்பியோ மனம் மகிழ்ந்தவளாய் "மச்சான், நீயும் நானும் தான் மகாராசாக்கள் எங்கள் குப்பத்தின் உயர்வுக்கு இணையேது?" என்று ஆனந்தப் பெருமூச்சுவிட்டனள்.

இன்று வெளிநாடு என்று பல்லாயிரம் மைல்கள் தாண்டி, அங்கு நின்று திரும்பிப்பார்க்கையில் திகழ்வது யாழ்ப்பாணம். அங்கு ஒளிவிட்டு நிற்பவை அங்குள்ள கல்லூரிகள். குடிசையில் தொங்கும் விளக்குள் போல் ஒளிர்ந்து நிற்பவை அவ்வூர்களின் கலாசாலைகள். இவற்றைத்தான் புலம் பெயர்ந்தவர்கள், பூரிப்புடன் நோக்குகின்றனர். தாம் ஓடிவிளையாடிய ஒய்யாரமான கல்லூரிகளை அங்கு பயின்ற நாட்களை, படிப்பித்த நாட்களை பல ஆசான்களை எண்ணி எண்ணி பெருமை அடைகின்றனர். இவர்கள் தாய்ப்பாசம் தான் என்னே!

இத்தகைய பாடசாலைகட்கு நாம் ஏதாவது செய்ய வேண்டுமென்று ஏங்கும் இதயங்கள் இன்பத்தமிழ் இதயங்கள் அன்றோ! இந்த வரிசையில் அளவை நகர் நடுவண் ஒளிபரப்பி நிற்பது அளவை அருணோதயக் கல்லூரி. இதன் பழைய மாணவச் செல்வங்கள், அறிவூட்டிய ஆசிரிய திலகங்கள், மீண்டும் ஒருமுறை இக்கல்லூரியை யாழ்ப்பாண நன்னகரின் கலங்கரை விளக்காக, கலைகள் பலபேணும் கூடமாக, தரம் உயர்த்த அவை செய்ய எண்ணுவது தாய்க்கு தனையன்கள் செய்யும் கைமாறாகாதோ? 'கலைபயில் தரு சிறுவர் குழுமி கலை வளர்பதி போற்றுவது' - காலத்தின் கட்டாயமும் நேரத்தின் நியதியுமாகும்.

பொங்கல் தினத்தில் வெடி ஓசை கேட்டதும் ஓடுகின்ற நாலுகால் பிராணிகள் போல் நாமெல்லாம் ஓட முற்பட்டுவிட்டால், ஓடித்தான் ஆக வேண்டும். ஓட ஓட பொங்கல் வெடிகளும் விடாது துரத்துவது போல் ஒலித்தவண்ணமே இருக்கும். ஓட முற்பட்டால் ஓட்டத்துக்கு முடிவேயில்லை. இஸ்ரேல் என்ற நாடு உதயமாக வேண்டும் என்ற குரல் ஓங்கி ஒலிக்க உலகெலாம் பரவி வாழ்ந்த யூதர்கள் இஸ்ரேல் நாட்டை நோக்கிப் படையெடுத்ததாக வரலாறு. நம்நாட்டில் உரிமைக் குரல் ஓங்கி ஒலிக்க முற்பட்டதும் கட்டுநாயக்கா வரை ஓடி, அகப்படும் முதல் விமானத்தில் ஏறி அமர்ந்து கொண்டு அவ்விமானத்திலேயே பட்டிமன்றம் போல் விடுதலை, விடுதலை, விடுதலை என்று வீரமுழக்கம் இடுவது, எம்மையும் இஸ்ரேலியரையும் எடைபோட உதவும்.

தாயொருத்தி ஆறே ஆறு இறாத்தலில் ஒரு மகவைப்பெற்றெடுக்க, எத்தனை அவதிப்படுகிறாள் என்றால் தாயகத்தை மீட்டெடுக்க அவதிகளை அவலங்களை தாங்கும் மனப்பக்குவம் இல்லாத நாம்

நாட்டுக்கு உரித்தாளர் ஆக முடியுமா? உரிமை கொண்டாட முடியுமா?

ஏராளமான கெடுபிடிகள், சீறிவரும் செல்கள், பாய்ந்து வரும் பீரங்கி வேட்டுகள் படை நகர்வுகள் எல்லாம் தாங்கி, பூப்புனித நீராட்டல், பொங்கல் விழாக்கள், கொடியேற்றம், தேர்ப் பவனி, திருமண விழாக்கள் இப்படி எல்லாம் செய்து சிரித்த முகத்துடன் வாழும் திராவிடத்து திருக்கூட்டம் ஒன்று இங்கு வாழ்ந்து கொண்டுதான் இருக்கிறது. அது தொடர்ந்தும் வாழத்தான் போகின்றது. இந்நிலையில் விடுதலை என்றும் அருணன் உதயமாகி அருணோதயம் காண, புலம் பெயர்ந்த ஒவ்வொரு தலைமகனும், தலைமகளும் தத்தமது ஊரின் பாடசாலைகள், படிமனைகள், வாசிகசாலைகள், கலைக்கூடங்கள், விளையாட்டு நிலையங்கள் புற்றரைகள், பூங்காக்கள் என்று நாட்டின் கல்வியையும், கவின்கலையையும் கட்டிக்காக்கத் தம்மாலான உதவிகளை நல்குவார்களாக!

இந்நாட்டை விட்டு நாளொன்றுக்கு சராசரியாக பத்து குடும்பங்கள் வெளியேறுகின்றன. இப்படியாக வெளியேறுவோர் மீண்டும் இம்மண்ணில் குடியேறுவர் என எண்ணுவது மடமை. நிலைமை இப்படியானால், புத்திஜீவிகளும், கனவான்களும் வசதிபடைத்தவர்களும் இதே பாங்கில் வெளியேறினால், இன்னும் பதினைந்து வருடங்களில் இந்த நாடு நமது என சொல்ல இதில் ஒரு பகுதி மக்களே மிஞ்சுவர். அவர்களில் பெரும் தொகையானோர் பாமர மக்களாகவே இருப்பர். சர்வகலாசாலை, மருத்துவபீடம் ஆகியன பல மூடுவிழா கண்டிருக்கும். இந்தப் பேராபத்தை ஆய்வுகள் சுட்டிக் காட்டுகின்றன. இதை மனத்தில் கொண்டு புலம் பெயர்ந்தவர்கள் தம்மண்ணை வனப்புற வைக்க செய்ய வேண்டிய திருப்பணிகளோ மிகப்பல. இதனை அளவெட்டிவாழ் மக்கள் அருணோதயக் கல்லூரியைச் சிறப்புற வைத்து முன் மாதிரி காட்டுவாராக!

**அளவெட்டி மு. திருநாவுக்கரசு**
*முன்னைநாள் மாவட்ட நீதிபதி,*
*இக்காலப் பதில் நீதிபதி.*





**யாழைக் கொணர்ந்திங்கு மீட்டியதால்**
**ஒரு யாசகன் மன்னனிடம் இருந்தோர்**
**பாழைப் பரிசு பெற்றான் எனக் கூறிடும்**
**பண்டைப் பழங்கதை கேட்டதுண்டு**
**பாழைப் பரிசு பெற்றாலும் அப் பாலையைப்**
**பச்சைப் படுத்தி பயன் விளைத்து**
**வாழத்தெரிந்து முயன்றதனால் இன்று**
**வையத்துயர்ந்தது யாழ்ப்பாணம்.**
*- மஹாகவி*

பாட்டனார் பண்படுத்தி
பழமரங்கள் நாட்டி வைத்த
தோப்பை அழிய விட்டு
தொலை தூரம் வந்தவர் நாம்.
என்னுடைய பேரனுக்காய்
எவன் வைப்பான் பழத்தோட்டம்?
*- வ.ஐ.ச.ஜெயபாலன்*

கல்லூரிக்கென வாங்கப்பட்ட வீடும் வளவும்.

# காலத்தினால் செய்த உதவி

அளவெட்டி மக்கள் இடப் பெயர்வு காரணமாகப் பல்வேறு வழிகளாலும் நொந்து போனமை நாடறிந்த செய்தியே. 1995 நவம்பரில் இடம் பெயர்ந்து அடுத்த ஆண்டு ஏப்ரல் மாதம் பிற்பகுதியில் யாழ்ப்பாணத்துக்குத் திரும்ப அனுமதிக்கப்பட்ட யாழ்ப்பாண மக்கள் வரமுன்னும் வந்த பின்பும் பட்ட துயர் சொல்லில் அடங்காது. மரநிழலில் வன்னியில் வாழ்ந்தவர்கள் ஒருபகுதியினர். படகு மூலம் இந்தியா சென்று கடலிற் பலியானவர்கள் இன்னொரு பகுதியினர். வெளிநாடு செல்ல விழைந்து வெளிநாட்டு முகவர்களால் ஏமாற்றப் பட்டுப் பணத்தையும் பிற உடைமைகளையும் தொலைத்தோர் மற்றொரு வகையினர். யாழ்ப்பாணம் திரும்பிச் செம்மணியிற் புதை குழிப்பட்டோர் பிறிதொரு சாரார். இவ்வண்ணம் அல்லற்பட்ட மக்களிடையே ஒரு பகுதியினரான அளவெட்டிக் கிராம மக்கள் மறு ஆண்டு வரை தங்கள் சொந்த மண்ணை மிதிக்கவும் அனுமதிக்கப் படவில்லை. மறு ஆண்டு, அதாவது 1997ம் ஆண்டு ஓகஸ்ட் மாதம் தமது வீடுகளை எட்டிப் பார்த்த மக்களின் சோகக் கதை சொல்லித் தொலையாது.

அளவெட்டியில் நோக்குமிடமெங்கும் நீக்கமற நிறைந்து நின்றவை இராணுவத்தினரின் காவலரண்களே. பல வீடுகள் தரைமட்டமாக அடித்து நொருக்கப்பட்டிருந்தன. சில வீடுகள் கூரை, மரம், ஓடு அனைத்தையும் இழந்து அவல நிலையிற் காட்சி தந்தன. வேறு சில வீடுகள் கதவுகள், யன்னல்கள், 'கேற்றுகள்' அனைத்தும் பறிபோன நிலையிற் காணப்பட்டன. ஆடுகள், மாடுகள் பெரும்பகுதி காணாமற்போயின. சில காலிழந்த நிலையில் மூன்று காலால் நடந்து திரிந்தன. சில மாடுகள் அடங்காத கட்டாக்காலிகளாய்த் திரிந்தன. தப்பித் தவறிய வீட்டு முகட்டினைத் தொடுமளவுக்குப் பற்றைகள் படர்ந்திருந்தன. தென்னை பனை என்பன வெட்டிச் சரிக்கப்பட்டுக் காப்பரண்களை அலங்கரித்துக் கொண்டிருந்தன. மா, பலா, எலுமிச்சை, தோடைகளில் தொண்ணூறு வீதம் பட்டும் போயின. வாழை, கமுகு என்பன ஒன்றுமே உயிர்தப்பியதாக இல்லை. பாடசாலைகளிற் பல இருந்த இடந்தேட வேண்டியிருந்தது. கோயில்கள், சங்கக்கடைகள் எல்லாமே சேதப்பட்டுக் கிடந்தன. எங்கெங்கும் இராணுவத்தினரின் விளம்பரப் பலகைகள் காணப்பட்டன. அவற்றில் "மிதிவெடி கவனம்" என்ற வாசகம் எல்லோரையும் பயமுறுத்தத் தவறவில்லை. மக்கள் குடியேற அனுமதிக்கப்பட்ட பகுதிகளில் கடைகள் இல்லை. அளவெட்டி அரசினர் வைத்தியசாலை கூரையின்றிக் கிடந்ததால் வைத்திய வசதியும் முயற் கொம்பாகவே இருந்தது. அருணோதயக் கல்லூரியின் விளையாட்டிடம் சூழவுள்ள பகுதியெல்லாம் காவலரண்களால் ஆக்கிரமிக்கப்பட்டிருந்தது. சுருக்கமாகக் கூறுவதானால் அளவெட்டிக் கிராமத்தில் வாழ்க்கை வசதிகள் எதுவுமே இல்லை எனலாம். முதன் முதலாக வீட்டைப் பார்த்துத் திருப்தியடைந்தோர் மறுமுறை போய்க் கவலையுடன் திரும்ப வேண்டிய நிலையிருந்தது. வீட்டுக்காரர் வருமுன் வீட்டிற் களவெடுப்போர் புகுவது எங்கும் சகஜமாகக் காணப்பட்டது. களவு



கனடாக் கிளையின் உதவியுடன் மருத்துவ மனைக்கெனப் புதிதாகப் கொள்வனவு செய்யப்பட்ட காணி.

செய்வோர் தாமே வீடுகளின் சொந்தக்காரர்கள் போல நடந்து கொண்டனர், நடக்கின்றனர். எதிர்காலத்திலும் அவ்வாறு நடக்க மாட்டார்கள் என்பதற்கு உத்தரவாதமில்லை. கள்ளச் சந்தையில் அம்மி, ஆட்டுக்கல், ஓடு, வீட்டு மரம், கதவு, நிலை, சன்னல் எல்லாமே விற்பனைப் பொருள்களாக இருந்தன. இந்நிலையில் குடியேற்றந் தாமதிக்கப்பட்டால் வீட்டையும் இழந்து விடுவோமோ என்ற பயம் வீட்டுச் சொந்தக்காரர் மனத்தில் எழாதிருக்க நியாயமில்லை.

இடப் பெயர்வினால் தமது உடைமைகள் அனைத்தையும் இழந்தவர்கள் ஒரு புறம். ஒருபகுதியை இழந்தவர்கள் இன்னொருபுறம். எதையும் இழக்காதவர் என்று சொல்லுவதற்கு எவருமேயில்லை. நிலந்தருதிருவிற் பாண்டியன் தான் இழந்த நிலப்பரப்பிற்கீடாக வடபுறமிருந்த நிலப்பரப்பில் அரசமைத்த கதையை இலக்கண உரையாசிரியர்கள் கூறுகிறார்கள். அது போல இடம் பெயர்ந்தபோது தாம் தொலைத்த சில பொருள்களுக்கீடாகப் பெரும் பொருள்களைத் தமதாக்கிய விற்பன்னர்களும் உளர். இடப் பெயர்வால் புதிய பணக்காரர்கள் உருவாயினர் என்ற கூற்றையும் மறுப்பதற்கில்லை.

**இப்பொதுத்தாபனத்துக்கு மக்களின் பங்களிப்பு என்னவென வெளிநாட்டு நிறுவனங்கள் வினவும் போதெல்லாம் கனடா வாழ் எம்கிராம மக்களின் பங்களிப்பை எடுத்துக் காட்டி அவர்களை வாயடைக்கச் செய்து வருகிறோம்.**

தமது உடைமைகள் அனைத்தையும் இழந்த சிலர் இனிப் போகவுள்ளதாகிய உயிரைத் துச்சமென மதித்து அளவெட்டிக்கு வர ஆயத்தமாயினர். சங்கக் கடைகளும் பாடசாலைகளும் அளவெட்டிக்கு வருவதில் தயக்கங் காட்டின. ஒரு வசதியுமற்ற பயங்கரமான இடத்தில் இவற்றைக் கொண்டுவர அவர்கள் அஞ்சியதில் நியாயம் இல்லாமலில்லை. அருணோதயக் கல்லூரியும் அளவெட்டி-மல்லாகம் பலநோக்குக் கூட்டுறவுச் சங்கமும் அளவெட்டிக்கு வந்து சேர்ந்த - வரத்துடித்த பெருந்தொகையான பெற்றோர்களின் நெருக்குதலால் அளவெட்டிக்கு வரநேர்ந்தது. இவை வந்தபின் அளவெட்டிக் கிராமத்தில் சிறிது சிறிதாகக் கலகலப்பு ஏற்பட்டது. ஆனால் சென்ற தசாப்தத்தில் இருந்த அளவெட்டியைக் காணப் பலவாண்டு தவம் மேற்கொள்ள வேண்டுமென்பது மிகையாகாது.

இந்நிலையில் அளவெட்டியின் தவப்புதல்வர்களென அளவெட்டி வாழ் மக்களின் இதயங்களைத் தமதாக்கி நிற்கும் கனடாவில் வாழும் அளவெட்டி வாலிபர் செய்த உதவி காலத்தினால் செய்த உதவி என்பதும் இது ஞாலத்தின் மாணப் பெரிது என்பதும் மறுக்கவும், மறைக்கவும் முடியாத ஒன்று. அவர்களது உதவியால் வைத்தியசாலை தனக்கு மிகமிக அவசியத்தேவையான காணி-யொன்றைப் பெற்றது. கட்டிடத் திருத்தமும் இடம் பெற்றது. அருணோதயக் கல்லூரிக்கும் காணி கிடைத்தது. மதிலும் எழுந்தது. கல்லூரி வளவும் இராணுவத்தினரின் காவலரண் அகற்றப்பட்டுக் கல்லூரி நிர்வாகத்தினால் தூய்மை செய்யப்பட்டது. வைத்திய சாலையும் கூரை பெற்று நிமிர்ந்து நிற்கலாயிற்று. தபாற்கந்தோரும் திருத்தம் பெற்றுப் பழைய இடத்தில் இயங்க ஆரம்பித்தது. இப்பொதுத் தாபனங்களின் மிதிவெடிப் பயமுந்தீர்ந்தது. வைத்தியசாலைப் பொறுப்பாளராகிய வைத்தியர் திரு. யோகேஸ்வரன் அவர்களின் விடாமுயற்சியால் சுகாதாரத்


திரு. திருமதி. செ. பொன்னம்பலம் தம்பதியர்.

திணைக்களம் வைத்தியசாலைக்கு உதவ முன்வந்தது. வெளிநாட்டு நிறுவனம் ஒன்றும் உதவத் தயாராக உள்ளது. இப்போதைய பாராளுமன்ற உறுப்பினரான உ. பாஸ்கரனும் உதவ முன்வந்துள்ளார். வெளிநாட்டு நிறுவனம், இப்பொதுத்தாபனத்துக்கு மக்களின் பங்களிப்பு என்னவென வினவும் போதெல்லாம் கனடா வாழ் எம்கிராம மக்களின் பங்களிப்பை எடுத்துக் காட்டி அவர்களை வாயடைக்கச் செய்து வருகிறோம். இது எங்கள் பங்களிப்பல்ல. கனடாவாழ் அன்பர்கள் செய்த நன்றியை எங்கிராம மக்கள் என்றும் நினைவில் வைத்துப் போற்ற வழிசமைப்பது அளவெட்டி மக்கள் கடனாகும். அல்லாக்கால் உய்வில்லாமையைத் தரும் நன்றி கொன்ற பாவம் எம்மைச் சாரும்.

கனடாவில் வாழுகின்ற எங்கள் கிராம மக்கள் பலருக்கும் எமது நன்றிக் கடனைச் செலுத்தும் அதே வேளை பொது நோக்கால் நோக்காது வரிசையால் நோக்க வேண்டியவர்களுஞ் சிலருளர் என்பது நாம் உணர்தல் வேண்டும். திருமதி. செ. பொன்னம்பலம் அவர்கள் குடும்பத்தினர்க்கு எங்கள் பெருநன்றியைச் செலுத்த வேண்டிய கடப்பாடு எமக்குண்டு. திரு. பொன்னம்பலம் அவர்கள் உதவியைப் பின்வருஞ் சந்ததியினரும் அறிந்துகொள்ளும் வகையில் அருணோதயக் கல்லூரியில் ஏற்ற இடத்தில் அவர்கள் பெயரைப் பொறிப்பது எமது கடமையாகும். இக்குடும்பத்தாரின் நிதியுதவியாலேயே அருணோதயக் கல்லூரி விளையாட்டிடத்துக்கு இடைஞ்சலாகவிருந்த சைவம் நவரத்தினத்தாரின் காணியை அவருடைய பெண்மக்களிருவரிடமிருந்து வாங்கக் கூடிய நிலை ஏற்பட்டதென்பதை நன்றியறிதலுடன் எடுத்தியம்புவது எமது கடமையாகும்.

அருணோதயக் கல்லூரி அதிபர் திரு. கி. மகேந்திரராசா அவர்களும் அளவெட்டி அரசினர் வைத்தியசாலைப் பொறுப்பதிகாரி திரு. யோகேஸ்வரன் அவர்களும் எமக்கு எல்லா வழிகளாலும் ஒத்துழைப்பு வழங்கி வருகின்றனர் என்பதை எடுத்துச் சொல்வதோடு அன்னார் இருவருக்கும் எமது நன்றியையுந் தெரிவிக்கும் கடப்பாடும் உடையோம்.

அளவெட்டி வைத்தியசாலையைத் தரமுயர்த்தவும் அதன் செயற்பாட்டை மேலும் வளர்க்கவும், அளவெட்டி நோயாளர் நலன்புரிச் சங்கம் என்றொரு சங்கத்தை அமைத்துச் செயற்பட்டு வருகிறோம்.
அளவெட்டி அருணோதயக் கல்லூரியின் வளர்ச்சியிலும் வைத்திய சாலையின் முன்னேற்றத்திலும் கண்ணும் கருத்துமாக இருந்து பேருதவி புரிந்து வரும் அருணோதயக் கல்லூரியின் முன்னாள் ஆசிரியர் திரு. ச. பரநிருபசிங்கம் அவர்களுக்கும், அளவெட்டி அன்பர்களுக்கும் எம்மிதயங் கனிந்த நன்றியைச் செலுத்தி அமைகிறோம்.

**பண்டிதர் க. நாகலிங்கம்**






# அருணோதயா இன்று...



தரம் 1,2,3 மாணவர்கள் அதிபர், ஆசிரியர்



தரம் 4,5 மாணவர்கள் அதிபர், ஆசிரியர்



தரம் 6,7,8 மாணவர்கள் அதிபர், ஆசிரியர்




தரம் 9,10 மாணவர்கள் அதிபர், ஆசிரியர்




தரம் 11,12,13 மாணவர்கள் அதிபர், ஆசிரியர்

# யாழ். அருணோதயக் கல்லூரி ஆசிரியர் குழாம்



இருப்பவர்கள் இடமிருந்து வலமாக

திருமதி. ஜெ. விசுவநாதபிள்ளை, திருமதி சா. அமிர்தலிங்கம், திருமதி ந. செல்வராசா, திரு. பொ. அமிர்தலிங்கம், திரு. கி. மகேந்திராசா (அதிபர்), திரு. ம. பத்தமநாதன் (பிரதி அதிபர்), திரு. வை. சிவராசா, திரு. இ. நவரத்தினம், திருமதி. ஜெ. ஈஸ்வரன், திருமதி ஈ. தர்மலிங்கம், செல்வி ச. சுப்பிரமணியம்.

நிற்பவர்கள் முதலாம் நிரை இடமிருந்து வலமாக

செல்வி தி. சுபத்திரா, செல்வி. கே. விஜய பவாணி, திருமதி உ. விஜயரட்ணம், செல்வி சி. சசிமளா, செல்வி ப. பாமலோஜினி, திருமதி மோ. சண்முகானந்தன், செல்வி சு. நருமதா, திருமதி ப. ஸ்ரீஸ்கந்தன், செல்வி போ. தயாள கௌரி, செல்வி த. புஸ்பகாந்தி, செல்வி. போ. றூபி செல்வநாயகி, செல்வி ஞா. சின்னத்தம்பி.

நிற்பவர்கள் இரண்டாம் நிரை இடமிருந்து வலமாக

திரு. ந. யோகேஸ்வரன் (ஆய்வு கூட உதவியாளர்), திரு. செ. கீதை ரூபன் (விவசாயத் தொழிலாளி), திரு. அ. யோகேஸ்வரன், திரு. ச. கிருபானந்தன், திரு. த. நடராசா, திரு. இ. பிரதாப்சர்மா, திரு. வை. விஜயபாஸ்கரன், திரு. பூ. அகிலலோகநாயகம், திரு. பொ. விஜயகுமார், திரு. க. ஜீவகாந்தன் (அலுவலகப்பணியாளர்), திரு. வி. முருகையா (அலுவலகப்பணியாளர்)



பழையமாணவர் சங்கம்



அருணோதயா ஆரம்பப் பாடசாலை



ஓவியம்: அ. மாற்கு

# பலாப் பழத்தின் மணம் போயிற்று

## காலமாகி வந்த கதை-02

**நாள்** ஆகட்டும், காலம் வரட்டும் - அப்படித் தான் காத்திருந்தோம். ஒரு பொழுது எங்களுக்கென்றும் வரும் என்று தெரிந்திருந்தோம்.

சோளகக் காற்று ஒய்யாரமாக வீசுகின்றது. சில வேளைகளில்தான் அப்படி. மற்றும்படி பனைகளை உலுப்பி வீசுகின்றது. அணில் கோதிய நுங்குகள் விழுகின்றன. காற்று தலையைக் கலைத்துவிட்டுச் செல்கின்றது. சின்னச் சந்திரண்ணை காற்று தலையைக் கலைக்காமலிருப்பதற்காகத் தலையை ஒரு பக்கம் சாய்த்து சரித்துச் செல்கின்றார். வீட்டினுள் இருக்க வியர்க்கின்றது என்று முற்றத்தினில் கதிரை போட்டு அமர்கின்றார்கள். அப்படி இருக்கவும் சோளகம் விடவில்லை. மண் அள்ளி வாய்க்குள் கொட்டுகின்றது. கண்ணை நிரப்புகின்றது. இந்தச் சோளகத்தை என்ன தான் செய்யலாம்? தூரத்து 'லவுட் ஸ்பீக்கரி'ல் இருந்து இடையிடை பாட்டு விட்டு விட்டு கேட்கிறது. மேளச்சமா கேட்கிறது.

எங்கள் அம்மாள் கோயிலின் முன்னே உள்ள அரச மரத்தின் இலைகள் சரசரப்பது போல மேளச்சமா கேட்கிறது. தூரத்தில் எங்கோ கேட்பது போல் இருக்கின்றது. கேட்டுக் கேட்டு அப்படியே பக்கத்தில் ஒலிக்கின்றது. இதோ காதிற்குள் கடகடவென்று மேளச் சத்தம்.

யாவற்றையும் ஞாபகம் கொள்கின்றோம். ஞாபகங்கள் - அதுதான்

நம் பிரச்சினை. ஞாபகங்களை நாம் பொக்கற்றுக்குள் நிரப்பி வைத்திருக்கின்றோம். ஞாபகங்கள் மேலும் கீழும் உடம்பு வழியாகவும் பொக்கற்றுக்குள்ளும் ஊர்ந்து கொண்டு திரிகின்றன. ஞாபகங்கள் தொலைந்து போய் விட்டால் நம் பிரச்சினைகள் நிறையக் குறைந்து-போய் விடும். ஞாபகங்கள், நம்மைக் கொல்வன அவைதாம்.

பலாப்பழத்தின் மணம் போயிற்று
பழஞ்சோற்றின் ருசி போயிற்று
நிலாக்காய்ந்த அந் நெடுநிலத்தின்
நினைவும் போயிற்று
உலாப்போயிற்று ஊர் போயிற்று.
உறவு போயிற்று
துலாத்தாழ்த்தி நீரள்ளியுண்ட
துறையும் போயிற்று.

இவை போனால் நமக்கென்ன என்று இருந்து விட முடிகிறதா? ஞாபகம். அது வந்து நம்மைக் குத்திக் குடைகிறது. இப்போது மேளச்சத்தம் கேட்கிறதே. இது செய்து விட்ட வேலை என்ன? அதன் தாளக் கட்டை ரசிக்கிறோமா? கணீரென்று ஒலிக்கின்ற அதன் நாதத்தை நயக்கின்றோமா? ரசிக்கின்றோம் தான். நயக்கின்றோம் தான். ஆயினும் அதனிலும் மேலாக வேறொன்றும் செய்கின்றோம். என்ன அது?
ஞாபகம் கொள்கின்றோம். அதுதான், மேளச்சமா கேட்ட உடனே அம்மாள் கோயில் வடக்கு வீதிக்கு ஓடுகிறோமே. ஞாபகம். அது நம்மைத் துரத்துகிறது. செம்பாட்டுப் புழுதி ஏன் மூக்கில் புகவேண்டும்? சோளகக் காற்றும், பனங்கூடலும் பன்னாடை, கொக்கறை, காவோலை விழுதலும் வெயிலும் மாலையின் குளிர்மையும் எல்லாம் - எல்லாமும் ஞாபகம் வருகின்றன. 'இந்த முறை பனையில் நிறையக் கள்ளு ஊறுது' சோமண்ணை சொல்லிக் கொண்டு போகிறார். அருளண்ணை நல்ல வெறியோடை வந்து அம்மாள் கோயில் வடக்கு வீதியில் மேளச்சமா பார்க்கின்றார். கண்ணைப் பூஞ்சி வாயைப் புழுந்தி 'அடி அடி' என்கிறார்.

யாவும் நினைவில் வந்து குவிகின்றன. தாங்க முடியவில்லை. ஒரு மூலையில் எங்களைக் குந்த விடுங்கள். ஓவென்று குழறி அழவிடுங்கள்.

காலையில்அம்மா முற்றம் கூட்டுகிறா. புழுதி பறக்கிறது. புழுதி அடங்க மங்களகரமாக இருக்க முற்றம் முழுவதும் சாணி கரைத்து தெளிக்கிறா. காலையில் தோட்டத்திற்குப் போய் சுத்தமான புதிதான பசுஞ்சாணி அள்ளி வந்தேன். அக்கா வீடு கூட்டி மஞ்சள் தெளிக்கிறா.

எல்லோரும் தோய்கிறோம். அம்மா சமைக்க அடுக்குப்பண்ணுகிறா. அக்கா தேங்காய் திருவுகிறா. நான் வெங்காயம் உரிக்கிறன்.

அப்பா படிப்பிக்கப் பள்ளிகூடம் போய்விட்டார். நானும் அக்காவும் பள்ளிக் கூடம் போகவில்லை. அம்மாள் கோயில் திருவிழா. விரதம். அம்மாள் தருவார் அருள்! பிறகேன் பள்ளிக்கூடம் போவான்? அப்பாவை நம்பிப் பிள்ளைகள் பள்ளிக் கூடம் வருவார்கள். அம்மாள் கோயில் முதல் மணி அடிக்க அப்பா வந்துவிடுவார். விரதக் களைப்பு. ஒரு தேத்தண்ணி குடித்த உடன் கோயிலுக்கு அப்பா வருவார்.

பூசை தொடங்கும். 'சுத்துப் பல்லி' சுத்தும். விழாத் தொடங்கும். அம்மாள் வீதி உலா வருவார். அப்பா பிரதட்டை பண்ணிக் கொண்டு வருவார். பக்கத்தில் அம்மா அடியழித்து வருவா. வடக்கு வீதி வந்தவுடன் அம்மாள் நிற்பார். அம்மாள் நின்று ரசித்து கேட்க அங்கொரு நிகழ்ச்சி இருந்தது. அளவெட்டித் தட்சிணாமூர்த்தி, இணுவில் சின்னராசா, கைதடிப் பழனி, நாச்சிமார் கோயிலடி கணேசு.

மேளச்சமா தொடங்குகின்றது. வயர் இழுத்து பெருத்த 'மைக்' கொண்டு வந்து நடுவில் வைக்கின்றார்கள்.

அழகனாய் ஆட்களைக் கவர்கின்ற அளவெட்டித் தட்சிணாமூர்த்தி அடியெடுத்துக் கொடுக்கிறார். நெஞ்சில் சங்கிலி புரள்கின்றது. சங்கிலியில் மீன் வடிவில் ஒரு பதக்கம். சிரித்துச் சிரித்து ரசித்து ரசித்து தட்சிணாமூர்த்தி தவில் கொட்டுகின்றார். மழையாகப் பொழிகின்றது தவில். இடி! மின்னல்! இதோ யாவும் அவர் தவிலில் வெடித்துக் கிளம்புகின்றது. தாளம் தப்பாது கால்கள் நிலத்தை உதைக்கின்றன. சாடையாகப் புழுதி சிறு கோடாக எழுகின்றது. இடையிடை புன்னகை, இடையிடை முழுசல், இடையிடை ரசிப்பு, இடையிடை சிரிப்பு. தட்சிணாமூர்த்தி யாவற்றையும் கலந்து குழைத்துத் தருகின்றார். லயித்துப் போகின்றோம். மேளத்தில் முத்துவிரல்கள் விளையாடி தாளலய ஞான தரிசனங்கள் காட்டிய நம் ஈழத் தவிலரசன், எழிலார் இசைக் கணித வேழமெனவே திகழ்ந்த வித்தகன், எம் சொத்தான தட்சிணாமூர்த்தி தவிலிற் பொழிந்த தாள வரிசையைத் தப்பாமல் தனக்குள் வாங்கி இனிய லயத்துடன் இணுவில் சின்னராசா வெளிப்படுத்துகின்றார். கறுத்த, பெருத்த, மலைப்பான உடல். நீ எதைத் தவிலிற் தட்டினாலும் எனக்கென்ன, நீ அதைத் தாளத்துடன் தந்தாலும் எனக்கென்ன என்று சிரித்து ரசித்து லயித்து தாளக் கட்டில் பிசகாது தருகின்றார் இணுவில் சின்னராசா.

**....மழையாகப் பொழிகின்றது தவில். இடி மின்னல் இதோ யாவும் அவர் தவிலில் வெடித்துக் கிளம்புகின்றது. தாளம் தப்பாது கால்கள் நிலத்தை உதைக்கின்றன.**



**சாடையாகப் புழுதி சிறு கோடாக எழுகின்றது. இடையிடை புன்னகை, இடையிடை முழுசல், இடையிடை ரசிப்பு, இடையிடை சிரிப்பு. தட்சணாமூர்த்தி யாவற்றையும் கலந்து குழைத்துத் தருகின்றார்.**

நாங்கள் கண் இமைக்காது பார்த்து நிற்போம். தட்சிணாமூர்த்தி வேகம் பிடிப்பார். வேகம். கதி. கதியிலும் சுதி பிசகாது. மற்றவர்கள் தடக்குப்படத் தொடங்குவார்கள்.



தொடங்குவது சாடையாகத் தெரியும். தட்சிணாமூர்த்தியின் வாயில் புன்னகை அரும்பும். நாங்கள் ஓடிப்போய் லவுட்ஸ்பீக்கரிலும் கேட்டுப் பார்ப்போம். கண கண வென்று நாதம் பாயும்.

தட்சிணாமூர்த்திக்கு நேர் நின்று நிகர் நின்று இதோபார் என்று சின்னராசா பகர்கின்றார். பார்த்து நாங்கள் நிற்கின்றோம். சிறுவர்கள் நாங்கள் விழி விரிய ஆச்சரியமாகச் சிரிக்கின்றோம். சிலிர்த்துப் போகின்றோம்.

பட்டினியப்பா! விரதம். ஐந்து மணியாகின்றது. அதற்கென்ன? மேளச்சமா என்றால் சும்மாவா? இரவும் திருவிழா அதிலென்ன? 'நீயே கதி ஈஸ்வரி' என்று பாடுவதற்காகப் பார்வதியக்காவும் காத்துக்கொண்டு நிற்கின்றார். அதனாலென்ன? இப்படியொரு சமா எங்கு கிடைக்கும்? அது இனி அடுத்த வருசம் தானே?

எங்கு விட்டோம். இணுவில் சின்னராசாவிடமா? அவர் தாளம் தப்பாமல் பொழிகின்றது. ஒருவர் கூர்ந்து கவனிக்கின்றார். கட்டையான கறுத்த உடல்தான். பார்வையில் கூர்மை. வாசிப்பில் லாவகம். அவர் கை துருதுருக்கின்றது. கைதட்டித் தாளத்தை மெட்டுப்போட்டுத் தனக்குள் வாங்குகின்றார். தாளத்தை இரு கைகளாலும் சின்னராசாவிடமிருந்து ஏந்துகின்றார். கைகளில் வேகம். அது கைதடிப் பழனி. கடகடவென்று ஒலிக்கின்றது. சோர்வில்லைப் பார். சுறு சுறுவென்று தாளம் வேகம் ஏறுகின்றது. தன் தாளத்திற்கு இதோ தக்கபதில் என்று புன்னகைக்கின்றார் தட்சிணாமூர்த்தி. தவிலுக்கு மன்னன்தான் தட்சிணாமூர்த்தி என்றாலும் மற்றவர்கள் சும்மாவா?

பசியா? இது எங்கு வயிற்றை எட்டிப் பார்த்தது. அம்மா குந்தியிருக்கிறா. எனக்குப் பசிக்குமோ என்று என்னைப் பார்க்கின்றா. அப்பா பிரதட்டை பண்ணியபடி, படுத்தபடி மேளச்சமா பார்க்கின்றார். அம்மாளோவென்றால் எங்கள் கோயில் அம்மாள் பட்டுத்துணி உடுத்தி, முகத்தில் வழிந்த கருணையுடன் வாயில் வழிந்த புன்னகையுடன் மேளச்சமாவை ரசிக்கின்றார். எங்கள் அம்மாள்!. அம்மாள் என்றால் நாங்கள் அழுது விடுவோம். அத்தனை அன்பு. அத்தனை ஆசை. அம்மா போல அக்கா போல அம்மாளிலும் அத்தனை விருப்பம். அம்மாள் புன்னகைக்கின்றாள் என்றால் அது அத்தனை திறம் என்று தான் அர்த்தம். அம்மாளுக்குத் தெரியும் எது சரியென்று. எது திறமென்று. எது நல்லதென்று.

இரவில் விடிய விடியவா ஊரை ஒருக்கால் சுற்றி வந்து எங்களை எல்லாம் காப்பவரல்லவா அம்மாள்? அம்மாள் சுற்றி வருவதை கந்தியாத்தை கண்டிருக்கின்றா. மூத்தம்மான் கண்டிருக்கின்றார். செல்லத்துரையண்ணை கூடப் பார்த்திருக்கின்றார். அதிருக்கட்டும். எங்கு விட்டோம். ஆ! இது தான் இடம்.

மேளச்சமா கண்ணிமைக்கும் நேரத்தில் கைதடிப் பழனியிடமிருந்து நாச்சிமார் கோயிலடிக் கணேசுவிடம் பாய்கின்றது. தாளக்கட்டைக் கால்களினூடாகவும் கைகளினூடாகவும் வாங்குகின்றார் கணேசு. தாளம் தப்பித் தட்டியவனை முறைத்துப் பார்க்கின்றார். அமைதியான சுபாவம். 'வாக்கன் கணேசு' என்றும் சொல்வார்கள். வெளுத்து வாங்குகின்றார். அந்த நாதம் அவர் தவிலிலிருந்து மாத்திரம் தான் கிளம்புகின்றது. கணேசுவின் தவில் சொல்லும் கதை மற்றத் தவில்களிலிருந்தும் வேறுபட்டது. அது வேறொரு நாதம். உடம்பு குலுங்காது. நாசூக்காய் நின்று தன் நாதத்தை நிலை நிறுத்துவார்.

நாங்கள் விழி விரியப் பார்த்து நிற்போம். தட்சிணாமூர்த்தியின் தவிலுக்கும் தாளத்துக்கும் ஒருவரின் தவிலும் தாளமும் தப்பாது. ஒருவராவது தடக்குப்பட வேண்டுமென்று தட்சிணாமூர்த்தி படும் பாடு அவர் தவிலில் தெறிக்கும். ஒருவரும் தடக்குப் படார். தட்சிணா மூர்த்தி கொடுத்த தாளக்கட்டைத் தம்முள் வாங்கி வீச்சுக் குறையாது வெளிப்படுத்துவர். தடக்குப்பட்டவர் யாரும் இல்லை. நாங்கள் கண் இமைக்காது பார்த்து நிற்போம். தட்சிணாமூர்த்தி வேகம் பிடிப்பார். வேகம். கதி. கதியிலும் சுதி பிசகாது. மற்றவர்கள் தடக்குப்படத் தொடங்குவார்கள். தொடங்குவது சாடையாகத் தெரியும். தட்சிணாமூர்த்தியின் வாயில் புன்னகை அரும்பும். நாங்கள் ஓடிப்போய் லவுட்ஸ்பீக்கரிலும் கேட்டுப் பார்ப்போம். கண கண வென்று நாதம் பாயும். அம்மாள் கோயிலின் முன்னே இருந்த அரச மரத்தில் 'கோண்' கட்டியிருப்பார்கள். அரசமர இலைகள் சரசரக்கும். ஆனால் அதிலும் மேலாகத் தவில் சத்தம் கேட்கும். பால் நிலவு வழிகிற அரச மர இலைகள் இப்போது பொட்டுப்பொட்டாகச் சூரிய ஒளியை அனுப்பி சலசலத்துக் கிடக்கிறது. தவிலின் தாளக் கட்டிற்கு தன் காதுகளையும் சோளகக் காற்றின் வீச்சுக்கு தன் தலையையும் கொடுத்து தாங்கி நிற்கிறது அரசமரம். வேரோடி மண்ணில் விளைந்து வானோடி, தன் கிளை பரப்பி, நிழலாற்றி நின்ற அரசமரம் இப்போதும் நிற்குமா?

இப்போது அப்பாவும் இல்லை. அம்மாள் கோயிலும் இல்லை. அரசமரம் இருக்குமா? இருக்கலாம். சிலவேளை அதனடியில் இப்போ புத்தர் சிலையும் இருக்கலாம்.

இரவி. அருணாசலம்.



# THE TORTOISE AND THE WELL:
## CONSERVING FRESH WATER IN JAFFNA

Dr K Sanmuganathan
*B.Sc. Eng; D.I.C; Ph.D.*
*Water Management Consultant*
*Wallingford*
*United Kingdom*

Did you know that the highest point in the Jaffna peninsula is around Ampanai? Ampanai in fact reaches the dizzy heights of 11 metres above sea level, for those of my generation 35 feet. Did you know that the `vella-vaikal' that runs through Alaveddi is the head reaches of the mighty `Valukai-Aru'? I learned these useless facts while I was studying the water resources of Jaffna last June. This article is about a few things that I learned during this trip: about freshwater, a vital resource to the people of Jaffna.

I also had the opportunity then to stop outside a place that taught me a great deal of useful facts – Arunodhaya College. It was a trip down memory lane. `Our school is situated on the third mile post of the Chankanai-Vallai road. It has 256 children, 132 boys and 124 girls.' So started all my English essays on `Our School', often asked for and regularly regurgitated. Someone wrote that for me the first time and I subsequently clung on to it. School enrolment may have changed but my prose remained constant.

Thinking about `Our School' is for me, casting my mind back by half a century, almost a lesson in History. All those dates, names of kings, queens and their children one had to memorise from those monotonous history books.



are for conserving the limited rain water we get.

Conserving water is very important to the people of Jaffna. It only rains during three months of the year during the wet season and again in April, a few 'April Showers'. The water that falls in the wet season has to be stored somewhere for use during the dry season. Without hills and valleys building large reservoirs is not possible. The percolation tanks cannot keep the water for long because they are shallow and water evaporates quickly. The tanks usually dry up a few months after the rainy season. An effective way to store the water is to store it underground.

**The floodwaters are regulated by a system of gates along the 'river' between Ampanai and Araly and a series of kulams or percolation tanks. These help to retain the water as long as possible so that more water can seep into the ground.**

The lessons that I dreaded most however, were the ones on geography. The subtle distinction between the longest river in the world and the largest one was something that I never deciphered. To give the subject a local flavour, we also had to memorise the names of all the railway stations between Kankesanthurai and Colombo Fort. I never succeeded in remembering them then, and I doubt whether I could now.

Cancellation of a geography lesson was therefore a `red-letter-day' (a phrase drummed into us in our English classes). I remember one such day, the teacher concerned had fallen into the `vella-vaikal', from his seat on the culvert, while making a point forcefully on Federal Party politics. It may sound cruel and irresponsible now but the jubilation in the class then exceeded all bounds. The `vaikal' which he fell into is indeed the head reaches of `Valukkai Aru', the only river in the peninsula.

We do not recognise it as a river because it is dry most of the time. But it is part of an ingenious system to conserve the little fresh water that we have in Jaffna. The floodwaters are regulated by a system of gates along the 'river' between Ampanai and Araly and a series of kulams or percolation tanks. These help to retain the water as long as possible so that more water can seep into the ground. The Pinakkai Kulam is one such percolation tank and altogether there are over 1000 such tanks in the Jaffna Peninsula. Within the Jaffna Town alone there are 24 tanks. The Town, being so near the lagoon, has special problems that are not discussed here. In addition, there are numerous 'Kulams' and 'Kernis' adjoining most temples in Jaffna. (I lost a gold ring while bathing in the Pinakkai Kovil kulam during a school lunch interval and got punished for it. The punishment was for bathing, not losing the ring, which I still have not admitted losing). All these devices, flood channels, gates and percolation tanks

Underneath the soil there lies a thick layer of a type of rock called 'Karst' limestone, very porous with a number of channels and caverns. The channels and caverns are interconnected with each other and sometimes they can be very long. I know this because a young tortoise introduced into our well at home swam through the channels to our neighbours well, some 50 metres away. It could not get back though! These channels and caverns can hold water and this water does not evaporate because it lies underground.

In order to be able to pump a sufficient quantity of water out of the ground when we need it, an equivalent amount has to seep in during the rainy season. This is what the percolation tanks are designed to aid. Whoever designed them must have understood the system well and these were not built in recent times. Most of the percolation tanks have been around for a very long time. The designers could not have copied the system from a neighbouring country like India for there are no such systems there. They do have tanks, some 150 000 in Tamil Nadu alone, but they are of the type found in the North Central Province in Sri Lanka.

It is one thing to build clever and useful things. It is another to maintain them and keep them as useful utilities. At present, and for quite sometime in the past, the tanks are in a neglected state. They are filled with fine silt that blocks the pores, preventing water

from seeping down. Until about 1950 farmers did not use chemical fertilisers in their fields. They used vegetable matter to improve the fertility of their farms. As tank silt contains a good deal of vegetable matter, they also used it in their fields. In the process, they deepened the tanks and removed the fine particles that would otherwise block the percolating water. The silt was removed during the dry season and the tanks were ready to function efficiently for the next rainy season. However, with the advent of chemical fertilisers, farmers are no longer interested in the silt from the tanks. The tanks have continued to silt thereby losing storage and percolation rates. Only a smaller amount of water is retained and that too seeps into the ground slowly. During that time water is lost by evaporation. Some other means of mobilising the community effort to maintain these tanks are needed now.

The groundwater storage facility in Jaffna has another problem associated with it and this comes from the sea. Everywhere in Jaffna we are always close to the sea. The two lagoons, the Vadamaradchi lagoon to the east and the Uppuaru lagoon in the centre, which divide the peninsula into essentially three segments, exacerbate this. A quick glance at the attached map would make this clear. Without protection, the lagoon water is also salty, and this in effect brings the seawater and the problems it can cause closer home.

Deep down underground, there is saltwater everywhere. The rainwater that seeps through into the ground essentially floats on top of this saltwater like a drop of oil on water, except in this case, fresh water on top of the denser saltwater. These lenses are small around the Island of Kytes, wider and deeper in the Valikamam West area and narrow and shallow in the sand dune area to the east.

The size of the lens is determined by land area but also by the amount of water we pump during the dry season. If more water is pumped out of the ground than what seeped in during the previous rainy season then the lens becomes smaller. Looking at it another way, if too much water is pumped, the saltwater near the surface moves inland. Once it moves in, it gets trapped in the caverns and it is very difficult to push it back. A number of fresh water wells in the Arialai area went salty during the 1970s. People now have to walk two or three kilometres to fetch drinking water from the few remaining good water wells.

A third problem, mostly due to the saltwater lagoons, is the salt dust blown by the wind that damages crops and makes life miserable for people living near the lagoons. The saltwater in the lagoon evaporates leaving powdery salt on the ground. The wind picks up this salt and spreads it around where it is not wanted.



If by some magic these saltwater lagoons or parts of them can be made into freshwater lagoons, then the salt dust can be eliminated and the freshwater lenses made wider and deeper. Properly designed, the three freshwater lenses in the peninsula can be made into one large lens, not only wider and longer but also much deeper. This is what the Irrigation Department attempted in the 1950s when they built the barrages at Thondaminar and Ariyalai, see map.

The idea was to prevent the seawater from ever entering the lagoon and also to wash out the saltwater in the lagoons during the rainy season over a number of years. This was to be achieved by opening and closing the gates at appropriate times, dictated by the tides and the floods. Constant vigilance is needed as neglect during a week for example when the tide levels are high (full moon or new moon time) can undo all the benefits accrued over a number of years. Unfortunately this was not to be. The fishermen at Thondaminar did not like the barrage because it interfered with their prawn and crab fishing so they damaged the gates and kept them open to allow seawater to enter. The Irrigation Department staff were not exactly vigilant either: though the money was spent in building the structures, they were not operated properly to derive the benefits. Now of course the structures are so severely damaged that only a major rehabilitation can bring them back to life.

Very similar to the way all of us do a cash balance at the beginning of the month, we can do a water balance on the peninsula to see how much freshwater comes in and where it goes. More importantly, we can manipulate the system to make the best use of the resource. This needs to be done on an annual

basis to take in both the wet and dry seasons.

On average, the peninsula receives 1 200 million cubic metres of rainwater each year. Of these around 470 million cubic metres evaporate during the 120 days of the rainy season. A further 420 million flows into the sea during rains, leaving 310 million cubic metres available to seep into the ground. If the 1000 or so percolation tanks are properly maintained, this figure could be increased. At present they contribute little. Even after seeping into the ground some water flows to the sea as underground water. This is around 50 million cubic metres leaving only 260 million cubic metres for us to use during the dry season.

What do we do with this water? In 1981 before the mass migration of the people started and the agricultural activity in the peninsula was at its peak, the population of the province was 750 000. The amount of water extracted from the ground may be summarised as follows:

| | | |
|---|---|---|
| Domestic use (cleaning, cooking, drinking) | - | 16 million cubic metres |
| Home gardens | - | 56 million cubic metres |
| Deep rooted trees (mangoes, palmyrah, coconut, etc.) | - | 51 million cubic metres |
| Irrigation of farm crops | - | 168 million cubic metres |
| Total extraction | - | 291 million cubic metres |

Extracting more freshwater than we have available spells trouble. It is not surprising that during the late 1970s and early 1980s wells were reported to be going saline and in some places, even dry.

An unforeseen and unfortunate happening averted the potential for serious damage to the whole freshwater system, for it could not have stood the strain much longer. People migrated out of Jaffna and extraction of water from the ground decreased. Now the population of Jaffna is around 500 000 and increasing. Before the numbers come back to the 1981 levels, some serious thought has to be given to make sure that we do not stand on the edge of the precipice again.

The cheapest and the most people-centred way is to restore all of the 1000 percolation tanks. They have to be de-silted and the gates repaired and maintained in good condition from then on. If this is done, an additional 50 million cubic metres of freshwater can be stored in the ground. This will more or less balance the water requirements at 1981 levels.




Jaffna Peninsula, Northern Sri Lanka

*Potential Groundwater Sources*

The second level of improvement is to restore the three barrages at Thondaminar, Ariyalai and Araly. The Araly barrage is a relatively small structure, but for the few people who benefit from it, it is of major importance. Restoring the barrages is more expensive but could bring in substantial benefits. Assessing the value of the benefits realistically of such an investment is difficult. A great deal can be anticipated as outlined earlier. But what can be realised in practice is a matter for conjecture. It depends how effectively we shall operate the structures. Lessons have to be learned from past mistakes and a better way of operating the barrages found.

The third level of improvement is to bring in water from the mainland through the Elephant Pass Lagoon (details not included). The Irrigation Department attempted this during the 1960s. The two principal structures were built. One lasted a year and the other collapsed soon after construction. While in theory this is a feasible method of increasing the amount of freshwater in the peninsula, it is expensive and also, it will not work without first getting the Thondaminar barrage to work properly.

Walking to school every day through the Vella-Vaikal, homework yet to be done between a game of 'thaachi' and the first bell, I never realised that I was treading on one of the cogs of a complicated machinery that is vital to the welfare of the people of Jaffna. When the occasion arose, I thought that I should share this understanding with a few others. I am grateful to the editors of the magazine for giving me this opportunity.



---

# Arunodhaya College : Education in the 21st Century

Education is the most important legacy that we can leave to the next generation and the generations to come. Yet as we look at the past, the process of acquiring general knowledge and developing the powers of reasoning and judgment has changed a great deal. With the advent of computers and internet the communication of information needed to develop general knowledge and powers of reasoning has improved severalfold since the beginning of 20th century.

It is a daunting task for teachers and education officers to educate the present and future generations to face the rapid changes and challenges in the coming years. This involves constant upgrading of teacher training, teaching methods and teaching tools. The world is now a global village; information travels at the speed of light and decisions are made in minutes in business and government. The success of education depends on how effective and efficient our process is in preparing students for all walks of life. In fact schools are regarded as suppliers of individuals to businesses, governments and other walks of life.

Arunodaya college may look far away from these challenges because we have a civil war going on. But we must not lose hope in bringing our school back to the forefront and educate the present and future Arunodayans so that they can stand shoulder to shoulder with the best in the world. I studied at Arunodaya college in the 1950's and I have no doubt about the quality of teachers I had to prepare me to face the world competition and be successful. I thank them for their perseverance, dedication and devotion to this noble profession called 'teaching'.

The job is not finished yet. We, the graduates of Arunodaya college, should help the present and future generations of Arunodayans to face the present and future demands of world competition and be successful. Yes! It is world competition and it is no longer a local or national competition. Arunodaya college needs our generous help in the form of updated books, audio and video tapes, computers and other multimedia technologies used for instruction. We cannot rely on government alone to supply these items and train teachers to use them. Arunodaya College graduates, please help Arunodaya college to continue with pride the high standards in education in the 21st century.



Dr. Ponnampalam Mathiaparanam Ph.D

Staff Scientist
Appleton Papers Inc.
Wisconsin, U.S.A

ஏழாம் திணையும்:

# ஊர்




இந்தக் கட்டுரையை எழுத ஆரம்பிக்கிறபோது இரண்டு துயரமான விடயங்கள் எனது நினைவுக்கு வந்தன. முதலாவது, அளவெட்டியை விட்டு நான் வெளியேறி, இந்த மார்ச் மாதத்துடன் - பத்து ஆண்டுகள் நிறைவு பெற்று விடுகின்றன என்பது. மார்ச் மாதம் 1990ம் ஆண்டு அளவெட்டியை விட்டுப் புறப்பட்டபோது இந்திய ராணுவத்தின் கடைசிச் சிப்பாய் திருகோணமலையில் இருந்து வெளியேறுவதைப் பற்றிய கட்டுரை ஒன்றை ஜேர்மன் பத்திரிகை ஒன்றுக்கு எழுதுவதற்காகவே எனது பயணம் அமைந்தது. போர் நிறுத்தம் நடைமுறையில் இருந்தமையால் எனது இரண்டு நண்பர்களுடன் - ஒருவர் ஜேர்மன் பத்திரிகையாளர்; மற்றவர் இலங்கை ஒலிபரப்புக் கூட்டுத்தாபனத்தில் நிகழ்ச்சித் தயாரிப்பாளராகப் பணியாற்றிய குகமூர்த்தி - வாகனத்தில் வடக்குக் கிழக்கு முழுவதையும் ஊடறுத்துப் பயணம் செய்வது என்று தீர்மானித்திருந்தோம். பூநகரி, மன்னார், வவுனியா, திருகோணமலை, மட்டக்களப்பு, அம்பாறை, பாணமை, பொத்துவில், நுவரஎலியா, டியனில்லை, கண்டி வழியாகக் கொழும்பு சேர்ந்த போதும் மறுபடி அளவெட்டிக்குத் திரும்பிப் போகிற சந்தர்ப்பம் மிக நீண்ட நாட்களுக்கு வராது என்பது எனக்குத் தெரிந்திருக்கவில்லை.

# உலகம்

## சில சிந்தனைகள்

## சேரன்

**தற்காலத் தமிழ்க் கவிதைகளில் பரிச்சயம் உடைய எவருடைய வாயிலும் அடிக்கடி அடிபடுகிற ஒரு பெயர். இவரது பல கவிதைகள் நூலுருவில் வெளிவந்திருக்கின்றன. இரண்டாவது சூரிய உதயம் (1981), யமன் (1984), கானல் வரி (1989), எலும்புக் கூடுகளின் ஊர்வலம் (1991), எரிந்து கொண்டிருக்கும் நேரம் (1994) என்பன இவரது நூல்கள். மரணத்துள் வாழ்வோம் என்னும் நூலின் தொகுப்பாசிரியர்களில் ஒருவர். தற்பொழுது கனடாவின் யோர்க் பல்கலைக்கழகத்தின் அகதிகள் ஆய்வுகளுக்கான நிலையத்தில் - Centre for Refugee Studies (C R S) - முதுநிலை ஆய்வாளராகவும், அதே பல்கலைக் கழகத்தில் சமூகவியல் விரிவுரையாளராகவும் கடமையாற்றுகிறார்.**

**Banff Centre for the Arts என்ற கலைகளுக்கான கனடிய நிறுவனம் ஆண்டுதோறும் தேசிய ரீதியில் வழங்குகிற உயர் புலமைப் பரிசிலை 1999இல் பெற்ற எட்டுக் கனடிய எழுத்தாளர்களுள் ஒருவர். TV Ontario இல் ஒளிபரப்பாகி அண்மையில் மிகவும் சிலாகித்துப் பேசப்பட்ட In search of the African Queen என்ற விவரணத் திரைப்படத்தின் இணை நெறியாளராகப் பணி புரிந்தவர்.**



*இரண்டாவது துயரமான விடயம், நண்பன் குகமூர்த்திக்கு நடந்தது. அது மிக அநியாயமானது. கொழும்பில் வேலை முடிந்து வீடு செல்லும் வழியில் இலங்கை அரசபடைகளால் தமிழ்க்குழு ஒன்றின் உதவியுடன் கடத்தப்பட்ட அவர் அந்த வருடமே 'காணாமல்' போய்விட்டார். அளவெட்டிக்குத் திரும்புகிற சந்தர்ப்பம் என்றென்றைக்குமாகவே அவருக்குக் கிடைக்காமல் போய்விட்டது. 1990 ஜூனில் ஈழயுத்தம் மறுபடி துவங்கி விட்டது. 1992இன் இறுதிப் பகுதியில் இலங்கை ராணுவம் எங்கள் வீட்டுக்குள் நுழைந்த போது அம்மாவும் அம்மம்மாவும் மட்டுமே வீட்டில் எஞ்சியிருந்தார்கள். அது ஒரு அதிகாலை. உடனடியாகவே எல்லோரும் வெளியேற நேர்ந்தது. ஈழ யுத்தத்தின் போது ஏராளமானோர் அனுபவித்து, உழன்ற இடப் பெயர்வு எங்களையும் தாக்கிற்று. இது ஒரு வகையில் எதிர் பார்த்த துயரம்தான். எனினும் துயரங்கள் துயரங்கள்தானே. அவை மகிழ்வை மறுப்பன அல்லவா?*

*என்னுடைய வாழ்க்கையின் முதல் இருபத்தேழு வருடங்கள் அளவெட்டியிலேயே கழிந்தன. ஒருவருடைய வாழ்வில் இந்த முதல் கட்ட அனுபவங்களும் அந்த அனுபவங்களுக்கூடாக ஆழமாக உள்ளிறங்குகிற வாழ்வு பற்றிய படிமங்களும், சூழலும் இவற்றோடு இணைந்து வருகிற கருத்தியலும் முக்கியமானவை. ஊர் வாழ்வுக் கூடாக நாம் பெறுகிற வாழ்வியல் அனுபவங்களும் கருத்தியலும் முக்கியமானவை எனினும் அவை மாறாத தன்மை கொண்டன அல்ல என்பதையும் நான் உணர்ந்திருக்கிறேன். மேலும், இந்த அனுபவங்களும் கருத்தியலும் எப்போதும் ஆரோக்கியமானதாகவும் முன் நோக்கிய சிந்தனைப் பாய்ச்சலுக்கு எம்மைத் தயார்ப்படுத்துவதாகவும் இருக்கும் என்பதில்லை. அளவெட்டியை விட்டு வெளியேறிப் பத்து ஆண்டுகளுக்குப் பிறகு, தொறன்ரோவில், தீராமல் பனிமழை பொழிந்து கொண்டிருக்கிற ஒரு நடு இரவில், ஊரைப் பற்றியும் 'ஊர்' என்ற படிமம் கிளப்புகிற சிந்தனைகளைப் பற்றியும் எழுதுகிற போது தூக்கலாக மனத்தில் இருந்தது: தயக்கம்.*

*ஏன் தயக்கம் இருந்தது என்பதை நான் தெளிவாக விளக்க வேண்டும். ஏழு ஆண்டுகள் தொறன்ரோ வாழ்வும், தொறன்ரோவின் தமிழ்ச் சமூகம் பற்றிய சில சமூகவியல் ஆய்வுகளில் ஈடுபட்ட அனுபவமும், இங்கு வெளிவந்த, வெளிவருகிற எல்லாப் பத்திரிகைகளையும் இடையறாமல் பார்த்தும், படித்தும் வந்ததனால் கிடைத்திருக்கிற எரிச்சலூட்டுகிற அனுபவமும் எனக்குப் பயத்தை ஊட்டுகின்றன. விட்டு வந்த ஊர், பள்ளிக் கூடம், வேலை (பொலிஸ் வேலை கூட!) என்பவற்றின் அடியாக எமக்குள் எழக் கூடிய கழிவிரக்கம் - சென்றொழிந்த காலம் பற்றியும், விட்டு வந்த ஊரின் அருமை பெருமை பற்றியுமான ஒரு நிறைவேறாத தாபம் - தொறன்ரோவில் கட்டு மீறிப் போகின்றதோ என்பதுதான் எனது பயம். பிரதேச வாதமும், ஊர் அபிமானமும் எல்லை மீறுகிறபோது எமது பிரதேசங்களிலும், ஊரிலும் மரபாக இருந்து வந்த நல்ல அம்சங்களோடு, மோசமான அம்சங்களான சாதியம், மற்றையவர்களையும் மற்றைய*



**பிரதேச வாதமும், ஊர் அபிமானமும் எல்லை மீறுகிறபோது எமது பிரதேசங்களிலும், ஊரிலும் மரபாக இருந்து வந்த நல்ல அம்சங்களோடு, மோசமான அம்சங்களான சாதியம், மற்றையவர்களையும் மற்றைய ஊர்களையும் பழித்தல், பொருந்தாக் கற்பனைகளுக்குள்ளும் ஐதீகங்களுக்குள்ளும் ஊர் அனுபவங்களைச் சிறைப்படுத்தி விடுதல் என்பனவும் பெருமளவுக்கு மேலே வந்து விடுகின்றன.**

ஊர்களையும் பழித்தல், பொருந்தாக் கற்பனைகளுக்குள்ளும் ஐதீகங்களுக்குள்ளும் ஊர் அனுபவங்களைச் சிறைப்படுத்தி விடுதல் என்பனவும் பெருமளவுக்கு மேலே வந்து விடுகின்றன. கழிவிரக்கத்தின் முக்கியமான இயல்பு மனிதருக்கு அது வழங்குகிற ஒத்தட உணர்வுதான். கழிவிரக்கம், மெல்லிய துயரத்துடன் கூடிய ஒரு நல்ல கனவாகவும் இருக்க முடியும். எனினும் கழிவிரக்கத்தின் பேரால் மரபினதும் பண்பாட்டினதும் அசமத்துவக் கூறுகளுக்கு நாங்கள் திரும்ப முடியாது. அப்படித் திரும்புகிற ஒரு போக்கு தொறன்ரோவின் தமிழ்ச் சமூகத்தில் காணப்படுகின்றது என்னும் அவதானம் தான் எனது ஊரான அளவெட்டி பற்றி எழுத முற்பட்டபோது எனக்குத் தயக்கத்தை ஏற்படுத்தியது. எனினும் இந்தக் கட்டுரை பற்றிச் சிந்தித்த பிற்பாடு, இந்தப் பந்தியை எழுதிக் கொண்டிருக்கிற இந்தக் கணம் எனக்கு அத்தகைய தயக்கம் பெருமளவுக்கு அற்றுப்போய் விட்டது.

எவ்வாறு இந்தத் தயக்கம் இல்லாமல் போயிற்று?

தமிழர்களுடைய தேசியவாதப் போராட்டம் உக்கிரமாக நடந்து கொண்டிருக்கிற இன்றைய சூழலில் தேசியவாதம், தேசியம் என்னும் 'அகன்ற' அரசியல் கருத்து நிலைகளுக்கும் ஊர் என்ற 'குறுகிய' அனுபவ, இருப்பு நிலைக்கும் எத்தகைய உறவு இருக்க முடியும் என்ற ஒரு கேள்வி எழுகிறது. ஒரு புடமிடப்பட்ட தேசியவாதிக்கு தேசம், தேசிய எல்லைகளின் விசாலத்துக்குள் ஏனைய பிரிவுகளும் குறுகிய பிரிப்புகளும் அற்றுப் போய்விட வேண்டும் என்பது முன் நிபந்தனையாகும். ஊரின் பேரால், மதத்தின் பேரால், சாதியின் பேரால், பெண்ணியத்தின் பேரால் தேசியப் போராட்டம் கூறுபடுவதை எந்தத் தேசியவாதியும் கொள்கை ரீதியாக ஒப்புக் கொள்ள மிகுந்த தயக்கம் காட்டுவார். இந்த நிலைமையை இலங்கையின் வடக்குக் கிழக்கில் நாம் பார்க்கிறோம். ஆனால் தொறன்ரோவிலோ எனில் நிலைமை நேர்மாறாக இருக்கிறது. தேசியம், தேசியவாதம் என்கிற வேள்வித் தீயில் தமது 'குறுகிய' நலன்களை மக்கள் முற்று முழுதாக எரித்து விடத் தயாராக இல்லை என்பதையே இது காட்டுகிறது. எனவே போராட்டம் முடிந்த பிற்பாடு, புதிய 'தேசம்' உருவான பிற்பாடு பழையபடியும் இத்தகைய 'குறுகிய' நலன்கள் தமக்குள் மல்யுத்தம் புரிய முற்பட மாட்டாதென்பதற்கு எவ்வித உத்தரவாதமுமில்லை. எல்லோரையும், எல்லாவற்றையும் ஓரணிக்குள் இணைத்து விடுகிற மாபெரும் வலு தேசியத்துக்கும் தேசியவாதத்துக்கும் இருக்கிறது என்பதை நான் ஏற்றுக் கொள்ளவில்லை. இன்று ஆட்சி பெற்றிருக்கிற தமிழ்த் தேசிய வாதத்துடனான எனது வழக்குகள் இன்னும் முற்றுப் பெறாதவை. எனினும் 'தமிழர்' என்ற அடையாளத்தை வரைவதில் தேசியத்துக்கும் தேசியவாதத்துக்கும் இருக்கிற பங்கைவிட அல்லது அதேயளவு பங்காக ஊர், மற்றும் பிரதேசங்கள் என்பனவும் முக்கியமானவையாக இருக்கின்றன என்பது என்னுடைய வாதமாகும். இன்னும் ஒரு படி மேலே போய்ச் சொல்வதானால், 'தமிழர்' என்ற அடையாளமே 'ஊர்' சார்ந்தும் 'இடம்' சார்ந்தும் தான் வரலாற்று ரீதியாகக் கட்டமைக்கப் பட்டிருக்கிறது என்பது என் வாதம். புவியியல் பிரிப்புகள், தேசம் என்று இன்று நாம் வழங்குகிற அர்த்தத்தில் 'தமிழர்' எனும் அடையாளம் முன்பு வரையறை செய்யப்படவில்லை. எனவே யார் தமிழர் என்பதும் எது 'தமிழ்த் தேசம்' என்பதும் வரலாற்றியல், பண்பாட்டியல் மற்றும் சமூகவியல் விவாதங்களைக் கிளப்புகின்றன. அண்மைக் காலங்களாக இவை பற்றிய பயன்மிக்க கட்டுரைகளும் தகவல்களும் ஆய்வுகளும் தமிழிலும் ஆங்கிலத்திலும் வெளியாகி வருகின்றன. தமிழ் நாட்டிலும் ஈழத்திலும் தமிழ்த் தேசியவாதம் ஒரு பலமான இயக்கமாக உருவாகி வருகிறது என்ற அம்சமே இத்தகைய அறிவுசார் அலசல்களுக்கும் ஒரு முக்கிய காரணம்.

தமிழர்களுடைய வாழ்விலும் தமிழிலும் ஊர் பெறுகிற முக்கியத்துவம் குறிப்பிடப்பட வேண்டியது. எங்களுடைய சொந்த இடங்களுக்குத் திரும்பிப் போவதை ஊருக்குத் திரும்புவது என்றுதான் நாம் சொல்கிறோம். 'ஊருக்குப் போகவில்லையா?' என்று கேட்பது இப்போதும் பெருவழக்காக

**தமிழின் பழைய இலக்கியங்களிலும் ஊர் பெறுகிற முக்கியத்துவம் பேசற் பாலது. சிலப்பதிகாரத்திலும் கலிங்கத்துப் பரணியிலும் 'ஊர்' பலமுறை பேசப்படுகிறது; பாடப் படுகிறது. சங்கப் புலவர் கணியன் பூங்குன்றனுக்கு 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' தான்.**



இருக்கிறது. 'ஊர் சிரிக்கிறது' அல்லது 'ஊருக்குத் தெரிந்து விட்டால்.....' என்பது போன்ற சொற்றொடர்களில் இடம் பெறுகிற ஊர் வெறுமனே ஊர் என்ற புவியியல் பரப்பு அல்ல. இங்கு ஊர் என்பது ஆகுபெயராகவும் உருவகமாகவும் ஒரே நேரத்தில் இயங்குகிறது. ஊர் என்பது மக்கள், அவர்களுடைய பண்பாட்டுக் கூறுகள், அவர்களுடைய ஐதீகங்கள், நம்பிக்கைகள், அதிகாரப்படி நிலை எல்லாவற்றையுமே சுட்டுகிறது. நாட்டார் வழக்குப் பாடலில் பேசப்படுகிற 'ஊரான ஊரிழந்தோம்' என்பது ஊர் பற்றிய இன்னுமொரு கவித்துவ உதாரணமாகக் கொள்ளப்படலாம்.

தமிழின் பழைய இலக்கியங்களிலும் ஊர் பெறுகிற முக்கியத்துவம் பேசற் பாலது. சிலப்பதிகாரத்திலும் கலிங்கத்துப் பரணியிலும் ஊர் பலமுறை பேசப்படுகிறது; பாடப் படுகிறது. சங்கப் புலவர் கணியன் பூங்குன்றனுக்கு 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' தான். அவருடைய கற்பனை, நிலவியல் எல்லைப்பாட்டின் அலகு ஊர் தான். எமது அடையாளத்திலும் இலக்கியத்திலும் பண்பாட்டு வாழ்விலும் ஊர் பெற்றிருக்கிற முக்கியத்துவத்தை உணர்த்த இவை சில உதாரணங்கள் மட்டுமே ஆகும். இவற்றூடாக நாம் பெற்றுக் கொள்கிற ஊர் என்பது ஒரே சமயத்தில் வாழிடமாகவும், பண்பாடாகவும், படிமமாகவும் இருத்தலாகவும் உள்ளது. இந்த அம்சங்கள் தான் எமது - தமிழரது - அடையாளத்தை வரலாற்று ரீதியாக வடிவமைத்துள்ளன. தமிழில் கிடைத்திருக்கும் தொன்மையான இலக்கியங்களான சங்ககாலக் கவிதைகள் முன்மொழிகிற திணை என்கிற பிரிப்பு அல்லது எண்ணக்கருவையும் இதனோடு மிகவும் தொடர்புடையதாக நாங்கள் புரிந்து கொள்ள வேண்டும்.

தொல்காப்பியம் முதலான தொன்மைத் தமிழிலக்கியங்கள் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்னும் ஐந்து வகையான நிலங்களைக் குறிப்பிடுகின்றன. இந்த வகைப்பாடு ஐந்திணை என்று தமிழில் வழங்கப்படுகிறது. குறிஞ்சி என்பது மலையும் மலைசார்ந்த இடமும் ஆகும். முல்லை, காடும் காடு சார்ந்த இடமும் ஆகும். இவ்வாறாகவே மருதம் என்பது வயலும் வயல் சார்ந்த இடமாகவும் நெய்தல், கடலும் கடல் சார்ந்த இடமாகவும் பாலை வறண்ட நிலமாகவும் வரையறை செய்யப்பட்டுள்ளன. இவ்வைந்திணைப் பிரிப்பு தமிழர் பண்பாட்டுக்கும் உரிய சிறப்பான ஒரு அம்சமாகும். ஐந்து திணைகளும் நிலத்தைக் குறித்ததாக இருக்கின்றன என்று தோன்றினாலும் உண்மையில் வெறுமனே நிலவியல், புவியியல் வரையறைகளுக்கு அப்பால் பண்பாட்டு நிலைக்களன்களாகவே ஐந்திணைகளும் காணப்படுகின்றன. ஏனெனில் ஒவ்வொரு திணைக்கும் முதற் பொருள், கருப்பொருள், உரிப் பொருள் என மூன்று வரையறைகள் உள்ளன. முதற் பொருள், கருப் பொருள், உரிப் பொருள் என்பனவற்றின் இயல்புகளைப் பார்க்கிறபோதுதான் அவை ஆழமான பண்பாட்டு இலக்கிய நிலைக்களன்களாக விரிவு பெறுவதை நாம் இனங்காண முடியும். முதல் பொருளாவன ஒவ்வொரு திணைக்குமுரிய நிலம், பொழுது என்பனவாம். கருப்பொருள் என்பன அவ்வத் திணைகளுக்குரிய கடவுளர், உணவு, விலங்குகள், மரம் செடி கொடிகள், பறவை, தோற்கருவிகள் மற்றும் யாழ் போன்ற நரம்புக் கருவிகள், தொழில் ஆகியவை. உரிப்பொருளாவன திணைகளுக்குரிய புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் ஆகிய உணர்நிலைகளும் அவற்றைச் சுட்டும் குணங்குறிகளுமாகும். எனவே ஐந்திணைப் பகுப்பு வெறும் நிலம் சார்ந்தது அன்று. தமிழர்களுடைய பண்பாட்டு இயல்பையும் அடையாளத்தையும் தீர்மானிக்கிற முக்கியமானதொரு கூறாக அது இருக்கிறது. கூடவே, தமிழ் இலக்கிய மரபில் ஐந்திணைப் பகுப்பு என்பது இலக்கண வகைகளாகவும் அமைகின்றது என்பதையும் நாம் கவனத்தில் எடுக்க வேண்டும். அகப்பாடல்கள் இவ்வைந்திணைப் பகுப்புக்கு உட்பட்டு அமைய வேண்டும் என்பது தமிழ் மரபு.

எனவே பண்பாடு, இலக்கியம், கவிதை, நிலவியல் போன்ற முக்கியமான இயல்புகளை உள்ளடக்குகிற ஒரு அடையாளமாக, தமிழ் மரபு வழி சார்ந்த இனங்காணலாக ஐந்திணை அமைகிறது என நாங்கள் தெளிவாகக் கூற முடியும். இத்தகைய தமிழ் அடையாளத்துக்கு அரசியல் சார்ந்த



**'வடவேங்கடம் முதல் தென் குமரி ஆயிடை' என்று ஒரு பருமட்டான நிலவியல் வரையறை கோடிட்டுக் காட்டப்பட்ட போதும் இந்த நிலவியல் வரையறைகள் துல்லியமானவை அல்ல. தமிழ் நிலத்தை நிலவியல் ரீதியாக வரையறை செய்து அவ்வரையறைக்குள் வாழ்பவர்களைத் 'தமிழர்கள்' என்று இனங்காணுவதும் எமது மரபில் இருந்த ஒரு விடயம் அல்ல.**

நிலவியல் எல்லைகள் ஒருபோதுமே திட்டவட்டமாக இருந்ததில்லை. அல்லது தமிழ் அடையாளத்துக்கு இத்தகைய நிலவியல் எல்லைகள் (*territorial boundaries*) முக்கியமானதாக இருக்கவில்லை எனலாம். பழந் தமிழ் இலக்கியங்கள் சேர, சோழ, பாண்டிய மன்னர்களின் ஆட்சி பற்றிக் குறிப்பிடுகின்றன. இந்த மன்னர்களுடைய அரசுகளும் நிலப் பரப்பும் கூட ஒரு போதுமே நிரந்தரமானவையாக இருந்ததில்லை.

நிலவியல் எல்லைகளை விடப் பண்பாட்டு நிலைக்களன்களும் மொழியும் தமிழ் அடையாளத்தை வடிவமைப்பதில் முக்கியமான பங்காற்றின என்பதே என்னுடைய கருத்தாக இருக்கிறது. இந்தப் பின்னணியில் தான் 'தமிழ் கூறும் நல்லுலகம்' என்ற பழைய தொடரை நாம் அணுக வேண்டி இருக்கிறது. "வடவேங்கடம் முதல் தென் குமரி ஆயிடை" என்று ஒரு பருமட்டான நிலவியல் வரையறை கோடிட்டுக் காட்டப்பட்ட போதும் இந்த நிலவியல் வரையறைகள் துல்லியமானவை அல்ல. தமிழ் நிலத்தை நிலவியல் ரீதியாக வரையறை செய்து அவ்வரையறைக்குள் வாழ்பவர்களைத் 'தமிழர்கள்' என்று இனங்காணுவதும் எமது மரபில் இருந்த ஒரு விடயம் அல்ல. மொழி, பண்பாடு, வாழ்வியல் சார்ந்து ஒரு பரந்த தமிழ் அடையாளம் தான் எமக்குத் தொன்மையான தமிழ் இலக்கியத்தின் வழியாகக் கிடைக்கிறது. தமிழின், தமிழரின் தொல் வரலாற்றை ஆய்வு செய்வதில் எமக்கு இருக்கிற பலம் வாய்ந்த ஆதாரங்கள் தமிழ் இலக்கியங்கள் தான். அந்த வகையில் வரலாறு, சமூகவியல். மானுடவியல், தொல்லியல் மற்றும் அரசியல் என்பனவற்றைப் பொறுத்தவரை, தமிழ்ச் சூழலில் இலக்கியத்தை விட்டு விட்டு - குறிப்பாகக் கவிதையை விட்டு விட்டு வேறு ஆதாரங்களை நாம் பேச முடியாது. இதுவும் தமிழுக்கே உரிய ஒரு சிறப்பான நிலைமை எனலாம். இது அன்றைக்கும் பொருந்திற்று; இன்றைக்கும் பொருந்தி வருகிறது.

ஒரு பரந்து விரிந்த பண்பாட்டு நிலைக்களனாகத் தமிழ் அடையாளம் தொழிற்பட்டமையால் தான் தமிழ் மொழியூடாக சைவம், சாக்தம், பௌத்தம், சமணம், வைணவம், கிறித்தவம், இஸ்லாமியம் ஆகிய மத மரபுகளும் இம் மரபு வழி தழைத்த இலக்கியங்களும் தமிழின், தமிழரின் பிரிக்க முடியாத கூறுகளாயின. தமிழ் என்பது பண்பாட்டு நிலைக்களன் என்கிற உணர்வுதான் சி.வை. தாமோதரம் பிள்ளை, விபுலானந்த அடிகள், ஆறுமுகநாவலர் போன்றோரை மட்டக்களப்பு, யாழ்ப்பாணம், சென்னை, சிதம்பரம், மதுரை என்று நிலவியல் எல்லைகளுக்கு அப்பாலும் இலகுவாகவும் எளிதாகவும் இயங்க வைத்தது.

இன்று, ஈழத் தமிழரின் தேசியவாதப் போராட்டம், தமிழ் ஈழம் என்பதையும், 'பாரம்பரியத் தமிழர் பிரதேசங்கள்' என்ற நியாயப்பாட்டில், ஒன்றிணைந்த வடக்குக் கிழக்கையும் அரசியல், நிலவியல் எல்லைகளாக வரையறை செய்துள்ளது. இது கடந்த கால இலங்கை அரசாங்கங்களின் தொலையுணர்வற்ற, சகிப்புத் தன்மை அற்ற ஒரு குறும் பார்வையின் விளைவுதான் எனினும் தமிழர் என்ற அடையாளத்தை இந்த நிலவியல் வரையறைக்கு அப்பால் பன்முகப் பாட்டோடு விவாதிக்கிற, அணுகுகிற மற்றும் புரிந்து கொள்கிற ஒரு அவசியமான தேவை இன்று எங்கள் முன் உள்ளது.

இதற்கான காரணம் நான் ஏற்கெனவே வலியுறுத்தியது போல பண்பாடும் பன்முகப்பாடும் மட்டுமே அல்ல. தொன்மையான ஐந்திணைப் பகுப்புக்கு நாம் மேலும் இரண்டு, புதிய திணைகளைச் சேர்க்க வேண்டியிருக்கிறது என்பதும் அதேயளவு முக்கியமானது. சேர்க்க வேண்டிய புதிய திணைகள் என்று நான் முன்மொழிபவற்றுள் முதலாவது, புலம் பெயர்வு மற்றும் எமது அகதி வாழ்வைக் குறிக்கிற ஆறாம் திணை. இரண்டாவது, இன்றைய கணினி யுகத்துக்கு ஊடாக நாம் பெற்றிருக்கிற உலக இணை வலை (*World Wide Web*) மற்றும் இணைவலை (*Internet*) என்பவற்றைக் குறிக்கிற ஏழாம் திணை. இப் புதிய திணைகள் இரண்டுமே நிலவியல் எல்லைகள் அற்றவை. தேசங்கடந்தவை. இந்த நூற்றாண்டின் மூலக் கூறுகளாக அமையப் போவன

**ஊரைப் பற்றி இப்படிப் பேசுகிறபோதே ஊருக்கு 'உள்ளே', ஊருக்கு 'வெளியே' என்பது பற்றியும் நாம் முக்கியமாகப் பேச வேண்டி இருக்கிறது. தமிழர்களுடைய ஊர் அமைப்பில் பஞ்சமர்கள் அல்லது இப்போது 'தலித்துக்கள்' என்று அழைக்கப்படுகிற தாழ்த்தப்பட்ட மக்களும் அவர்களுடைய பண்பாடுகளும் கடவுளரும் ஊருக்கு வெளியேதான் இருந்தனர்.**



இத்தகைய புலம் பெயர்வும் இணைவலையும்தான். எனவே பண்பாடும், தொடர்பாடலும், புலம் பெயர்வும் எவ்வாறு 'தமிழர்' என்ற அடையாளத்தில் பாதிப்பை ஏற்படுத்தப் போகின்றன என்பது நமது ஆழ்ந்த விசாரணைக்கும் விசாரத்துக்கும் உரியது. தமிழ் மொழியும் தமிழர்களும் இந்த நூற்றாண்டில் வெறும் நிலவியல் வரையறைகளைத் தாண்டிச் சென்று விடுவார்கள். தேசம் மற்றும் தேசியம் ஆகியவை இறுக்கமான, ஒரு பரிமாணமுள்ள, அடையாளமாகத் தமிழர்களைக் குறுக்கி விடப் போவதில்லை. இந்த இடத்தில்தான் புதிய திணைகளும் 'ஊர்' என்பதும் பண்பாட்டு நிலைக்களன் என்ற தளத்திலும் அடையாளம் என்ற தளத்திலும் ஒன்றிணைவதை நான் காண்கிறேன்.

• • •

இப்போது, மறுபடியும் ஊருக்குத் திரும்பலாம். தமிழ் மரபு ரீதியான பகுப்பின் படி எங்களுடைய ஊர் மருத நிலந்தான். வயலும் வயல் சார்ந்த இடமும். எனினும் முழு யாழ்ப்பாணமுமே பாலைத் திணைக்குள்தான் அடங்குகிறது என்றும் ஒருவர் வாதிட முடியும் (கடலோரப் பிரதேசங்கள் தவிர்த்து). திணை மயக்கம் ஏற்படுவதற்கும் இலக்கியம் இடம் அளிப்பதால் இந்தப் பிரிப்பு சரியா என்னும் விவாதத்தை விட்டு விடலாம். அளவெட்டி எனும் ஊரை வாழ்வியலாகவும் பண்பாட்டு நிலைக்களனாகவும் கொண்டு எழுதப்பட்டுள்ள இலக்கியங்கள் நிறையவே உள்ளன. ஈழத் தமிழின் முக்கியமான எழுத்தாளர்கள் சிலருடைய கற்பனையையும் இளம் வாழ்வையும் வடிவமைத்திருப்பது இந்த மருத நிலந்தான். மஹாகவியின் கவிதைகளான, வள்ளி, மீண்டும் தொடங்கும் மிடுக்கு, சிற்றூர் மயானம். யாழ்ப்பாணம் செல்வேன், தேர், போன்றவற்றில் மிகத் தெளிவாகவும் அழகாகவும் ஊர் சித்திரிக்கப்படுகிறது. அவருடைய ஒரு சாதாரண மனிதனது சரித்திரம் எனும் காவியத்தின் களமும், கதையும், கதை மாந்தரும் கூட எங்களுடைய ஊரும் ஊரவருந்தான். அ. செ. முருகானந்தம் எழுதியுள்ள பல சிறுகதைகளில் இந்த ஊர்வாசம் காணக் கிடைக்கிறது. அ. ந. கந்தசாமி அளவெட்டியைச் சேர்ந்தவர் எனினும் 'தொழிலாளி வர்க்கத்துக்கு நாடு இல்லை; தேசம் இல்லை; உலகமே வீடு' என்கிற சர்வதேசியப் பார்வை அவரிடம் ஆழமாக ஓடியதால் 'ஊர்' பற்றியவை அவருடைய படைப்புக்களில் அரிதாகவே கிடைக்கின்றன. செ. கதிரேசர் பிள்ளையின் கவிதைகள் இன்னும் தொகுதியாக வெளிவரவில்லை. ஆங்காங்கு பிரசுரமாகியுள்ள அவரது கவிதைகளிலும் ஊர் விரிவாகப் பேசப்படுகிறது. இளவாலை விஜயேந்திரன், பெயரில் இளவாலையைச் சேர்த்துக் கொண்டிருந்தாலும், அவருடை இலக்கிய வாழ்வும் இளமை வாழ்வும் அளவெட்டிதான். நவீன தமிழ்க் கவிதையின் முக்கியமான ஆளுமைகளில் ஒருவரான அவருடைய பல கவிதைகளில் ஊர், மற்றும் ஊர் நினைவுகள் நளினமாகவும் அழகாகவும் அதே சமயம் துயரத்தோடும் சித்திரிக்கப் படுகின்றன.

அளவெட்டி பற்றிய மிகவும் விரிவான, பதிவுகளும் சித்திரிப்புக்களும் அ. இரவியின் கதைகளிலும் அவருடைய நினைவுக் குறிப்புக்களிலும் எமக்குக் கிடைக்கின்றன. ஊரின் அழகும் இயற்கையும் வண்ணங்களும் மட்டுமன்றி அங்கு காணப்படுகிற சாதிப் பிரச்சினைகளை அவற்றின் பின்னணியுடன் அ. இரவி தொட்டுக்காட்டுகிறார். நான் உதாரணங்களுக்காகக் குறிப்படும் இந்த எழுத்தாளர்களின் படைப்புக்களை வாசிப்பவர்களுக்கு, இந்தக் கட்டுரையில் எனது முக்கியமான வாதமாக அமையும் ஊர் என்பது ஒரு பண்பாட்டு நிலைக்களன் - அது அடையாளத்தைத் தீர்மானிப்பதில் ஒரு முக்கிய பங்கு வகிக்கிறது என்பதைப் புரிந்து கொள்வது மேலும் எளிதாக இருக்கக் கூடும்.

ஊரைப் பற்றி இப்படிப் பேசுகிறபோதே ஊருக்கு 'உள்ளே', ஊருக்கு 'வெளியே' என்பது பற்றியும் நாம் முக்கியமாகப் பேச வேண்டி இருக்கிறது. தமிழர்களுடைய ஊர் அமைப்பில் பஞ்சமர்கள் அல்லது இப்போது 'தலித்துக்கள்' என்று அழைக்கப்படுகிற 'தாழ்த்தப்பட்ட' மக்களும் அவர்களுடைய கடவுளரும் பண்பாடுகளும் ஊருக்கு வெளியேதான் இருந்தனர். ஊர் மட்டத்தில் மக்களால் பேணப்படும்

**சமூகவியல், மானிடவியல் ஆய்வுகள் அரிதிலும் அரிதாகவே இருக்கிற எமது தமிழ்ச் சூழலில் இலக்கியங்கள் தான் ஊர் மரபுகளையும் அந்த மரபுகளுக்குள் காணப்படுகிற பிரச்சினைகள் மற்றும் அதிகாரம் பற்றிய கருத்து நிலை, சாதி எதிர்ப்புப் போராட்டங்கள் என்பவற்றை எங்களுக்கு இனங்காட்டுகின்றன.**

அவைதிக, ஆகமநெறி சாராத வழிபாடுகள் நாட்டார் வழிபாடுகளாகும். இவையே அடித்தள மக்களுடைய பண்பாட்டின் முக்கிய மூலங்கள். இவை பெரும்பாலும் ஊரின் 'வெளியே' இருப்பவை. இம்மக்களின் கடவுளர் வெளியே இருப்பதால் தான் 'காவல் தெய்வங்கள்' என்ற இந்து மரபில் பின்னர் இணைக்கப் பட்டனர். இந் நாட்டார் வழிபாடுகளில் முக்கிய இடம் பெறுபவை வேம்பு, அரசு, நாவல், மருது போன்ற மரங்களும் அவற்றின் கீழமரும் கடவுளரும். பழந்தமிழ் மரபில் கடவுளர் வழிபாடு என்பது மூதாதையர் வழிபாடு, தாவரவிலங்கு வழிபாடு, மனித விலங்குருவ வழிபாடு, குலக்குறி வழிபாடு என்பதாகத்தான் இருந்தமையை சமூக வரலாற்றியல் மற்றும் மானுடவியல் ஆய்வாளர்கள் எடுத்துக் காட்டுகின்றனர்.

நாட்டிப்புறக் கடவுளருக்கும் அவர்களுடைய வழிபாட்டுத் தளங்களுக்கும் வடமொழி ஆகம விதிகள் கிடையாது. இடத்துக்கு இடம் மக்களுக்கு மக்கள் மாறுபடக் கூடிய சில நடைமுறை விதிகளே உண்டு. அடித்தள மக்களின் கடவுளர் உயிர்ப்பலி பெறுபவர். இந்து சமயத் தெய்வங்கள் பௌத்த, ஜைனமதத் தாக்கங்களுக்குப் பிற்பாடு உயிர்ப்பலி வாங்குவதை நிறுத்தி 'மரக்கறித்' தெய்வங்களாகி விட்டன.

நாட்டார் வழிபாட்டுக் கடவுளரை சிறு தெய்வங்கள் என்றும் வைதிக, இந்து மதத் தெய்வங்களைப் பெருந் தெய்வங்கள் எனவும் அழைக்கிற ஒரு மரபு உண்டு. சமூகவியல், மானிடவியல் போன்ற துறைகளிலும் பழமை பெறுகிற ஒரு மரபு இவற்றை *Great tradition, Little tradition* என்று வகுத்துள்ளது. இந்தப் பகுப்பு சமூக மேலாதிக்கச் சிந்தனையின் ஒரு நடைமுறை வெளிப்பாடுதான். ஊரின் அடிநிலை மக்கள் வழிபடுகிற கடவுளரான - காடன், மாடன், பெரியதம்பிரான், அண்ணன்மார், நாச்சிமார், மாரி, பிடாரி போன்றன ஆகம மயப்படுத்தப்பட்டு, சமஸ்கிருத மயமாக்கம் பெற்றால் மட்டுமே இந்து மதத்தினுள்ளும் சைவத்தினுள்ளும் அங்கீகரிக்கப்படும். அப்போது பெயர் மாற்றமும் ஏற்படும். சிறு தெய்வங்கள் மீதான சைவத்தின் காழ்ப்புணர்வை திருநாவுக்கரசர் "சென்று நாம் சிறு தெய்வம் சேர்வோம் அல்லோம்" என்று கூறுவதன் மூலம் அறியலாம்.

வட இந்திய, சமஸ்கிருதமயப்பட்ட சமய முறை தமிழர் வாழ்விலும் பண்பாட்டிலும் வழிபாட்டிலும் நாட்டார் வழக்கியலிலும் கூட வெகுவாகக் கலந்து விட்டது. இக் கலப்பை அளவெட்டியின் கோவில்களிலும் வழிபாடுகளிலும் காணலாம். அய்யனார், முதலியார், நாக தம்பிரான், பெரியதம்பிரான், மாரி, போன்ற கடவுளருடன் பிள்ளையார், விஷ்ணு, போன்ற தெய்வங்களையும் காண்கிறோம். 'சிறு தெய்வக்' கோவில்கள் 'கும்பாபிஷேகம்' பெற்று அந்தணர் பூசைசெய்யும் ஆகமக் கோவில்களாக மாற்றப் படுவதையும் காண்கிறோம். திராவிடத்தையும் தமிழ் மரபையும் இன்றைக்கு வலியுறுத்துகிற ஈழத் தமிழ்த் தேசியம் தான் இத்தகைய வடமொழி, 'ஆரிய', பார்ப்பனிய வழிபாட்டு முறைகள், கோவில் வழிபாடுகளையும் பேணி வருகிறது. இந்தச் சுவாரசியமான உள்முரண்பாடு தான் எல்லாத் தேசியங்களதும் இயல்பாக இருக்கிறது.

இம் முரண்பாடுகளை இன்று இலக்கியம்தான் நுட்பமாகச் சுட்டிக் காட்டுகிறது.

சமூகவியல், மானிடவியல் ஆய்வுகள் அரிதிலும் அரிதாகவே இருக்கிற எமது தமிழ்ச் சூழலில் இலக்கியங்கள் தான் ஊர் மரபுகளையும் அந்த மரபுகளுக்குள் காணப்படுகிற பிரச்சினைகள் மற்றும் அதிகாரம் பற்றிய கருத்து நிலை, சாதி எதிர்ப்புப் போராட்டங்கள் என்பவற்றையும் எங்களுக்கு இனங்காட்டுகின்றன. வைதிக நெறிப்பட்ட பண்பாட்டு வழக்குகளும் வைதீக நெறியை உதறித் தள்ளிய நாட்டார் வழக்கியல் மரபும் பண்பாட்டு வடிவங்களும் ஊரில் காணப்படுவதையும் பின்னதன் முக்கியத்துவத்தையும் இலக்கியப் படைப்புகள் சுட்டிக் காட்டுகின்றன. மாரி அம்மன் வழிபாடு, நாகதம்பிரான் வழிபாடு, பிராமணரல்லாதோர் பூசகர்களாக இருப்பது, சாதியம், சாதிய எதிர்ப்பு என்பன பேசப்படுகின்றன. அ. இரவியின் நினைவுக் குறிப்புக்களிலும் சிறுகதைகளிலும் அளவெட்டி - இத்தகைய முரண்பாடுகள், உட்சிக்கல்கள், என்பவற்றோடு சித்திரிக்கப்படுகிறது.

மஹாகவியின் 'தேரும் திங்களும்' என்ற கவிதை தேர்வடத்தைப் பிடிக்கும் அனுமதி பஞ்சமருக்கு மறுக்கப்பட்டதன் விளைவான போராட்டத்தையும் ஒரு பஞ்சம இளைஞனின் படுகொலையையும் சித்தரிக்கிறது. அந்த வகையில் இலக்கியம் வெறும் காலத்தின் கண்ணாடி மட்டுமல்ல; எதிர்காலத்திற்கான சீரிய, சமத்துவம் வாய்க்கப் பெற்ற ஒரு சமூகத்தை உருவாக்குவதற்கான உந்து சக்தியாகவும் தொழில் படுகிறது என்று கூறவேண்டும். இதனாலேயே இன்றைய ஈழச் சூழலில் இலக்கியம் அரசியலுக்கு வழிகாட்டுகிறது என்று நான் கூறுகிறேன். இந்த வழிகாட்டலை, இலக்கியத்தின் 'தீர்க்க தரிசனத்தை' அரசியலார் புரிந்து கொள்வார்களா என்பது, துரதிர்ஷ்டவசமாக வேறு விடயம்.

■ ■ ■

# கும்பழாவளைப் பிள்ளை



சோதி யாகநின் றென்றும் துலங்கிடும்
ஆதி யோம்பொருள் ஆனை முகத்துடன்
போத மாவுருப் பூண்டுள்ள போதிலும்
பேதமில் கும்ப ழாவளைப் பிள்ளையே.

அரிய பாசமும் அங்குச முங்கொண்டு
கரிய காரியக் கயமுன் ஆணவம்
சரியச் சங்கரன் தலைமகன் ஆனது
பெரியதே கும்ப ழாவளைப் பிள்ளையே.

உற்ற மாதவம் ஓங்கும் அளவையூர்
பற்றி நின்னடி பண்பும் ஒழுக்கமும்
நற்ற மிழ்க்கலை ஞானமும் கல்வியும்
பெற்றதே கும்ப ழாவளைப் பிள்ளையே.

சீரு லாவிய சோழன் திருமகள்
மாரு தப்புர வீகவல் லிக்குநோய்
தீர வந்தருள் செய்யத் திசையெலாம்
பேரெழும் கும்ப ழாவளைப் பிள்ளையே.

மாசு நீங்கவும் வாழ்வொளி தாங்கவும்
பூசை காண்பது புண்ணியம் என்றெலாம்
ஆசையால் அடி யார்கள் அனுதினம்
பேசுவார் கும்ப ழாவளைப் பிள்ளையே.

வீணிலே திரி வாரும் விரும்பியே
காணுவார் கண்டு கண்டு கசிந்துளம்
ஏணிழந்து பின் என்றுமுன் தாள்களே
பேணுவார் கும்பழா வளைப் பிள்ளையே.

நூறு நூறுவன் துன்பங்கள் நோகவே
கீறி நெஞ்சைக் கிழிக்கின்ற போதிலும்
ஆறி அன்பர் வணங்கி அருள்பெறும்
பேறுளார் கும்ப ழாவளைப் பிள்ளையே.

வழிவழி எங்கள் முன்னவர் வாழ்ந்தமண்
அழகுறத் தமிழ் ஆண்டு வளர்ந்தமண்
அழியமுன் னதை மீட்க முனைவது
பிழையதோ கும்ப ழாவளைப் பிள்ளையே.

கேடு நீங்கவும் கேழ்திறன் ஆளவும்
கேடி லாப்பெரும் சுதந்திரம் கிட்டவும்
நாடு வேண்டும் நமக்கென நற்றமிழ்
பீடுறக் கும்ப ழாவளைப் பிள்ளையே.

உரிய வானவர் ஊறு களைந்தனை
பருகிப் பால் அன்பர் பாவங்கள் ஏற்றனை
உருகி நின்றுனை யாமும் வணங்கினோம்
பெருமைசேர் கும்ப ழாவளைப் பிள்ளையே.

**கவிஞர் வி. கந்தவனம்**

# UNFORGETTABLE EXPERIENCE IN ONE'S LIFE

An individual has several experiences in his lifetime. Some are pleasant, some are sad and some leave very great impressions.

I am now in my seventies and I have gone through these experiences. I have taken these in a philosophical manner. But there is one incident that left an impression in my life. This may be due to the fact that it happened when I was first in my teens. I was about 15 years of age. It was about my journey from Burma to Ceylon in 1942.



**T. KANDASAMY**
B. Sc., M.Sc. (London), D.I.C., M. Chem. A., F.R.S.C., F.I.Chem.C., Chartered Chemist, Retired Government Analyst, Ex. UN National Consultant.

I should begin my narration with the background of my family. My father after sitting the Madras Matriculation Examination in 1905 went to Burma in search of employment. He took up position as Station Master in the Burmese Railways. My brothers, sisters and I were born in Burma and were educated there. Since he was liable to be transferred from station to station he put as in the school boarding in Rangoon so that our education would not get disturbed. We spent only two vacations at home and therefore we were given lot of freedom. When I look back on this I always think how wise my father was for we had a good and sound education.

Things changed on December 8th, 1941, when the Japanese bombed Hawaii and joinedd Germany and Italy in the war against the allies. The schools in Rangoon were closed for fear of the city being bombed by the Japanese. So I had to return home which was about 800 miles north of Rangoon.

The Indians living in Burma were leaving the country. There were differences between Indians and Burmese. There was a riot in 1939 and the relationship between the Indians and Burmese were not good particularly in the south. We were also considered as Indians (foreigners). The only exit point from Burma to India was the Port of Rangoon. The ships that brought the forces from India took back the Indians. The Japanese were advancing from the South, form Malaysia. By the end of March the Japanese had captured a greater part of the South including the Port of Rangoon. There was hardly any resistance by allied forces.

My parents did not want to leave Burma. So my father was still in service and did not make any attempt to send his family, his wife and 11 children to India through Rangoon. Two members of the family, my elder brothers were employed. I was the third member. The Burmese in the north never took part in the 1939 riots; they were very friendly and cordial. The Indian community was safe in the north. But stories from the south were trickling to the north about Burmese attitudes and atrocities to the Indians who stayed back. My parents decided within a couple of hours that they too should leave Burma. Many of his Burmese friends and Indian friends who were staying back tried very hard to persuade him to stay with full protection provided.

The British government had opened up a path from the northern most part of Burma across the highly mountainous regions to Assam in India as soon as the City of Rangoon fell into the hands of the Japanese. This temporary roadway was to facilitate the troops to return to India. The civilians too used this roadway to get back to India. Since these regions were uninhabited with very dense forests the authorities set up camps every nine miles so that the returnees could rest and get some food. Volunteers from the Indian National Congress manned these camps.

By April, the time we started our journey these volunteers had left as the Japanese were not very far. So the people who were journeying to India at this period faced a severe problem as the camps were empty and there was not food.

It was at this time in April 1942 that our family decided to leave Burma. We did not foresee the difficulties we were going to face. The family left the station where my father was working by train and traveled north across the main river in Burma, and Irrawady to a point from where the real journey started. We had now come to the banks of one of the tributaries of Irrawaddy. We had to travel further north and land on the opposite bank of the river. There were steam launches plying from this place. The journey took 2 days.

Since there were several waiting to avail of this journey, my parents decided to hire a boat and travel to the north. I took us 9 days as we did not travel in the night but slept on the bank of the river. Once we reached the hamlet, there was still a distance of 18 miles to travel before starting climbing the series of mountains. This distance of 18 miles was covered by hiring 2 bullock carts. Those who did not have money walked the distance. Unfortunately most travelers were disappointed as the camps were without workers and there was no food and they had to purchase it from the villagers.

Up to this point the family did not have any hardship since there was money to spend. The problem started at the foot of the first mountain range. There was a temporary motorable road across the mountains, which the civilians took earlier but at the time we arrived this spot it was closed to civilians as the forces were retreating in large numbers. In our family, the oldest member was my father (54 years old) and the youngest was my brother (10 months old). Now one is to imagine the problems the family faced. One did not know how many days it took to climb up and climb down the mountain, what the distance one had to cover and what facilities there were to get food and whether one should carry extra food and clothes. Climbing the mountains was not going to be an easy task with very young children. The decision was finally made. We decided to discard all extra clothes and travel with what we were wearing and thereby reduce the burden. There were hill tribes (the Nagas) who could be hired for various activities but they required their payments in coins and not in currency notes. Since we had money, not coins, we were able to persuade them to accept currency notes and hired a few of them. We hired them to carry the parents. They did this by seating them in a blanket pouch made by tying to a pole and 2 persons carried it. Seating them in a basket, which was on the back of a labourer but held on the forehead, they also carried the younger children. Only 4 of us, my 2 elder brothers, my younger brother and myself decided to walk. On the first day after the first climb we decided to stay on the top of the mountain as it was already night. We were all alone in the open. The labour we hired were very honest people. They cooked a little of congee (rice with water) and every one partook a small meal. In that lonely place, the labourers could have killed us and robbed us or deserted us. But they were very honest and helped us a lot and brought water from springs down. On the second day after the climb down, we again climbed the second range in the same manner and waited at the top totally tired. Each nigh we hoped and wished that it were the last climb. But this was not to be for we climbed for six days. If it rained we remained in the rain. There was no shelter and no change of clothes. Everything was left to nature's way. We had a small quantity of rice to prepare one meal a day and the labourers, who knew where to collect water, brought the water. Each of the mountains were about 9000 feet high and was sometimes steep and there was only a footpath on the edge of he mountain. These forests had bandits and wild animals. One day we were told that a tiger was hovering around.

At the end of these nightmarish six days, we finally came to the plains of Manipur State and finally on Indian soil. We had still to cover a distance of some 130 miles to reach the first border railway station in the Northern Assam. These 130 miles were motorable. Military trucks brought troops and provisions to the capital city of Manipur, Imphal. On their return the empty trucks took women and children to the border station. Able –bodied men had to walk. There was a camp at the 18th mile. It was at this the separation took place. So far our family had been together and we could not imagine being separated at this stage. With luck, we were able to persuade the military personnel of one of these trucks returning to smuggle us to the border railway station. Once we reached the border railway station, the rest of the journey was not difficult. We were allowed to travel in the railway without payment. We reached Calcutta and Madras and Ceylon through Talaimannar. We were in Alaveddy, my father's village on July 22nd, 1942.

What was the experience in this journey of about 3 months?
(1) Our infant baby brother died while we completed the journey over mountain
(2)A sister who was 12 years old died of typhoid in Calcutta.
(3)During our journey, we saw many dying of starvation and disease. The bodies were left on the pathway abandoned to decay. Many hundreds died. Women giving birth to infants abandoned them for there was no way of taking them. It is not possible to describe the sight, it was so horrid.

I imagine I had to face situations at that age after having had a comfortable early life. When I now look back, I used to wonder how I was able to undertake such a journey and how much pain of mind and worries my parents must have undergone. Probably for us, the older boys, we did not realize the seriousness but it left lasting impressions in my later life for I was unable to watch anyone in pain or watch anyone inflicting pain or misery on others.

Once I was in Alaveddy, I had to start my education after a lapse of 18 months. My parents decided to send us to Alaveddy English School. I was admitted to the Junior School Certificate class (JSC) in August 1942 and did the examination in December 1942 and I left the school. I was very happy at the school.



# MY INCALCULABLE DEBT TO ARUNODHAYA COLLEGE

It is my great pleasure and privilege to accede to the request of the president of the Arunodhaya old boys association in Canada and write about my alma mater.

Thomas Jefferson, the 3rd president of the United States, and the architect of the Declaration of Independence in an address to the American Senate, said "if you can carry your purse in your head, no one can take it from you; an investment in knowledge is the greatest asset."

Arunodhaya College imparted knowledge to all it's students through the select band of dedicated teachers who transmitted that knowledge from books and text books with clarity of exposition, expert analysis of facts, brevity in expression and simple explanatory techniques.

As an old boy of the earlier Alaveddy Boys' English School, which later emerged as the present Arunodhaya College, I have unforgettable memories from 1933 to 1939 when I passed the J.S.C exam and left to pursue higher studies. It was this educational institution that laid the solid foundation and inspired me to achieve success later in life when I was afforded opportunities to function as Chancellor in the Ceylon High Commission in India during the years between 1960 and 1965 and my appointment in the Sri Lankan Administrative Service as Assistant Government Agent.

The then head master, Mr. Sinnathamby, was not only a brilliant scholar and academician, but also a dedicated teacher and administrator of high caliber, specializing in the English language and literature. He encouraged students to enhance their knowledge of English by holding frequent inter-house debates on current topics and awarding book prizes to the winning team and the best debater. Being a deeply religious man, he conducted a prayer meeting every morning in the school hall where we all recited the 97 lines of the "Siva Puranam" with deep devotion, followed by short talks on the need for disciplining the mind and body emphasizing dedication to duty, irrespective of the reward or the consequences, as enunciated by the Lord Krishna to star warrior Arjuna on the battlefield at Kurukshettra, and enshrined in the Bhavad Gita which is the synopses of Hindu religious thought and the experience of India down the ages. He organized drill classes three times a week after school hours and encouraged athletics and games. The early demise of his wife left him with the responsibility of bringing up his only child and son. His untiring zeal and devotion to the school was rewarded when a Deputy Director of Education, after an inspection declared it as the best elementary school on the whole Island. In retirement, he led a simple life, doing research in Astrology.

Mr. T. Selladurai, who taught both art and science with equal ambitious goals of achieving higher academic degrees, ended up as Vice-Principal of one of the leading senior educational institutions xxxx Parameswara college which was upgraded to university status in Jaffna.

Mr. S. Sithamparapillai (Ponniah master) essentially a science teacher, but could excel in teaching Tamil Grammar and even English Literature. As a matter of fact, he was as all rounder. Being a strict disciplinarian he was held in awe and reverence by the students. He later held the post of Principal and administered the institution very efficiently.
Mr. T Ponnampalam, taught English language and literature together with Geography and encouraged me to develop the art of public speaking, which stood me in good stead in later years, when I had to address Indian audiences during my assignment in the Ceylon High Commission in India. I am beholder to him for this.

Mr. S Ponnampalam, who taught Tamil literature and Grammar, propounded the niceties and richness of the Tamil and Grammar.

Arunodhaya traditionally has had several teachers who did not consider teaching simply as a sinecure or even a job, but as way of life.

Not only did Arunodhaya College produce numerous professionals at all levels in almost every discipline, from sciences to law and politics, but most important it instilled good values and attitudes in young minds, thereby establishing and consolidating a long tradition and reputation of molding its students into good citizens leading exemplary lives. I pray to Almighty God that Arunodhaya should continue to blossom and develop in the new Millenium.

**- R.Paramananthan**

# அளவெட்டியும் சூழலும்

கலாநிதி அ. தேவதாசன்

கல்லூரி வீட்டுவேலையை கணினியில் செய்து கொண்டிருந்த மகள் இனியவள் கேட்டாள் “யார் டடா அது போனிலை.....”
“ஸ்...ஸ்... சத்தம் போடாதே. இது கனடா கோல்... திலகேஸ்வரன் எனது அளவெட்டி நண்பன்” - இது நான்.

“என்னவாம்....?” கணினியில் இருந்து கண் எடுக்காமலேயே மீண்டும் வினவினாள் - பத்தாம் ஆண்டு படிக்கும் என் மகள்.

“ கதைத்து முடித்த பின் வந்து எல்லாம் சொல்லுகிறன்” தொலைபேசியின் வாயைப் பொத்தியபடி நான் கூறினேன்.

“அம்மா நீங்களாவது சொல்லுங்களேன்...” இரண்டாவது தொலைபேசி முனையில் உரையாடாலைக் கேட்டுக் கொண்டிருந்த சௌந்தராவிடம் கேட்டாள்.

‘எப்படா கதைத்து முடிப்போம்’ எனக்காத்திருந்த இனியவள் எங்களுடன் வந்து சேர்ந்து கொண்டாள். இனியும் நான் கால தாமதம் ஆக்குவதை இனியவள் விரும்ப மாட்டாள். என்பதை அவள் முகத்தில் இருந்து அறிந்து கொண்ட நான், “கனடாவிலுள்ள அருணோதயக் கல்லூரி பழைய மாணவர்கள் ‘அருணோதயம் 2000’ என்ற மலரை கல்லூரியின் நூறாவது நிறைவு ஆண்டையொட்டி வெளியிடுகிறார்களாம். அதற்கு ஒரு கட்டுரை வேண்டுமாம்...”

“விஞ்ஞானக் கட்டுரையாம்...” - திருத்தினாள் எனது மனைவி சௌந்தரா.

“அப்ப என்ன. . . . எழுதப்போகின்றீர்களா?” - இது மகள்.

“எழுதாமல் . . . . கட்டாயம் எழுதவேண்டும். எங்கடை கிராமத்துக்கு இதுகூட செய்யாமல்...” நான் முடிக்கு முன்பாகவே மகள் தொடர்ந்தாள், “அப்படி என்ன டடா... அளவெட்டி முக்கியம்?”



"கண்டியில் பிறந்து, நுவரெலியாவில் வளர்ந்து, கொழும்பில் படித்து, நியூசிலாந்தில் கல்வியைத் தொடரும் உனக்கு அளவெட்டியின் பெருமை பற்றி அதிகம் தெரியமாட்டாதுதான். யாழ்நகரிலுள்ள மிகப்பெரிய கிராமங்களில் அளவெட்டியும் ஒன்று. அநேகமாக எல்லோரும் படித்தவர்கள். சராசரியாக வீட்டுக்கொரு பட்டதாரி. கலைஞர்கள் நிறைய வசிக்கின்றார்கள். விவசாயிகள், விளையாட்டு வீரர்கள் நிறைய உளர். கோவில் குளங்கள், பாடசாலைகள் ஏராளம். இதற்கு மேலாக நான் பிறந்து வளர்ந்த கிராமம். இது போதாதா அளவெட்டியைப்பற்றி நான் பெருமைப்பட".

"டடாவை விட்டால் ஒரேயடியாக புழுகிக்கொண்டே போவார். அதிருக்கட்டுக்கும். என்ன விஞ்ஞானக் கட்டுரை எழுதப்போகிறீர்கள்?" என் பழையகால நினைவுகளுக்கு முற்றுப்புள்ளி வைத்தாள் இனியவள். "அதுதான் யோசிக்கின்றேன்..." இனியவளின் கல்லூரி வீட்டு வேலைக் கொப்பியைப் புரட்டிக்கொண்டே நான் கூறினேன்.

'சூழலை மாசு படுத்தாதே'

'அதிகரித்த இரசாயன பாவிப்பால் காய்கறிகள் நஞ்சடையும் ஆபத்து'

'ஓசோன் அடுக்கில் ஓட்டை'

'தொடர்பு சாதனங்களின் வளர்ச்சி'

இனியவளின் கொப்பியிலிருந்து கண்ணில் பட்ட ஒரு சில கட்டுரைகள் இவைகள்.

"இவற்றில் ஒன்றைப்பற்றி விரிவாக எழுதினால் என்ன?" - இது நான்.

"போச்சுடா போச்சு.... ஒரே போர்... யார் வாசிக்கப்போகின்றார்கள்? சூழலைப்பற்றியும் உணவைப்பற்றியும் யாருக்கு வேண்டும்? ஒருத்தரும் வாசிக்க வேண்டாம் என்றால் உங்கள் எண்ணப்படி எழுதுங்கள்" - இது இனியவள்.

"போடி போ! டடா எழுதுகிறதென்றால் தரமான விஞ்ஞானக் கட்டுரை தான் எழுதவேண்டும். அதுதான் அவர் படிப்பிற்கும் தகுதிக்கும் ஏற்றது." மௌனமாக இதுவரை எங்கள் கதைகளைக் கேட்டுக் கொண்டிருந்த சௌந்தரா கூறினாள்.

"அம்மாவும் சேர்ந்தாச்சா... இனி உருப்பட்டால் போலைதான். என்னை மாத்திரம் டடா எழுதும் கட்டுரையைப் படிக்கச் சொல்லிக் கட்டாயப் படுத்தாவிட்டால் சரிதான். நீங்களாச்சு உங்கள் கட்டுரையாச்சு...." கணினியை நிறுத்திவிட்டு டி.வி பார்ப்பதற்கு ஓடிப் போய்விட்டாள், இனியவள்.

ஆதாரபூர்வமான, விடயங்கள் நிறைந்த ஒரு விஞ்ஞான கட்டுரையை எழுதி அனுப்ப வேண்டும் என யோசித்த என்னைச் சிறிது தடுமாற வைத்துவிட்டது மனைவியினதும் மகளினதும் எண்ணங்கள்.

'சிறந்த ஒரு விஞ்ஞானக் கட்டுரை, நிறைய விடயங்களுடன் உங்கள் படிப்புக்கும் தகுதிக்கும் ஏற்றவாறு எழுத வேண்டும்' என்று கூறிய மனைவி....

'அப்படி எழுதினால் அதை வாசிக்கப் போவது உங்கள் போன்ற ஒரு சிலர்தான். உங்கள் மகள் கூட வாசிக்கப் போவதில்லை' எடுத்துக்காட்டிய மகள்....

என் மனம் அங்கும் இங்கும் அலையோடியது. மகளா...! மனைவியா....!! அல்லது நானா...!!! நீங்கள் வாசித்து அறிந்து கொள்ளுங்கள்.

• • • •

### நாம் வாழும் வளி மண்டலம்

எம்மைச் சூழவுள்ள வளிமண்டலம் நாம் உயிர் வாழ மிகவும் அத்தியாவசியமானது. அது

**பூமியைச் சுற்றியுள்ள வளிமண்டலம் பல அடுக்குகளைக் கொண்டுள்ளது. பூமிக்கு அண்மிய முதலடுக்கு (Troposphere) துருவங்களில் 7கி.மீ. வரையிலும், மத்திய வரையைச்சுற்றி 16 கி.மீ வரையிலும் பரந்துள்ளது. காலநிலையை நிர்ணயிப்பது இவ்வடுக்கே. அடுத்ததாக உள்ள அடுக்கு (Stratosphere) 60 கி.மீ உயரம் வரை பரந்துள்ளது. அபாயகரமான சூரியகதிர்வீச்சுக்களி லிருந்து எம்மைக் காப்பாற்றும் ஓசோன் (Ozone-O3) மண்டலம் இவ்வடுக்கின் மேல் மட்டத்தில் அமைந்துள்ளது.**



எமக்கு வேண்டிய பிராணவாயுவைத் தருவதுடன் சூரியனிலிருந்து வெளிவரும் ஆபத்தான கதிர் வீச்சுகளிலிருந்தும் எரி கற்களிலிருந்தும் எம்மைக் காப்பாற்றுகின்றது. சூரிய வெப்பத்தை பூமியின் மேற்பரப்பில் சீராக பரப்புவதற்கும் கால நிலை வேறுபாட்டிற்கு ஒரு காரணியாகவும் அமைகின்றது.

பூமியைச் சுற்றியுள்ள வளிமண்டலம் பல அடுக்குகளைக் கொண்டுள்ளது. பூமிக்கு அண்மிய முதலடுக்கு *(Troposphere)* துருவங்களில் 7கி.மீ. வரையிலும், மத்திய வரையைச்சுற்றி 16 கி.மீ வரையிலும் பரந்துள்ளது. காலநிலையை நிர்ணயிப்பது இவ்வடுக்கே. அடுத்ததாக உள்ள அடுக்கு *(Stratosphere)* 60 கி.மீ உயரம் வரை பரந்துள்ளது. அபாயகரமான சூரியகதிர்வீச்சுக்களிலிருந்து எம்மைக் காப்பாற்றும் ஓசோன் *(Ozone-$O_3$)* மண்டலம் இவ்வடுக்கின் மேல் மட்டத்தில் அமைந்துள்ளது. இறுதியான மேலடுக்கு *(Mesosphere)* 100 கி.மீ வரை அண்ட வெளிவரை பரந்து உள்ளது. வளி மண்டலத்தில் இரசாயன வாயுக்கள் பல கலந்துள்ளன. பிரதானமானதாக நைதரசன் *(Nitrogen)* 78 வீதமும் பிராணவாயு *(Oxygen)* 21 வீதமும் கலந்துள்ளன. இதைவிட ஆகன் *(Argon)*, கரியமில வாயு *(Carbondioxide)*, ஐதரஸன் *(Hydrogen)*, மீதேன் *(Methane)*, நைதரஸ ஒக்சைட் *(Nitrous Oxide)*, ஓசோன் ஆகிய வாயுக்களும் கலந்துள்ளன.

### பூமியை நோக்கியுள்ள மிக முக்கியமான பிரச்சனைகள்

1. வளிமண்டலம் அழுக்கடைதல் *(Air Polution)*
2. பூமியின் மேற்பரப்பு வெப்பமடைதல் *(The Greenhouse effect)*
3. ஓசோன் மண்டலத்தில் ஓட்டை விழுதல் *(Ozone depletion)*.

இனியவள் பாடசாலைக்காக எழுதிய கட்டுரையில் ஒரு பகுதியின் தமிழாக்கத்தை மேலே கொடுத்துள்ளேன். இவைகளை ஆரம்ப அடிப்படையாக வைத்து ஒருசில கருத்துக்களை கீழே கொடுக்க விழைகின்றேன்.

**குப்பை கூழங்கள் ஒன்று சேர்க்கப்பட்டு எரியூட்டப்படும். அதுவும் மாலை நேரமாக இருந்துவிட்டால் எரியும் தீச்சுவாலை எவ்வளவு உயரத்திற்கு உயருகின்ற-தென்பதில் போட்டி. வளி மண்டலத்தை மாசு படுத்துகின்றோமே என்பது பற்றி யாருமே சிந்தித்தது கிடையாது. எவ்வளவு குப்பை கூழங்களை எரித்துச் சாம்பலாக்கி-யிருப்போம்.**

இக்கருத்துக்கள் அளவெட்டியைச் சுற்றியதாகத்தான் இருக்கும். எனது நோக்கமும் அதுவே. அந்த நாட்கள் நாம் யாருமே வளிமண்டல அழுக்கைப்பற்றியோ ஓசோன் மண்டலத்தின் ஓட்டையைப்பற்றியோ சிந்தித்திருக்காத காலம். பண்டிகைக்காலமாக இருக்கட்டும் அல்லது கோவில் திருவிழாவாக இருக்கட்டும் அளவெட்டிக் கிராமமே அல்லோலகல்லோலப் படும். கோவில் வீதிகள் வீட்டு வளவுகள் கூட்டித் துப்பரவு செய்யப்படும். குப்பை விறாண்டிகள். கூட்டுமாறுகள், மண் வெட்டிகள், கோடரிகள் எல்லாமே சுறுசுறுப்படையத் தொடங்கி விடும். குப்பை கூழங்கள் ஒன்று சேர்க்கப்பட்டு எரியூட்டப்படும். அதுவும் மாலை நேரமாக இருந்துவிட்டால் எரியும் தீச்சுவாலை எவ்வளவு உயரத்திற்கு உயருகின்றதென்பதில் போட்டி. வளி மண்டலத்தை மாசு படுத்துகின்றோமே என்பது பற்றி யாருமே சிந்தித்தது கிடையாது. எவ்வளவு குப்பை கூழங்களை எரித்துச் சாம்பலாக்கியிருப்போம். யாரும் எம்மைத்தடுத்து நிறுத்தியதில்லை. மாறாக 'அதில் குப்பை இருக்கிறது, இதில் குப்பை இருக்கிறது, அதையும் சேர்த்து எரித்துவிடடா தம்பி' என்ற ஊக்குவிப்பைத்தான் கேட்டிருக்கின்றோம். ஆனால் இந்த நிலை இன்னமும் அளவெட்டியில் தொடரும் என நான் நம்பவில்லை. வீட்டுக்கு வீடு படித்த பல பட்டதாரிகள் இருக்கும் காலமிது. சூழல் மாசு படுவது பற்றி பத்திரிகைகளும், வானொலி தொலைக்காட்சிகளும் பக்கம் பக்கமாக, வகை தொகையாக பரப்புரைகள் வழங்கிக் கொண்டிருக்கின்றன. இவைகளை யாரும் அலட்சியப்படுத்துவார்கள் என்று

**அளவெட்டியை நினைக்கும் பொழுதெல்லாம், ஒழுங்கைகள், குச்சொழுங்கைகள் நினைவுக்குவரும். ஒழுங்கைகளிலுள்ள மண் வெயிற் காலங்களில் நடக்கும்**



**பொழுது கால்களில் சுடும். துவிச்சக்கர வண்டி ஓடும் பொழுது ஒழுங்கை மணலில் விழுந்தெழும்புவோம். அப்பொழுதெல்லாம் மணல் ஒழுங்கைகளில் இருந்தெழும் தூசி சூழலை மாசு படுத்துவதை உணர்ந்திலோம்.**

நம்பத்தேவையில்லைத்தான். எனினும் நம் வாலிபர்கள் அதிக கவனம் எடுக்க வேண்டும்.

சூழல் மாசுபடுவதைப்பற்றிச் சிந்திக்கும் பொழுதெல்லாம் அளவெட்டியில் வாழ்ந்து மறைந்து விட்ட ஒரு பெரியவர் என் கண்முன் தோன்றுவார். அவர் வேறுயாருமல்ல. வல்லிபுரம் ஆசிரியர் அவர்களே. 'வல்லிவீர வாத்தியார்' என்று சொன்னால்தான் பல பேருக்கு புரியும். அந்தப் பெரியவரைப்பற்றி கூறுவதற்குப் பல கதைகள் உள்ளன. ஆனால் அது என் நோக்கமல்ல. அவர் நடைமுறைகள் பல எவ்விதம் சூழலை போற்றிப் பாதுகாத்தன என்பதனை மாத்திரம் இங்கு கூறுகின்றேன்.

ஆசிரியர் மாத்திரம் அல்ல அவர். ஒரு திறமையான விவசாயியும் கூட. நான் பல்கலைக்கழகத்திலிருந்து விடுமுறைக்காக வீடு செல்லும் பொழுதெல்லாம் வல்லிபுர வாத்தியார் எம் வீட்டுக்கு வரத்தவறுவதில்லை. வரும்பொழுது கையில் தன் தோட்டத்தில் அந்தந்த நேரத்தில் விளைவித்த - செயற்கை உரமோ, கிருமி நாசினிகளோ பாவிக்காத - கத்தரிக்காய், தக்காளிப்பழம், வெண்டிக்காய், முளைக்கீரை, மரவள்ளிக் கிழங்கு, இராசவள்ளிக்கிழங்கு என கொண்டுவருவார். விடுதியில் தேவதாசன் முறையாக சாப்பிட்டிருக்க மாட்டான். வாய்க்கு-ருசியாகக் காய்ச்சிக் கொடுக்கும்படி சொல்லி அம்மாவிடம் கொடுப்பார். காய் கறிகள் பச்சைப்பசேல் என்று அழகாக குண்டாக இருக்கும். பார்க்கவே ஆசையாக இருக்கும். இப்பொழுது செயற்கை உரமோ கிருமி நாசினிகளோ பாவிக்காத *(Organic)* காயகறிகள்-தான் சாப்பிட வேண்டும் என ஒரு பெரிய கூட்டமே மேலை நாடுகளில் உருவாகிக் கொண்டிருக்கின்றது. எவ்வளவு பணம் கொடுத்தாவது அப்படியான காய்கறிகளைத்தான் தேடி வாங்குகின்றார்கள். காய்கறிகளுக்கு செயற்கை உரமோ, கிருமிநாசினி-களோ பாவிக்கப்படவில்லை என்பதை அத்தாட்சிப் படுத்துவதற்கென்றே பல பெரிய ஸ்தாபனங்கள் உருவாகிக்கொண்டு வருகின்றன. உலகம் பூராவும் அவ்வஸ்தாபனங்களுக்கு கிளைகளும் உருவாகிக் கொண்டு வருகின்றன என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன். ஆனால் என்றோ இதனை உணர்ந்து அதனை வாழ்க்கையிலும் கடைப்பிடித்து வந்தவர் ஆசிரியர் என்பதனை நினைத்து அளவெட்டிவாசிகள் அனைவருமே பெருமைப்-படலாம். செய்ற்கை உர பாவிப்பும் கிருமிநாசினி-களும், விளைவிக்கப்படும் உணவுவகைகளை அருந்துபவர்களின் உடலில் சிறிது சிறிதாக நஞ்சைக் கலந்து கொண்டு வருகின்றதென்பதே இக்கோட்பாட்டாளர்களின் அசைக்க முடியாத நம்பிக்கையாகும். செயற்கை உரத்திற்குப் பதிலாக இயற்கை உரங்களைப் பாவிப்பதனால் குப்பை கூழங்களை வீணாக எரித்து அழிக்க வேண்டிய அவசியம் இல்லை. அவைகளை உக்க வைத்து உரமாகப் பாவித்து, சூழலை மாசுபடுத்துவதைத் தவிர்க்கலாம் என்பதனை வல்லிபுர ஆசிரியர் அன்றே உணர்ந்திருந்தார்.

மனிதன் தனது செய்கைகள் பலவற்றால் சூழலை மாசுபடுத்திக் கொண்டுவருகின்றான். அவைகளைக் கீழே வரிசைப்படுத்தியுள்ளேன்:

1. வாகனங்களுக்கு பெற்றோலிய எரி பொருட்களைப் *(Fossil fuels)* பாவித்தல்
2. தொழிற்சாலைகளில் உற்பத்திக்காக எரி பொருட்கள் பாவித்தல்
3. இரசாயன உற்பத்தி
4. செயற்கைச் சக்தி உற்பத்தி
5. நிலத்தையும் காடுகளையும் எரித்து துப்பரவு செய்தல்
6. எரி தேவைகளுக்கு நிலக்கரியும் விறகும் பாவித்தல்.

இதைத்தவிர தொழிற்சாலைகளில் இருந்து புறப்படும் கழிவுகள், பழைய கட்டிடங்களிலிருந்து உதிரும் காரீயம் கலந்த பூச்சு வர்ணங்கள், தாரிடப்படாத தெருக்களில் இருந்து கிளம்பும் தூசிப் படலங்கள், புதிதாக உருவாகும் நகரங்களினால் ஏற்படும் கழிவுப் பொருட்கள் எல்லாம் சூழலை மாசுபடுத்துகின்றன.

அளவெட்டியை நினைக்கும் பொழுதெல்லாம், ஒழுங்கைகள், குச்சொழுங்கைகள் நினைவுக்குவரும். ஒழுங்கைகளிலுள்ள மண் வெயிற்காலங்களில் நடக்கும் பொழுது கால்களில் சுடும். துவிச்சக்கர வண்டி ஓடும் பொழுது ஒழுங்கை மணலில் விழுந்தெழும்புவோம். அப்பொழுதெல்லாம் மணல் ஒழுங்கைகளில் இருந்தெழும் தூசி சூழலை மாசு படுத்துவதை உணர்ந்திலோம். இப்போது அவ்வொழுங்கைகள் தாரிடப்பட்டிருக்கும் என நம்புகிறேன். அல்லாதவிடத்து அவ்வொழுங்கை-களை தாரிடுவதற்கு நாம் முயற்சி எடுக்க-வேண்டும். தரிசு நிலங்கள் எல்லாம் புற்றரைகளாக மாற்றப்பட வேண்டும். மழை காலங்களில் மண் அரித்துச் செல்லப்படுவதை தடுத்து நிறுத்த வேண்டும். வீதி ஓரங்களில் பழமரங்கள் நடப்பட வேண்டும். கிராமச்சங்கம் அம்மரங்களை பராமரிக்கலாம். அல்லது நடப்படும் பழமரங்கள் யார் வளவுடன் இணைந்திருக்கின்றதோ அவர்கள் அப் பழமரங்களைப் பராமரிப்பதுடன் அதில் வரும் பலன்களையும் அவர்களே பெற்றுக்கொள்ளலாம். ஆனாலும் மரங்கள் நடுவதற்கும் ஆரம்ப பராமரிப்புக்கும் கிராமச்சங்கம் ஆதரவு கொடுக்கலாம்.

கழிவுப் பொருட்களை வீடு வீடாகச் சென்று சேகரித்து அவற்றை ஒதுக்குப்புறமான ஓரிடத்தில் தேக்கிவைத்து அவைகள் உக்கிய பின் உரமாக பாவிப்பதற்கு ஏற்ற வழிவகைகளை கிராமச்சங்கம் ஏற்படுத்திக் கொடுக்கலாம். கிழமையில் ஒரு குறிப்பிட்ட நாளை குப்பைகள் சேகரிக்கும் நாளாக பிரகடனப்படுத்தி அன்று சென்று வீடு வீடாக அவற்றை வாகனம் கொண்டு சேகரிக்கலாம். குப்பைகளை எரித்து சூழலை மாசுபடுத்துவதிலிருந்து கிராமத்தைக் காப்பாற்ற இது உதவும். காலம் செல்ல குப்பைகள், கழிவு பொருட்களிலிருந்து உரம் தயாரிக்கும் ஒரு தொழிற்சாலையையே ஆரம்பிக்கலாம். இப்படிச் செய்வதினால் அளவெட்டிக் கிராமத்தை பச்சைப்பசேலான சோலையாக மாற்ற முடியும்.

சூழல் வெப்பமடைவது பற்றிய விஞ்ஞான விளக்கங்கள் முற்று முழுதாக அறியப்படவில்லையாயினும் மனிதனால் சூழல் மாசுபடுத்தப்படுவது ஒரு காரணம் என்பதில் ஒருவித சந்தேகமும் இல்லை. சூழல் வெப்பமடைவதால் ஏற்படும் ஆபத்துக்களாவன:

1. ஒரு பக்கத்தில் அதிகரித்து வரும் வெள்ளப் பெருக்குகளும் மறுபுறத்தில் நீண்டு கொண்டு போகும் கோடைகாலமும்.
2. அதிகரித்துவரும் நோய்கள், ஒட்டுண்ணி வகைகள், பிரயோசனமற்ற களைப்பூண்டுகள்.
3. கடற்கொந்தளிப்பால் ஏற்படும் மண் அரிப்பு.
4. அழிந்துவரும் ஒருசில உயிரினங்கள், மீன்வகைள் அத்துடன் பயிர்கள் சிலவற்றின் மறைவு.
5. மாறிவரும் காலநிலைகள்

இவற்றை முற்று முழுதாக தடுத்து நிறுத்திவிட முடியாவிட்டாலும் ஏற்படும் ஆபத்துக்களை சூழலைப் பாதுகாப்பதனால் ஓரளவிற்காவது குறைக்கலாம்.

இது கணினிகளின் காலம். இக்காலம் நாம் நினைப்பதைவிட மிக மிக வேகமாக முன்னேறிக் கொண்டு வருகின்றது. அந்த முன்னேற்றத்திற்கு ஏற்ற வேகத்தில் அளவெட்டியும் தன்னை மாற்றிக் கொள்ளாவிட்டால் பல விதங்களில் அளவெட்டி பின்னோக்கிவிட வேண்டி ஏற்பட்டு விடலாம். எனவே அளவெட்டியையும் காலத்திற்கு ஏற்ப நவீனமயப்படுத்த வெளியிலிருக்கும் நம்போன்றவர்கள் முயற்சி எடுக்கலாம். கணினி பற்றி போதிக்கும் கல்லூரிகளை ஏற்படுத்தலாம். அதற்கு வேண்டிய புத்தகங்கள், உபகரணங்கள், கணினி போன்றவைகளை பயிற்சிக்கூடம், கல்லூரிகளுக்கு அன்பளிப்புச் செய்யலாம். விடுமுறையில் செல்லும் பொழுது தங்கள் நேரடி உழைப்பை வழங்கலாம். இன்றைய நிலை இவ்வுதவிகளைச் செய்வதற்கு ஒரு வேளை சாதகமில்லாது இருக்கலாம். ஆனாலும் இவற்றை மனதில் கொண்டு செயற்பட்டால் இன்றில்லாவிட்டாலும் என்றோ ஒரு நாளைக்கு உதவக் கூடியதாக இருக்கும்.



**கலாநிதி அ. தேவதாசன் இலங்கை தேயிலை ஆராய்ச்சி நிலையத்தில் தொழிநுட்பவியலாளராக நீண்ட காலம் பணியாற்றியவர். தேயிலை ஆராய்ச்சி, ஏற்றுமதி தொடர்பான பல தனியார் நிறுவனங்களுக்கு ஆலோசகராகவும், பணிப்பாளராகவும் கடமையாற்றிய பின் தற்பொழுது நியூசிலாந்தில் வசிக்கிறார். ஊற்று, அறிவொளி உள்ளிட்ட பல சஞ்சிகைகளில் இவரது விஞ்ஞான, அறிவியல் கட்டுரைகள் வெளிவந்துள்ளன. அவ்வப்போது சிறுகதைகள், குறுநாவல்கள் என்பனவும் எழுதி வருபவர்.**

---

The Arunodayans in Canada are toiling very hard and making strenuous efforts to bring back the past elegance and glory of the ALMAMTER amidst the booming of cannons the roaring of tanks and aircrafts and hissing of shells in the so called "Pearl of the Indian Ocean". This reminds me the courage, fearlessness and tirelessness of the Aurunodayans to awake at every calamity and rise up and cheer up at every fall and distraction and to keep alight the burning torch in full brightness till the goal is reached.

I wish the past pupils of Arunodaya all success in their endeavour to rejuvenate Mother Arunodaya and to restore its pride and glory in full bloom. I also take this opportunity to remember and pay tribute to the pioneers of this school for their devoted and magnificent works.

N. Sivapathan
Retired Assistant Director of Education.

65/1, Hampden Lane,
Colombo 06,
Sri Lanka



புனர்நிர்மாணத்தின்பின் அளவெட்டி அரசினர் வைத்தியசாலையின் முகப்புத் தோற்றம்

# அளவெட்டி அரசினர் வைத்தியசாலையும் அதன் எதிர்காலமும்

சுமார் 75 வருடங்களுக்கு முன்பு அளவெட்டியின் மையப்பகுதியில் சங்கானை - வல்லை வீதியின் வடபுறத்தில் அரசினர் வைத்தியசாலையும் 55 வருடங்களின் முன் தென்புறத்தில் பிரசவவிடுதியும் ஆரம்பிக்கப்பட்டன. இவை இரண்டும் 'அளவெட்டி ஆஸ்பத்திரி' எனப் பொதுவாக அழைக்கப்பட்ட போதிலும் இன்றைய பதப் பிரயோகத்தில் நோயாளர் சிகிச்சை பெறும் நிலையம் 'மத்திய மருந்தகம்' எனவும், பிரசவவிடுதி 'மகப்பேற்று நிலையம்' எனவும் அழைக்கப்படுகின்றன. இவற்றுள் மத்திய மருந்தகம் வாடகைக்கு அமர்த்தப்பட்ட தனியார் வீடு ஒன்றில் இயங்கிவந்தது எனினும் மகப்பேற்று நிலையம் சுகாதாரத் திணைக்களத்திற்குச் சொந்தமான கட்டிடத்தில் ஆரம்பிக்கப்பட்டது. இம்மகப்பேற்று நிலையத்துக்கான அடிக்கல் 1942. 07. 29ஆம் திகதி நாட்டப்பட்டது என்ற விபரம் இக்கட்டிடத்தில் பொறிக்கப்பட்டுள்ளது. இக்கட்டிடம் அமைப்பதற்கான காணி பொதுமக்களால் நன்கொடையாக வழங்கப்பட்டது.

இவ்வைத்திய நிலையங்கள் 'கீளிச்சந்தை ஆஸ்பத்திரி' என அக்காலத்தில் அழைக்கப்பட்டன. இன்றும் சில முதியோர் அப்பெயர்கொண்டு அழைப்பதைக் காணமுடிகிறது. தற்போது டச்சு-வீதியில் அமைந்துள்ள சமாஜ-மண்டபத்திற்கு அருகில் கீளிச்சந்தை என்றழைக்கப்பட்ட ஒரு சந்தை அக்காலத்தில் இயங்கி வந்ததன் காரணமாகவே அச்சந்தையின் சுற்றாடலில் இயங்கிய இவ்வைத்திய நிலையங்களும் இப்பெயர் கொண்டு அழைக்கப்பட்டன.

பழையது கழிதலும் புதியன புகுதலும் இயற்கையின் நியதி எனப்படுகிறதாயினும் இவ் வைத்திய நிலையங்களைப் பொறுத்தளவில் புதியன எவையும் புகுந்திடவில்லை என்றே கூறலாம். எனினும் 1990ம் ஆண்டளவில் மகப்பேற்று நிலையம் அமைந்துள்ள காணிக்குள் மத்திய மருந்தகத்திற்கான ஒரு கட்டிடத்தையும் கட்டுவதற்குச் சுகாதாரத் திணைக்களம் முடிவுசெய்தது. அதன் பயனாக அத்திவாரம் கட்டி முடிக்கப்பட்ட போதிலும் இங்கு ஏற்பட்ட களநிலை மாற்றங்களால் மீதி வேலை தொடரப்படவில்லை.

1995ஆம் ஆண்டின் பின்பகுதியில் பாரிய இடப்பெயர்வு ஏற்பட்ட பிற்பாடு 1998ல் மக்கள் மீளக்குடியமரத் தொடங்கினர். இக்காலகட்டத்தில் அளவெட்டி தெற்கில் தனியார் வீடு ஒன்றில் ஆரம்பிக்கப்பட்ட மத்திய மருந்தகம் முன்பு மகப்பேற்று நிலையம் இயங்கிய கட்டிடத்திற்கு மாற்றப்பட்டது. மகப்பேற்று நிலையம் மீளத் திறக்கப்படவில்லை. இந்நிலையில் வலிவடக்கு உதவி அரசாங்க அதிபர் எடுத்த பெரு முயற்சியின் பயனாக அத்திவார அளவோடு நிறுத்தப்பட்டிருந்த மத்திய மருந்தகக் கட்டிட வேலை தொடரப்பட்டுக் கூரைத் தகடுகள் வேயப்பட்ட நிலையில் நிதிப்பற்றாக்குறை ஏற்படவே பொது மக்களின் பங்களிப்புக் கோரப்பட்டது. இவ்விடயமறிந்த கனடாவாழ் அளவெட்டி மக்கள் இவ்வைத்தியசாலையின் வளர்ச்சிக்கு நிதியுதவி செய்ய முன்வந்தனர். இவர்களது நிதி உதவியைப்பெற்று நேர்மையான வழியிற் பயன்படுத்துவதற்காகவும் பொது



**அளவெட்டி அரசினர் வைத்தியசாலை உத்தியோகத்தர்கள்**

மக்களின் பங்களிப்பைப் பெற்றுக் கொள்ளவும், அளவெட்டி அரசினர் வைத்தியசாலை நோயாளர் நலன்புரிச்சங்கம் எனும் அமைப்பு உருவாக்கப்-பட்டுள்ளது. கனடாவில் இருந்து பெறப்பட்ட நிதியைப்பயன்படுத்தி இவ்வைத்தியசாலையின் எல்லையில் வீதியோரமாக இருந்த காணியொன்று சுகாதாரத் திணைக்களத்திற்குப் பெற்றுக் கொடுக்கப்பட்டுள்ளதுடன் மேலே கூறப்பட்ட மருந்தகக் கட்டிட வேலையைப் பூரணப்படுத்தவும் இச்சங்கம் முயன்று வருகிறது.

தற்போது உள்ள நிலைக்கு அடுத்த தரத்திற்கு இவ்வைத்திய-சாலைத் தரமுயர்த்தித்தர வேண்டுமென அளவெட்டியில் உள்ள சமூக நிறுவனங்கள் விடுத்த கோரிக்கை சுகாதாரத் திணைக்-களத்தால் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளமை இங்கு குறிப்பிடத்தக்கது. மேலும், இவ்வைத்தியசாலையின் பயன்பாடு, எதிர்காலத் தேவை போன்ற அம்சங்கள் தொடர்பாக ஐக்கிய நாடுகள் சபையின் அபிவிருத்தித்திட்ட (யூ. என். டி. பி) அதிகாரிகள் நடத்திய ஆய்வின் பின் இதுவரைகாலமும் 3 கட்டில்களைக் கொண்டிருந்த மகப்பேற்று நிலையம் 15 கட்டில்களுடன் நவீன வசதிகள் கொண்டதாக விரிவாக்கம் செய்யப்படவுள்ளது. இவ்வேலை (யூ. என். டி. பி) நிதியுதவியுடன் எதிர்வரும் சித்திரை புத்தாண்டிற்கு முன் நிறைவுபெறும் என எதிர்பார்க்கப்படுகிறது.

அளவெட்டி அரசினர் வைத்தியசாலையில் இடம்பெற்றுவரும் அபிவிருத்திப் பணிகளைக் கேள்வியுற்ற யாழ். மாவட்டப் பாராளுமன்ற உறுப்பினரும் இவ்வூரில் பிறந்தவருமான திரு. உமாபதிசிவம் பாஸ்கரன் அவர்கள் தாமாகவே முன்வந்து பெருந்தெருக்கள் அமைச்சிடம் செய்த சிபாரிசின் விளைவாக இவ்வைத்தியசாலை-யின் மேற்கு மற்றும் கிழக்கு எல்லைகளின் உட்புறமாகத் தார் வீதிகள் அமைக்கும் வேலைகள் ஆரம்பிக்கப்பட்டுள்ளன.

குறுகிய கால இடைவெளிக்குள் பல முன்னேற்றங்களை இவ்வைத்தியசாலை கண்டு வருகிறது. இதற்குக் காரணமாக உள்நாட்டிலும் வெளிநாடுகளிலும் உள்ள நலன் விரும்பிகள் செயற்பட்டு வருகின்றனர். முன் முயற்சி இன்றித் தானாகவே எதுவும் நடைபெறுவதில்லை. இவ்வைத்தியசாலை தரமுயர்த்தப்-பட்டு மேன்மேலும் வளர்ச்சி அடைவதற்கான அறிகுறிகள் தென்படுகின்றன. தொடர்ந்து வளர்ச்சியடைவதற்கு நிலப்பற்றாக்-குறை ஒரு காரணமாக அமை-யக்கூடாது என்பதில் நோயாளர் நலன்புரிச்சங்கம் கவனமெடுத்து வருகின்றது.

எதிர்காலத்தில நோயாளர்கள் தங்கிச் சிகிச்சை பெறக்கூடிய-தாக இவ்வைத்தியசாலை தர-முயர்த்தப்படும் என நம்பப்படு-கிறது. இந்நிலை ஏற்படும் பட்-சத்தில் சிகிச்சைக்காகத் தூர இடங்களுக்குச் செல்ல வேண்டிய அவலநிலை நீங்கி இப்பகுதி



அளவெட்டி அரசினர் வைத்தியசாலை நலன்புரிச்சங்க உறுப்பினர்கள்
இருப்பவர்கள்:
N.S. முருகையா(உபதலைவர்) , V. யோகேஸ்வரன்(வைத்தியஅதிகாரி),
K. நாகலிங்கம்(தலைவர்), P. சுந்தரலிங்கம்(செயலாளர்), M. பத்மநாதன்
நிற்பவர்கள்:
K. ஜெயசீலன், K. சின்னத்தம்பி, S. ஐங்கரன், S. தவராசா, S. கந்தசாமி(பொருளாளர்)

மக்கள் பயனடைவார்கள்.

மக்கள் சேவையே மகேசன் சேவை எனக் கொண்டு அனைவரும் ஒன்றுபட்டுச் செயற்பட்டால் எத்தடையும் நீங்கி இவ்வைத்தியசாலை அபிவிருத்தியடையும் என்பதில் ஐயமில்லை.

**பொ. சுந்தரலிங்கம்,**
செயலாளர்,
அ. அ. வை. நோ. ந. பு. சங்கம்

# அளவெட்டி சனத்தொகை (1990லும் 2000லும்)

| கிராமசேவகர் பிரிவு | 1990 | | 2000 | |
|---|---|---|---|---|
| | குடும்பம் | அங்கத்தவர் | குடும்பம் | அங்கத்தவர் |
| அளவெட்டி வடக்கு | 550 | 2316 | 237 | 904 |
| அளவெட்டி மத்தி | 550 | 2316 | 193 | 607 |
| அளவெட்டி கிழக்கு | 450 | 1890 | 337 | 1240 |
| அளவெட்டி கணேஸ்வரம் | 380 | 1596 | 214 | 709 |
| அளவெட்டி தெற்கு | 500 | 2100 | 467 | 1793 |
| அளவெட்டி மேற்கு | 700 | 2740 | 459 | 1523 |
| மொத்தம் | 3130 | 12958 | 1907 | 6776 |




# அளவெட்டி-மல்லாகம் ப.நோ.கூ சங்கத்தின் தோற்றமும் வளர்ச்சியும்

**1942ம்** ஆண்டு உலகப்போர் உக்கிரமாக நடைபெற்ற வேளையில் மக்களுக்குச் சீரான உணவு விநியோகம் செய்வதற்காக அக்காலப் பிரதமர் டி. எஸ். சேனநாயக்கா அவர்கள் நாட்டின் பல பாகங்களிலும் ஐக்கிய பண்டசாலைகளை நிறுவும் திட்டமொன்றை நடைமுறைப்படுத்தினார். அத்திட்டத்திற்கமைய அளவெட்டியின் பல பாகங்களிலும் ஐக்கிய பண்டசாலைகள் திறக்கப்பட்டன. ஒவ்வொரு திக்கிலும் அமைந்த பண்டசாலைகள் போதாவென்று சில கோணத் திசைகளிலும் அமைக்கப்பட்டன. மத்தியிலும் ஒரு பண்டசாலை திறந்து வைக்கப்பட்டது. அப்பண்டசாலைகளிற் சில நிர்வாகச் சீர்கேட்டினால் இயங்க முடியாமற் போயின. அவை திறந்த வேகத்தில் மூடவும் பட்டன. அளவெட்டி மத்தியில் அமைந்த பண்டசாலை மிகத் திறமையாக இயங்கி வந்தது. அதன் முகாமையாளராக இருந்தவர், 'மனேச்சர்' என்று எல்லோராலும் அன்பாக அழைக்கப்படும் திரு. க. கணபதிப்பிள்ளை அவர்களே. அவருடைய முகாமைத்துவத்தின் சிறப்பே அப்பண்டசாலையின் உன்னத நிலைக்குக் காரணமெனலாம்.

கூட்டுறவு அபிவிருத்தி ஆணையாளராக அன்றிருந்த கே. எஸ். பொன்னுத்துரை அவர்கள் அப்பண்டசாலையைப் பல நோக்குக் கூட்டுறவுச் சங்கமாகத் தரம் உயர்த்தினார். அதனால் விவசாயிகளிடமிருந்து வெங்காயத்தைக் கொள்வனவு செய்தல், சந்தைப் படுத்துதல், வெங்காயக் கூடையிழைத்தல் முதலிய பலப்பல உழைப்புக்கான வாய்ப்புக்கள் இச்சங்கத்திற்கு கிடைத்தன. அப்பொழுது வெங்காய உற்பத்தியாளர் பலர் அங்கம் வகித்த பண்டசாலையாக அளவெட்டி மேற்கு ஐக்கிய பண்டசாலை

அளவெட்டி மத்தியில் அமைந்த பண்டசாலை மிகத் திறமையாக இயங்கி வந்தது. அதன் முகாமையாளராக இருந்தவர்,



'மனேச்சர்' என்று எல்லோராலும் அன்பாக அழைக்கப்படும் திரு. க. கணபதிப்பிள்ளை அவர்களே. அவருடைய முகாமைத்துவத்தின் சிறப்பே அப்பண்டசாலையின் உன்னத நிலைக்குக் காரணமெனலாம்.

இருந்ததனால் அதனையும் தரமுயர்த்துமாறு அப்பண்டசாலை நிர்வாகம் கூட்டுறவு அபிவிருத்தி உதவி ஆணையாளருக்கு நெருக்குதல் கொடுத்தது. அந்நெருக்குதலைப் புறக்கணிக்கவும் புதிய பலநோக்குக் கூட்டுறவுச் சங்கத்திற்கு எதிராக இன்னொன்றைத் தரமுயர்த்தவும் இயலாத கூட்டுறவுத்துறை அதிகாரிகள் மக்களிடையே விரோதத்தைத் தூண்டிவிட முனைந்தனர். அதனால் ப. நோ. கூ. சங்கம் அமைப்பதற்கு ஆதரவாக ஒரு தீர்மானம் பலநோக்குக் கூட்டுறவுச் சங்கம் நிறைவேற்றித் தரும்படி கேட்டனர். அதனால் பலநோக்குக் கூட்டுறவுச் சங்க வருடாந்தக் கூட்டத்தில் அளவெட்டி மேற்கு ஐக்கிய பண்டசாலை ஒரு தீர்மானத்தை முறைப்படி அனுப்பிவைக்க அத்தீர்மானம் நிகழ்ச்சி நிரலில் இடம்பெறாமல் பலநோக்குக் கூட்டுறவுச் சங்கம் தடுத்து விட்டுக் கூட்டத்தை நடத்தியது. கூட்டஞ்செல்லு படியாகாதென அங்கத்தவர் பலர் கூச்சலிட்டுக் கூட்டத்தை குழப்பினர்.

கூட்டம் குழம்பியதன்மேல் அங்கத்தவர்கள் முறையாக அனுப்பும் பிரேரணை ஒன்றைப் பொதுச் சபைக்கு விடாது தடுக்கும் அதிகாரம் நிர்வாகசபைக்கு உண்டோ என்னும் வினா எழுந்தது. பல நோக்குக் கூட்டுறவுச் சங்கம் இதற்குத் தீர்க்கமான முடிவு தரும்படி கூட்டுறவு ஆணையாளரிடம் மனுச் செய்தது. நிர்வாகத்திற்கு அதிகாரம் இல்லை என்ற பதில் அவரிடம் இருந்து கிடைத்ததால் அந்நிர்வாக சபை உறுப்பினர் எல்லோரும் பதவி விலகினர். இதனால் பலநோக்குக் கூட்டுறவுச் சங்கத்துக்கு புதிய நிர்வாக சபைத் தேர்தல் நடைபெற்றது. அந்நேரத்தில் தேர்ந்தெடுக்கப்பட்டோர் அனைவரும் அளவெட்டி மேற்கு ஐக்கிய பண்டகசாலை உறுப்பினராயும் அனுதாபிகளாயும் இருந்த படியால் வேறொரு பலநோக்குக் கூட்டுறவுச் சங்கம் அமைக்கும் தீவிரம் தணிந்து போனது.

புதிய நிர்வாகசபையில் திரு. வ. பொன்னம்பலம் தலைவராகவும் பண்டிதர் க. நாகலிங்கம் உபதலைவராகவும் இருந்தனர். இவர்களின் முயற்சியால் புதிய கட்டிடத் திறப்புவிழா நடைபெற்றது. அளவெட்டியில் இருந்த பல பண்டசாலைகள் அளவெட்டி பலநோக்குக் கூட்டுறவுச் சங்கத்தின் கீழ் இயங்கலாயின. இந்தச் சங்கத்தின் இத்தகைய செயற்பாடு இலங்கை முழுவதிலும் இருந்த கூட்டுறவாளர்களின் கவனத்தைக் கவர்ந்தது. இந்தியாவில் இச்சங்கச் செயற்பாடு பாராட்டப்பட்டதாகப் பத்திரிகைச் செய்தி வெளிவந்தது. யோகி சுத்தானந்த பாரதியார், "கூட்டுறவின் பெருமையை அறிய வேண்டின் இலங்கையின் யாழ்ப்பாணத்து அளவெட்டியிலுள்ள பல நோக்குக் கூட்டுறவுச் சங்கத்தைச் சென்று பாருங்கள்" என்று கூறியிருந்தார். பிற்காலத்தில் இலங்கை அரசாங்கம் பல கிளைகள் கொண்ட ப. நோ. கூட்டுறவுச் சங்கங்களை இலங்கை முழுவதிலும் அமைப்பதற்கு வழிகாட்டியது, எமது அளவெட்டி பல நோக்குக் கூட்டுறவுச் சங்கமே என்பதில் தவறேதுமில்லை.

திரு. வ. பொன்னம்பலம் அவர்கள் ஆசிரிய இடமாற்றம் பெற்று முல்லைத்தீவுக்குச் சென்ற போது உப தலைவராயிருந்த பண்டிதர் க. நாகலிங்கம் அவர்கள் வலி வடக்கு பண்டசாலைகளின் சமாஜத் தலைவராக இருந்தபடியால் இச்சங்கத் தலைமைப் பொறுப்பை ஏற்க மறுத்ததால் திரு. ப. முத்தையா அவர்கள் தலைவராக்கப்பட்டார். சில ஆண்டுகளின் பின் திரு. வ. பொன்னம்பலம் மீண்டும் அப்பொறுப்பை ஏற்றுக் கொண்டார். இச்சங்கத்தின் முதலாவது தலைவராகத் திரு. வ. பொன்னம்பலமே கடமை புரிந்தார். அதன்பின் சுதந்திரக்கட்சி ஆதரவாளர் திரு. த. பூ. முருகையா தலைவரானார். அதன்பின் நடைபெற்ற பாராளுமன்றத் தேர்தலில் தமிழர் விடுதலைக் கூட்டணியைச் சேர்ந்த திரு. அ. அமிர்தலிங்கம் அவர்கள் காங்கேசன்துறைப் பாராளுமன்ற உறுப்பினராகத் தெரிவு செய்யப்பட்டதால் இயக்குனர்களை நியமிக்கும் பொறுப்பு அவர் கைக்கு வந்தது. அவர் நியமித்த இயக்குனர் சபைத் தலைவராகப் பண்டிதர் க. நாகலிங்கம் நியமனம் பெற்றார். பத்தாண்டுகள் வரை அவர் தலைவராக இருந்தார். திரு. நா. பாலசுப்பிரமணியம், திரு. கு. கந்தசாமி, திரு. சோ. அருணாச்சலம் முதலியோரும் தலைவர் பதவியை ஏற்றுள்ளனர். திரு. ப. கனகரத்தினம் அவர்கள் மூன்றாண்டுகள் வரை தலைவர் பதவியை ஏற்று நடாத்தியுள்ளார். அவர் தலைவராக இருந்த காலத்திலேதான் யாழ்ப்பாண மக்களின் புலப்பெயர்வு இடம் பெற்றது. இக்காலத்தில் ஓரளவுக்குச் சங்கச் சொத்தினைப் பாதுகாத்த இயக்குனர் சபை உறுப்பினர்களுக்கும் ஊழியர்களுக்கும் நன்றி தெரிவிப்பது சங்கத்தோடு தொடர்புபட்ட அனைவரதும் கடமையாகும்.

சங்கம் உரிய இடத்திற்கு வரமுடியாத நிலையில் அதன் தலைமையகம் இணுவிலில் இயங்கி வந்தது. கிளைகள் பல பாகங்களிலும் திறக்கப்பட்டுச் சங்கத்தினூழியர்களுக்குச் சம்பளமும் வழங்கப்பட்டது பாராட்டுக்குரியதே. 1998ம் ஆண்டு மார்கழி மாதத்தில் சங்கம் அளவெட்டிக்கு வந்தபோது அதன் சொத்துக்கள் பல இழக்கப்பட்ட நிலையிலிருந்தும் வெளிநாட்டு நிறுவனங்களின் உதவியால் கட்டிடங்கள் ஒருவாறு திருத்தப்பட்டன. சங்கத்தின் இரு லொறிகளும் சங்க ஊழியர்களால் காப்பாற்றப்பட்டது அரும்பெரும் சாதனையாகும்.

இது மட்டுமல்லாமல் சங்கத்துக்கு பயன்படக்கூடிய

அரச சொத்துக் கூட பாதுகாக்கப்பட்டுள்ளது. பெற்றோலியக் கூட்டுத்தாபனத்துக்கு சொந்தமான சங்கத்திற்கு பயன்படக்கூடிய "எயர் கொம்பிரேசர்" (காற்றடிக்கும் இயந்திரம்) என்னும் பாரிய உருப்படி அளவெட்டி, இணுவில், பளை, உசன் என எல்லா இடங்களுக்கும் கொண்டு சென்று பாதுகாக்கப்பட்டு திரும்பவும் பழைய இடமான மல்லாகம் பெற்றோல் நிலையத்தில் பொருத்தப்பட்டுள்ளது. இந்த வகையில் மற்றைய சங்கங்களுடன் ஒப்பிடும் இடத்து தனது சொத்துக்களைப் பாதுகாத்த வகையில் அளவெட்டி மல்லாகம் ப. நோ. கூ. சங்கம் முன்னணி வகிக்கின்றது.

இத்துடன் இன்று தனது சொந்த இடத்தில் வந்து மீண்டும் பழைய நிலைக்கு, பல துறையிலும் முன்னணியில் நின்று வளர்ச்சியடைந்து கூட்டுறவுத் துறைக்கு ஏற்ற மெருகுடன் அங்கத்தவர்களுக்கும், பாவனையாளர்களுக்கும் சேவையாற்றி வருகின்றது. உதாரணமாக யு. என். டி. பி. தாபனத்தினால் வழங்கப்பட்ட சுழற்சி முறையிலான தொழில் முயற்சிக்கான திட்டத்தைச் செயற்படுத்துவதில் அளவெட்டி - மல்லாகம் ப. நோ. கூ. சங்கம் முன்னணியில் நின்று தொடர்ந்தும் சேவையாற்றி வருகின்றது. இதனால் பல துறையினரதும் வரவேற்பு கிடைத்துள்ளது. மேலும் புனர் அமைப்பு வேலைகளுக்குரிய சேவைகளையும் மக்களுக்குப் பிரதான சேவையாகக் கருதி அதனையும் மேற்கொண்டு வருகின்றது. சீமெந்து, மணல், கூரைத் தகடுகள் போன்ற பொருட்களை எமது பிரதேசங்களுக்கு வழங்கி உதவுகின்றது.

இவ்வாறான யுத்த சூழ்நிலையில் பாதிப்படைந்த பிரதேசமாக இருந்த போதிலும் பாதிக்கப்பட்ட சங்கங்களில் அளவெட்டி மல்லாகம் ப. நோ. கூ. சங்கம் இன்னும் முன்னணியில் நின்று இலாபகரமாகவும் இயங்கி மக்களுக்குச் சேவையாற்றி வருகின்றது என்றால் தொடர்ந்து வரும் நேர்மையான தலைமைத்துவமே ஒரு காரணமாகும்.

**க. ஜெயசீலன்**
**பொதுமுகாமையாளர்,**
**அளவெட்டி மல்லாகம் ப. நோ. கூ. சங்கம்,**
**அளவெட்டி.**

# அளவெட்டி சைவ வாலிப சங்கம்

யாழ்ப்பாணத்தில் சைவமும், தமிழும் தழைத்தோங்க அரும்பாடுபட்டுழைத்த பெரியார் ஆறுமுகநாவலராவார். அன்னாரின் பணிகள் தொடரவும் குறிக்கோள்களை மேம்படுத்தவும் பல பொது நிறுனங்கள் இன்றும் முன்னின்று செயற்படுகின்றன.

சைவசமயம், தமிழ்மொழி, பல்கலை, கலாச்சாரம் ஆகியவற்றில் சிறந்து விளங்கும் அளவையூரில் நாவலர் பெருமானின் குறிக்கோள்கள் மேம்பட அரும்பணியாற்றி வருவது அளவெட்டி சைவ வாலிப சங்கம்.
இச்சங்கம் 1971ஆம் ஆண்டு ஆரம்பிக்கப்பட்டது. சங்கம் ஆரம்பிக்கப்பட்டு வளர்ச்சி பெற்று வந்த கால கட்டத்தில் அப்போதைய மூதறிஞர்கள், குறிப்பாக திரு. கணபதிப்பிள்ளை (சின்னத்தம்பி) உபாத்தியாயர், சுப்பையா உபாத்தியாயர், சட்டத்தரணி இளையதம்பி, நொத்தாரிசு சபாபதிப்பிள்ளை, கண்வைத்தியர் செல்வவிநாயகமூர்த்தி, பாடசாலை ஆசிரியர்கள் பலர் அயராது உழைத்துச் சங்கப் பணிகளைச் சிறப்பாகவே முன்னெடுத்து வழிநடத்தினர்.

சங்கம் மேலும் வளர்ச்சி பெற்ற காலத்தில் சங்கத்தின் மகுட வாசகம் "வீடு பெற நில்" என்னும் தத்துவத்தை பாடசாலைச் சிறார்களின் மனங்களில் பதியவைக்கும் நோக்கில், அளவெட்டியில் அமைந்த அனைத்துப் பாடசாலைகளிலும் சைவ சமய வளர்ச்சிக்கான திட்டங்கள் சமயச் சொற்பொழிவுகள் நடத்தல், சமய குரவர் சந்தான குருவர் குருபூசைகள், பாடசாலைகளில் சமய பாடப் பரீட்சைகள், பண்ணிசை, பேச்சு, புராணபடனம், கதாப்பிரசங்கம், நீதிச் செய்யுள் மனனப்போட்டி, சிவதீட்சை, வழங்குதல் ஆகியவற்றைத் திறம்படச் செய்துள்ளமை பாராட்டுக்குரியதாகும்.

இவ்வாறான செயற் திட்டங்களைத் தங்களின் அயராத உழைப்பாலும், அர்ப்பணிப்பாலும் நிறைவு செய்த சான்றோரின் பட்டியல் மிகவும் நீண்டதாகும். குறிப்பாக ஆசிரியர் ச. சிதம்பரப்பிள்ளை (பொன்னையா மாஸ்டர்), ஆசிரியர் செ. மயில்வாகனம், ஆசிரியர் அ. விஸ்வநாதன், பண்டிதர் க. நாகலிங்கம், ஆசிரியர் வை. க. சிற்றம்பலம், ஆசிரியர் கு. வ. கந்தையா, ஆசிரியர் இ. முருகேசு, சோ. அருணாசலம், வ. தம்பிப்பிள்ளை, ஆசிரியர் மு. செல்லையா. மேலும், சங்கத்தில் ஆயுட்கால அங்கத்தவராகவும் நாற்பது வருடங்கள்வரை தனாதிகாரியாகவும் செயற்பட்டவரும் ஆரம்பத்தில் சுமாராக 650 ரூபாய் கையிருப்புடன் தனது தனாதிகாரிப் பொறுப்பை ஏற்று, சேவைக்கால நிறைவில் அத்தொகையை ஒரு லட்சம்வரை உயர்த்திப் பாதுகாத்த பெருமை உடையவரும் சங்கத்தின் சார்பில் நடைபெறும் குருபூசைகள், கலை கலாச்சார நிகழ்வுகளில் இறுதிவரை அயராது உழைத்தவரும் அமரர் கு. வ. கந்தையா ஆவர்.

சங்கத்தின் செயற் திட்டங்களில் ஒன்றான சமயகுரவர் குருபூசைகள் அளவெட்டியில் அமைந்துள்ள நான்கு கோயில்களிலும், சந்தான குரவர் குருபூசைகள் நான்கு பாடசாலைகளிலும் சிறப்பாக நடந்தேறி வந்தமை பாராட்டுக்குரியதாகும். இத்திட்டத்தில் சம்பந்தர் குருபூசை அழகொல்லையிலும் சுந்தரமூர்த்தி நாயனார் குருபூசை கும்பழாவளையிலும், மாணிக்கவாசகர் குருபூசை கேணிக்கரை வைரவர் ஆலயத்திலும் இன்றும் சிறப்பாக நடைபெற்று வருகின்றன. பாடசாலைகளில் நடந்து வந்த சந்தான குரவர் குருபூசைகள் நாளடைவில் விடுபட்டு அளவெட்டி சற்குணசிங்க சுவாமிகளின் திருவடி நிழல் மடத்தில் சங்க அனுசரணையுடன் நடைபெற்று வருகின்றன.

பதினைந்து உறுப்பினர்களைக் கொண்ட நிர்வாக சபையில் அளவெட்டியில் அமைந்த நான்கு பாடசாலை அதிபர்களும், அங்கத்தவர்களாக இருந்து சங்க செயற்பாடுகளுக்கு ஊக்கமும், ஆக்கமும் வழங்கி வந்தனர். ஆனால், கால ஓட்டத்தில் கல்விப்பகுதியில் ஏற்பட்ட மாற்றங்கள் காரணமாய், அப்போதைய நிலைமாறி இப்போது பாடசாலை அதிபர்களோ, ஆசிரியர்களோ சங்க நிர்வாக சபையில் இடம்பெறாதிருப்பது கவலைக்குரிய விடயமாகும்.

கடந்த ஒரு தசாப்தத்திற்கு முன் நாட்டு நிலைமை காரணமாக நிர்வாக நிலைமை சீரற்றுப் போகும் நிலையில் இன்றைய நிர்வாக சபை பொறுப்பேற்றது. புதிய நிர்வாகம் சோர்வுற்றிருந்த சங்க செயற் திட்டங்களை மறுசீரமைத்து புத்துயிர் வழங்கவிருந்த சமயம், நாட்டுநிலைமை காரணமாய் மக்கள் இடம்பெயர வேண்டிய நிலைமை ஏற்பட்டது. இதனால் சங்கத்தின் செயற்பாடுகள் யாவும் மீண்டும் ஸ்தம்பித நியைில் இருக்க நேர்ந்தது. தொடர்ந்து மக்கள் தத்தமது பகுதிகளில் ஓரளவு மீளக்குடியமர, சங்கமும் தனது பணிகளைப் பல பின்னடைவுகள் மத்தியில் செய் து வருவது பாராட்டுக்குரியதாகும்.

இந்த வகையில், தற்சமயம் பாடசாலைகள் தோறும் பிரதி வெள்ளிக்கிழமைகளில் சைவ நெறிக் கருத்துரை வழங்கும் நிகழ்வை நடத்தி வருவதோடு வருடம் ஒருமுறை சிவதீட்சை வழங்கும் ஒழுங்கையும் மேற்கொண்டு வருகிறது. அத்துடன் சமயகுரவர், சந்தான குரவர் குருபூசைகளையும் சீராக நடைமுறைப்படுத்தி வருகின்றது. மேலும், பண்ணிசை வகுப்பு, சமய பாடப் பரீட்சை, மனனப் போட்டி ஆகியவற்றையும் நடத்த நடவடிக்கைகள் எடுத்து வருகின்றது.

எண்பத்து மூன்று வருடங்களுக்கு முன்னர் ஆரம்பிக்கப்பட்டு பல வகையிலும் சைவத்திற்கும் தமிழுக்கும், பாரம்பரிய கலைகளுக்கும் அரும் தொண்டாற்றி வரும் எமது சங்கத்திற்கு நிரந்தரமான ஓர் இடம் இல்லாதிருப்பது பாரிய கவலைக்குரிய விடயமாகும். இக்குறை கட்டாயமாக நிறைவு செய்யப்பட வேண்டும். அதற்கு சங்கத்துடன் தோழமையுடையவர்களும் வெளிநாட்டில் உள்ள அன்பர்களும் முன்வந்து ஒத்துழைப்பு வழங்கும் வண்ணம் வேண்டுகோள் விடுக்கின்றோம். விரைவில் அதற்குரிய செயற் திட்டம் வகுத்துச் சகலரதும் கவனத்திற்குத் தரவுள்ளோம். எல்லாம் வல்ல இறைவன் அருளால் இம்முயற்சி நிறைவுறும் என்று நம்புகிறோம்.

**திரு. செ. வேலாயுதம்**
**தலைவர்**



அலுக்கை புனித சூசையப்பர் தேவாலயம்

# அளவெட்டியின் கிறிஸ்தவ ஆலயங்கள்

அளவெட்டியில் இரண்டு கத்தோலிக்க ஆலயங்கள் உள்ளன. அவற்றுள் புனித சூசையப்பர் ஆலயம் மிகவும் பழமை வாய்ந்ததாகும். பழமை வாய்ந்த இந்த ஆலயம் ஆயிரத்து எழுநூறாம் ஆண்டின் முன்பாகக் கட்டப்பட்டது. இப்போதிருக்கிற குளமங்கால் ஆலயத்துக்கு வட மேற்குப் புறமாக, கால் மைல் தொலைவில் இந்த ஆலயம் அமைக்கப்பட்டது.

டச்சுக்காரர் காலத்தில் கத்தோலிக்க மக்கள் பெரும் இன்னல்களுக்கு உள்ளானார்கள். டச்சுக்காரர்களுடைய உலைக் களங்களுக்குத் தொடர்ச்சியாக நிலக்கரி வழங்க வேண்டிய நிர்ப்பந்தத்துக்கு ஆளானமையால் கத்தோலிக்க மக்கள் புலோலி நோக்கி இடம் பெயர்ந்தனர். புலோலியிலுள்ள புனித சூசையப்பர் ஆலயம் இம் மக்களாலேயே உருவாக்கப் பட்டதாகும்.

நூற்றைம்பது வருடங்களுக்கு முன்பு, அளவெட்டி புனித சூசையப்பர் ஆலயம் அரசரத்தின முதலியார் என்பவருக்குச் சொந்தமான நிலத்துக்கு மாற்றப்பட்டது. இந்த நிலம் கும்பழாவளைப் பிள்ளையார் கோவிலுக்கு அண்மையில் இருந்தது. அளவெட்டி புனித சூசையப்பர் ஆலயத்திலே கோவாவைச் சேர்ந்த அறுக்கஞ்சி நாடார் எனும் குருவானவர் ஒருவரின் உடல் நல்லடக்கம் செய்யப்பட்டுள்ளது.

*1873*ஆம் ஆண்டு இக்குருவானவரின் எலும்புகள் எடுத்து வரப்பட்டு இப்போதுள்ள இடத்தில் ஆலயம் அமைக்கப்பட்டது. பழைய



அளவெட்டி - மாகியப்பிட்டி வீதியில் அமைந்துள்ள தென்னிந்திய திருச்சபைத் தேவாலயம்

ஆலயத்தின் இடிபாடுகளை இன்றும் காண முடியும்.

இப்போதைய ஆலயம் 1952ஆம் ஆண்டே கட்டப்பட்டது. வணக்கத்துக்குரிய பிதாவின் கல்லறையும் இந்த ஆலயத்தின் பின்புறமாக உள்ளது. 30 கத்தோலிக்கக் குடும்பங்கள் இந்த ஆலயத்துக்கு உரித்தானவர்களாக இருந்து வந்தனர். எனினும் யுத்த அவலம் காரணமாக பலர் புலம் பெயர்ந்தும் அகதிகளாகவும் சென்று விட்டனர். இப்போது பதின்மூன்று குடும்பங்கள் மட்டுமே வாழ்ந்து வருகின்றனர்.



மாகியப்பிட்டி புனித செபஸ்தியார் தேவாலயம்

புனித சூசையப்பர் உழைப்பாளர்களின் காவலர் ஆவார். எனவே அவருடைய திருநாள் மே மாதம் முதலாம் திகதி விமரிசையாகக் கொண்டாடப் படுகிறது. அளவெட்டி புனித சூசையப்பர் ஆலயத்தில் ஒன்பது நாட்களும் நோவினை *(Novena)* நடப்பது குறிப்பிடத் தகுந்ததாகும்.

சிறிய எண்ணிக்கையிலேயே கத்தோலிக்கக் குடும்பங்கள் இங்கு வாழ்ந்து வந்த போதிலும் இரண்டு அருட் தந்தையரையும் ஐந்து அருட் சகோதரிகளையும் அளவெட்டிப் பங்கு தந்துள்ளது. புனித சூசையப்பரை வழிபடப் பல சைவ மக்களும் வருகை தருவதுண்டு. இப்போது அளவெட்டிப் பங்குத் தந்தையாகப் பணிபுரிபவர் அருட் திரு எம். பி. ஞானரத்தினம் அடிகளார் ஆவர். மாகியப்பிட்டியிலும் ஒரு கத்தோலிக்கத் தேவாலயம் உள்ளது. இது புனித செபஸ்தியார் தேவாலயம் ஆகும். இந்த ஆலயத்தினுடைய திருநாள் ஜனவரி இருபதாம் தேதியாகும்.

இந்தக் குறிப்பு அருட்திரு ஜெபரட்ணம் அடிகளார் தந்துதவிய ஆதாரங்களைக் கொண்டு எழுதப்பெற்றுள்ளது.



---



அறிவு கருவி அன்று; அறிவுக்கு நாம் கருவி

**- பொ. கைலாசபதி**



# அளவெட்டிக் கிராமத்திலுள்ள சைவ ஆலயங்கள்

இந்தியாவிலுள்ள ஆலயங்களில் பாதித் தொகையானவை தமிழ் நாட்டில் உள்ளன என்பது ஒரு கணிப்பு. தமிழ் மக்கள் உடலை வளர்ப்பதிலும் உயிரை வளர்ப்பதிலேயே நாட்டமுடையவர்களாக இருந்தனரென்பதை இது காட்டுகிறது. ஈழத்திரு நாட்டைப் பொறுத்த வரையிலும் யாழ்ப்பாணம் ஆலயங்களாற் பொலிந்த பகுதியாக விளங்குகின்றது. யாழ்ப்பாணத்து அளவெட்டியும் அதிக சைவ ஆலயங்களையுடைய ஒரு கிராமமாகும்.

மாருதப்புரவீக வல்லியால் வடபகுதியில் தாபிக்கப்பட்ட ஏழு ஆலயங்களில் மூன்றினைத் தன்னகத்தே கொண்டு மிளிர்வது அளவெட்டி. அவை மூன்றும் விநாயகர் ஆலயங்கள். அவை தெற்கில் உள்ள பெருமாக்கடவை விநாயகர் ஆலயம், மத்தியிலுள்ள கும்பழாவளை விநாயகராலயம், அழகொல்லை விநாயகர் ஆலயம் என்பன. இவை மூன்றும் நித்திய நைமித்திகங்கள் நடைபெறும் பிரசித்தி பெற்ற ஆலயங்கள்.

அளவெட்டி கிழக்கில் அமைந்துள்ளது குருக்கள் கிணற்றடி விநாயகர் ஆலயம். இது தெல்லிப்பளை மல்லாகம் கிராமங்களாலும் உரிமை பாராட்டப்படும் திருத்தலம். ஆனால்



கும்பழாவளைப் பிள்ளையார் கோயில்



அழகொல்லைப் பிள்ளையார் கோயில்



கும்பழாவளைப் பிள்ளையார் கோயில்
தேர்த் திருவிழா



குருக்கள் கிணற்றடிப் பிள்ளையார் கோயில்

அளவெட்டி மக்களே பூசை வழிபாடு செய்து வருபவர்களாவர். அளவெட்டி வடக்கில் தவளக்கிரி முத்துமாரி அம்பாள் ஆலயமும், அளவெட்டி தெற்கில் கேல்வத்தை மாரியம்மன் ஆலயமும் அளவெட்டிக் கிராமத்தின் காவல் தெய்வங்களாக எழுந்தருளியுள்ளன. கடந்த பல ஆண்டுகளாகக் கும்பழாவளைப் பிள்ளையார் கோவில் பல விதங்களிலும் சிறப்புற்றிருக்கின்றது.

அளவெட்டி தம்மளையிற் சிவாலயம் ஒன்றும் அம்மன் ஆலயம் ஒன்றும் பலாவடிப் பிள்ளையார் ஆலயம் ஒன்றும் வைரவர் ஆலயங்கள் சிலவும் உள. அளவெட்டி வடக்கில் வீரபத்திரர் ஆலயம் ஒன்றும் ஐயனார் ஆலயம் ஒன்றும் வைரவர் ஆலயங்கள் பலவும் உள. அளவெட்டிக் கிராமத்தில் இரு முதலியவேள் ஆலயங்கள் உள. இவ்வாலயங்கள் புதுமையுடையனவாகப் பேசப்படும் போதும் இவற்றின் பூர்வீக வரலாறோ அவற்றின் மூர்த்தி வடிவமோ அறியப்படாதுள்ளது. முதலியவேள் என்பதால் இது ஆண் தெய்வம் என்பாரும், இல்லை முதலியாள் ஆச்சி எனப்படும் பெண் தெய்வம் என்பாரும் உளர். அளவெட்டியின் வடக்கில் அமைந்துள்ள ஆலயத்திற்கு நொத்தாரிஸ் சபாபதிப்பிள்ளை என்பார் பாடி வழங்கியதாகக் கொள்ளப்படும் ஊஞ்சற்பதிகம் இவரை ஆண் தெய்வமாகவே சித்திரிக்கிறது.



மாரிஅம்மன் கோயில்



தவளக்கிரி முத்துமாரி அம்மன் கோயில்



நரசிங்க வைரவர் கோயில்



பெருமாக்கடவைப் பிள்ளையார் கோயில்

இவ்வாலயத்தில் நித்திய பூசை ஒழுங்காக நடைபெறுவதோடு திருவெம்பாவை, நவராத்திரி, வெள்ளிக்கிழமைகளில் பஜனை, குளிர்த்தி விழாக்கள் என்பன முறையாக நடைபெற்று வருகின்றன. தெற்கிலும் வடக்கிலுமுள்ள முத்துமாரி கோவில்களில் மகோற்சவங்கள் நடைபெறுவதோடு தேர், தீர்த்த விழாக்களும் சிறப்பாக நடைபெற்று வருவது குறிப்பிடத்தக்கது.

அளவெட்டியில் காளி கோவில்களுஞ் சிலவுள. வைரவர் ஆலயங்கள் பலவும் உள்ளன. சிலவற்றில் கல்லும் சூலமும் மரமுமேயுள. சிலவற்றில் இப்போது கட்டிடங்கள் கட்டப்பட்டுக் கும்பாபிஷேகமும் நடைபெற்றுள்ளன. இவற்றில் சிலவற்றில் பொங்கல் விழா மட்டும் நடைபெறுவதுண்டு. சிலவற்றில் நித்திய பூசைகள் நடைபெறுவதுண்டு. அளவெட்டி வடக்கில் தாமர் வளவு வைரவர் ஆலயம், இராவத்தை வைரவர் ஆலயம், கேணிக்கரை வைரவர் ஆலயம், கொட்டாஞ் சீமா வைரவர், இலந்தையிட்டி வைரவர் ஆலயம், நரசிங்க வைரவர் ஆலயம் என்பன நித்திய பூசை நடைபெறும் ஆலயங்கள். வேறு சில ஒரு சில குடும்பத்தினரால் ஆதரிக்கப்படுவன. சிலரது வீட்டு வளவுகளிலும் ஆலயங்கள் அமைத்து அவ்வீட்டுக்காரரே பொங்கல் முதலியன செய்து வருவதுமுண்டு.

அளவெட்டி மேற்குப் புறமாக அமைந்துள்ள பெரியதம்பிரான்



ஐயனார் கோயில்



பெருமாக்கடவைப் பிள்ளையார் தேர்

ஆலயம் விளான் கிராமத்தில் உள்ளதாயிலும் அளவெட்டி மக்களே அதன் திருப்பணிவேலையிலும் பொங்கல் விழாவிலும் மிகப்பரந்த அளவில் நடைபெறும் குளிர்த்தி விழாவிலும் பங்குபற்றிச் சிறப்பிப்பவர்களாவர். அதனால் இதுவும் அளவெட்டி பெரியதம்பிரான் ஆலயம் என மக்களால் கருதப்பட்டு வருகிறது.

ஆலயங்களில் தேவையற்ற வாணவேடிக்கைகளும் கேளிக்கைகளும் அக்காலத்தில் நடைபெற்றன. அவற்றைக் கண்டித்து எழுதிய ஆறுமுக நாவலர் பெருமாக்கடவைப் பிள்ளையார் கோயிலையும் குறிப்பிட்டிருக்கின்றார்.

முத்துமாரியம்மன் கோயில்களிலும் வேறு சில சிறிய கோயில்களிலும் ஆடு, கோழிகளை வெட்டிப் பலியிடும் வழக்கம் நீண்டகாலமாக இருந்து வந்தது. சமய, சமூக சீர்திருத்தவாதிகளின் பெருமுயற்சியால் இவ்வழக்கம் பல ஆண்டுகளுக்கு முன்னரே நிறுத்தப்பட்டு விட்டது.



நாகவரதநாராயணர் கோயில்

அளவெட்டியில் விஷ்ணு ஆலயம் இல்லை என்றதை உணர்ந்த அருட்கவி சீ. விநாசித்தம்பி அவர்களின் முயற்சியால் அளவெட்டி தெற்கில் நாகவரத நாராயணர் ஆலயம் தோன்றி வளர்ந்து வருகின்றது.

புராணபடனமும் திருமுறைப் பாராயணமும் நடைபெற்று வந்த பல ஆலயங்கள் மக்கள் இடப் பெயர்வு காரணமாக அவை கைவிடப்பட்ட நிலையில் இன்றுள்ளன. அவை மீண்டும் எழுச்சி பெற்று எமது மக்கள் சைவ வாழ்க்கை வாழ வழி கிடைக்கும் என்னும் நம்பிக்கையுடன் காத்திருப்போம். வாழ்க சைவம், வாழ்க நம்மக்கள்.

**சிவப்பிரகாசம் கந்தசாமி**
**மீன்பிடி இலாகாவில் பணிபுரிகிறார்.**





ஓவியம்: அ. மாற்கு

# மாடு சிரித்தது

- அ.செ.மு

**பல** நாட்களுக்குப் பிறகு வண்டிக்காரக் கார்த்திகேசுவை மறுபடியும் சந்தித்தேன். ரயிலடிக்கு யாரையோ கொண்டுபோய் விட்டுவிட்டு வெறும் வண்டியோடு வீடு திரும்பிக் கொண்டிருந்தான். வழியில் என்னைக் கண்டதும் வண்டியை நிறுத்தி என்னை ஏறிக்கொள்ளச் சொன்னான். நாலரை மைல் தூரத்துக்கும் கால்-கோச்சில் போக நடந்து கொண்டிருந்த நான் இந்த வசதியைத் தப்ப விடுவேனா? ஏறிக் கொண்டேன்.

கார்த்திகேசுவின் வண்டியில் ஏறினால் என்னால் பேசாமலிருக்க முடிவதில்லை. வண்டியில் உட்கூடாரத்திலே ஒரு ஓரமாக ஒட்டியிருந்த எலக்ஷன் நோட்டீஸ் ஒன்று கண்ணில் பட்டதும் பேச்சைத் தொடங்கினேன்.

"ஓஹோ! கௌன்சிலுக்கு ஆள்பிடி வேலை வெகு மும்முரமாக நடக்கிறது போலிருக்கிறதே! நீ யார் பக்கம் அண்ணே?" என்று இரண்டு மூன்று கேள்விகளோடு பேச்சை ஆரம்பித்து வைத்தேன். மடியிலிருந்த புகையிலையில் ஒரு துண்டைக் கிள்ளி உருட்டி வாய்க்குள் குதப்பிக் கொண்டு ஓர் அலட்சியமான சிரிப்போடு, "பக்கமாவது, பரிசாவது தம்பி, எங்களுக்கு இதைப்பற்றியெல்லாம் என்ன தெரியும்? பரியாரியார் என்ன சொல்லுகிறாரோ அந்தப்படி செய்கிறதுதான். அவர்தான் இந்த நோட்டிஸைக் கொண்டு போய் ஒட்டச் சொல்லித் தந்தார். அவர் எனது நெற்றியிலே ஒட்டச் சொன்னாலும் ஒட்டிக்கொள்ளுவேன். புண்ணியவான் கனகாலம் இருக்க வேண்டும்!" - என்று இரண்டு கையும் எடுத்து மேலே பார்த்துக் கும்பிட்டான்.

அவன் பராக்காயிருப்பது அவனுடைய மாடுகளுக்கு எப்படியோ தெரிந்து விட்டது. அவை சற்றே உல்லாச நடைபோடத் தொடங்கின. கார்த்திகேசு எனக்குப் பதில் சொல்லிவிட்டு முன்னே குனிந்து அவைகளுக்குச் சத்தம் காட்டி மறுபடியும் முறுக்கி விட்டான். வண்டி கடகடத்துக்கொண்டு சென்றது.

"யார் அது, கந்தையாப் பரியாரியார்தானே? உனக்கும் அவருக்கும் அதிகம் கடமை உண்டு போலே" என்று மெல்லக் கிளறினேன்.
"கடமையாவது கடமை, தம்பி நீங்கள் எல்லாரும் சின்னப் பிள்ளைகள். உங்களுக்கு அந்த மனுஷரைத் தெரியாது. பூலோகத்திலே பரியாரியாரைப் போல ஒருத்தர் இரண்டுபேர் இருக்கிறபடியால் தான் மழை பெய்கிறது என்று நினைத்துக் கொள். கார்த்திகேசு இன்றைக்கு உயிரோடிருக்கிறது அந்தப் பிரபுவாலேதான். இல்லாவிட்டால் இவ்வளவுக்குச் செத்த இடத்தில் புல்லுக்கூட முளைத்துப்போயிருக்கும்!"
"ஓகோ, அப்படியோ? அவ்வளவு பெரிய காரியமா, அதென்ன?"
'எனக்கு ஒன்றுமில்லை, தம்பி. என்னுடைய பெண்சாதிக்குத்தான் ஒருமுறை ஒரு வருத்தம் வந்தது. வருத்தமாவது வருத்தம். இரண்டு வருஷத்துக்கு முன்னம் என் பெண்சாதிக்கு வந்த வருத்தத்தைப் போல உலகத்திலே யாருக்கும் வந்து நான்

**அ. செ. மு என இலக்கிய உலகில் நன்கு அறியப்பட்ட எழுத்தாளர் அமரர் அளவெட்டி செல்லக்கண்ணு முருகானந்தம் அவர்கள். ஈழத்து நவீன தமிழ் சிறு கதை முன்னோடிகளில் இவரும் ஒருவர். 1940களில் மறுமலர்ச்சி எழுத்தாளர் சங்கம் வெளியிட்ட 'மறுமலர்ச்சி' இதழின்**



**இணையாசிரியர். திருகோணமலையில் இருந்து வெளிவந்த 'எரிமலை' இதழின் இணையாசிரியராகவும் இருந்துள்ளார். இவரது சிறுகதைகள் 'மனித மாடு' என்ற பெயரில் தொகுப்பாக வெளிவந்துள்ளன. இவைதவிர 'புகையில் தெரிந்த முகம்' என்ற குறு நாவலும், 'யாத்திரை' என்ற நாவலும் இவரது படைப்புகளில் முக்கியமானவை.**

பார்க்கவில்லை. வைத்தியர்மார் எல்லோருமே கைவிட்டுவிட்டார்கள். மானிப்பாயிலே கூட வீட்டுக்குக் கொண்டு போகச் சொல்லி விட்டார்கள். வீட்டிலே ஏழு நாளாய் அடுப்பு மூட்டவில்லை. பிள்ளை குட்டிகள் எல்லாம் ஏங்கிப்போய்க் கிடந்தன. வீட்டுக்கு லட்சுமிபோல இருந்தவள். அவளுக்கு இப்படி ஒன்று என்றால் எனக்குப் பாதிப் பிராணனே போய்விட்டது போலிருந்தது. என்ன செய்வதென்று தெரியாமல் திகைத்துப்போயிருந்த சமயத்தில்தான் இந்தப் புண்ணியவாளன் வந்து சேர்ந்தார். அப்பா, ஒரு நாளை மருந்து. ஒரே ஒருநாளை மருந்து தம்பி. ஒரு கிழமை அறிவு நினைவில்லாமல் கிடந்த என் பெண்சாதி அந்த மூன்று நேர மருந்துக்குப் பிறகு கண்முழித்துப் பார்த்து என்னைக் கூப்பிட்டாள், தம்பி! ஆகா! அதை மறக்க முடியாது. தெய்வம்தான் வந்துவிட்டது போலிருந்தது எனக்கு. இருந்த ஆனந்தத்தில் மற்றநாள் பரியாரியார் வீட்டுக்கு வந்தபோது அவரை விழுந்து கும்பிட்டேன், தம்பி. என்ன இருந்தாலும் அந்தக் காலத்துப் பரியாரிமார்கள் தெய்வப் பிறவிகள்தான். செத்துப் போனாலும் அவர்கள் பூங்காவனத்தில் தான் இருப்பார்கள்......"

அவனது நா தழதழத்தது. கண்கள் கலங்கின. பழமை உணர்ச்சியில் ஆழ்ந்து போய் விட்டான். பாவம்!

எனக்கு அவனைப் பார்க்க ஒரு பக்கம் வருத்தமாயுமிருந்தது. அவனைப் பார்க்காமல் முகத்தைத் திருப்பிக் கொண்டாலோ சிரிப்புப் பொங்கிக் கொண்டு வந்தது.

கொஞ்சத்தூரம் வண்டி போன பிற்பாடு பேச்சைச் சாவகாசமாகத் தொடங்கினேன்.

"அப்போ இந்தக் கௌன்சில் அடிபிடியிலே நீ பேரம்பலம் பக்கமுமில்லை, பெரியண்ணர் பக்கமுமில்லை, பரியாரியாரின் பக்கம் என்று சொல்லு" என்று தூண்டினேன்.

"ஏன், பரியாரியார் பெரியண்ணர் பக்கம்தானே வேலை செய்கிறார்! தெரியாதோ?" என்று திருப்பிக் கேட்டான் அவன்.

"அந்த நோட்டீஸைப் படித்துப் பார்த்தால் அவர் யார் பக்கமென்று தெரியும்" என்றேன்.

அதை நான் படித்துப் பார்க்கவில்லை தம்பி, எனக்குத் தெரியும், எப்படியும் பரியாரியார் பெரியண்ணர் பக்கம்தான் வேலை செய்வார் என்று? "அதெப்படி?" என்று வெகு ஆவலோடு கேட்டேன்.

"நீ என்ன தம்பி எடுத்ததுக்கெல்லாம் கேள்வி கேட்டுக் கொண்டிருக்கிறாய்? உலகத்திலே நடக்கிறது ஒன்றுமே உனக்குத் தெரியாது போலிருக்கு. கொஞ்ச நாளைக்கு முந்தி நடைபெற்ற அந்த வேலைக்காரப் பெண் கொலை வழக்கில் பெரியண்ணர் அப்புக்காத்து அவ்வளவு பாடுபட்டு சட்டவித்தை பேசி வெல்லாவிட்டால் பரியாரியார் செய்த வேலைக்கு அவர் கழுத்தில் கயிறு அல்லவா மாட்டியிருப்பார்கள் கோட்டில?"

"ஓகோ, அதற்காகவா? அப்படியானால் அவர் நிற்பது சரிதான். பெரியண்ணர் செய்த உதவிக்கு "இதுவும் செய்யலாம், இன்னமும் செய்யலாம்" என்று அவனோடு சேர்ந்து பாடிவிட்டேன்.

இப்படி நான் சொன்னபோது என்னுடைய முகத்தில் எதைக் கண்டு கொண்டானோ தெரியாது தன்னுடைய பிரசாரத்தை என்னிடமுங் கொஞ்சம் காட்டத் தொடங்கி விட்டான்!

"ஏன் தம்பி, பெரியண்ணர் மகா கெட்டிக்காரரும் நல்லவரும் என்று சொல்லுகிறார்களே. நீ அறியவில்லையா யுத்தகாலத்திலே ஏழை மக்களுக்கு அநேகம் உதவிகள் செய்திருக்கிறாராம். தீனி இல்லாமல் சாகக்கிடந்த மாடுகளுக்குச் சீமையிலேயிருந்து பருத்திக் கொட்டையும் பிண்ணாக்கும் எடுப்பித்துக் கொடுத்தாராம். நாங்கள் அவருக்கு எவ்வளவோ கடமைப்பட்டிருக்கிறோம். பரியாரியாருடைய மகனுக்கு கொழும்பில் வேலையாக்கி விட்டது யார் என்று நினைக்கிறீர்? என்னுடைய பொடியனையும் நெடுகப் படிப்பிக்கச் சொல்லியிருக்கிறார் பரியாரியார்" என்று மேலும் பேச இழுத்தான்.

"அடடே உனக்கும் இதெல்லாம் தெரிந்துவிட்டது போலிருக்கே. எங்கே அந்த நோட்டீஸை இங்கே எடு பார்ப்போம்." என்று அதைக் கேட்டு வாங்கிப் பார்த்தேன். எனக்குப் பெரும் வியப்பாயிருந்தது. ஏன்?

அது பெரியண்ணருக்கு மாறாக அவரது எதிர்க்கட்சியினர் அவர் மீது வசைபுராணம் பாடி வெளியிட்ட நோட்டீஸ்!

"என்ன அப்பா இது? யார் பக்கத்து நோட்டீஸ் நீ கொண்டு திரிகிறாய்?" என்று கேட்டதும் கார்த்திகேசு திடுக்கிட்டு விட்டான். நான் விஷயத்தைச் சொன்னேன்.

"அடடா மாறிவிட்டேன் போலிருக்கிறது. வண்டியில் இதையாரோ கொண்டு வந்து விட்டுவிட்டுப் போயிருக்கிறார்கள். அதைக் கிழித்தெறிந்து விடு தம்பி!" என்று பரபரப்பாக என்னிடம் வாங்கி தூள்தூளாகக் கிழித்தெறிந்தான்.

"கார்த்தி அண்ணே! நீ பள்ளிக்கூடம் போனதில்லையா சிறுவயசில்?" என்று அவனை நான் கேட்கவில்லை. மாட்டின் கழுத்திலிருந்த சலங்கைகள் கலகலத்தன. அது 'மாடு சிரித்தது' போலிருந்தது எனக்கு! ஏன் சிரித்தது?





# தூக்கணாங் குருவிக் கூடு

- மஹாகவி

சூரியன் உதித்துச் சுமார் ஐந்து நாழிகைப் பொழுதாகவும், கண்விழித்து, மறுபக்கம் திரும்பிப் படுத்தேன். ஆனால், அருகில் அந்தக் 'குட்டிமேசை'யில் வைக்கப்பட்டிருந்த காப்பியையும், அதில் பகலவனையும் கண்டு, முகம் தாமரையாக, எழுந்து உட்கார்ந்து, சாவகாசமாகக் குடித்தேன். உஷார் ஏரியபடியால் வெளியில் வந்தேன். தலைவாசலில் புள்ளியிட்டுப் பாம்புக்கோலம் போட்டிருந்தது. ஓஹோ - இன்று மார்கழி மாசமா? நேற்றெல்லாம் கார்த்திகையாயிருந்ததே - ஆமாம் சும்மாவா சொல்லிவிட்டுப் போயிருக்கிறார்கள் 'பெரியவர்கள்' - இன்றைக்கிருந்ததை நாளைக்கு.....

வெளிமுற்றத்தில் வந்து பார்த்தால், இலைகளின் நுனிகளி-லெல்லாம் மழைத்துளிகள் வந்து நின்றுகொண்டிருந்தன. அவற்றில் சூரியன் பளிச்சிட்டது. வீட்டு வாசல்களில் வந்து நின்று கொண்டு சிரிக்கும் வேசிகளைப் போலிருந்தது காட்சி. இரவு நல்ல மழைபோல் இருக்கிறது. அதுதான் முற்றத்தில் விளங்க வேண்டிய கோலமும் தலைவாசலுக்குப் பின்வாங்கியதாக்கும்...... என்னவோ படுக்கையறையிற் கிடந்தால் மழை பெய்கிறதைப் பற்றித் தெரியாது.

யாழ்ப்பாணத்து மரபையொட்டிக் கால் கட்டைகளில் இவர்ந்து, முற்றத்தில் இறங்கினேன். தெருவுக்கு வந்தேன். சுத்தமான காற்று அடித்தது. அந்தச் சுகத்திலே தெருவோடு சற்றுத்தூரம் நடந்தேன்.

தெருவோடு அருகில் சென்று கொண்டிருந்தது வெள்ள வாய்க்கால். அதில் வெள்ளத்தைக் காணவில்லை. அது அவ்வழி பாய்ந்த மாதிரியும் தெரியவில்லை. இரவு மழை சும்மா சிணுக்கம்போல்தான் இருக்கிறது.

நூறு யார் வந்தேன். வயல் வெளியும் வந்துவிட்டது. அதன் இக்கரையில் ஒரு குடிசை. அதில் புகை போய்க்கொண்டிருந்தது. சரியாகச் சொன்னால் அதற்கு முன்னாலிருந்த அடுப்பில்தான் போய்க்கொண்டிருந்தது புகை.

குடிசையின் வாசலிலே ஒரு புளியமரம். மரத்தடியில் நிலத்துக்கு மேல் எழுந்திருந்த இரண்டு வேர்கள். அவைகள் இரண்டும் ஆக்கிய மூலையில் மூன்று கற்கள் - அடுப்பு - அந்த அடுப்பிலே ஒரு முட்டி. உள்ளே எரிந்து கொண்டிருந்த சுள்ளிகளிலிருந்துதான் புகை வந்தது. முட்டிக்குள் என்னவோ? - வெறும் தண்ணீர். அல்லது வெந்நீராய்த்தானிருக்க வேண்டும்.

மஹாகவி (1927-1971). தமிழ்க் கவிதையுலகில் தனக்கென ஒரு தனியிடத்தைப் பிடித்துக் கொண்ட நாடறிந்த கவிஞர். அளவெட்டியைச் சேர்ந்த இவரது இயற்பெயர் து. உருத்திரமூர்த்தி. பேச்சோசைக்கு மிகவும் அண்மித்ததான ஒரு நடைக்கு தமிழ்க் கவிதையை எளிமையாகவும், அழகாகவும் நகர்த்தியதில் இவரது பங்கு முக்கியமானது.



சாதாரண மக்களிடையே கவிதையை எடுத்துச் செல்ல வேண்டும் என்பதில் மிகுந்த அக்கறை கொண்டவர். கோடை, புதியதொரு வீடு என்ற இவரது பா நாடகங்களும் கண்மணியாள் காதை என்ற வில்லுப்பாட்டும், தமிழர் வாழ் இடங்களி-லெல்லாம் பலமுறை மேடையேற்றம் கண்டிருக்கின்றன. தமிழில் ஒரு புதிய முயற்சியாக இவர் எழுதிய "குறும்பா" மிகவும் பிரசித்தமானது. இவர் எழுதிய சில சிறுகதைகளுள் ஒன்று தூக்கணாங் குருவிக் கூடு.

பனையோலையால் வேய்ந்த குடிசை அது. முகடு ஆறடி உயரம். பக்கத்துக்குச் சுவர் இல்லை. எப்படியிருக்கும்? ஆனால் 'தட்டி' கூட இல்லையே! கூரையின் சரிவே நிலத்தை அடைந்து பக்கத்தையும் அடைத்துக் கொள்கிறது! அந்தக் கூரை மூடிய பத்துச் சதுர முழத்தைச் சுற்றி வெள்ளம் உட்புகாமல் வரம்பு கட்டியிருந்தது.

ஆமாம். இரவு மழை சும்மா சிணுக்கம் போற்றான் இருக்கிறது. அல்லாவிடில் இப்படி "நிற்குமா" இந்தக் குடிசை?

குடிசைக்குள்ளே இருட்டிருந்தது. அதற்குள்ளே ஒரு குழந்தை அழுது கொண்டிருந்தது. நிலத்தில் ஒரு சாக்கு, அதற்கு மேல் ஒரு பனையோலைத் தடுக்கு, அதற்குமேலே குழந்தை.
வெளியிலே சற்றுத்தள்ளி. ஒரு பள்ளத்தில் தேங்கி நின்ற 'கொஞ்ச'வெள்ளத்தில் இந்தக் குழந்தையின் 'சகோதரங்கள்' இரண்டு விளையாடிக் கொண்டிருந்தன. ஒன்றுக்கொன்று மாறிமாறிச் சேற்றைக் காலால் எற்றிக் கொண்டிருந்தன.

தாய் நாற்று நடப்போய்விட்டாள். தந்தை மண்வெட்டி கொண்டு கொத்தப் போய்விட்டான். "டேய்" என்று ஒரு அதட்டல் போட்டுக்கொண்டு ஒரு பத்து வயதுச் சிறுவன் குடிசைக்கு வந்தான். அவர்களின் தமையன் அவன். வயலிற் பிடுங்கிய பச்சை மிளகாய்களும் கடையில் வாங்கிய ஒரு பாணும் அவன் கைகளில் கிடந்தன. அவர்களின் சாப்பாட்டிற்காகத் தாய் கொடுத்துவிட்டுப்போன காசுக்குப் 'பாண்' வாங்கி, அவள் கட்டளையை நிறைவேற்ற வந்தான். "டேய்" என்று அதட்டினான். மறுபடியும் 'அதுகள்' பள்ளத்தில் வெள்ளம் எற்றி விளையாடிக் கொண்டிருந்தன. இப்போது அது இதுக்கும், இது அதுக்குமாக மாறிமாறிக் கிள்ளியும் கொண்டன. இரண்டுக்கும் நாலு குத்துப் போட்டு இழுத்துக்கொண்டு வந்து பாணையும், பச்சைமிளகாயையும் காட்டிவிட்டு அவன் சிட்டாய்ப் பறந்தான்.

வழியில் பனையில் தொங்கிக் கொண்டிருந்த தூக்கணாங்குருவிக் கூடு ஒன்று அவன் பார்வையில் விழுந்தது. தெருத் திருத்துவதற்காகப் பக்கத்தில் ஒரு கல்லுக் குவியலும் போட்டிருந்தபடியால், ஒவ்வொரு கல்லாயெடுத்து அதற்கு வீசத் தொடங்கினான். கற்கள் தோல்வியுற்றுத் திரும்பி ஒரு வயற்காணிக்குள் வந்து விழுந்தன.
தூக்கணாங்குருவி ஒன்று பறந்து வந்தது. 'பளிச்'சென்று உட்புகுந்தது. உள்ளே சுகமாயிருந்த மூன்று குஞ்சுகளும் கலகலத்தன, சந்தோஷ-த்தினால். அவைகளுக்கென்ன தெரியும், இவன் கல்லால் எறிந்து கொண்டிருப்பது? ஒன்றின் இறகை ஒன்று கோதிக்கொண்டிருந்தது.

அவன் சிறிதுநேரம் எறிந்து கொண்டிருந்தான். வயலுக்குள் கல் விழுகிறதேயென்று, அவ்வழி சென்ற ஒரு உழவன் அதட்டினான். பிறகு 'ஆளை'க் காணவில்லை! எங்கேயோ போய்விட்டான்.

இரவு தாயும், தகப்பனும், எல்லோரும் வீடு திரும்பிவிடுவார்கள் அல்லவா? மொத்தம் ஆறு பேர்கள் - எங்கே படுத்துக் கொள்வார்களோ?

மழையில்லாவிட்டால் புளியமர வேரில் தலையை வைத்து நிலத்தில் படுத்துக் கொள்ளலாம். மழையென்றால்....? குடிசைக்குள் ஒருமாதிரி அடைந்துகொள்ள வேண்டியதுதான். பின் பெரிதாய் மண்டபம் மண்டபமாய்க் கட்டிவிட்டிருக்கும் கோயில்களிலா இடம் கொடுக்கப் போகிறார்கள்? அங்கே தனிமையும், நிசப்தமும் நிலவும். அதாவது, பக்தி பெருக்கெடுப்பதற்கு வாய்க்கால் தோண்டிவிடும் மாதிரியில் இருக்கும்! குளிர்காற்று வீசிக் கொண்டேயிருந்தது. அதில் பனையோலையொன்றின் இரண்டு இதழ்கள் அடித்துக் கொண்டேயிருந்தன. அண்ணாந்து மேல் வானத்தைப் பார்த்ததில், கார்முகில்கள் சிந்துண்டு கிடப்பது தெரிந்தது.

"ராவைக்கு நல்ல மழைபோல இருக்கு" என்று தோளில் நுகங் கொண்டு கையில் இரண்டு மாடுகளின் கயிறு பிடித்துக்கொண்டு போனவன், மாடுகளைத் தட்டிவிட்டுக்கொண்டே சொல்லிக் கொண்டு போனான்.
"சும்மாவோ கொடும்பாவி கட்டினது?" என்று கேள்வியில் மறுமொழியிழுத்துக்கொண்டு ஏர் கொண்டு போனவன் போனான்.

ஆமாம், மழை வரத்தான் போகிறது. ஆனால் சாதாரண மழையாயிருக்காது. மழையுடன் பெரும் காற்றும் சேரும்; வெள்ளம் போடும்போலிருக்கிறது. மரங்களும் முறிந்து விழும், கொட்டில்கள் குடில்களும் சரியலாம்.
அந்தக் குடிசையும் ஒருவேளை விழலாம்!
ஒரு வேளையென்ன, கட்டாயம்!
அப்படியானால், அவர்கள் என்ன செய்வார்கள்?
எங்கே போவார்கள்?
தெரியாது!
ஆனால் தூக்கணாங் குருவிகள் மட்டும் சுகமாக ஒன்றின் இறகை ஒன்று சொண்டினால் கோதிக்கொண்டிருக்கும்.

■ ■ ■

# நாளைய நாளும் நேற்றைய நேற்றும்

- இளவாலை விஜயேந்திரன்



முன்னே -
முகிழ்க்கின்ற பனிப் போர்வையிலும்
தோளின் சால்வை தூக்குதலை
இன்னும் நாங்கள் பேணவில்லை.

அவர்கள் தாமே மனிதரென்றார்
நாமும் நாமும் என்றார்த்தோம்.
சுவர்கள் -
சுற்றி எழுந்திருந்தன
தகர்த் தெறிந்தோம்.

சுவர்கள் தகர்க்கப்படும் போதில்
கற்களெம் மீதில் விழுந்தனதாம்
ஓய்வுக்குள்
தலைபுதைக்க மறுத்துவிட்டு
தொடர்ந்து தகர்த்தோம், தகர்த்தோம்.

எமக்கென நிலவு பால் வீசும்
எத்தனை பொழுதுகள் செத்திருக்கும்...!
நினைக்க வியர்க்கும் - எனினும்
முனைப்பு முடிவிடத்தில்
சுவர்கள் வீழ்ந்தன.

வெற்றி எனச்சிறு
நினைப்பில் ஊறினோம்.
கால்கள் -
அத்திபாரக் கல்லில் தடுக்குது.
தோள்கள் மலையெனத்
தொடுத்து வைத்திருக்கிறோம்,
நாளைய நிகழ்விற்காய்!

• • •

இளவாலை விஜயேந்திரன்

கவிதைகள், பாடல்கள், நாடகங்கள் எனப் பலதுறைகளிலும் முத்திரை பதித்திருப்பவர். யாழ்ப்பாணம் ஈழமுரசு பத்திரிகையின் ஆசிரிய பீடத்தில் பணிபுரிந்தவர். நோர்வேயிலிருந்து வெளியான 'சுவடுகள்' எனும் இலக்கிய சஞ்சிகையினது ஆசிரியர் குழுவிலும் உறுப்பினர். அவரது கவிதைகளின் தொகுதியொன்று "நிறமற்றுப் போன கனவுகள்"(1999) என்ற தலைப்பில் வெளியாகியுள்ளது.

# வில்லூன்றி மயானம்

**அ. ந. கந்தசாமி**

நாட்டினர்நீர் அறிவீர் வில்லூன்றி தன்னில்
நாம்கண்ட ஈமத்தீ வெறுந்தீ அன்று
கேட்டினிலே உளபிணத்தை உண்பதற்குக்
கிளர்ந்தெழுந்த தீயன்று நெடுநா ளெங்கள்
நாட்டினிலே கிளைபரப்பும் சாதி என்னும்
நச்சுமர வீழ்ச்சியினைக் காண்பதற்காய்
வாட்டமுற்ற மக்களுளம் கனன்று பொங்கும்
வல்லதொரு புரட்சித்தீ வாழ்க வஃது.

மக்கள்குல மன்றோநாம் மரமோ கீழாம்
மாடுகளோ விலங்குகளோ கூறும் என்று
திக்கற்றான் நெஞ்சினிலே பிறந்த வைரத்
தீ அதுவாம் திசை எங்கும் பரவுதற்கு
மக்கள் நாம் மறுப்பதெவர் என்று கூறி
மாவுரிமைப் போர்தொடங்கி விட்டான் அந்தத்
திக்கதனை வில்லூன்றித் திருத்த லத்தைச்
சிரந்தாழ்த்தி வணங்குவோம் புனித பூமி.

கேளீரோர் வீரமிகு காதை ஈது
கிளரின்பம் நல்குமொரு சேதி யன்றோ?
பாழினிலே பயந்திருந்த பாம ரர்கள்
பலகாலந் துயில்நீங்கி எழுந்துவிட்டார்
வாழியரோ வரப்போகும் நவயு கத்தின்
வளக்காலை இளம்பருதி வரவு ணர்த்தும்
கோழியது சிலம்பலிது வெற்றி ஓங்கக்
கொள்கைக்கிங் காதரவு நல்குவோம் நாம்.

பரம்பரையாய்ப் பேணிவந்த பழக்க மென்று
பழங்கதைகள் பேசுகின்றார் மனிதர் பார்ப்பின்
பரம்பரையாய்ப் பேணிடினும் தீயதான
பழக்கமெனப் பகுத்தறிவாற் கண்ட பின்னும்
சிரங்குவிப்பதோ அதற்கு? மூடச் செய்கைச்
சிறுமைஎன்று செகமெல்லாம் நகை நகைத்துச்
சிரிப்பதற்குச் செவிதாரீர் தீண்டாப் பேயின்
சிரங்கொய்தே புதைத்திடுவோம் வாரீர் வாரீர்.

*தினகரன். 1944. 11. 09*

வில்லூன்றி என்ற இடத்திலுள்ள மயானத்தில் தாழ்த்தப்பட்டவர்களுடைய உடல்கள் தகனம் செய்ய அனுமதி இருக்கவில்லை. அதனை எதிர்த்து நடந்த போராட்டத்தில் 'சின்னத்தம்பி' என்பவர் சாதிவெறியர்களால் கொல்லப்பட்டார். அப் போராட்டம் தொடர்பான கவிதை.

---

# அ. ந. கந்தசாமி



அ. ந. க. என்று ஈழத்து இலக்கிய உலகில் அறியப்பட்ட அளவெட்டி நடராசா கந்தசாமி, கவிதை, சிறுகதை, நாவல், நாடகம், இலக்கிய விமர்சனம், மொழி பெயர்ப்பு ஆகிய துறைகளில் புலமையும் திறமையும், ஆற்றலும் மிக்கவர். தேசாபிமானி, சுதந்திரன் ஆகிய இதழ்களின் ஆசிரிய பீடங்களை அலங்கரித்தவர். ஈழத்துப் முற்போக்கு இலக்கியத்தின் மூத்த பிள்ளைகளில் ஒருவராகக் கருதப்படுபவர். எழுத்தில் மட்டுமல்ல மேடைப் பேச்சிலும் வல்லவர். அவரது 'மதமாற்றம்' நாடகம் பலமுறை மேடையேறிப் பலத்த சர்ச்சைகளைக் கிளப்பியது. இவரது 'மனக்கண்' நாவல் தினகரனில் தொடராக வெளி வந்தது. பின்னர் வானொலி நாடகமாகவும் ஒலிபரப்பப்பட்டது. 'கடவுள் என் சோர நாயகன்', 'துறவியும் குஷ்டரோகியும்', 'சிந்தனையும் மின்னொளியும்', 'எதிர்காலச் சித்தன் பாடல்', 'வில்லூன்றி மயானம்' போன்ற அவரது கவிதைகள் புகழ்பெற்றவை.

எமிலி சோலாவின் 'நாநா' நாவலை மொழி பெயர்த்துச் சுதந்திரனில் வெளியிட்டார். அவரது சிறுகதைகள் 'சமூகத்தை வன்மையாகச் சாடுபவை' என்பார் பேராசிரியர் சிவத்தம்பி. ஈழத்து மறுமலர்ச்சி எழுத்தாளர்களில் முக்கியமானவர் அ. ந. க.

இவரின் படைப்புக்களில் 'மதமாற்றம்' இலங்கை முற்போக்கு எழுத்தாளர் சங்க வெளியீடாகவும், தமிழக பாரிநிலைய வெளியீடாக 'வெற்றியின் - ரகசியங்கள்' என்னும் நூலும் வெளி வந்துள்ளது. 'வெற்றியின் ரகசியங்கள்' நூலைப் பொறுத்த வரையில் தமிழில் எம். எஸ். உதயமூர்த்தி போன்றவர்கள், வாழ்வின் வெற்றிக்கு வழி வகுக்கும் நூல்களை மலினமான முறையில் எழுவதற்கு முன்னரே 1967ல் அ. ந. க. வின் இந்நூல் சீரிய ஆய்வு நூலாக வெளி வந்தது. கார்ல் யூங், சிக்முன்ட் பிராய்ட் உட்பட பலரின் கோட்பாடுகளை மையமாக வைத்து. தெள்ளிய தமிழ் நடையில் இந்நூல் எழுதப்படுள்ளது.

# தத்துவத்தின் தொடக்கம்

க. ஆதவன்

யாழ். பல்கலைக் கழகத்து மெய்யியல் துறையில் விரிவுரையாளராகப் பணியாற்றியவர். இப்போது டென்மார்க்கில் வசித்து வருகிறார். இவருடைய கவிதைகளின் தொகுதி ஒன்று "உள்ளொளி" என்ற பெயரில் வெளியாகியுள்ளது. பல சிறுகதைகளும், குறுநாவல்களும் எழுதியுள்ளார். பல நாடகங்களையும் நெறியாள்கை செய்திருக்கிறார்.

நானும் நண்பனும் நடந்து களைத்தோம்
கதைத்தோம்.
நீண்ட கால இடை வெளியில்,
இந்த இனிமைச் சந்திப்பில்
படித்திருந்த, பதிந்திருந்த
தத்துவங்களை மீட்டோம்.
பேட்டன் ரஸ்ஸலும்
விற்கின்சைனும்
வெளியே வந்தார்கள்.

முரண்பட்ட கருத்துக்கள்
மோதுகின்ற உச்சத்தில்
'ரஸ்ஸலின் புத்தகத்தில்
இதோ காட்டுகிறேன்
வா என்னுடன்' என நண்பன் எழுந்து நின்றான்.
பின்னர்,
மூச்செறிந்துவிட்டு
மௌனித் தமர்ந்தான்.

'புத்தகம் நூலகத்தில்
சாம்பாரயிற்று'
முனகிய படியே முகம் கவிழ்ந்தான்.

பேட்டன் ரஸ்ஸலும், விற்கின்சைனும்
உள்ளே போனார்கள்
படித்திருந்த, பதிந்திருந்த
தத்துவங்கள்
செத்த பிணமாயிற்று.

கண்ணும் கண்ணும் நோக்கக்
கனத்தன நெஞ்சங்கள்
இதற்குப் பிறகு
புதிய தத்துவம் வேண்டும்
நண்பா.

நாம் எழுந்து நின்றோம்...

# எதை நினைந்தழுவதும் சாத்தியமில்லை



ஔவை

எதையும் நினைந்தழுவது
இப்பொழுது சாத்தியமில்லை

கட்கோளத்தின் ஆறுதசைகளும்
செயலற்றுப் போய் கண்ணீர்ப் பைகள் வரண்டு பிளந்து
நெருப்பை யாரிடம் கக்குவதென
வெறிகொண்டு திரிந்த
எங்கள் காலமும் போயிற்று.

இன்றைய வாழ்வை நியாயப்படுத்த
நேற்றைய வாழ்வைக் கொச்சைப்படுத்தும்
பொய்ம்மைகள் எமக்குள் இனி வேண்டாம்.

உனது பிழையா?
எனது பிழையா?
வரலாற்றுச் சாபமா? - போகட்டும்.
கருத்துகளுக்கு
விமர்சனம் எழுதி எழுதி
மூட்டுக்கள் செயலிழந்து போனதால்
இலக்கியக் குழுவிலும்
அரசியற் குழுவிலும்
தனிநபர் தாக்குதல் தொடங்கியுள்ளது.
ஏ.கே. தூக்கும் பலத்தை இழந்ததால்
பேனையும் வாயும்
அதன் பணி தொடர்கின்றன.

குந்தியிருந்த நிலமிழந்து
கூடியிருந்த வாழ்விழந்து
முகமிழந்து போனது யார்?

மார்க்சியவாதி மறுபிறப்புப் பற்றி விவாதிக்கிறார்
பிரமச்சாரி குழந்தைகள் வாழ்வின் தொடர்ச்சி என்கிறார்
அரசியல்வாதி தியானம் பற்றிக் கற்றுக் கொடுக்கிறார்.

உனது பிழையா
எனது பிழையா
வரலாற்றுச் சாபமா?

போராடவந்தவள் மனைவியாய்
சமையலறையில் அடைபட்டிருக்கிறாள்
புலம் பெயர்வதை துரோகமென்றவர்
பெயர்ந்த நிலத்தில் வீடு கட்டுகிறார்
சித்திரவதை முகாமுக்கு பொறுப்பாக இருந்தவன்
குழந்தை பெறும் மனைவிக்காக அழுகிறான்.
முகமற்றுப் போனவர்கள் யார்?
நீயுமல்ல
நானுமல்ல
இரவல் கருத்தில் சவாரிசெய்தவர்
முகமிழந்து போனார்கள்.

காலம் பதில் சொன்னபடி நகர்கிறது

எதையும் நினைந்தழுதல்
இப்போது சாத்தியமில்லை.
மனிதத்தின் மீது நம்பிக்கை கொண்டு
உயிர்த்தெழுதலே வாழ்வு!

••••



ஔவை, கொழும்பு நல்லாயன் மடம் பாடசாலையில் இரசாயனவியல் ஆசிரியராகப் பணியாற்றுகிறார். இவருடைய கவிதைகளும் கட்டுரைகளும் இலங்கையிலும் தமிழ் நாட்டிலும் வெளியாகியுள்ளன. பாடசாலை உயர்தர மாணவிகளுக்காக இவர் எழுதி நெறியாள்கை செய்த நாடகங்கள் அகில இலங்கை அளவில் வெற்றி பெற்றுள்ளதோடு இலங்கைத் தொலைக்காட்சியிலும் ஒளிபரப்பாகியுள்ளன.

# ஈழம் நட்சத்திரங்களை ஏந்துவதாகிய கதை

அளவெட்டி சிறிசுக் கந்தராசா

அங்கு
திரண்டு கிடந்தது
வாழ்வு. . .

வித்தியாசமாய் இருப்பினுங் கூட
திரண்டு கிடந்தது வாழ்வு. . . .

நீள வாழ்வை
இன்னமும்
நீளமாய் ஆக்கும்
வேட்கையின் வெக்கை-
இன்னபிற, பலவால், பலவால்
வாழ்வுக்கங்கு திரட்சி இருந்தது.

நிகர இலாபங்களை குறுக்குவதானது
நீள வாழ்வை அமைக்கவென்றதனால்
இங்கும் அங்கும்
மிலாந்துகை வாழ்க்கையை
திரட்டிக் குறுக்கி செரித்தெழ வைத்தது. . .

மூரி வேலி,
கிணற்றடிப் பலாமரம்,
வெள்ள வாய்க்காலின்
குறுணல்
வால் பேத்தைகள்,
சங்கக் கடையின்
குதம் தேய்ந்த
நிறுபடி,
தாச்சி விளையாட
அழுகிற பையன்,
சமசாலையில்
தொய்யில்ஆய
குனிந்தெழும் பெண்டுகள்,

களைத்து விழுந்த
ஆளும் ஆடும்
விருத்தமாய் தாண்டிடும்
கண்டாய வெளி,
பொறுத்திருந்தபின்
காண்டாவனம் தாண்ட
பனையோலை வேய்ந்த
சாணிச்சுவர்க் குடிசைகள்,
சூத்திரக் கிணறும்
வைரவர் கோயிலும். . . .

இவை யாவும் இருக்கையில்
வாழ்வு
திரளாதென் செய்யும். . .?
இதெல்லாம் அங்கு. . . !!

பிறகு,,
இவ்விடை வந்தோம். . .
கனவிலும்
தெரியாதிருந்த பலவகைக் கூறுகள்
கண்ணடி, காலடி
இடறுண்ண எழுந்தன. . .

வேலிப் பொட்டு
வேதாள வெங்காயம்
ஐயரின் வெறுங்கால்
பித்த வெடித்தழும்புகள்
தீய்ந்தழிந் தோய்ந்தன. .

நிலம்
இது! - இப்போது. . .
என்றது மண்டையுள்
நெருப்பைக் கொளுத்தும். . .
சூடாக்கி மூட்டிய
அறையின் வெப்பமும்
பனியாட்சி புரியும்
வெளி நில வாழ்க்கையும்
இரு துருவத்து இடைவெளி -
இருப்பினும்,
இங்கு இப்படித்தான்
இவை இப்படித்தான்
என்பதால் எது தான்
செய்திட முடியும்?

ஓடும் வாழ்வு!
நாம் நடக்கவே விரும்பினும்
ஓடும் வாழ்வு. . .!!

ஓடவிட்டிங்கு
ஓடும் நாமும்
ஓட ஓட
ஓடிடும் வாழ்வும்
இவ்விடை, அவ்விடை
நிலபரம் இயம்பும். . .

வயதும் வாழ்வும்
குளிரிடை நகரினும்
கனவின் கதைகள்
காதினை அடைப்பினும்
அங்கத்தைய நினைவுகள்
அடிக்கடி
நீளச் சோகத்தை
நிறுத்த -
வந்து போகும். . . .

என் ஊரில்
அடிக்கடி
இன்றும்
நட்சத்திரங்கள் சொரிந்தபடிதான். . .
ஏந்துவதற்கு
எவருமே இல்லை!!!

இவ்விடை வாழ்வினை நிலை நிறுத்தி, உறுத்துகையில்
பழையவை, அவை பற்றிய, அவையின் அவை பற்றிய
பாகுபாடுகள் வைரம் பாயப்பெற்று மரத்துப்போவதைப் புரிந்து
தானே ஆக வேண்டும். . . .

அது:
பொது போக இது, அதுபோக என்றில்லாது இரு
வெண்பாக்களுடன் முடிவடையும்.

கொட்டில் வளவு, குந்தியெழப் பனங்கூடல்
பட்டை சாத்தல் பழங்கதையர் - மட்டில்
செல்வம், வளர்ந்து சேர்ந்த சுகங்கொண்டு
கொல்வோமோ எங்கள் குலம்.

அளவெட்டி ஊரின் அழகெட்டா இடந்தோறும்
வளமெட்டும் பாரீர் வடிவாக - களமெட்டி
That was the land, that 'spires us to what would be
The top of all known the world.

••••

**அளவெட்டி சிறிசுக் கந்தராசா**

கவிஞர். நவீன நாடகங்களை மேடையேற்றி வருகிறார். சிறுகதை, கட்டுரை ஆகிய துறைகளிலும் புதுமை செய்து வருபவர். ஒரே தடத்தில் செல்லாத எழுத்து முறை *(Non-Linear Writing)* என்று இப்போது வழங்கப்படும் நவீன எழுத்துத்துறையை நீண்ட காலமாகப் பயன்படுத்தி வருகிறார்.

# திரு. ஜோன் சந்தியாப்பிள்ளை ஆசிரியர்

1916. 07. 25 - 1988. 11. 28



சந்தியாப்பிள்ளை மாஸ்டர் காலமாகிப் பன்னிரண்டு வருடங்கள் ஓடி விட்டன என்பது நம்புவதற்குச் கடினமான ஒரு சேதி. ஆங்கில மொழியையும், ஆங்கில இலக்கியத்தையும் மிகுந்த ஈடுபாட்டோடும் மாணவர்களின் மீது அளவற்ற பரிவோடும் கற்பித்த நல்லாசான் சந்தியாப்பிள்ளை மாஸ்டர் என்பதை அவரது மாணவர்கள் அறிவர்.

அருணோதயக் கல்லூரியில் ஆங்கில ஆசிரியராகப் பணிபுரிந்தாலும் மகாஜனக் கல்லூரி, ஸ்கந்தவரோதயக் கல்லூரி ஆகிய கல்லூரிகளிலிருந்தும் ஏராளமான மாணவர்கள் ஆங்கிலம் படிப்பதற்கென மாஸ்டர் வீட்டுக்கும், அம்பனையில் அவர் படிப்பித்த கல்வி நிலையத்துக்கும் படை எடுப்பதுண்டு.

ஆங்கில இலக்கணத்தைத் தெளிவாகவும் இலகுவாகவும் கற்பிப்பதற்கு இலங்கை அரசினரின் ஆங்கிலப் பாடநூல்கள் இடம் தருவதில்லை என்பதை உணர்ந்த சந்தியாப்பிள்ளை மாஸ்டர் எப்போதும் ஏ. எஸ். கனகரத்தினம் அவர்களுடைய இலக்கண நூலையே பயன்படுத்தினார். ஏ. எஸ். கனகரத்தினத்தின் நூல் ஆங்கிலத்தை இரண்டாம் மொழியாகப் பயில்கிற மாணவர்களுக்கு எனச் சிறப்பாக எழுதப்பட்ட இலக்கண விளக்க, பயிற்சி நூலாகும். கற்பித்தல் முறைமை தொடர்பான அவருடைய அக்கறையும் உழைப்பும் தான் ஏராளமானவர்களை ஜீ. சீ. ஈ. சாதாரண பரீட்சையில் ஆங்கில மொழி என்கிற 'இடறும் குதிரை'யை வெற்றி கொள்ள வைத்தது.

சாதாரணமான அரச ஊழியராகவே மாஸ்டர் வாழ்க்கையை ஆரம்பித்தார். எனினும் இலக்கியத்திலும், விளையாட்டிலும் ஆத்மிகத்திலும் அவருக்கிருந்த அளப்பரிய ஈடுபாடு அரச ஊழியத்தில் அவரை நீண்டகாலத்துக்கு நிலைத்திருக்க அனுமதிக்கவில்லை. சாவகச்சேரி டிறிபேர்க் கல்லூரியிலும் பின்னர் அருணோதயக் கல்லூரியிலும் ஆசிரியரானார்.

தொழிற்சங்கத் துறையிலும் சந்தியாப்பிள்ளை மாஸ்டரின் ஈடுபாடு தீவிரமாக இருந்தது. இருபத்தைந்து வருடங்களாக வட மாகாண ஆசிரியர் சங்கத்தின் (N P T A) உந்து சக்திகளில் ஒருவராகத் தொழிற்பட்டார். எழுபதுகளின் ஆரம்பத்தில் அன்றைய ஐக்கிய முன்னணி அரசு கல்வி அமைச்சினூடாகத் திணித்த 'சியவச' லொத்தர்த் திட்டத்தை வலுவாக எதிர்த்தவர்களுள் சந்தியாப்பிள்ளை மாஸ்டர் முக்கியமானவர். பள்ளிக் கூடங்களுக்கு மாணவர்கள் செல்வது படிக்கவே தவிர லொத்தர் விளையாட்டுக்கும் நிதி சேகரிப்புக்கும் அல்ல என்பதில் மாஸ்டர் உறுதியாக இருந்தார்.

இந்த உறுதியான எதிர்ப்பால் அவர் கட்டாய இடமாற்றம் வழங்கப்பட்டுத் தண்டிக்கப்பட்டார். எங்கு சென்றாலும் கற்பித்தலே வாழ்வு என்பதால் இக் கட்டாய இடமாற்றத்தை ஒரு புன்முறுவலுடன் ஏற்றுக் கொண்டவர் அவர்.

ஆங்கிலத்திலும் தமிழிலும் தீவிர வாசகராக இருந்த மாஸ்டர் தனிமனிதருடைய உரிமைகள் மதிக்கப் படுவதன் முக்கியத்துவத்தை எப்போதுமே வலியுறுத்தியவர். 1970-75 கால கட்டப் பகுதியில் அளவெட்டியில் இயங்கிய கொம்யூனிஸ்ட் வாலிபர் இயக்கத்தின் பல உறுப்பினர்கள் சந்தியாப்பிள்ளை மாஸ்டரின் மாணவர்களாகவும் இருந்தனர். எனவே தனி மனித உரிமைகள், பொது உரிமைகள் பற்றிய வாதப்பிரதிவாதங்கள் ஏற்பட்டமை வியப்பல்லவே!

அளவெட்டியிலும் இளவாலையிலும் கத்தோலிக்க தேவாலயங்களோடு இணைந்து சமய, சமூகப் பணிகளை இறக்கும் வரை புரிந்து வந்தார்.

இறையுணர்வும், தோழமையும், நேர்மையும் வாய்க்கப் பெற்ற ஒரு உன்னதமான மனிதர் இப்போது எம்மிடம் இல்லை. எனினும் நல்லாசிரியர்கள் தமது மாணவர்களூடாக வாழ்ந்து கொண்டிருப்பார்கள்.

# அளவையூர் இசையாளர்கள்

அளவெட்டியின் பல பகுதிகளிலும் வாழும் கலைஞர்கள் முக்கியமானவர்கள். சிறப்பாக இங்கு அருள் பாலித்திருக்கும் ஆலயங்களும், வாழ்ந்து மறைந்த, வாழ்ந்து கொண்டிருக்கும் பிரசித்தி பெற்ற மருத்துவர்களும், அறிவாளிகளும், இந்தியாவிலுள்ளனர். தஞ்சாவூரில் இருந்து வந்து எமது ஊர் வட கோடியில் வாழ்ந்து கொண்டு இசை வளர்க்கும் மங்கல இசை மன்னர்களும் சில காரணங்களாக அமைவர். எமது ஊரில் ஆண்டு தோறும் நடைபெறும் ஆலய உற்சவங்கள், வட இலங்கையில் மிகப் புகழ்ந்து பேசப்படும் நிகழ்ச்சிகளாக அமையும்.

ஆண்டு தோறும் இவ் வைபவங்களில் கலந்து கொள்வதற்காக இந்தியாவிலிருந்தும் பல புகழ் பெற்ற நாதஸ்வர, தவில் வித்துவான்கள் அழைக்கப்பட்டு எமது ஊர்க் கலைஞர்களுடன் கூடவிருந்து வாழ்ந்து இசை பரப்புவது வழக்கம். இதன் காரணமாக எமது ஊர் மக்கள் இயற்கையாகவே கர்நாடக இசையில் ஈடுபாடு உள்ளவர்களாக இருக்கிறார்கள். எமது ஊரில் பொழுது புலர்வதும் மறைவதும், காற்றுடன் கலந்து நாலா திசைகளிலும் சென்றடையும் ஆலய மணி ஓசையுடனும் - வடகோடியாகிய கூத்தன் சீமையில் வாழும் நாதஸ்வர தவில் வித்துவான்களால் சாதகம் செய்யப்படும், மங்கல இசை ஒலியுடனுமான நாளாந்த இந் நிகழ்வு எமது மக்களை மங்கல இசையைப் புரிந்து கொள்ளவும், நுகர்ந்து கொள்ளவும் தகுதி பெற வைத்ததுமல்லாது பல கர்நாடகக் இசைக் கலைஞர்களை உருவாக்கவும் வழி அமைத்தது என்று கூறின் மிகையாகாது.

இங்கு வாழ்ந்து இசை வளர்த்து மறைந்த நாதஸ்வர தவில் கலைஞர்களுள் என். கந்தசாமிப்பிள்ளை, முத்துக் குமாருப்பிள்ளை, இரத்தினவேற்பிள்ளை, விஸ்வலிங்கம்பிள்ளை, சின்னராசாப்பிள்ளை, முருகையாபிள்ளை, செல்லத்துரைப்பிள்ளை, நாகையாப்பிள்ளை, செல்லையாப்பிள்ளை நடராசாப்பிள்ளை, சோமு முதலியோருடன் இணுவிலில் பிறந்து, அளவெட்டியில் வாழ்ந்து இசை உலகில் மிக உன்னத இடத்தைத் தனதாக்கியதோடல்லாமல் எமது ஊருக்கும் மங்காத புகழ் ஈட்டித்தந்து அமரராகி விட்ட 'லயஞான குபேரபூபதி' தவில் மேதை வி. தட்சணாமூர்த்தியும் சிறப்பாக நினைவு கூரப்பட்டுப் போற்றப்பட வேண்டியவர்கள்.

### மூத்த கலைஞர், தவிலாசிரியர் கணேசரத்தினம்

இன்றும் எமது ஊரில் வாழ்ந்து கொண்டு இசை வளர்த்துக் கொண்டிருப்பவர்களுள் முக்கியமானவர் கணேசரத்தினம் தவிற்காரர் ஆவர். இவரது தந்தையார் கணபதி. இந்தியாவிலிருந்து வந்து, எமது ஊரில் குடியமர்ந்து கும்பழாவளை விநாயகர் ஆலய இசை உபயகாரராக அரும் பணியாற்றி மறைந்தவராவர். இவரது மகன் கணேசரத்தினம் தவிற்காரர் மட்டுமல்லாது என். கே. பத்மநாதன், எஸ். சிதம்பரநாதன் முதலிய இசைக் குடும்பங்களையும் உருவாக்கியவராக மதிக்கப்படுபவர்.

தவிற்கலைஞர் கணேசரத்தினம் பல காலமாக யாழ் மாவட்டத்திலிருந்து இந்தியாவிலிருந்தும், மிகவும் புகழ் பெற்ற, நாதஸ்வர தவிற்கலைஞர்களை வரவழைத்து தமது குழுவில் இணைத்து இசை வளர்த்து, எமது ஊருக்குப் பெருமை தேடிக் கொடுத்தவர். இவ்வரிசையில், யாழ்ப்பாணம் எம். பி. திருநாவுக்கரசுப்பிள்ளை, சாவகச்சேரி அப்புலிங்கம்பிள்ளை, மாவிட்டபுரம் இராசா என்போருடன், இந்தியாவிலிருந்து வருகை தந்த சண்முகக்குட்டிப்பிள்ளை, வேதாரணியம் வேத மூர்த்திப்பிள்ளை, கோட்டூர் இராசரத்தினம்பிள்ளை பிரபல தவில் மேதைகளாகிய திருவிழந்தூர் இராமதாஸ்பிள்ளை, வடபாதி மங்கலம் தட்சணாமூர்த்திப்பிள்ளை முதலியோரும் அடங்குவர். இவர்களின் வருகை அக் காலத்தில் வாழ்ந்த எமது ஊர் இளம் கலைஞர்கள் இத் துறையில் தமது கலையை வளர்ப்பதற்கு மிகவும் அரிய வாய்ப்பைக் கொடுத்தது. இசை மேம்பாட்டுக்கு, கேள்வி ஞானம் மிக இன்றியமையாததாகும். அதுவுமல்லாது, இவர்களில் சிலர் எமது இளைஞர்களுக்கு ஆசிரியர்களாகவும் இருந்து வழி காட்டியுள்ளனர். இவ்வண்ணம் இன்று புகழ் நாட்டியுள்ள பல கலைஞர்களை உருவாக்கிய பெருமை கணேசரத்தினம் தவிற் கலைஞருக்கே உரியது. தவில் மேதை வி. தட்சணாமூர்த்தி, நாதஸ்வர மேதைகளாம் என். கே. பத்மநாதன், எஸ். சிதம்பரநாதன், இளம் தவில் மேதைகளாகிய த. உதசயங்கர், இணுவில் என். ஆர். எஸ். சுதாகரன் முதலியோர், இவரின் வழி காட்டலில் இசை ஞானத்தைப் பெற்றுக் கொண்டவர்களுள் சிலராவர். இன்று திரு. கணேசரத்தினம் தமது தள்ளாத வயதினிலும் கும்பழாவளையானின், திருவடியிலமர்ந்து இசைத் தொண்டு புரிந்து வாழ்கிறார் என்பது பெருமைக்குரியதே!

### நாதஸ்வரக் கலாநிதி என். கே. பத்மநாதன்

நாதஸ்வர இசையுலகின் திலகமாகத் திகழும் என். கே. பத்மநாதனின் தந்தையார் என். கந்தசாமிப்பிள்ளை. கும்பழாவளை விநாயகர் ஆலய ஆதின நாதஸ்வரக் கலைஞர் பத்மநாதன் அவர்கள் இங்கே மிக இளவயதில் தனது இசைப் பயணத்தை ஆரம்பித்தார். தனது தந்தையை முதற் குருவாகக் கொண்டு, நாதஸ்வரம் பயில ஆரம்பித்து, அக்காலத்தில் சாஸ்திரிய சங்கீத விற்பன்னர் என மதிக்கப்பட்ட யாழ்ப்பாணம் எம். பி. திரு நாவுக்கரசுப்பிள்ளையை பிரதம குருவாகக் கொண்டு நாதஸ்வர இசைப் பயிற்சி பெற்றவர். இவர் பேறு பெற்ற ஒரு கலைஞர் எனக் கூற வேண்டும். இவருக்கு இளமையில் இவரது மாமனாராகிய கணேசரத்தின பிள்ளையிடம் வந்து அவரோடு தங்கி வாழ்ந்த நாதஸ்வர மேதைகளின் வழிகாட்டல் கிடைத்ததும் அல்லாமல், அவர்களுடன் இணைந்து வாசிப்பதற்கும் வாய்ப்புக் கிடைத்தமையும், இவரது இசை வளர்ச்சிக்கு மிக முக்கிய காரணங்களாக அமைந்தன. கேள்வி ஞானமும், தொடர்ச்சியான கடின பயிற்சியும், விடா முயற்சியும், இவர் தனக்கென ஒரு பாணியை உருவாக்க உதவியது. சிறு வயதிலேயே தமக்கென



**மூத்த கலைஞர், தவிலாசிரியர் கணேசரத்தினம்**

ஒரு இளம் இசைக் குழுவை உருவாக்க எண்ணி இளைஞர்களாகிய எம். பி. பாலகிருஷ்ணன், வி. தட்சணாமூர்த்தி, என். குமரகுரு முதலியவர்களை தம்முடன் இணைத்து 1950ஆம் ஆண்டுக் காலத்தில் மிகப் புகழ்வாய்ந்ததும் மக்களின் ஆதரவையும், வரவேற்பையும் பெற்றதுமான நாதஸ்வர தவிற் குழுவை அமைத்தமை, ஒரு வரலாற்றுப் பெருமைக்குரிய அரிய செயற்பாடாகும். நாளுக்கு நாள் இவரது ஞானம் மெருகேற்றம் பெறத் தொடங்கியது. பல கலைக்கழகங்கள், இசைப்பிரியர்களால் 'நாதஸ்வரக் கலாநிதி', 'இன்னிசை வேந்தன்' என்ற பட்டங்கள் பெற்றதோடு இலங்கை அரசினால் அளிக்கப்படும் மிக உயர்ந்த கௌரவமான 'ஸ்ரீ கலாசூரியர்' என்ற சிறந்த பட்டத்தையும் பெற்றமை பொன்னான சாதனையாகும். நல்லூர்க் கந்தன் ஆலயத்தில் ஆண்டு தோறும் நிகழ்த்தப்படும் விழாக்களில் இசை பொழியும் வாய்ப்பு தொடர்ந்து பல ஆண்டுகளாக இவருக்குக் கிடைத்தது இறைவனின் அருட் கொடையெனலாம். 1979ஆம் ஆண்டு இங்கிலாந்தில் வாழும் தமிழர்களால் அழைக்கப்பட்டு அங்கு இசைக் கச்சேரி செய்யும் பயணத்துடன் ஆரம்பமான இவரது பன்னாட்டு இசைப் பயணம் தமிழர் வாழும் பல நாடுகளுக்குத் தொடர்ந்தும் சென்று கச்சேரி செய்யும் வாய்ப்பையும் பெற்றுக் கொடுத்தது. 1968ஆம் வருடம் தமிழ் இசைச் சங்கத்தினால் நடத்தப்படும் இசை விழாவில் மூளாய் ஏ. பாலகிருஷ்ணனுடனும், தவில் மேதைகளாகிய வலங்கைமான் சண்முக சுந்தரம்பிள்ளை, என். குமரகுரு ஆகியோருடனும் கச்சேரி செய்தார். நம்மூரில் நிலையான வாரிசு வேண்டுமென்ற ஆசையினால் தனது புதல்வர்களில் ஒருவரான முரளிக்கு நாதஸ்வரம் பயிற்றுவித்து, பின் இந்தியாவில் வித்துவம் பெற அனுப்பி வைத்தார். நாடு திரும்பிய இளையவன் முரளி, 1987ல் எமது ஊருக்குள் அமைதி பேண நுழைந்த இந்திய அமைதி காக்கும் படையினருள் ஒருவனின் இலக்கற்ற குண்டுக்கு இரையாகி அகால மரணத்தை தழுவிக் கொண்டமை இவரது வாழ்வில் ஒரு மிகத் துக்ககரமான சம்பவமாகும். நாமொன்று நினைக்கத் தெய்வம் வேறொன்று நினைப்பது உலக நியதி.

## நாதஸ்வர மேதை பால கிருஷ்ணன்

இவர் நெல்லியடியில் பிறந்தவர். இவரது தந்தை ஒரு சிறந்த வாய்ப்பாட்டுக் கலைஞர். இளம் வயதிலேயே தந்தையிடம் வாய்ப்பாட்டைக் கற்றுத் தேர்ந்து, பல கச்சேரிகள் செய்துள்ளார். பின் தன் தந்தையாரிடமே நாதஸ்வரம் பயின்று, இந்தியாவுக்குச் சென்று தொடர்ந்தும் பயின்று ஞானத்தில் முதிர்ச்சி பெற்றுத் திரும்பினார். பின்னர் என். கே. பத்மநாதன் அவர்களால் உருவாக்கப்பட்ட இளம் நாதஸ்வர தவில் குழுவில் இணைந்து கொள்ள அளவெட்டிக்கு வந்து அங்கேயே இன்றும் வாழ்ந்து கொண்டு நம்மூருக்குப் பெருமை தந்து கொண்டிருக்கின்றார். அக் காலத்தில் எமது ஊருக்கு வந்து தங்கி வாழ்ந்து இசை பரப்பிய விற்பன்னர்களின் வழி காட்டலையும் கேள்வி ஞானத்தையும் பெறும் பெரும் பாக்கியம் பெற்றவர் இவர். என். கே. பத்மநாதனுடன் இணைந்து வாழ்ந்த காலம் தனது வாழ்வின் பொற்காலம் எனக் கூறிப் பெருமைப் பட்டு வாழ்ந்து கொண்டிருப்பவர் இவர். வாய்ப்பாட்டின் மூலம் பெறப்பட்ட இவரது ஞானம், இவர் நாதஸ்வர



நாதஸ்வரக் கலாநிதி என். கே. பத்மநாதன்



நாதஸ்வர மேதை பால கிருஷ்ணன்

இசை வெளிப்பாட்டிலும் ஒரு தனிப்பாணியையும் உருவாக்கித் தனதாக்கிக் கொள்ள மிக உதவியது. இவர் இராக ஆலாபனை செய்யும் பாணியையும் நாதஸ்வரத்தைக் கையாளக் கைவரப்பட்ட சிறப்பையும் மூத்த பல மங்கல இசைக் கலைஞர்களே புகழ்ந்து பேசுவது இவரது சிறப்புக்கு மகிமையான அடையாளமாகும். இவரது இசை ஞானத்தைக் கௌரவிக்கும் பொருட்டு 'சங்கீத நாதஸ்வர இன்னிசைச் செல்வன்', 'நாதஸ்வர மதுரகான பூஷணம்', 'லலிதஸ்வர நாத வாருதி', 'கலா பூஷணம்' என்னும் சிறப்புப் பட்டங்கள் சூட்டப்பட்டமையும் எமது ஊருக்குப் பெருமை தருவன.

மேலும் இந்தியாவில் தமிழிசைச் சங்கம் நடத்தும் இசை விழாவுக்கு நாத கானம் செய்ய அழைக்கப்பட்டு அங்கும் கௌரவிக்கப்பட்டவர். 1999ஆம் ஆண்டில் கம்பர் கழகத்தால் கொழும்பில் நடத்தப்பட்ட இசை விழாவிலும் நாதஸ்வரக் கச்சேரி செய்ததோடல்லாது வாய்ப் பாட்டுக் கச்சேரியும் செய்து பெருமை தேடித் தந்தவர். இன்றும் இவர் தமிழர் வாழும் பல நாடுகளுக்கும் சென்று இசை பரப்பிப் புகழ் பெற்றுக் கொண்டிருப்பதை எண்ணுகையில் உள்ளம் உவகையில் மலர்கின்றது. தனது கலை மங்காது வளரத் தனது புதல்வர்களுள் (எம். பி. பி. சேகர், எம். பி. பி. சுதாகர்) இருவரையும் நாதஸ்வர இசையுலகுக்கு அறிமுகப்படுத்திக் காணிக்கையாக்கியுள்ளார். இவர்கள் இன்று இளம் நாதஸ்வரக் கலைஞர்களாகத் திகழ்வதானது இவரது பெருமையை மேலும் பறைசாற்றுகின்றது. இத்தோடு நின்று விடாமல் இன்று இசையுலகில் முன்னணியில் நிற்கும் இளம் நாதஸ்வர வித்துவான்களாகிய சாவகச்சேரி எம். பி. நாகேந்திரன், இணுவில் காங்கேஸ்வரன், தொண்டைமானாறு கோவிந்தசாமி, சித்தங்கேணிச் செல்வன், மதுரை இராசரத்தினம் என்பவர்களுக்கும் குருவாக இருந்தமையும், இவரது பெருமையை மேலும் அணி செய்வதாகும்.


தவில் மேதை என். குமரகுரு

## தவில் மேதை என். குமரகுரு

தனது தந்தையாராகிய நாகலிங்கம்பிள்ளையை முதற் குருவாகக் கொண்டு தவில் பயின்று, பின் பிரபல தவில் மேதை வலங்கைமான் சண்முகம் சுந்தரம்பிள்ளையின் தந்தையாராகிய மூளாய் ஆறுமுகம்பிள்ளையை பிரதம குருவாகக் கொண்டு ஞானம் பெற்றவர். அக் காலத்தில் அளவெட்டி என். கே.. பத்மநாதனால் அமைக்கப்பட்ட இளம் நாதஸ்வர தவில் குழுவினருடன் இணைந்து தவில் இசைத்து புகழ் பெற்று விளங்கியவராவர். பின் பிரபல நாதஸ்வரக் கலைஞர்களாகிய திருமெஞ்ஞானம் பல்லவி ரி. பி. நடராஜ சுந்தரம் பிள்ளை, பந்தனை நல்லூர் தட்சணாமூர்த்திப்பிள்ளை முதலியவர்களை இந்தியாவிலிருந்து வரவழைத்து இசைக் குழு அமைத்து, இசை வளர்த்ததுப் புகழ் தேடியவர். 1960ஆம் ஆண்டு இந்திய இசையாளர் சங்கம் நடத்திய இசை விழாவிலும், 1968ல் தமிழ் இசைச் சங்கம் நடத்திய இசை விழாவில் அளவையூர் என். கே. பத்மநாதன், மூளாய் ஏ. பாலகிருஷ்ணன் இருவரும் இணைந்து நாதஸ்வரம் இசைக்க, வலங்கைமான் சண்முக சுந்தரம் பிள்ளையுடன் இணைந்து தவில் வாசித்தும் பெருமை பெற்றதுடன் நின்று விடாமல், பின் அதே சங்கத்தினால் நடத்தப்பட்ட இன்னொரு இசை விழாவிலும் கிளாரினட் விற்பன்னர் ஏ. கே. சி. நடராஜனின் கிளாரினட் கச்சேரிக்கும் தவில் வாசித்துப் புகழ் பெற்றவர்.

1979ஆம் ஆண்டு என். கே. பத்மநாதன் குழுவினருடன் இணைந்து இங்கிலாந்துக்குச் சென்று, கச்சேரி செய்யும் வாய்ப்பும் பெற்று, பின் பல உலக நாடுகளுக்கும் சென்று தவில் வாசித்து புகழ் தேடிக் கொண்டார். இவற்றோடு பல வயலின் வாத்திய தனிக் கச்சேரியில் தவிலும் கெஞ்சிராவும் வாசித்தும் பெருமை தேடியவர். 1968ல் இவருக்கு 'லயஞான கலாநிதி' என்ற பட்டத்தை கண்டி குறிஞ்சிக் குமரன் ஆலய இசைச் சங்கமும், 1993ல் கலா பூஷணம் என்ற கௌரவ பட்டத்தை இலங்கை அரசாங்கமும் சூட்டி சிறப்புச் செய்தமை இவ்விடத்தில் குறிப்பிடத்தக்கது.

தமது வாரிசுகளாக ஒரு புதல்வரை நாதஸ்வரம் பயிலவும், மற்றவராகிய பாலச்சந்திரனை தவில் இசைக்கவும் பயிற்றுவித்து, கலை உலகிற்கு அறிமுகம் செய்துள்ளமையும், தரமான ஒரு பெரிய சிஷ்ய பரம்பரையை உருவாக்கிய மகிமையும் இவருக்குண்டு. இன்று இசையுலகில் முன் வரிசையில் இருக்கும் இளம் தவிற் கலைஞர்களாம் த. உதயசங்கர், எஸ். சுகுமார், கானமூர்த்தி, கண்ணதாசன், கனடாவில் வாழ்ந்து கொண்டு தவில் இசைக்கும் மனோகரன் என்போர் இவர் உருவாக்கிய பரம்பரையில் அடங்குவர்.

## நாதஸ்வர மேதை எஸ். சிதம்பரநாதன்

அளவையூரில் வாழ்ந்து இசை வளர்த்துக் கொண்டிருக்கும் பரம்பரையில் இவரும் ஒருவர். தனது நாதஸ்வர வாழ்க்கையை மிக இளம் வயதில் கும்பழாவளை விநாயகர் ஆலயத்தில் ஆரம்பித்தவர். இவருடைய தந்தையாராகிய தவிற்காரர் செல்லத்துரை அவர்களும் இவ்வாலயத்தில் இசைத் தொண்டு புரிந்தவர். அக்காலத்தில் தந்தையாருடன் வந்து இசைத்தொண்டு புரிந்து நாதஸ்வரத்தை கற்க ஆரம்பித்தார். பின் பிரபல நாதஸ்வரக் கலைஞராகிய மாவிட்டபுரம் இராசா அவர்களிடம் சாஸ்திரிய முறையில் நாதஸ்வரம் பயின்று தகைமை பெற்றதுமல்லாமல்,



தவிற்கலைஞர் தெ. உதயசங்கர்

இந்தியாவுக்கும் சென்று நுண் இசையில் மெருகேற்றப் பெற்ற-வர். இவரின் மாமனாராகிய தவிற் கலைஞர் கணேசரத்தினத்தின் வழி நடத்தலில் வருடா வருடம், அவருடன் வந்து தங்கி வாழ்ந்து பிரபல நாதஸ்வரம் வாசிக்கும் வாய்ப்பும், வழி காட்டலும் கிடைக்கப் பெற்றவர். மிகப் பெரிய நிதியமான கேள்வி ஞானமும் பெற்றமை இவரது நாதஸ்வர இசைவளர்ச்சிக்கு கிடைத்த பெரும் பாக்கியமாகும். பின் தனக்கென ஒரு குழு அமைத்து தனது சகோதரராகிய சிவகுருநாதனையும் (தற்போது கனடாவில் வாழ்பவர்) இணைத்து பல வருடங்கள் நாதஸ்வர இசை மழை பொழிந்து இன்று புகழோடு வாழ்பவர். விடா முயற்சியும், அபார அசுர பயிற்சியும், தனக்கே உரியதான சிறப்பான பாணியை அமைத்துக் கொள்ள உதவியது. அதுமட்டுமல்லது இசை உலகில் பெரும் வரவேற்பையும் தேடிக் கொடுத்தது. இவருக்கு 'நாதஸ்வர இளம் தென்றல்' என்ற பட்டம் மிக இள வயதிலும், பின் 'நாதஸ்வர கான வாருதி' என்ற பட்டமும் சூடடப்பட்டு கௌரவிக்கப்பட்டமை எமது ஊருக்கு மிகுந்த பெருமையைத் தேடிக் கொடுத்த சம்பவமாகும். அத்தோடு இவர் ஆண்டு தோறும் பல நாடுகளுக்குச் சென்று இசை பரப்பியும் வருகின்றார். இவரும் என். கே. பத்மநாதனும் எம். பி. பாலகிருஷ்ணனும் இணைந்து செய்யும் இசைக் கச்சேரியைக் கேட்கும் பாக்கியம் பெற்றவர்கள், இவர்களுடைய இசை இணைப்புத் தன்மையை போற்றிப் பேசுவதுண்டு. பெரிய இசைப் பரம்பரையை உருவாக்கிப் புகழோடு வாழ்ந்து கொண்டிருக்கிறார்.

அளவையூருக்குப் பெரும் புகழ் தேடிக் கொடுத்து, இசை வளர்த்துக் கொண்டிருக்கும் இளம் கலைஞர் வரிசையில், தவில் கலாநிதி தட்சணாமூர்த்தி சிவகுருநாதன் (கனடா), இரத்தினவேல் கேதீஸ்வரன், அழகர்சாமி சுதன், பாலகிருஷ்ணன், சேகர், சுதாகர் சகோதரர்கள் கணேசரத்தினம், சந்திரன் முதலியோரும் அடங்குவர்.

**தொகுப்பு:**
**சி. கந்தசாமி**
**அளவையூர்.**



நாதஸ்வர மேதை எஸ். சிதம்பரநாதன்



நாதஸ்வர மேதை எஸ். சிவகுருநாதன்

# திரு. செ. மயில்வாகனம் அவர்கள்



அளவெட்டிக் கிராமம் தந்த நற்புதல்வர்களில் திரு. செ. மயில்வாகனம் அவர்களும் ஒருவராவர். இவர் இக்கிராமத்தில் வாழ்ந்த செல்லப்பாச் சட்டம்பியாரின் புதல்வராவர். தந்தையார் கல்வி கேள்விகளிற் சிறந்திருந்ததோடு தெய்வ பக்தியிலும் மாண்புற்றுத் திகழ்ந்தார். இவருடைய வளர்ப்பில் மகனும் நல்ல குணாம்சங்கள் உடையவராக வளர்ந்தார். கல்வியில் ஆர்வமுள்ளவராக இருந்த போதிலும் அக்காலச் சூழ்நிலை எம்கிராமப் பிள்ளைகளுக்கு ஆங்கிலங் கற்பதற்கு ஏற்றதாக அமையாததால் அவர் ஒரு பட்டதாரியாகவோ அன்றேல் தகுதிபெற்ற ஆங்கில ஆசிரியராகவோ வருவதற்குத் தடையாக இருந்தது. அவர் ஆங்கிலம் கற்ற கதை இக்கால மாணவர்களைப் பெரு வியப்புக்குள்ளாக்கும் என்பதில் ஐயமில்லை. அளவெட்டியிலிருந்து யாழ்ப்பாணம் இந்துக் கல்லூரிக்குக் கால் நடையிற் சென்று கற்கவும் பின்னர் மீண்டும் நடந்து வீட்டுக்கு வரவும் வேண்டிய சூழ்நிலை நிலவியது என்பதை நாம் மறக்க முடியாது.

திரு. மயில்வாகனம் அவர்கள் அவ்வாறு கற்றும் ஒரு ஆங்கில ஆசிரியராக யாழ்ப்பாணம் இந்துக் கல்லூரியிலும் மருதனார் மடம் இராமநாதன் கல்லூரியிலும் கடமையாற்றினார் என்பது அவருக்குப் பெருமை சேர்ப்பதே. இராமநாதன் கல்லூரியில் இவர் கற்பித்த காலத்தில் சுவாமி விபுலானந்தருடனும் பண்டிதமணி க. சு. நவநீத கிருஷ்ணபாரதியாருடனும் நெருங்கிப் பழகும் வாய்ப்பு இவருக்குக் கிடைத்தது. நவநீத கிருஷ்ணபாரதியார் இயற்றிய உலகியல் விளக்கம் என்னும் நூலை விபுலானந்தர் பதிப்பித்ததும் அந்நூற் பாடல்கள் சிலவற்றை விபுலானந்தர் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து நூலுடன் சேர்த்து வெளியிட்டதும் ஆசிரியர் மயில்வாகனம் அவர்கள் நெஞ்சில் நீங்காத நினைவுகள். உலகியல் விளக்க நூல் பற்றி மயில்வாகனம் அவர்கள் உயர்ந்த மதிப்பு வைத்திருந்தார் என்பது பின்னாளிலும் அறியக் கூடியதாக இருந்தது. திரு. மயில்வாகனம் அவர்கள் ஒரு சிறந்த ரசிகர். இலக்கியங்களில் மட்டுமல்மாமல் இசை நாடகங்களிலும் நாட்டமுடையவர்.

ஆசிரியத் தொழிலை இடையில் நிறுத்தி விட்டுத் தமது மனைவியோடும் மகனோடும் வெளிநாடு சென்று சிலகாலம் வாழ்ந்தார். ஆனால் அங்கிருந்த வசதியான வாழ்க்கையை விட்டு விட்டு தமது மகனின் படிப்புக்காக யாழ்ப்பாணம் வந்து சேர்ந்தார். இளம் வயதில் மனைவியை இழந்தபோதும் இவர் மறுமணஞ் செய்யாமல் ஒழுங்கான வாழ்வு நெறியைக் கடைப் பிடித்தார். இவருடைய ஒரே மகன் சிறிகாந்தா இலங்கை நிர்வாக சேவைப் பரீட்சையில் சித்தியடைந்து அரசாங்க அதிபராகக் கடமையாற்றியமையை எங்கள் யாழ்ப்பாண மக்கள் என்றும் நினைவு கூர்வர் என்பதில் ஐயமில்லை. நேர்மையாகவும் கடமையுணர்ச்சி உடையவராகவும் மகன் சேவையாற்றியது தந்தைக்குப் பெருமகிழ்வைத் தந்திருக்குமென்பது நிச்சயம்.

திரு. செ. மயில்வாகனம் அவர்கள் நடுவயதில் அளவெட்டிக் கிராமத்தை மறந்திருந்தார் என்றே கூற வேண்டும். ஆனால் தமது முதுமைப் பருவத்தில் அவர் அளவெட்டியின் தவப்புதல்வனானதும் சேவைபல ஆற்றியதும் என்றும் நினைவு கூரத் தக்கவை. அளவெட்டிக்கு அவர் பிரவேசித்தபோது ஒரு துறவிபோலக் காலங்கழிக்கவே விரும்பினார். ஆச்சிரமமும் அமைக்கப்பட்டது. ஆனால் அவரை அவ்வாறு வாழ அளவெட்டிக் கிராமம் விட்டு விடவில்லை. அவர் மக்கள் சேவையே மகேசன் சேவையெனக் கொண்டு பொதுப்பணிகளில் ஈடுபடலானார்.

அளவெட்டி சைவ வாலிப சங்கம், அளவெட்டி கிராம முன்னேற்றச் சங்கம், அளவெட்டி மகாஜனசபை, அளவெட்டி கும்பழாவளை விநாயகராலய தர்மகர்த்தாக்கள் சபை என்பவற்றின் தலைமைப் பதவிகள் அவரை வரவேற்றன. இவற்றில் அவர் ஈடுபட்டு எங்கள் கிராமத்திற்கு அளப்பெருஞ் சேவையாற்றினார். அளவெட்டிக் கிராம முன்னேற்றச் சங்கம் ஆரம்பித்திருந்த நெசவுசாலையை நிர்வகிப்பதில் அவர் புரிந்த சேவை பாராட்டுக்குரியது. எங்கள் கிராமத்தில் பலர் அத்தொழிலில் பயிலவும் பிற்காலத்திற் பலர் நெசவாசிரியராக மலரவும் அவர் வழி காட்டினார். அளவெட்டியில் அக்காலத்தில் நிகழ்ந்த எந்தப் பொதுப் பணிக்கும் அவரது வழிகாட்டுதல் பேருதவி பயத்ததென்பதில் ஐயமில்லை. சைவவாலிப சங்கம் வளர்ந்ததும் கும்பழாவளை விநாயகராலயம் சிறந்ததும் அவரது அரும் பெரு முயற்சியால் என்பதில் ஐயமில்லை.

பொதுப்பணி செய்வதில் அவருக்கிருந்த ஆர்வம் பாராட்டத் தக்கது. அவர் சேவை நலம் பாராட்டி அளவெட்டி கும்பழாவளை விநாயகராலயத் தர்மகர்த்தாக்கள் சபை அவருக்குப் பெருவிழா ஒன்றினையெடுத்துக் கௌரவித்தது. அவர் வாழும் பொழுதே அவரது ஏகபுத்திரன் மரணத்தைத் தழுவியது அவருக்குப் பெருங் கவலையைத் தந்தது. அவருடைய அந்திம காலம் அளவெட்டியிலேயே கழிந்தது. விநாயகர் ஆலயத்தில் அவரது ஞாபகமாக வாசிகசாலை ஒன்று நிர்மாணிக்கப்பட்டது. அங்கு அவரது உருவப் படமும் வைக்கப்பட்டுள்ளது. அவரது உருவச் சிலையொன்று அங்கு நிறுவவும் முயற்சி மேற்கொள்ளப்படுகிறது. அவர் புகழ் நீடு வாழ்க.



# கடின உழைப்பின் குழந்தையே கலைஞர் செல்லையா சிவப்பிரகாசம்

**திரு. த. சிவராசா** B.A., Dip in Ed.
அதிபர், முத்துத் தம்பி மகாவித்தியாலயம்,
திருநெல்வேலி

கலாபூஷணம், சிற்பக்கலாநிதி செல்லையா சிவப்பிரகாசம் அவர்கள் சித்திரம், சிற்பம், வடிவமைப்பு ஆகிய துறைகளில் யாழ்ப்பாணத்தில் தலைசிறந்த கலைஞர் ஆவார்.

அளவெட்டி வடக்கில் செல்லையா - தெய்வானைப்பிள்ளை தம்பதியினருக்கு மூன்றாவது பிள்ளையாக 1928. 06. 21ஆம் திகதி பிறந்த இவர் சிறுவயதில் சீனன் கலட்டி ஞானோதயா வித்தியாசாலையில் ஆரம்பக்கல்வி பயின்று எஸ்.எஸ்.சி. வரை சித்தியடைந்து தெல்லிப்பழை மகாஜனக் கல்லூரியில் ஆங்கிலக் கல்வியைத் தொடர்ந்து படித்தார். அப்பொழுதே இவர் சித்திரத்திலும், சிற்பத்திலும் ஆர்வம் உள்ளபடியால் அம்பனை வடக்கில் விவசாயம் செய்யும்பொழுது சிறு வயதிலேயே களிமண்ணை எடுத்து உருவங்கள் செய்யத் தொடங்கினார். இவரின் கலை ஆற்றலைக் கண்ட பெற்றோர் இவரின் குருவான திரு. ஏ. இராசையா ஆசிரியரின் அசியுடன் மேற்படிப்பிற்காக கொழும்பு அரசினர் துண்கலைக் கல்லூரியில் கலை படிக்க அனுப்பினர். அங்கு 1952ஆம் ஆண்டில் இருந்து 1966ஆம் அண்டு வரை சித்திரம், சிற்பம் ஆகிய இரண்டையும் திறம்படகற்று *'Diploma in Art'* என்ற பட்டம் பெற்றார். இவரின் கலை ஆற்றலைக் கண்டு அறிந்த அளவெட்டிப் பெரியார் பண்டிதர் நாகலிங்கம் என்பவர் இவரை கலைப்புலவர் திரு. கே. நவரத்தினம் என்பவரின் சிபாரிசுடன் யாழ். மத்திய கல்லூரியில் சித்திர ஆசிரியராக அமர்த்தினார். 1956ஆம் ஆண்டில் இருந்து யாழ். மத்திய கல்லூரியில் சித்திரமும் சிற்பமும் ஓங்கி வளரலாயின. இவரின் கலைத்திறன் யாழ் மாவட்டத்தில் மட்டுமல்லாது இலங்கை பூராவும் பிரகாசிக்கத் தொடங்கியது.

யாழ்ப்பாணம் பல்கலைக்கழகம் சித்திர பாடத்துறையை ஆரம்பித்தபோது அதன் போதனைத் தேவையைப் பூர்த்தி செய்ய திரு. செ. சிவப்பிரகாசத்தின் சேவை தேவைப்பட்டமை இவருடைய திறமை, ஆற்றல் போன்றவை பற்றி முன்னர் கூறியதை உறுதிப்படுத்துவதாக அமைகின்றது.

இவர் ஏறக்குறைய 45 சிலைகள்வரை செதுக்கி உள்ளார். இவர்



யாழ்ப்பாணத்தின் அடையாளங்களில் ஒன்றாகத் திகழும், முத்திரைச்சந்தையிலுள்ள சங்கிலியன் சிலை, திரு. சிவப்பிரகாசம் அவர்களால் வடிக்கப்பட்டது.

இலங்கையின் பிரதம மந்திரி திருமதி ஸ்ரீமாவோ பண்டாரநாயக்கா உட்பட ஜனாதிபதியின் 1996ஆம் ஆண்டின் தேசிய விருதாகிய கலாபூஷணமும், பல்வேறுபட்டவர்களிடம் இருந்து 12 வகையான தங்கப்பதக்கங்களையும் பெற்றுள்ளார்.

இவர் சித்திரக் கலையை யாழ்ப்பாணத்தில் வளர்க்க அரசாங்கத்தினால் அங்கீகரிக்கப்பட்ட 'சிவசாய சித்திரக் கூடம்' என்கின்ற ஒரு நிறுவனத்தையும் நடத்தி வருகின்றார். இது பல மாணவர்களை உருவாக்க உதவி வருகின்றது. இவரால் உருவாக்கப்பட்ட மாணவர்கள் இடம்பெயர்வின் காரணமாக மேற்குலக நாடுகளிலும் இவரின் புகழைப் பரப்பி வருகின்றார்கள்.

பிரபல இந்திய சிற்ப வல்லுநர் திரு. மணி அவர்களே இவருடைய குருவாக அமைந்தமையும் ஒரு சிறப்பு அம்சம் ஆகும். இவர் இறைபக்தி உடையவராக இருந்ததனாலே இவருடைய கலை ஆக்கங்கள் எல்லாம் உயிர்த்துடிப்பு உடையனவாகவும் துல்லியமானதாகவும் காணப்படுகின்றன. அதனால் எல்லோராலும் போற்றப்படுகின்றார்.

வேத சாஸ்திர விதி முறைகளுக்கு அமைய தேவாலய சிற்பங்கள் வடிப்பதிலும் இவர் வல்லவர். இவர் கலைத் துறையில் பல்கலைக்கழகம் போன்றவர்.

ஒருவர் தெரிவு செய்யும் துறையில் அல்ல, தெரிந்தவரின் திறமையிலேயே அத்துறையின் முக்கியத்துவம் தீர்மானிக்கப்படும் என்பதற்கு சிற்பக் கலாநிதி அவர்கள் சிறந்த எடுத்துக் காட்டாகும்.

இவருடை சிவசாயி சித்திரக்கூடம், பேசும் சிற்பங்கள் நிறைந்த பூங்காவாகக் காணப்படுகிறது.

யாழ்ப்பாணத்தில் புகழ்பூத்த மத்திய கல்லூரியில் இருந்து ஆரம்பித்து பல்கலைக்கழகம்வரை உயர்ந்து நிற்பது இவரின் 'கடின உழைப்பின் விளைவு' என்று கூறுவது மிகவும் பொருத்தமுடையதாகும்.

இறைவனின் படைப்பை இறைவனே ஐயப்படும் அளவிற்கு அப்படியே அமைக்கின்றமையே இவருடைய தனித்தன்மை எனலாம்.

1947ஆம் ஆண்டு கலையுலகில் புகுந்த இவர் 1960ஆம் ஆண்டு இல்லற வாழ்க்கையில் ஈடுபட அன்னலட்சுமி எனும் ஆசிரியையைத் திருமணம் செய்து துஷ்யந்தன், அனுஷ்யந்தன் எனும் இரு புதல்வர்களைப் பெற்றெடுத்து இருவரையும் படிப்பித்துச் சான்றோர் ஆக்கினார். துஷ்யந்தன் ஜேர்மனியிலும், அனுஷ்யந்தன் டாக்டராக மருத்துவத் துறையில் சித்திபெற்று கொழும்பிலும் கடமையாற்றுகின்றனர்.

ஐம்பத்தி மூன்று வருடங்கள் கலைக்காகத் தன்னை அர்ப்பணித்த கலைஞர் சிவப்பிரகாசம் அவர்கள் இன்னும் பல்லாண்டுகாலம் வாழ்ந்து கலைத்தொண்டு புரிய எல்லாம் வல்ல இறைவனை வேண்டிப் பிரார்த்திப்போம்.

---

## கலைஞரால் வடிக்கப்பட்ட சிற்பங்களிற் சில

| | | |
|---|---|---|
| 01. | சேர். பொன். இராமநாதன் | - யாழ் மாநகர சபை |
| 02. | பாவலர் தெ. அ. துரையப்பாபிள்ளை | - மகாஜனக் கல்லூரி |
| 03. | கலாயோகி ஆனந்தக் குமாரசாமி | - யாழ் மாநகர சபை |
| 04. | சங்கிலி மன்னனும் குதிரையும் | - யாழ் மாநகர சபை |
| 05. | வண. பிதா லோங் அடிகளார் | - யாழ் மாநகர சபை |
| 06. | மகாஜனக் கல்லூரி அதிபர் தெ. து. ஜெயரத்தினம் (உலோகம்) | - மகாஜனக் கல்லூரி |
| 07. | மேயர். அல்பிரட் துரையப்பா (உலோகம்) | - யாழ் மாநகர சபை |
| 08. | குமாரசாமிப்புலவர் | - பட்டின சபை, சுன்னாகம் |
| 09. | கூட்டுறவுத் தந்தை வீரசிங்கம் | - பட்டின சபை, மானிப்பாய் |
| 10. | பண்டாரவன்னியன் | - வவுனியாக் கச்சேரி முன்றல் |
| 11. | மழுவராயர் | - புத்தூர் சோமஸ்கந்தா கல்லூரி |
| 12. | காசிவாசி செந்திநாதஐயர் | - குப்பிழான் |
| 13. | அமரர் திருச்செல்வம் | - யாழ் மாநாகர சபை |
| 14. | இராசமாணிக்கம் பா. உ. | - மட்டக்களப்பு |
| 15. | காந்தி சிலை | - பருத்தித்துறை நகர சபை |
| 16. | விவேகானந்தர் சிலை | - ஸ்ரீ இராமகிருஷ்ண ஆலயம் |
| 17. | 63 நாயன்மார்கள் | - நயினைதீவு நாகபூசணி அம்மன் ஆலயம் - நயினைதீவு |
| 18. | சரஸ்வதி சிலை | - யாழ். மத்திய கல்லூரி |
| 19. | கலைவாணி சிலை | - யாழ். இந்து மகளிர் கல்லூரி |
| 20. | கலைவாணி சிலை | - தொண்டர் வித்தியாலயம், மருதானை |
| 21. | பகவத்கீதை (4 குதிரை, தேர், கிருஷ்ணன் சிலைகள்) | - வவுனியா ஸ்ரீ சத்திய சாயி பாபா சமித்தி மண்டபம். |
| 22. | கலைவாணி சிலை, மனுநீதி கண்ட சோழன் சிலைகள்- | - வவுனியா பொது நூலகம் |

| | | |
|---|---|---|
| 23. கலைவாணி சிலை | - | முகத்துவாரம் இந்து ம. வி. கொழும்பு |
| 24. இளநங்கை சிலை | - | வவுனியா புகையிரத நிலையவாயில் |
| 25. கற்பக் கிரகச் சிற்பங்கள் | - | தேடிவந்த பிள்ளையார் கோயில், வவுனியா |
| 26. பஞ்சமுக விநாயகர் சிலை | - | ஆதிவிநாயகர் ஆலயம், வவுனியா |
| 27. தச அவதாரம் | - | ஸ்ரீ சத்திய சாயி சமித்தி, திருநெல்வேலி, வவுனியா |
| 28. பார்த்த சாரதி (உயர் புடைப்புச் சிற்பம்) | - | யாழ் வேம்படி மகளிர் கல்லூரி |
| 29. பகவத் கீதை | - | இராமர், சீதை, இலட்சுமணன், அனுமார் சிற்பங்கள், |
| 30. வல்லிபுர ஆழ்வார் | - | புலோலி, கோயில் தேர் முட்டியில் |
| 31. பகவத்கீதை சிற்பம் | - | யாழ். மத்திய கல்லூரி தம்பர் மண்டபம் |
| 31. தவில்மேதை தட்சணாமூர்த்தி சிலை | - | இணுவில் |
| 32. யாழ். தவமுனிவர் யோகர் சுவாமி சிலை | - | கொழும்புத்துறை இந்து மா. வி. |
| 33. சேர் பொன். இராமநாதன் சிலை | - | யாழ் பல்கலைக்கழகம். |
| 34. தியாகி சிவகுமாரன் சிலை (உலோகம்) | - | உரும்பிராய் |
| 35. மணி ஐயர் சிலை | - | பிரதேச சபை |

# SATGURU SIVAYA SUBRAMUNIYASWAMI AND ALAVEDDY

The facts attributed Satguru Sivaya Subramuniyaswami to select Alaveddy as his administrative Head Office are for the under mentioned reason.

In his first visit to Ceylon (now Sri Lanka) in the year 1949 Subramuniyaswami who is an American and a Christian by birth, by chance acquainted with late Kandiah Chettiar, a native of Alaveddy who was doing remarkably well in Colombo, due to his prudent financial investments. They became very close and thereafter Kandiah Chettiar used to accompany Swami wherever he went, including Kandy, Nuwara Eliya and also to important religious places of worship of Buddhist, Hindus and Christians.

After some time Swami casually inquired from Chettiar as to why he has not taken him to his birth place Jaffna. Chettiar replied 'There is hardly anything to see in Jaffna, except for places like Keerimalai, Nayinathevu (where Hindu and Buddhist temples are situated in close proximity) and also Satguru Siva Yogaswami, a proclaimed pundit of the Jaffna Tamil people in Colombuthurai.

They did make a visit to Jaffna and met Yogaswami at his Colombuthurai Achram. While Subramuniyaswami was leaving the prayer congregation, Yogaswami gave him a friendly pat at his back and prophesied that this sound will vibrate in America. True to his prediction that simple act of his had made Subramuniyaswami to study Hindu Philosophy thoroughly and became a devout Hindu in his later life.

He is sincerely convinced that Chettiar's family was responsible for all these happenings. In one of his subsequent visit, as a gesture of gratitude he decided to establish his administrative Head Office at the birth place of Mr K Chettiar and his brother Vaithialingam Chettiar, who was then Rural Development Officer. Yoga Ashram was opened at Alaveddy in the early 70's in the compound of Kandiah Chettiar in the presence of Mr Mylvaganam, an Oxford educated native of Kopay. Swami's intention was to name it as 'University of Contemplative Art', in time to come.

I humbly suggest that we in turn, as a gratitude to our spiritual leader Yogaswami, should develop the place where he enshrined his Ashram that is Colombuthurai, even though he was born in Vimankamam Tellipallai (Valigamam North) and also to include Navanthurai, Urkavalthurai (Kayts), Kankesanthurai (K.K.S), Valvettithurai (V.V.T) and Parithithurai (Point Pedro) in the year 2000.

In conclusion it is relevant to mention that Satguru Sivaya Subramaniya Swami is at present in charge of building a Hindu temple in Hawaii (America), to last for one thousand years .The foundation stone was laid in 1998 at which event I was fortunate to be present. He is also the publisher of the monthly magazine Hinduism Today.

**MARIMUTHU SELVATHURAI**
**COLLEGE VIEW**
**ALAVEDDY**

# பொன்னையா மாஸ்டர்



பொன்னையா மாஸ்டர் என்றால் உள்ளூரிலும் அயலூரிலும் எல்லோருக்கும் தெரியும். அவருடைய உண்மையான பெயர் சிதம்பரப்பிள்ளை என்பது அநேகருக்குத் தெரியாது. நூற்றாண்டு விழாக் கண்டு இன்றும் வீறு நடையோடு அபிவிருத்தியடைந்து கொண்டிருக்கும் அருணோதயக் கல்லூரியின் வளர்ச்சியில் பெரும்பங்கு வகித்தவர் பொன்னையா மாஸ்டர்.

09. 09. 1909இல் பிறந்த இவர் இளமையிலேயே தந்தையாரை இழந்துவிட்டார். தமிழ்ப் பள்ளியில் ஐந்தாம் வகுப்புவரை படிப்பை முடித்தகாலம். கணபதிப்பிள்ளை உபாத்தியாயரின் தலைமையில் பள்ளிக்கூடம் பிரகாசிக்கத் தொடங்கியது. நுண்மதியும், கல்வியில் ஊக்கமுங் கொண்ட மாணவனுக்குச் சிறந்த ஆசிரியர்கள் வாய்த்தார்கள். அவர் படிக்கிற காலத்தில் பெண்பிள்ளைகளும் அங்கே படிக்கத் தொடங்கிய படியால் அளவெட்டி ஆங்கிலக் கலவன் பாடசாலை எனப்பெயர் மாற்றம் பெற்றது. அங்கு E.S.L.C. படிப்பை முடித்துக் கொண்டு ஸ்கந்தவரோதயக் கல்லூரியிற் சேர்ந்து 1928ஆம் ஆண்டு கேம்பிறிச் சீனியர் பரீட்சையில் தேறினார். உடனேயே அளவெட்டி ஆங்கில பாடசாலையில் ஆசிரிய நியமனங் கிடைத்தது. விரைவில் ஆங்கில ஆசிரிய தராதரப் பரீட்சையில் தேறிவிட்டார். ஆங்கிலம், தமிழ், கணிதம், விஞ்ஞானம், சமயம் ஆகிய எல்லாப் பாடங்களையும் மிகத்திறமையாகக் கற்பிக்கும் ஆற்றல் பெற்றிருந்தார். மாணவர்களை வீட்டுக்கு அழைத்து இரவு வகுப்புக்களையும் நடத்தினார்.

இவருடைய கற்பிக்குந் திறமை பயிற்றப்பட்ட அல்லது பட்டதாரி ஆசிரியர்களின் திறமைக்கு எவ்வாற்றாலும் குறைந்ததன்று. இருப்பினும் சம்பள உயர்வுக்காக 1947ஆம் ஆண்டு கொழும்பு ஆங்கில ஆசிரிய பயிற்சிக் கல்லூரிக்குச் சென்றார். அங்கே இரண்டு வருடப் பயிற்சியை ஒரு வருடத்தில் முடித்துக் கொண்டு வந்தார். அப்பொழுது தலைமை ஆசியராயிருந்த திரு. எஸ். கிருஷ்ணசாமி ஐயர் விலக அவருடைய இடத்தில் இவர் 1949ல் தலைமை ஆசிரியரானார். இவர் எஸ். எஸ். சி. வகுப்பை ஆரம்பித்து அயராது பாடுபட்டார். இவரது முயற்சியால் பிரார்த்தனை மண்டபம் கட்டி முடிக்கப்பட்டது. உயிரியல், ஆங்கிலம் முதலிய பாடங்களுக்கு இந்தியாவிலிருந்து பட்டதாரி ஆசிரியர்கள் நியமிக்கப்பட்டார்கள். விளையாட்டு மைதானம் விஸ்தரிக்கப்பட்டது. எஸ். எஸ். சி. மாணவர்களுக்குப் பள்ளிக்கூடத்தில் இரவு வகுப்பு நடத்தினார். 1950 டிசம்பர் எஸ். எஸ். சி. பரீட்சைக்கு முதன்முதல் மாணவர்கள் தோற்றி மிகச் சிறந்த பெறுபேறுகளைப் பெற்றார்கள்.

பல துறைகளிலும் பாடசாலை வளர்ச்சியடைந்த படியால் 1951ஆம் ஆண்டு இரண்டாந் தரத்துக்கு உயர்த்தப்பட்டது. அதனால் திரு. சு. சிவசுப்பிரமணியம் அவர்கள் அதிபராகவும் பொன்னையா மாஸ்டர் உப அதிபராகவும் மாறவேண்டியிருந்தது. பாடசாலையின் பெயரும் அருணோதயக் கல்லூரி என மாறியது.

அதிபருக்கு வலக்கரமாக நின்று உழைத்தவர் பொன்னையா மாஸ்டர். கல்லூரி நிர்வாகத்திலும் கட்டிட வேலைகள், காணி விஸ்தரிப்பு முதலிய பலதுறையிலும் பொன்னையா மாஸ்டரின் பங்கு கணிசமானது. 1968ல் அதிபர் சிவசுப்பிரமணியம் பதவி உயர்வு பெற்றுச் செல்ல மீண்டும் இவரே அதிபராக ஒருவருடம் சேவை செய்து 09. 09. 1969ல் ஓய்வு பெற்றார். அவருடைய முயற்சியினாலே அந்த வருடமே கல்லூரியின் 75ஆவது ஆண்டு நிறைவு விழா விமரிசையாகக் கொண்டாடப்பட்டது.

கல்விச் சேவையோடு மாத்திரம் நிற்காமல் கிராமத்து அபிவிருத்தி வேலைகள் அனைத்திலும் ஈடுபட்டு உழைத்தவர் பொன்னையா மாஸ்டர் அவர்கள். 1930களில் அளவெட்டி மகாஜனசபை மண்டபம் அமைக்கும் பணியில் முன்னின்றவர்களில் இவரும் ஒருவர். சங்கக்கடையின் ஆரம்பகால வளர்ச்சிக்கும் முன்னின்று உழைத்தார். 1940களின் ஆரம்பத்தில் அரசினர் மருத்துவமனைத் தோற்றத்துக்குக் காரணமானவர்களில் இவரும் ஒருவர். இவ்வாறு கிராமத்தில் நடைபெற்ற எந்த முக்கியமான அலுவலிலும் இவருடைய பங்களிப்பு அல்லது ஆலோசனை நிச்சயமாக இடம் பெற்றிருக்கும். இவ்வாறு பயனுள்ள வாழ்க்கை வாழ்ந்த இவர் 1993ஆம் ஆண்டு சிவபதம் அடைந்துவிட்டார்.



# நான் கண்ட இசை ஆசான் சங்கீத பூஷணம் வி. கே. நடராஜன் அவர்கள்

அளவெட்டியைப் பிறந்த மண்ணாகக் கொண்டவரும், அளவெட்டியில் தனக்கென ஒரு இசைப் பரம்பரையைப் படைத்தவரும், அருணோதயக் கல்லூரியில் நீண்ட காலம் சேவை செய்தவருமாகிய சங்கீத பூஷணம் வீ. கே. நடராஜன் ஆசிரியர் பற்றி அருணோதயம் என்னும் வெளியீட்டினூடாக எழுதுவதில் அவரது ஆரம்பகால மாணவனான நான் பெருமகிழ்ச்சியடைகின்றேன்.

அளவெட்டி மக்களால் வி. கே. என்று அன்பாகக் கூறி அழைக்கப்படும் வி. கே. நடராஜன் ஆசிரியர் பற்றிக் கூறுவதானால் எவ்வளவோ கூறலாம். ஆயினும் சுருக்கமாக சில முக்கிய விடயங்களையாவது இவ்விதழ் மூலம் எழுதி மனம் மகிழலாம் என்று எண்ணுகின்றேன்.

திரு. வி. கே. அவர்கள் தனது ஆரம்ப சேவைக் காலத்தில் ஒவ்வொரு பிள்ளையின் வீட்டிற்கும் சென்று தான் ஒரு இசைவகுப்பு ஆரம்பிக்க இருப்பதையும் அதில் கற்கக்கூடிய பிள்ளைகளை அனுப்புங்கள் என்றும் அன்பாகக் கேட்டு மாணவர்களைச் சேர்த்துக்கொண்டார். பின்பு தனது இசைக் கச்சேரிகளின் உதவியாலும், ஆரம்பகால மாணவர்களின் உதவியாலும், அவர்களின் முன்னேற்றத்தாலும் மேலும் பல மாணவர்களைத் தனது இசைக்கலை மன்றத்திற்கு சேர்த்துக் கொண்டார்.

ஒரு கலைஞன் தனது கலையைக் கற்றதோடு நிறுத்திவிடாமல், அதை மற்றவர்களுக்குக் கற்றுத் தருவதிலும் சிறந்தவனாக விளங்கவேண்டும். அப்போதுதான் கற்கும் மாணவர் அதை எளிதாக உள்வாங்கிக் கொள்ள முடியும். அதற்கு திரு. வி. கே. அவர்கள் சிறந்த உதாரணமாவார்.

அளவெட்டி ஈன்றெடுத்த கலைஞர்கள் பலர். மங்கல வாத்தியங்களான நாதஸ்வரம், தவில் தொடக்கம் வாய்ப்பாட்டு, வீணை, வயலின், மிருதங்கம், புல்லாங்குழல் இப்படியாக எல்லாத் துறையிலும் கலைஞர்களை அளவெட்டி தந்துள்ளது. இன்னும் தரும். அளவெட்டி தந்த கலைஞர்களிற் பலர் தத்தமது துறையில் அங்கிருந்து கொண்டும் சிலர் சந்தர்ப்பவசத்தால் வெளிநாடுகளுக்கு வந்தும் கலையை வளர்த்து வருகிறார்கள்.

திரு. வி. கே. ஆசிரியர் தனது பிறந்த மண்ணில் இருந்து கொண்டே பல பதவி உயர்வுகளைப் பெற்றும், பல மாணவர்களை உருவாக்கியும் ஒரு பெரிய விருட்சமாக அளவெட்டிக்கு நின்று நிழல் கொடுத்துக் கொண்டிருக்கிறார். அளவெட்டி அருணோதயாக் கல்லூரியும் கலைத்துறை விளையாட்டுத்துறைக்கு ஆரம்பகாலம் தொடக்கம் நல்ல ஆதரவு கொடுத்து வந்தது. இதை நான் மாணவனாக இருந்த காலத்திலேயே அனுபவரீதியாக அறிந்தேன். இதற்கு அங்கு கடமை புரிந்த அதிபர், ஆசிரியர்கள்தாம் பாராட்டப்பட வேண்டியவர்கள். அந்த ஆதரவு திரு. வி. கே. ஆசிரியருக்கும் நிறையவே கிடைத்தது. இப்படியான ஆதரவும் வி. கே. அவர்களை நிறைய சாதிப்பதற்குத் தூண்டுகோலாக இருந்தது என்று கூறலாம்.

அவர் ஆரம்பித்து வைத்த அளவை இசைக்கலை மன்றத்தில் அசையாத பற்று வைத்ததுமல்லாமல் தனது மாணவர்களையே பின்பு தனது உதவி ஆசிரியர்களாகவும் அமர்த்தித் தொடர்ந்து பல மாணவர்களை அம்மன்றத்தினூடாகக் கலையுலகுக்குத் தந்துதவினார். பிற்காலத்தில் பல பதவியுயர்வுகளையும் பெற்றுக் கொண்டார் என்று கேட்கும்போது மிகவும் சந்தோஷமாக இருக்கிறது. எல்லாவற்றிலும் மேலாக அளவெட்டி கும்பழாவளை விநாயகரில் திரு. வி. கே. வைத்திருந்த பற்று அவரைச் சுகதேகியாகவும் உயர்ந்த மனிதராகவும், நல்ல கலைஞராகவும் வைத்திருக்கிறது என்று கூறுவதில் சந்தேகமே இல்லை. திரு. வி. கே. நடராஜன் ஆசியர் உருவாக்கியவர்களிற் சிலரை இங்கு குறிப்பிட்டுக் கூறுவதில் மகிழ்ச்சி அடைகிறேன். சிலரை ஞாபகம் இல்லாததால் அவர்களிடம் மன்னிப்புக் கேட்டுக் கொள்கின்றேன். ஞாபகத்தில் நிற்பவர்களின் பெயர்கள் வருமாறு:

திரு. வி. சிவஞானசேகரம்
திரு. சி. சிறீஸ்கந்தராஜா
திரு. சி. சிவானந்தராஜா
திரு. சி. சிவஞானராஜா
திரு. அ. திலகேஸ்வரன்
திருவாளர்கள். இராமர், இலக்குமணர் சகோதரர்கள்
திருமதி. ஞானாம்பிகை
திருமதி. கலாநிதி சந்திரமோகன்
திருமதி. விமலாதேவி நாகேஸ்வரன்
திருமதி. சிவரூபி
மறைந்த செல்வி. தனலக்குமி முருகேசு
திரு. மா. சத்தியமூர்த்தி

மேலே குறிப்பிட்டவர்களைவிட எத்தனையோ மாணவர் எனக்குத் தெரியாதவர்கள் பிற்காலத்திற் கற்றிருப்பார்கள். யாவரும் குரு பக்தியுடையவர்களாகவும் கலைத்துறையில் ஒளிவிட்டுப் பிரகாசிக்கக் கூடியவர்களாகவும் வாழ இறைவனை வேண்டி, திரு. வி. கே. நடராஜன் ஆசிரியர் நீண்டகாலம் நோய் நொடி இல்லாமல் வாழ கும்பழாவளை விநாயகனை வணங்கி இதனை நிறைவு செய்துகொள்கின்றேன்.

**சங்கீதவித்துவான்**
**அ. திலகேஸ்வரன்**

# ஓவியர் சுபாஸ்சந்திரபோஸ்

அளவெட்டி கிராமத்திற்கு பெருமை சேர்க்கும் கலைஞர்கள் வரிசையில் ஓவியர் சுபாஸ்சந்திரபோசும் ஒருவர். இவர் தற்போது சுவிற்சர்லாந்தில் வாழ்ந்து வருகிறார். இவர் சிறுவயதில் இருந்தே ஓவியத்தை ஒரு பாடமாக கற்கத்தொடங்கிய போதிலும் ஓவியத்தை தொடர்ச்சியாக கற்றுக்கொள்ளும் சூழல் அவருக்கு அமையவில்லை. எனினும் ஓவியம் தொடர்பாக அவருக்கிருந்த ஈடுபாடும் ஆர்வமும் அவரை இத்துறையில் பல சாதனைகளைச் செய்வதற்கு ஏதுவாக அமைந்தது.

அவரது காலப்பகுதியில் க. பொ. த. சாதாரண பரீட்சையில் ஓவியத்தை ஒரு பாடமாக எடுத்து, பரீட்சையில் திறமைச்சித்தி பெற்றார். இது அவருக்கு பெரும் உந்துதலைத் தந்தது. 80களில் கொழும்பில் ஒரு அச்சுக் கூடத்தில் வேலை செய்து கொண்டு *Litho Graphic* ஐப் பயின்றார். பின்னர் கார்ட்டூன்ஸ், மற்றும் விளம்பரப் படங்களை வரைந்து கொண்டிருந்தார்.

புலம்பெயர்ந்ததைத் தொடர்ந்து தொழில் ரீதியாக ஓவியத்துறையில் ஈடுபட்ட அவரின் ஓவியங்கள் பலரதும் பாராட்டையும் பொற்றது. ஆரம்பகாலங்களில் மரபு ரீதியான ஓவியங்களையே வரைந்து கொண்டிருந்த இவர் படிப்படியாக அவற்றில் நவீனத்தைப் புகுத்தி புதிய தேடல்களையும் பல்வேறு வகையான உணர்வுகளையும் மிக நுட்பமாக வெளிப்படுத்தி வருகிறார். அவரின் பல ஓவியங்கள் ஈழத்தின் இன்றைய யுத்த சூழலையும் அதனால் அவதியுறும் மக்களின் வாழ்வையும் சித்திரிப்பதாய் உள்ளன.



ஐரோப்பாவிலும், வடமெரிக்காவிலும் அண்மையில் வெளியான பல லேசர் இசைத்தட்டுகளில் இவரது ஓவியங்கள் இடம் பெற்றிருந்தன. சுவிற்சர்லாந்திலுள்ள பாசல் நகரில் நடைபெற்ற 43 நாடுகளைச் சேர்ந்த ஓவியர்களின் கண்காட்சியில் இவரது ஓவியங்களும் இடம் பெற்றிருந்ததோடு சுவிஸ் மாநிலங்கள் பலவற்றிலும் இவரது ஓவியக் கண்காட்சிகளும் நடத்தப்பட்டன. கீழே காணப்படுவது திரு. சுபாஸ்சந்திரபோஸ் அவர்களது ஓவியமாகும்.

ஓவியம்: T.S. BOSE



மொன்றியல் முருகன் கோவில் தேர்

# கனடாவில் சைவ சமயம்

**கவிஞர் வி. கந்தவனம்**

தமிழீழத்துப் பிரதான சமயம் சைவம். சைவத் தமிழர் கடவுள் பக்தி மிகுந்தவர்கள். 'அவன் இன்றி அணுவும் அசையாது' என்பதை உணர்ந்தவர்கள். அந்த உணர்வு புலம் பெயர்ந்த தமிழ் மக்களிடம் இன்னும் அதிகமாக வலுப் பெற்றிருப்பதைக் காண முடிகின்றது. அவர்கள் அண்மைக் காலங்களில் குடியேறிய ஐரோப்பிய நாடுகளிலும் கனடாவிலும் மேற்கொண்டுவரும் சமய முயற்சிகள் இதனை நன்கு எடுத்துக் காட்டுகின்றன.

தமிழீழச் சைவ மக்கள் அதிக அளவில் குடியேறிய கனடாவில், கடுங் குளிரிலும் சைவம் தழைத்தோங்கும் வேகம் வியப்பை ஊட்டுகின்றது.

## 1. கோயில்கள்

ஊருக்குச் சிறப்புத் தருவது கோயில். "கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்" என்பது உலக நீதி. நல்ல காலம் "கோயில் இல்லா ஊரில் குடியேற வேண்டாம்" என்று உலகநாதர் கூறவில்லை. குடியேறுவது என்பது ஒன்று. குடியிருப்பது என்பது இன்னொன்று. கனடா போன்ற ஒரு பெரிய நாட்டில் குடியேறிய பின்னர்தானே எந்த ஊரில் இருப்பது என்பதைத் தீர்மானிக்க முடியும்.

இலங்கையில் நடந்த இனக் கலவரங்களில் 1983 யூலையில் நடந்த கலவரம் மிகக் கொடூரமானது. இக் கொடுமை தமிழரைப் புலம் பெயர வைத்தது. கனடா அகதிகளுக்குக் காட்டிவரும் தாராள மனப்பான்மையால் தமிழர் பெருந்தொகையில் இங்கு குடியேறக் கூடியதாக இருந்தது. குடியேறிய தமிழரை ஒன்ராறியோ மாகாணம் பெருமளவில் கவர்ந்தது.

ஈழத் தமிழர் பெருந் தொகையில் இங்கு குடியேறுவதற்கு முன்னதாகவே இங்கிருந்த ஒரு சில இந்துக்களின் முயற்சியால் கோயில் ஒன்றினைக் கட்டும் நோக்குடன் 'கனடா இந்து ஆலய சபை' என்னும் பெயரில் ஓர் அமைப்பு 1973ல் பதிவு செய்யப்பட்டிருந்தது. எனினும் தமிழீழத்தவர் வருகையின் பின்னரே கோயில் கட்டும் தொண்டு துரிதம் பெற்றது. இதனை ஆலய சபையின் பின்வரும் கூற்று ஒன்று தெளிவுபடுத்துகின்றது: *"For about 10 years not much progress happened due to various reasons. The membership kept the idea of the temple alive with patient planning and ardent praying. In the early eighties, there was a surge in the Hindu population in Metro area, with Sri Lankan Tamils, mostly devout Hindus, arriving in Canada. After much search, a land was bought for $158,000 in 1983."(1)*

இவர்களின் வருகையைத் தொடர்ந்து 1983ல் இரிச்மண் ஹில் என்னும் இடத்தில் காணி வாங்கப்பட்டது. 1984ல் தற்காலிக கட்டிடத்தில் பிள்ளையார் சிலை பிரதிட்டை வைபவம் நடைபெற்றது. 1988ல் கோயிற் கட்டிட வேலைகள் தொடங்கலாயின. பிள்ளையார் கோயில் என்று இதனை நம்மவர்கள் அழைத்தாலும் முருகனும் விஷ்ணுவுமே இங்கு மூல மூர்த்திகள். இம்



## கவிஞர் வி. கந்தவனம்

தமிழிலும் ஆங்கிலத்திலும் புலமை பெற்றவர். கவியரங்கங்கள் மூலம் தமிழ்க் கவிதையை சாதாரண மக்கள் மட்டத்திலும் பரவலாகக் கொண்டு சென்றவர். எளிமையாகவும் இலகுவாகவும் துள்ளும் சந்த நடை கொண்டவையாகவும் அமைவது இவரது கவிதைகளின் முக்கிய பண்புகளில் ஒன்றாகும். ஈழத்துக் கவிதையின் தனித்துவமான இயல்புகளுக்கு இவருடைய பங்கும் முக்கியமானதாகும். வெளிவந்த இவரது கவிதை நூல்கள்: இலக்கிய உலகம்(1964), கவியரங்கில் கந்தவனம், கீரிமலையினிலே(1969), பாடுமனமே(1969), எழுத்தாளன்(1995), முத்தான தொண்டர்(1995), பத்துப் பாட்டு(1998), ஆறுமுகம்(1998) ஆகியன. ஈழத்தில் மாணவர்களுக்குரிய புவியியல் நூல்கள் பலவற்றையும் எழுதியுள்ளார். அளவெட்டி மக்களதும், மாணவர்களதும் அபிமானம் பெற்ற அருணோதயக் கல்லூரியின் அதிபர் (1974 - 1975). எமது சங்கத்தின் பாதுகாவலர்.

மூர்த்திகளின் கோயில் விமான கும்மாபிடேகம் 1992 ஆகஸ்ட் மாதத்தில் நடந்தேறியது. இம் மூர்த்திகளுடன் மொத்தமாக 14 தெய்வங்கள் தொடர்ந்து இங்கு பிரதிட்டை செய்யப்பட்டுள்ளன. கட்டிட அமைப்பாலும் மூர்த்திகளின் தொகையாலும் போலும் மக்கள் இதனைப் பெரிய கோயில் என அழைக்கலாயினர்.

நாளடைவில் சைவ மக்கள் தொகை அதிகரிக்க மேலும்பல கோயில்கள் எழலாயின.

திருக்கோயில் இல்லாத திருவில் ஊரும்
திருவெண்ணீறு அணியாத திருவில் ஊரும்
பருக்கோடிப் பத்திமையால் பாடா ஊரும்
பாங்கினொடு பலதளிகள் இல்லா ஊரும்
விருப்பொடு வெண்சங்கம் ஊதா ஊரும்
விதானமும் வெண்கொடியும் இல்லா ஊரும்
அருப்போடு மலர்பறித்திட்டு உண்ணா ஊரும்
அவையெல்லாம் ஊரல்ல அடவி காடே

என்று பாடினார் அப்பர் பெருமான். ரொறன்ரோ 'திரு' என்ற சொல்லுக்கு ஏற்ற வகையில் அழகும் சுத்தமும் கல்வியும் செல்வமும் பூரிப்பும் பொலிவும் தெய்வத்தன்மை பொருந்திய மக்களும் நிறைந்த மாநகரமாகவே திகழ்கின்றது. எனினும் தமிழர்கள் தாம் வாழும் பகுதிகளில் தமது தெய்வங்களுக்குக் கோயில் இல்லாத காரணத்தால் அவற்றைத் 'திருஇல்' ஊர்களாகவே கருதினர். இதன் விளைவாக ஒன்ராறியோவிலும் தமிழர் வாழும் பிற மாநிலங்களிலும் பல இடங்கள் திரு மிகுந்த ஊர்களாக மாறியுள்ளன.

இன்று, ஒன்ராறியோ மாகாணத்தில் மட்டும் மொத்தம் பதினைந்து சைவம் சார்ந்த கோயில்கள் உள்ளன. அவை இரிச்மண் ஹில் பிள்ளையார், கனடா கந்தசுவாமி, ஸ்காபரோ துர்க்கை அம்மன், ரொறன்ரோ துர்க்கை அம்மன், ஐயப்ப சுவாமி, சக்தி துர்க்காதேவி, மிசிசாகா துர்க்கை அம்மன், மிசிசாகா முத்துமாரி அம்மன், மீனாட்சி அம்மன், நாகபூசணி அம்மன், கிப்ளிங் சிவன், வெஸ்ரன் சிவா - விஷ்ணு, வெஸ்ரன் திருச்செந்தூர் முருகன், வரசித்தி விநாயகர் கோயில்களாகும். இவற்றில் எட்டுக் கோயில்கள் ரொறன்ரோ மாநகரத்தில் அமைக்கப்பட்டுள்ளன.

ஒட்டாவாவில் கால்டன் என்னும் இடத்தில் வட இந்திய மக்களால் 1985 ஜுன் மாதத்தில் ஆரம்பிக்கப்பட்டுப் பின்னர் படிப்படியாகக் கட்டி முடிக்கப் பட்ட இந்துக் கோயில் ஒன்று உள்ளது. வைணவம் போற்றும் தெய்வங்களுடன் விநாயகர், சிவன் முதலாய மூர்த்திகளும் இங்கு உள்ளன. ஒட்டாவாவில் வாழும் சைவத் தமிழர்கள் இக் கோயிலிலேயே வழிபாடுகளை நிகழ்த்தி வருகின்றனர்.

கியூபெக் மாகாணத்தில் இயங்கும் கியூபெக் சைவமகா சபை மொன்றியலில் திருமுருகனுக்குக் கோயில் ஒன்றைக் கட்டியுள்ளது. மொன்றியலில் துர்க்கை அம்மனுக்கும் வால்மொரீன் என்னும் இடத்தில் முருகனுக்கும் கோயில்கள் உள்ளன. பிள்ளையார் கோயில் ஒன்றும் தற்காலிகமாக இவ்வாண்டு ஏப்பிரல் மாதம் தாபிக்கப்பட்டுள்ளது.

அல்பேட்டா மாகாணத்தில் விநாயகப் பெருமானுக்குப் புதிய ஆலயம் ஒன்று எழுப்பப்பட்டு வருகின்றது. இப்பணியில் அங்குள்ள சிறுதொகையான தமிழீழத்தவர் உதவியுடன் ஆர்வத்துடன் ஈடுபட்டுவருபவர்கள் இரு கனடிய வெள்ளையர் என்பது குறிப்பிடத் தக்கது. இவர்கள் ஹவாயிலுள்ள ஸ்ரீ சுப்பிரமுனிய சுவாமிகளின் சீடர்கள். இவர்களில் ஒருவர் தமது பெயரை அருண்வேலர் என்றும்

மற்றையவர் வேலன் என்றும் மாற்றி வைத்துக்கொண்டு அல்பேட்டாவில் சைவப் பணி புரிந்து வருகின்றனர்.

### 2. கோயில்களின் சமூகப் பணிகள்

பல கோயில்கள் நித்திய நைமித்திய பூசைகள், உற்சவங்கள், அலங்காரத் திருவிழாக்கள் என்பவற்றோடு மட்டும் நின்றுவிடாது சமூக சேவைகளிலும் ஈடுபடத் தொடங்கியுள்ளன. ஆரம்ப காலங்களில் கட்டிட வேலைகளில் முழுக் கவனம் செலுத்த வேண்டிய தேவை இருந்ததால் சமூகப் பணிகளைக் கோயில்கள் அதிகம் செய்ய முடியவில்லை. இன்று அந்த நிலைமை பெருமளவில் மாற்றம் பெற்றுள்ளது.

பிள்ளையார் கோயில் தமிழீழத்தில் இனக் கலவரத்தால் பாதிக்கப்பட்டவர்களின் புனர்வாழ்வுக்கு நிதியுதவி வழங்கி வருகின்றது. அண்மைக் காலத்திலிருந்து கலியாண மண்டபத்தைச் சமய விழாக்களுக்கு இலவசமாகக் கொடுத்துதவவும் தொடங்கியுள்ளது.

ஸ்ரீ ஐயப்பன் ஆலயம் ஒன்ராறியோ இந்து சமயப் பேரவையினால் 1996 ஏப்பிரல் மாதத்தில் ஆரம்பிக்கபெற்ற சிறுவர் பாடசாலையைச் சிறப்புற நடத்தி வருகின்றது. நூற்றுக்கும் அதிகமான மாணவர் தமிழையும் சமயத்தையும் இலவசமாக இப் பாடசாலையில் கற்றுவருகின்றனர். மேலும், தொண்டர் படை ஒன்றினை உருவாக்குதல், ஊனமுற்றோர், முதியோர் போன்றவருக்கு உதவுதல், கலைஞர்களை ஊக்குவித்தல் போன்ற பல சமூக சேவைகளைச் செய்யவும் இவ் வாலயம் திட்டமிட்டுள்ளது.

மொன்றியலில் உள்ள துர்க்கை அம்மன் கோயிலிலும் வாராந்த சமய வகுப்புகள் நடத்தப்படுகின்றன.
கியூபெக் சைவ மகாசபை திருமுருகன் கோயிலில் பண்ணிசைப் போட்டிகளை நடத்திப் பரிசுகள் வழங்கி வருகின்றது.

கல்விப் பணியில் ரொறன்ரோ ஸ்ரீ துர்க்கா இந்து ஆலயமும் காலடி எடுத்து வைத்துள்ளது. ஆரம்ப கட்டமாக இசை, வாத்திய வகுப்புக்கள் தொடங்கப் பட்டுள்ளன. 'கனடா இந்து' என்னும் பருவகாலச் சஞ்சிகை ஒன்றையும் இவ்வாலயம் வெளியிட்டு-வருகின்றது.

எல்லாக் கோயில்களுமே நூல்வெளியீடுகள், தமிழ் விழாக்கள், மாநாடுகள், குரு பூசைகள் என்பவற்றை நடத்தப் பல சமூக சமய தாபனங்களுக்கு மண்டபங்களைக் கொடுத்தும் நிதியுதவி புரிந்தும் வருகின்றன.

### 3. சமய தாபனங்கள்

கோயில் வழிபாட்டுடன் நின்று விடாது சைவத் தமிழ் மக்கள் பல மன்றங்களை அமைத்து அவற்றின் ஊடாகவும் பலவகையான சமயத் தொண்டுகளைச் செய்து வருகின்றனர். கியூபெக் சைவ மகாசபை, கனடா தமிழ்க் கலாச்சாரச் சங்கம், ஒன்ராறியோ இந்து சமயப் பேரவை, கனடா இந்து கலாச்சார மன்றம், கனடா சைவ சித்தாந்த மன்றம், கனடா இந்து மாமன்றம், ஆதி அருள்நெறி மன்றம், கனடா சிவதொண்டன் நிலையம், வேதாந்த ஞான மன்றம் முதலாய அமைப்புக்கள் சமய தமிழ் விழாக்களை எடுத்தல், குருபூசைகளை நடத்துதல், சமய தமிழ்க் கல்வியைப் புகட்டுதல் எனப் பலதரப்பட்ட பணிகளில் ஈடுபட்டு வருகின்றன.

### 4. சைவ சஞ்சிகைகள்

மேற்போந்த மன்றங்களில் இந்து மாமன்றம் 'சைவ நீதி' என்னும் காலாண்டுச் சஞ்சிகையையும் சைவ சித்தாந்த மன்றம் 'அன்புநெறி' என்னும் மாதாந்தியையும் வெளியிட்டுச் சைவ அறிவைப் பரப்பி வருகின்றன. கனடா ஞான மன்றம் சமரச நோக்குடன் வெளியிட்டுவரும் 'மதம்' சைவம் சார்ந்த கட்டுரைகளையும் வெளியிட்டு வருகின்றது. 'கனடா இந்து' ரொறன்ரோ ஸ்ரீ துர்க்கா ஆலயத்தினால் இவ்வாண்டு முதல் வெளியிடப்பட்டுவரும் ஒரு காலாண்டுச் சஞ்சிகையாகும்.

அமைப்புகளுக்கு அப்பால் தனிப்பட்ட சில சைவ ஆர்வலர்களும் பத்திரிகைகளை வெளியிட்டு வருகின்றனர். இவர்களில் மிகவும் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவர் சைவப் பெரியார் திரு. ச. நடராசா அவர்கள். 1992ஆம் ஆண்டு முதல் இவர் வெளியிட்டுவரும் 'இந்து தீபம்' கனடாவில் வெளிவரும் மூத்த சமயப் பத்திரிகையாக விளங்குகின்றது. 'தெய்வதரிசனம்' என்றொரு இதழை இரு மாதங்களுக்கு ஒருமுறை ஸ்ரீ ஐயப்பன் ஆலய நிர்வாக சபைத் தலைவரும் அபிராமி அச்சக அதிபருமாகிய திரு. க. தம்பிராசா அவர்கள் வெளியிட்டு வருகிறார்கள். இவை தவிர திரு. ஞா. வடிவேலு அவர்களின் ஆர்வத்தால் 'ஆத்மஜோதி'யும் புலவர் ஈழத்துச் சிவானந்தன் அவர்களின் 'ஆலயமணி'யும் சில காலம் வெளிவந்து இப்பொழுது நின்றுபோயின.

### 5. நூல்கள்

பலவகையான சைவ நூல்களும் கனடாவில் வெளியிடப்பட்டு வருகின்றன. இந்து சமயப் பேரவை, சைவ சித்தாந்த மன்றம், அபிராமி அச்சகம் ஆகிய அமைப்புகள் அதிக அளவில் நூல்களை அச்சேற்றிச் சமய அறிவைப் பரப்பும் பணியில் ஈடுபட்டுள்ளன. தனிப்பட்ட எழுத்தாளர் படைப்புகள் சிலவும் வெளிவந்திருக்-கின்றன. உதாரண வகையால் கனடாவில் வெளிவந்த நூல்களில் ஒருசிலவற்றின் பட்டியல் பின்வருமாறு:

1. சைவத் திருமுறைத் தோத்திரத் திரட்டு, கனடா இந்து கலாச்சார மன்றம் - 1994
2. தரிசனம், ஞானசுரபி ஆத்மஜோதி நா. முத்தையா, இந்து சமயப் பேரவை - 1995
3. முத்தான தொண்டர், கவிஞர் வி. கந்தவனம், இந்து சமயப் பேரவை - 1995
4. திருவாசகம் - திருவள்ளுவர் கல்விக் கழக வெளியீடு, சைவ சித்தாந்த மன்றம் - 1996
5. கலியுகக் காவலன் ஸ்ரீ ஐயப்பன், அபிராமி அச்சகம் - 1996
6. புதிய சைவ வினாவிடை, இந்து சமயப் பேரவை - 1997
7. தமிழரும் இந்து மரபுகளும், திருமதி வசந்தா நடராசன் பி.ஏ. - 1997
8. இந்திய திருத்தல யாத்திரை, ச. சதாசிவம் சேவியர் - 1998

### 6. இரு சைவ மாநாடுகள்

கனடியச் சைவ மக்கள் இரு சைவ மாநாடுகளை நடத்திய பெருமையுடையவர்கள். முதலாவது மகாநாடு 1994ஆம் ஆண்டு யூலை 1 முதல் 10ஆம் திகதி வரை நடைபெற்றது. இது அனைத்துலக நான்காவது சைவ சித்தாந்த மாநாடு. இரிச்மண் ஹில் பிள்ளையார் கோயிலில் நடைபெற்ற ஆரம்ப விழாவில்

யோகர் சுவாமியின் பிரதம சீடரும் ஹவாயில் உள்ள குவை ஆதீன குருமஹா சந்நிதானமுமாகிய சற்குரு சிவாய சுப்பிரமுனியசுவாமி மாநாட்டைத் தொடக்கி வைத்தார்கள். அதனைத் தொடர்ந்து யோர்க் பல்கலைக் கழகம், ஒட்டாவா, மொன்றியல் ஆகிய இடங்களில் ஆய்வு அமர்வுகளும் விழாக்களும் நடைபெற்றன. உலகத்தின் பல பாகங்களிலுமிருந்து சைவ அறிஞர்கள் கலந்து கொண்டு சைவ சமயத்தின் மகிமையை எடுத்துக் கூறியதோடு அதனைப் புலம்பெயர்ந்த நாடுகளில் வளர்க்க வேண்டிய அவசியத்தையும் வலியுறுத்திச் சென்றனர்.
இம் மாநாடு கனடியச் சைவ சமயத்தவர் மத்தியில் ஏற்படுத்திய விளைவு பற்றி மாநாட்டுக் குழுத் தலைவரும் கனடா இந்து ஆலய அறங்காவலர் சபையின் அப்போதைய தலைவருமாகிய திரு. நா. சிவலிங்கம் அவர்கள் '. . . சுத்த சைவ சமயிகளான நம்மவர்கள் முழுமையாகச் சமய வாழ்வு வாழ முடியாதவர்களாக இங்கே இருக்கின்றனர். இதற்கு அடிப்படையான காரணங்கள் பலவுண்டு. இந்த வேளையில் மத மாற்றம் என்னும் விஷ வாயு வேகமாகப் பரவ ஆரம்பித்துள்ளதானது அனைவரையும் அதிர்ச்சிக்கும் வேதனைக்கும் உள்ளாக்கியிருக்கின்றது. இப்படியான ஒரு கால கட்டத்தில் சைவ சித்தாந்த மாநாடு நடத்தப்பெற்றதும் ஈழம், தமிழகம் உட்படப் பல வெளிநாடுகளிலிருந்து அறிஞர் பெருமக்கள் வருகை தந்து பேருரைகள் நிகழ்த்தியமையும் இங்கு வாழும் சைவ மக்கள் மத்தியில் ஓர் புத்துணர்வை ஏற்படுத்தியுள்ளது' என்று கூறியிருப்பது கவனிக்கத்தக்கது.

மிகவும் முக்கியமாக, இம் மாநாட்டின் பின்னரே சமயத்தைத் தம் பிள்ளைகளுக்குக் கற்பிக்க வேண்டிய அவசியத்தைப் பெற்றோர்கள் உணர்ந்து கொண்டனர் எனின் மிகையாகாது. கனடிய மண்ணின் சைவ சமயக் கல்வி வளர்ச்சியை ஆராயின் இந்த உண்மை புலனாகும்.

கனடாவில் நடைபெற்ற மற்றுமொரு மாநாடு 7வது உலகச் சைவ மாநாடு ஆகும். 1999ஆம் ஆண்டு யூலை 30, 31 ஆகஸ்ட் 01 ஆகிய மூன்று தினங்களிலும் உலகச் சைவப் பேரவையின் முன்னேற்பாட்டுடனும் கனடா இந்து மாமன்றத்தின் அனுசரணையுடனும் இம் மாநாடு சிறப்புற நடத்தப்பெற்றது. ரொறன்ரோ மாநகர முதல்வர் கனம் மெல் லாஸ்ட்மன் மாநாட்டைத் தொடக்கிவைத்தார். கருத்தரங்கங்கள் ஸ்காபரோவிலும் கலை நிகழ்ச்சிகள் ஸ்காபரோ, மிசிசாகா ஆகிய நகரங்களிலும் நடத்தப்பட்டன. உலகச் சைவப் பேரவையின் தலைவர் தவத்திரு சிவநந்தி அடிகளார், கயிலை மாமுனிவர் பேரூர் ஆதீனம் தவத்திரு சாந்தலிங்க இராமசாமி அடிகளார் உட்படப் பல சைவச் சான்றோர்கள் உலகத்தின் பல பாகங்களிலுமிருந்து வருகை தந்து விழாவினைச் சிறப்பித்திருந்தார்கள்.

மாநாட்டையொட்டி இரு சிறப்பு மலர்களும் வெளியிடப்பட்டன. வாழ்த்துரையில் தவத்திரு சாந்த லிங்க அடிகளார், "ஈழத் தமிழ் மரபினர் உலகெங்கும் பரவி சிவநெறியை, தமிழ் மரபைக் காப்பதில் ஆர்வம் காட்டி வருகின்றனர்" என்று கூறியிருப்பது கவனிக்கத்தக்கது.

இம் மாநாடு சிறுவர்களையும் இளைஞர்களையும் அதிகம் ஈடுபடுத்தி அவர்கள் மத்தியில் சைவ மரபு பற்றிய விழிப்புணர்வையும் அதனை இங்கு வளர்க்க வேண்டிய பொறுப்புணர்வையும் ஏற்படுத்திய வகையால் முக்கியத்துவம் பெறுகின்றது. கனடாவின் சைவ வளர்ச்சிப் பரிமாணத்தை உலகத்தவர்க்கு எடுத்துக் காட்ட இம் மாநாடு பெரிதும் உதவியிருக்கிறது.

## 7. சில பிரச்சினைகள்

கனடாவில் பலர் சைவத்திலிருந்து கிறித்தவ சமயத்துக்கு மாறிச் செல்கின்றனர். மத நம்பிக்கை ஒருவரின் தனிப்பட்ட சுதந்திரம். எனின் சைவத்தைக் குறைகூறிக் கொண்டு செல்வது அவர்களின் அறியாமையைக் காட்டுகிறது. அவர்களைச் சமய மாற்றம் செய்கின்றவர்கள்

(1) உங்கள் சமயம் பொம்மைகளை வணங்குகின்றது
(2) உங்கள் சமயத்தில் கட்டுக் கதைகள் அதிகம்
(3) உங்கள் கோயில்கள் சுத்தமில்லை
(4) விளங்காத மொழியில் பூசைகள் செய்கிறார்கள்

என்றெல்லாம் சொல்லிவருகிறார்கள்.

இவ்வித பிரச்சாரங்களுக்கு நாமும் ஒரு வகையில் காரணமாகவேயுள்ளோம். எமது சமய முயற்சிகள் திட்டமிடப்படாதவையாகவும் முரண்படுபவையாகவும் உள்ளன என்றவொரு குற்றச் சாட்டும் உண்டு. வருங்காலத்தில் கோயில்களுக்கு வழிபட வருவோர் தொகை குறையலாம் என்னும் கவலையும் எழுந்துள்ளது. வருடப் பிறப்பு, விரத அனுட்டானங்கள், நன்னிமித்தங்கள் முதலாய பொது விடயங்களில் வெவ்வேறான கால நேரங்களைக் கோயில்கள் பின்பற்றி வருவதால், சைவத் தமிழர்கள் மத்தியில் குழப்பமும் ஒற்றுமையீனமும் சைவ அனுட்டானங்களில் நம்பிக்கையீனமும் ஏற்படுவது இயல்பேயாகும்.

## 8. செய்ய வேண்டியன

சைவ சமய பீடம் ஒன்றை உருவாக்குதல் வேண்டும். பல பொதுவான விடயங்களை அதன் தீர்மானங்களை அனுசரித்து நடைமுறைப் படுத்துதல் வேண்டும். மிகவும் முக்கியமாக வாக்கிய, கணித பஞ்சாங்கங்கள் தோற்றுவிக்கும் குழப்பத்தைத் தீர்த்தல், கனடியச் சூழல், வாழ்க்கைமுறை என்பவற்றுக்குத்தக பூசை முறைகளில் பொருத்தமான மாற்றங்களை ஏற்படுத்தல், சமய தத்துவங்களை எளிய முறையில் எமது இளஞ் சந்ததியினருக்கு தமிழிலும் ஆங்கிலத்திலும் விளக்குதல், சொற்பொழிவுகள், கருத்தரங்குகள் போன்றவற்றை நடத்தல், நூல்களை - பிரசுரங்களை வெளியிடுதல், சைவ இளைஞர் தொண்டர் படை ஒன்றினை அமைத்தல் முதலியவைபற்றி ஒற்றுமையுடன் நடவடிக்கைகள் எடுப்பின் கனடாவில் சைவ சமயம் மேலும் வளர்ந்தோங்கும் என்பதில் ஐயமில்லை.

---

(1) *Hindu Temple Society of Canada, Maha Vimana Kumbabishekam, Souvenir Issue - 1992*
(2) ஆத்மஜோதி நா. முத்தையா சுவாமிகள், பாராட்டு விழா மலர் - *1994*
(3) ஏழாவது உலக சைவ மாநாடு - கனடா, சிறப்பு மலர் - *1999*



# நியதி தப்பாது! சோதிடர் பொய்க்கலாம், சோதிடம் பொய்க்காது!

ச. பரநிருபசிங்கம்

அறநெறி வழுவாது இந்திரப்பிரஸ்த நகரத்திலிருந்து தருமர் அரசியல் நடத்திக் கொண்டிருந்தார். பாரத தேசத்து அரசர்கள் சகலரினதும் மதிப்பைப் பெற்று இராசசூயம் என்ற யாகத்தை நிறைவேற்றி அளவற்ற கீர்த்தியுடன் விளங்கினார்கள் பாண்டவர்கள். ஒரு நாள் தருமராசாவிடம் வந்த நாரத மகாமுனிவர் 'தருமரே, உமது பொருட்டால் அரச வம்சங்களெல்லாம் அழியப்போகின்றன. அப்படி ஒரு நியதி அமைந்திருக்கிறது' என்று சொன்னார்.

நாரதருடைய பெருமையெல்லாம் அறிந்தவர் தருமர். சாதாரண மக்கள் நினைப்பது போலக் கோள்மூட்டிச் சண்டைகளைத் தொடக்கிவிடுபவர் அல்லர் நாரதர். அவர் ஒரு பிரமரிஷி; திரிலோக சஞ்சாரி; வேண்டிய நேரம் வேண்டிய இடத்தில் காட்சி கொடுக்கக் கூடியவர்; எந்தத் தெய்வ சந்நிதியிலும் எந்த நேரத்திலும் பிரவேசிக்கக் கூடிய மகா புனிதர். நாரம் என்பதன் பொருள் தத்துவ ஞானம். தன் என்பதன் கருத்து கொடுப்பவன். ஆகவே நாரதன் என்றால் தத்துவ ஞானத்தைக் கொடுப்பவன் என்பது பொருள். நாரதர் போன்ற மகரிஷிகள் இறந்தகாலம், நிகழ்காலம், வருங்காலம் ஆகிய திரிகாலங்களையும் அறியவல்ல திரிகால ஞானிகள்; 'கற்பாரம்ப சங்கல்பம்' தெரிந்தவர்கள். கற்பம் என்பது படைத்தற் கடவுளாகிய பிரமாவின் ஒரு பகல் காலம். அது 432000 x 1000 மனித வருடங்களாகும். 'இன்னது இன்னது இப்படி இப்படி நடக்கும் என்று கற்பகால ஆரம்பத்தில் பிரமா நியமித்த நியதிதான் கற்பாரம்ப சங்கல்பம் எனப்படுவது. முன்னரே கதையைத் தெரிந்திருக்கும் ஒருவர் சினிமாத் திரையில் அந்தப்படம் ஓடிக் கொண்டிருக்கும் பொழுது அடுத்து என்னகாட்சி வரப்போகிறது என்று சொல்வதுபோல வருங்கால நிகழ்ச்சிகளைச் சொல்லக் கூடியவர்கள் பிரமஞானிகள்.

ஆகவே நாரதர் கூறியதைக் கேட்ட தருமர் அதிர்ந்து போனார். 'என்ன சுவாமி, அரச வம்சங்களெல்லாம் அழியப் போகின்றனவா? அதுவும் என்பொருட்டால் அழியப் போகின்றனவா?' என்று கேட்டார் தருமர். 'அப்படி ஒரு நியதி இருக்கிறது. ஒரு அழகிய மனிதன் ஒரு வெள்ளை எருதின் மேல் ஏறி, தலையில் நிலாவைச் சூடிக்கொண்டு, கையில் சூலத்தை ஏந்தியபடி தெற்கே போவதும் வருவதுமாக நீ ஒரு கனவு காண்பாய். அந்த நாளிலிருந்து பதின்மூன்று வருடமுடிவில் சத்திரிய குலம் அழியும்' என்று சொல்லிவிட்டு நாரத முனிவர் மறைந்து விட்டார்.

சில நாட்களின் பின்னர் அப்படி ஒரு கனவைக் கண்டார் தருமர். உடனே தருமர் தம்பிமார் எல்லோரையும் கூப்பிட்டு நாரதர் சொன்னதையும் தான் கண்ட கனவையும் கூறி, 'என்பொருட்டால் அழிவு வராமலிருக்க நாங்கள் எதற்கும் கோபிக்காமல், ஆத்திரப்படாமல் பொறுமையுடன் இருத்தல் வேண்டும்' என்று சொல்லி வைத்தார். மறுநாள் அத்தினாபுரத்துக்கு வரும்படி பெரியப்பாவாகிய திருதராஷ்டிரனிடமிருந்து அழைப்பு வந்தது. பாரதக் கதையை அறிந்தவர்களுக்கு மிகுதி தெரியும்.

பாரதப் போரில் நாரதர் கூறியதுபோல, பாண்டவரைத்தவிர ஏனைய அரச பரம்பரைகள் அழிந்துவிட்டன. இது நிகழ்ந்தது சுமார் 5100 வருடங்களுக்கு முன்னர். அதன் பின்னர் பாரதநாட்டில் முறையான இராச்சியங்கள் நடக்கும் வாய்ப்பிருக்கவில்லை. தருமம் குன்றத் தொடங்கிவிட்டது. காலப்போக்கில் பிறநாட்டவரின் வருகையாலும், ஆதிக்கத்தாலும் பாரதப் பண்பாடும், நாகரிகமும் சீர்குலைந்து தலைகீழாகி இன்றைய நிலையை அடைந்திருக்கிறது. 5000 வருடங்களின் முன்னர் அடையாளம் தெரியாமலிருந்த மிலேச்ச நாகரிகந்தான் இங்கே ஆதிக்கம் செலுத்துகிறது. கலியின் கோலம் இருந்தபடி.

பாரதப் போரில் எஞ்சியிருந்த அரச வம்சத்தவர் பாண்டவர் ஐவர் மாத்திரமே, அவர்கள் மறைந்தபின் குரு குலத்துக்கு ஒரு வாரிசு இல்லாமலிருந்தது. இளம் பஞ்ச பாண்டவர்களை முன்னரே அசுவத்தாமா அழித்துவிட்டார். அர்ச்சுனருடைய அரிய புத்திரனாகிய அபிமன்பு முன்னரே கொடூரமாகக் கொல்லப்பட்டுவிட்டான். அவன்

இறப்பதற்குச் சில தினங்களின் முன்னர்தானே அவனுடைய திருமணம் நடைபெற்றது. அவன் இறந்தபொழுது அவனது மனைவி கருவுற்றிருந்தாள். அக்கரு பரிணமித்து வளர்ந்து பிறந்து குரு குலத்துக்கோர் குலவிளக்காய் பரீச்சித்து மகாராசா ஆனது. பரீச்சித்துவின் புதல்வன் ஜனமேஜெயன் அரசனாயிருந்தபொழுது ஒரு நாள் வியாசமுனிவர் அவனுடைய சபைக்கு எழுந்தருளினார். அரசன் அவரை முறைப்படி வரவேற்று உபசரித்தான். முனிவர் அவனை ஆசீர்வதித்தார். வியாசர் குருகுல முதல்வர். மகா இதிகாசமாகிய பாரதத்தை இயற்றியவர். அவர் தனது குலமுதல்வர் என்பதைக் கேள்வியுற்றிருந்த அரசனுக்கு அவரைக் கண்டதும் இரத்தபாசம் தொழிற்பட்டது. பாரத யுத்தத்தில் இறந்துபட்ட தனது முன்னோரின் எண்ணங்கள் அவனது மனத்தில் அலைமோதின. ஆராமை மிகுதியினால், 'என் குலமுதலே! முனிபுங்கவரே! தாங்கள் நினைத்திருந்தால் பாரத யுத்தத்தைத் தவிர்த்திருக்க முடியாதா? எனது பேரன், பாட்டன்மார் எல்லோரையும் காப்பாற்றியிருக்க முடியாதா?' என்று மிகுந்த ஆத்திரத்தோடு கேட்டுவிட்டான்.

'பிள்ளாய், இன்னும் ஒரு வாரத்தில் பிரமகத்தி தோஷம் உன்னைப் பற்றப்போகிறது. அப்படி ஒரு நியதி இருக்கிறது. அது உன்னைப் பற்றாமல் நீ தவற முடியுமானால், நானும் மகாபாரத யுத்தத்தைத் தவிர்த்திருக்க முடியும்' என்று கூறிவிட்டு முனிவர் போய்விட்டார்.

உடனே ஜனமேஜெயன் புரோகிதர்களை அழைத்து யோசித்தான். பிரமகத்தி தொடராமலிருக்க அப்பொழுதே யாகம் தொடங்கிக் குறித்தகாலம் முடியும்வரை இரவு பகல் தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டிருத்தல் வேண்டும் என்று அறிவுறுத்தப்பட்டது. இரவு பகல் தொடர்ந்து யாகாக்கினிமுன் விழித்துக் கொண்டிருந்து ஆகுதி சொரிந்து மந்திரங்களை ஓதிக் கொண்டிருக்கும் பொறுப்பை ஏற்க முடியாமல் எல்லோரும் தயங்கினார்கள். ஒரு ஏழைப் பிராமணன் வறுமை காரணமாக முன்வந்து தலைமையை ஏற்கவும் யாகம் இரவு பகல் தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டிருந்தது. அரசன் பக்கத்திலிருந்து வேண்டிய காரியங்களைக் கவனித்துக் கொண்டிருந்தான். ஒருவார முடிவில் தொடர்ந்து கண்விழித்திருந்த களைப்பினால், யாககுண்டத்தின்முன் இருந்து மந்திரம் ஓதியபடியே, அந்தப் பிராமணன் ஒருகண நேரம் கண்ணயர்ந்து விட்டான். அந்த ஒருகணப் பொழுதினுள் தன்னை ஒரு புலி துரத்திக் கொண்டுவரக் கனவு கண்டு கொண்டிருந்தான். பிராமணன் தூங்குவதைக் கண்ட அரசன் ஒரு தருப்பையினால் அவனைத் தீண்டினான். கனவு கண்டுகொண்டிருந்த பிராமணன் புலி தன்னைப் பிடித்துவிட்டது என்ற உணர்வினால் துடிதுடித்து யாக குண்டத்தில் எரிகிற நெருப்பினுள் விழுந்திறந்தான். பிராமணனைக் கொன்ற தோஷம் - பிரமகத்தி - அரசனைப் பற்றியது. அரசன் தாங்கொணா வேதனையுற்று ஓடி அலைந்து திரிந்தான். துன்பந் தாங்கொணாது வியாசமுனிவரையே நினைத்தான். முனிவர் காட்சி கொடுத்தார். அரசன் நடந்தவற்றைக் கூறித் தன்னை மன்னிக்கும்படி மன்றாடிப் பலமுறை வீழ்ந்து வணங்கினான். 'நீ இந்தக் கரித்துணியால் உன்னைப் போர்த்திக் கொண்டிருந்து என் மாணவன் வைசம்பாயன முனிவரிடம் மகாபாரதக் கதையைக் கேள். கதை முடியத் துணி வெண்ணிறமாகிவிடும். பிரமகத்தியும் உன்னைவிட்டு நீங்கிவிடும்' என்று கூறி ஒருகரித் துணியைக் கொடுத்துவிட்டு முனிவர் மறைந்துவிட்டார். முனிவர் கூறியபடியே அரசன் செய்தான். கதைமுடிவில் கரித்துணி வெண்மையானது. பிரமகத்தியும் அரசனை விட்டு நீங்கியது. பாரத யுத்தமும் அழிவுகளும் நியதிப்படியே நடந்தன என்பதை ஜனமேஜெயன் உணர்ந்தான்.



## ஆசிரியர் திரு. ச. பரநிருபசிங்கம்

ஆசிரியர் திரு. ச. பரநிருபசிங்கத்துக்கும் எனக்கும் நெருங்கிய தொடர்பு பதினைந்து வருடத்துக்கு மேல் இருந்து வருகின்றது. தமிழ் இலக்கண இலக்கியங்களில் என்னிடம் சந்தேகந் தெளிவதுண்டு. பரநிருபசிங்கத்தின் தமிழறிவு தமிழ்ப் பண்டிதர்களின் அறிவுக்கு எத்துணையும் குறைந்ததன்று. நுண்ணறிவு, தருக்கரீதியான விவேகம் இவருடைய தனிச் சிறப்புக்கள்.

சமயத்துறையில் நானும் பரநிருபசிங்கமும் ஒருவருக்கொருவர் ஆசிரியராயிருந்து வருகிறோம். சமய தத்துவங்களில் நான் முகந்தவை அத்தியற்பம், பரநிருபசிங்கம் அறிந்தவை மிக அதிகம்; நுண்ணியவை. இருவருக்கும் சமய தத்துவஞானி ஒருவரின் நீண்டகாலச் சார்பு கிடைத்ததுண்டு. பரநிருபசிங்கம் அம்மகானிடம் முகந்து கொண்டவைகள் நான் முகந்தவைகளிலும் மிக மிக அதிகம். சமயத்துறையிற் சந்தேகம் தெளிவதற்குப் பரநிருபசிங்கம் இந்த இலங்கையில் ஒரே ஒருவராய் விளங்குகின்றார்.

சமய, சித்தாந்த அறிவு பரநிருபசிங்கத்தின்பால் நிறைய உண்டு. அதிலும் பார்க்க, பரநிருபசிங்கத்தின் ஆழ்ந்த சிந்தனைக்கே நான் மதிப்புக் கொடுக்கிறேன். சிந்தனைகளைத் தெளிவு பெறச் சொல்லுதல், எழுதுதல்களிலும் ஆற்றல் படைத்தவர் பரநிருபசிங்கம்.

சி. கணபதிப்பிள்ளை

பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளை.

கி.பி. ஆறாம் நூற்றாண்டில் ஓர் அரசனுடைய மனைவிக்குப் பிரசவ நேரம் நெருங்கிக் கொண்டிருந்தது. அரசன் பிரசவ அறையில் ஒரு தாதியை நியமித்து சிரசு உதயமானவுடன் ஓர் எலுமிச்சம் பழத்தை வெளியில் உருட்டிவிடும்படி கட்டளையிட்டு, பிரபல சோதிட வித்துவான்களை அறையின் பக்கத்தில் அமர்ந்திருக்கும்படி ஒழுங்கு செய்தான். பழம் வெளியில் வந்தவுடன் சோதிடர்கள் சாதகத்தைக் கணித்தார்கள். குழந்தை வளர்ந்து சக்கரவர்த்தியாவான் என்றும், பல அரசர்களை வெற்றிகொண்டு மகா வீரனாயிருப்பானென்றும், கல்வியிற் சிறந்த பண்டிதனாய் புகழுடன் நீண்டகாலம் வாழ்வான் என்றும் பலரும் பலவிதமாகப் பலன் கூறினார்கள். ஒரு சோதிடன் மாத்திரம் குழந்தை பாலப் பருவத்திலேயே இன்ன வயதில் இன்ன நாள் இறப்பானென்றும் மரணம் ஒரு பன்றியினாலேதான் சம்பவிக்கும் என்றும் சொன்னான். அரசன் மிகுந்த கவலையோடு அந்தச் சோதிடனைச் சிறையிலிட்டான். குழந்தை பாதுகாப்பாக வளர்வதற்காக அழகிய சிறந்த மணிமண்டபம் ஒன்றை அமைத்தான். மண்டபத்தினுள்ளே பிள்ளைக்கு வேண்டிய சகல வசதிகளும் விளையாட்டுப் பொருள்களையும் ஒழுங்கு செய்தான். சகல ஐஸ்வரியங்களுடனும் பிள்ளை வளர்ந்து குதலைமொழி பேசும் பருவத்தையடைந்தது. அரசனுக்கும், அரசிக்கும், மக்களுக்கும் மட்டற்ற மகிழ்ச்சி. சோதிடன் குறித்த நாள் வந்தது. அரசன் சோதிடனை அழைத்து, 'நீ சொல்லிய நாள் இன்றுதானே. நீ சொல்லியதுபோல ஒன்றும் நடக்கவில்லையே. ஏன் உன்னைத் தண்டிக்கக் கூடாது? நீ அப்படிச் சொன்னதற்குக் காரணமென்ன?' என்று கேட்டான். சோதிடன் கிரகநிலைகளைக் கூறி விளங்கப் படுத்திக் கொண்டிருந்தான. அப்படி இருவரும் கதைத்துக் கொண்டிருக்கையில் குழந்தை பாதுகாப்பாய் இருந்த மணிமண்டபத்திலிருந்து அழுகைக் குரல் கேட்டது. தாதி ஒருத்தி ஓடிவந்து, 'அரசகுமாரன் விளையாடுவதற்காக வைத்திருந்த வராகத்தின் சிலை உயரத்திலிருந்து தவறிப் பாலனின் தலையில் விழுந்தமையால் இறந்து விட்டான்' என்று அவலக் குரலோடு கூறினாள். வராகம் பன்றி. அரசன் அதிர்ந்து போனான். கவலையை அடக்கிக்கொண்டு: 'நீ எப்படியப்பா இதைக் கண்டு சொன்னாய்?' என்று சோதிடனைக் கேட்டான். சோதிடன் சொன்னான், 'அன்று தாதி உருட்டிவிட்ட எலுமிச்சம் பழம் கதவிலே தடக்கித் திரும்பிப் போய்விட்டது. அதை அவள் இரண்டாம் முறை உருட்டிவிட்ட பொழுதுதான் வெளியில் வந்தது. வெளியில் வந்த நேரத்தைக் கொண்டுதான் மற்றவர்கள் சாதகத்தைக் கணித்துப் பலன் சொன்னார்கள். நான் நிகழ்ச்சியைக் கவனிக்க கூடிய இடத்திலிருந்தபடியால் பழம் முதலில் வந்த நேரத்தைக் கொண்டு கணித்துச் சரியாகச் சொல்ல முடிந்தது'. அன்றிலிருந்து அந்தச் சோதிடர் வராகமிகிரர் என அழைக்கப்பட்டார். அவர் செய்த சோதிடநூல் 'பிருகத் சாதகம்' எனப்படும்.

இக்கதையிலிருந்து நாம் அறிவதென்ன? பிறந்த நேரம் சோதிடத்தில் மிகமிகப் பிரதானமானது. அந்த நேரத்தைக் கொண்டு பிழையில்லாமற் கணிப்பதற்கு வேண்டிய கணித அறிவும் ஆற்றலும் வேண்டும்.

நியதியை நாம் அறிவதற்கு ஓரளவு வழிசெய்வது சோதிடம். சோதிடம் இரு பகுதிகளைக் கொண்டது. அவை கணித பாகம், பலன் பாகம் என்பன. இந்த இரு விஷயங்கிலும் சோதிட நூல்களுக்கிடையில் ஒத்த கருத்துக்களில்லை. அடிப்படையான விசயங்களிலேகூட மாறுபாடுகளுண்டு. அதனால் உள்ளுணர்வு அல்லது அகக்காட்சி உள்ளவர்கள்தான் ஓரளவு சரியாகச் சோதிட பலன் கூறமுடியும். சோதிட பலன் பற்றிய சில உதாரணங்கள் கீழே தரப்படுகின்றன.

**யாழ். காரைநகரிலிருந்த பேப்பர்சாமியார் என்றழைக்கப்பட்ட முருகேசுச் சாமியார், "1948ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 30ஆந் திகதி மகாத்மா காந்தியின் உயிருக்கு ஆபத்து இருக்கிறது. கவனம்" என்று டெல்கி அரசுக்கு ஒரு கடிதம் எழுதியிருந்தார். அக்கடிதம் ஜனவரி 31ஆந் திகதிதான் டெல்கியிலே கிடைத்தது.**

1946ஆம் ஆண்டளவில் இந்தியாவிலுள்ள கல்கத்தா நகரில் பகல் நேரத்தில் சனசஞ்சாரம் அதிகமாயுள்ள இடத்தில் ஒருவன் தனது மனைவியைப் படுகொலை செய்தான். அந்த வழக்கை விசாரித்த உயர் நீதிமன்ற நீதிபதி அவனைக் கொலைக் குற்றவாளியாகக் கண்டு மரணதண்டனை விதித்துத் தீர்ப்பளித்தார். 1947ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 15ஆம் திகதி அவன் தூக்கில் இடப்படுவான் என்பது தீர்ப்பு. அந்தத் தீர்ப்பைக் கேட்ட கொலைஞன் ஒரு சிறிதும் மனங் கலங்கவில்லை. வழக்கு முடிந்தபின் நீதிபதியைச் சந்தித்த கொலையாளியின் சட்டத்தரணி, 'அந்தக் கொலையாளி தனக்கு மரணமில்லை என்று நம்பகமான சோதிடர் சொல்லியிருக்கிறார் என்று சொல்லிக் கொண்டு மிகவும் சந்தோஷத்துடன் இருக்கிறான்,' என்று கூறினார். நீதிபதி அந்தக் கதையைப் பொருட்படுத்தவில்லை. ஆனால் அடுத்த சில தினங்களில் 1947ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 15ஆம் திகதி இந்தியா சுதந்திர நாடாகும் என்று பிரிட்டன் அறிவித்தது. மரண தண்டனை நிறைவேற்ற வேண்டிய நாள் சுதந்திர தினமாயும் விடுமுறை நாளாயும் அமைந்தபடியால் அவன் விடுதலை செய்யப்பட்டான். அந்த நீதிபதிதான் ஒரு பிரபல பத்திரிகையில் எழுதிய கட்டுரை ஒன்றில் இவ்விஷயத்தைக் குறிப்பிட்டிருந்தார்.

யாழ். காரைநகரிலிருந்த பேப்பர்ச்சாமியார் என்றழைக்கப்பட்ட முருகேசுச் சாமியார், '1948ஆம் ஆண்டு ஜனவரிமாதம் 30ஆந் திகதி மகாத்மா காந்தியின் உயிருக்கு ஆபத்து இருக்கிறது. கவனம்' என்று டெல்கி அரசுக்கு ஒரு கடிதம் எழுதியிருந்தார். அக்கடிதம் ஜனவரி 31ஆந் திகதிதான் டெல்கியிலே கிடைத்தது. அதற்காக இந்திய அரசாங்கத்தின் அறிவுறுத்தலின் பேரில் அப்பொழுது கொழும்பில் இந்திய தூதுவராயிருந்த வி.வி.கிரி அவர்கள் காரைநகர் சென்று சாமியாருக்கு நன்றி தெரிவித்தார். அன்றியும் அரசவிருந்தினராக டெல்கிக்கு அழைக்கப்பட்டுக் கௌரவிக்கப்பட்டார்.

அளவெட்டி இறைகுமாரனைப்பற்றிப் பலருக்கும் தெரியும். அவனுடைய சாதகம் அளவெட்டியில் பிரபல சோதிடராயிருந்த ஆசிரியர் சின்னப்பு அவர்களால் எழுதப்பட்டது. அச்சாதகத்தில் இலக்கினம் தனுராசியில். இலக்கினத்தில் செவ்வாயும் இராகுவும். ஆறாதிபன் வெள்ளியும் எட்டாமிடத்ததிபன் சந்திரனும் பரிவர்த்தனமாயிருந்தன. பரிவர்த்தனம் வீடுமாறியிருத்தல்,

**1991ஆம் ஆண்டு மே மாதம் 10ஆந் திகதி நான் காஞ்சிபுரம் சென்றேன். 'அவருடைய (ராஜீவ் காந்தியின்) காலக் கணக்கு முடிகிறது என்று அந்த இளந்தாரியிடம் போய்ச் சொல்லும்' என்று பரமாச்சாரியார் (காஞ்சிப் பெரியார் எனப்படும் சங்கராச்சாரிய சுவாமிகள்) சொன்னார்.**

தைந்நியயோகம் எனப்படும் அவயோகம். அதன் பலனை அனுபவத்தில்தான் பார்க்கவேணும் என்று எழுதியிருந்தார். எனக்கு விளங்கப்படுத்தும்போது 1,4,5,7,9,10 ஆகிய இடங்களுக்குரிய கிரகங்கள் வீடுமாறி இருப்பது அதிட்டபலனைச் செய்யும் இராச யோகம் என்றும் 6,8,12 ஆகிய இடங்களுக்குரிய கிரகங்கள் மாறியிருப்பது கெட்ட பலனைச் செய்யும் அவயோகம் என்றும் சொன்னார். சின்னப்பு மாஸ்டர் இறந்த பின்னர் அவரோடு வேலை செய்து கொண்டிருந்த பொன்னுத்துரை என்பவர் அவருடைய இடத்திலிருந்து சோதிடவேலை செய்து கொண்டிருந்தார். இறைகுமாரன் அரசியலில் அதிக ஈடுபாடு கொண்டிருந்தான். அரசியல் சிக்கலாகிக்கொண்டிருந்தமையாலும் குடும்பநலனை யோசித்தும் இறைவனை வெளிநாட்டுக்கு அனுப்பும் எண்ணம் வந்தது. 1982 ஆரம்பத்தில் நானும் பொன்னுத்துரையும் அவனுடைய சாதகத்தை ஆராய்ந்து காலம் பிழை இல்லை, வெளிநாடு போகலாம் என்று முடிவு செய்தோம். அந்த நாளில் கொழும்பிலிருந்த இறைவனின் சகோதரி அருணா அவனை வெளிநாட்டுக்கு அனுப்புவதற்கு வேண்டிய ஒழுங்குகளைக் கவனித்துக் கொண்டிருந்தாள். அண்ணாவின் பயணம் விரைவில் சரிவரும். காசை ஆயத்தப்படுத்துங்கள் என்று 1982 மார்ச் இறுதி வாரம் அருணா எனக்கு எழுதியிருந்தாள். மேசையில் கிடந்த கடிதத்தை வாசித்த இறைவன் எழுதிய கடிதம் இது:

அன்புள்ள அருணா,

மேற்கொண்டு நான் வெளியே போவது சம்பந்தமாக எந்த நடவடிக்கையும் எடுக்கவேண்டாம். பிச்சை எடுத்தாலும் வெளியே போவது எனக்கு விருப்பமில்லை. எனது பாஸ்போட்டை அனுப்பிவைக்கவும். இதுபற்றி விரிவான விளக்கக் கடிதம் ஒன்று எழுத ஆரம்பித்துவிட்டுப பின்னர் கைவிட்டுவிட்டேன்.

உனக்குத் தந்த சிரமத்திற்கு மன்னிப்புக் கேட்டுக் கொள்கிறேன்.

இங்ஙனம்,
அன்புடன் இறைவன்.

விதி - நியதி விளையாடியது.

ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்

என்பது பொய்யாமொழியன்றோ?

சரியாக 2 மாதங் கழித்து 26.05.1982 அன்று இரவு உமாவுடன் இறைவனும் துப்பாக்கியால் சுட்டுப் படுகொலை செய்யப்பட்டமை நாடறிந்த செய்திதானே. இறுதி ஊர்வலத்தில் கலந்து கொண்ட பொன்னுத்துரை வீடுசென்று இறைவனுடைய சாதகத்தை மீளாய்வு செய்திருக்கிறார். சின்னப்பு உபாத்தியாரின் சோதிட நூல்களுள் ஒன்றில் இறைவனுடைய சாதகத்திலுள்ள பரிவர்த்தனத்திற்குரிய பலன் அப்படியே இருந்தது. மண்டைதீவு அகிலேஸ்வர சர்மாவால் எழுதப்பட்ட அந்த நூலில் உரிய பக்கதைக் குறித்து எனக்கு அனுப்பியிருந்தார் பொன்னுத்துரை. விஷயம் இதுதான்:

'ஆறாதிபன் அட்டமாதிபன் பரிவர்த்தனமாயிருக்க, இராகு, செவ்வாயின் தொடர்பும் அமைந்தால் சத்துருவின் துப்பாக்கிச் சூட்டினால் அல்லது வாள் வெட்டினால் மரணம்' என்று எழுதப்பட்டிருந்தது. இறைவனுடைய சாதகத்தில் இலக்கினத்திலுள்ள செவ்வாய் எட்டாமிடத்திலுள்ள கிரகத்தைப் பார்க்குந்தானே!

ஒருவர் பிறந்த அந்தக்கணமே அவருடைய வாழ்க்கையும் முடிவும் நிச்சயிக்கப்படுகின்றன என்பதற்கு அந்தக் கணத்திலே அமைந்த கிரகநிலை மூலம் அவற்றை அறியக்கூடியவர்கள் உளர் என்பதற்கு வேறு சான்றும் வேண்டுமோ?

உலகமறிந்த இன்னும் ஓர் உதாரணத்தையும் பார்ப்போம்.

சமீபகால இந்திய அரசாங்க நிர்வாக அதிகாரிகளாயிருந்தவர்களுள் தலைசிறந்தவர் ரி. என். சேஷன். அவர் மத்திய மந்திரிசபையின் நிர்வாகச் செயலாளராயும் பின்னர் தேர்தல் ஆணையாளராயும் இருந்து ஓய்வு பெற்றிருக்கிறார். அவர் மகாத்மா காந்தியின் நினைவுநாளன்று 30. 01. 1994இல் டெல்கி மாநகரத்தில் சனக்கூட்டம் நிரம்பி வழிந்த ஒரு கூட்டத்தில் நிகழ்த்திய ஒரு சொற்பொழிவின் ஒருபகுதியின் தமிழாக்கம் கீழே தரப்படுகிறது:

*1991ஆம் ஆண்டு மே மாதம் 10ஆந் திகதி நான் காஞ்சிபுரம் சென்றேன். 'அவருடைய (ராஜீவ் காந்தியின்) காலக் கணக்கு முடிகிறது என்று அந்த இளந்தாரியிடம் போய்ச் சொல்லும்' என்று பரமாசாரியர் (காஞ்சிப் பெரியார் எனப்படும் சங்கராச்சாரிய சுவாமிகள்) சொன்னார். 'அதற்கு நிவிர்த்தி உண்டா? மரணத்தைத் தவிர்க்க வழி உண்டா' என்று நான் கேட்டேன். 'குருவாயூருக்குப்போய் விஷ்ணு நம்பூதிரியைக் கேள்' என்றார். ஆகவே நாங்கள் குருவாயூருக்குச் சென்று 85 வயது முதியவரான அந்தச் சோதிடரைக் கேட்டோம். அவர் ஏதோ செய்யவேண்டியவற்றைச் செய்துவிட்டு, 'அவர் குண்டுவெடிப்பு ஒன்றினால் இறக்கப்போகிறார். அவர் 22ஆந் திகதியைத் தாண்டமாட்டார். தயவு செய்து இதை அவரிடம் போய்ச் சொல்லுங்கள்.' என்று கூறினர். நான் கேட்டேன், 'இது கால மரணமல்லவே. அகால மரணத்தை பிராயச்சித்தம் செய்து தவிர்க்கலாகாதா' என்று. இந்து சமயத்திலே ஒரு நம்பிக்கை உண்டல்லவா? ஆனபடியால் நாங்கள் என்ன செய்யவேணும் என்று கேட்டேன். 'இது கால மரணந்தான்' என்றார் அவர். 'மரணம் தவிர்க்க முடியாது என்கிறீர்களா' என்றேன் நான். 'ஆம்' என்றார் அவர். ஆகவே, நான் ராஜீவ் காந்தியிடம் ஓடிச் சென்று 'இப்படிக் கிராமம் கிராமமாகத் திரிவதால் உங்களுக்கு வாக்குகள் அதிகம் கிடைக்கப்போவதில்லை. இந்தச் சுற்றுப்பயணத்தை நிறுத்துங்கள். காஞ்சிப்பெரியாரும், விஷ்ணு நம்பூதிரியும் இப்படிச்*

சொல்லியிருக்கிறார்கள்' என்று சொன்னேன். 'இது யாரோ ஒழுங்கு செய்த சுற்றுப்பயணம், நான் போகத்தான் வேணும்' என்றார் அவர். நான் இரண்டு மூன்று நாள் அவரோடு வாதாடினேன். அவர் செவிசாய்க்கும் மன நிலையில் இல்லை. என்னுடைய முயற்சி பலிக்கவில்லை என்பதை நான் காஞ்சிபுரத்துக்கு அறிவித்தேன். ராஜீவுக்கு ஒரு செய்தி அனுப்பிவிடும்படி அங்குநின்ற ஒரு இளைஞனுக்கு மே 18ஆந் திகதி பரமாசாரியார் பணித்தார். '21ஆந் திகதிக்கு முன்னர் குருவாயூருக்குப் போகும் படி உங்களுக்குச் சொல்லும்படி பரமாசாரியர் எனக்குப் பணித்திருக்கிறார்' என்று 18ஆந் திகதி ராஜீவுக்குத் தொலைநகல் அனுப்பப்பட்டது. ஆனால் ராஜீவ் காந்தி மரணிக்கவேணும் என்பதே நியதியாகவிருந்தது. 18,19,20,21ஆந் திகதிகளில் அவர் தொலைநகலை காணவேயில்லை. 22ஆந் திகதி அவருடைய உத்தியோகத்தர் தொலை நகலைக் கண்டார். தயவு செய்து 1991 மே 23ஆந் திகதி "ரைம்ஸ் ஒவ் இந்தியா" பத்திரிகையைப் பாருங்கள். அதில் அத்தொலைநகல் முழுமையாக வெளிவந்திருக்கிறது.

நியதி தப்பாது, சோதிடம் பொய்க்காது என்பதற்கு வேறு என்ன சான்று தேவை?

இன்ன வினை இன்னதலத்து இன்னபொழுது இன்னபடி
இன்னதனால் எய்தும் என அறிந்தே - அன்னவினை
அன்னதலத் தன்னபொழு தன்னபடி அன்னதனால்
பின்னமறக் கூட்டும் பிரான்.

- சிவபோக சாரம்.

ஆவது விதியெனின் அனைத்தும் ஆயிடும்
போவது விதியெனின் எவையும் போகுமால்
தேவருக் காயினுந் தீர்க்கத் தக்கதோ
ஏவரு மறியொணா ஈசற் கல்லதே.

- கந்தபுராணம்



---

## அளவெட்டிக் கோயில்களில் திருவிழாக்கள் ஆரம்பிக்கும் திதிகள்

1. அழகொல்லைப் பிள்ளையார் கோயில் கொடியேற்றம் 09.05.2000, ஞயிற்றுக்கிழமை, சதுர்த்தி திதி.
2. கும்பழாவளைப் பிள்ளையார் கோயில், கொடியேற்றம் 07.05.2000, ஞாயிற்றுக்கிழமை, சதுர்த்தி திதி.
3. பெருமாக்கடவைப் பிள்ளையார் கோயில், கொடியேற்றம் 07.06.2000, புதன்கிழமை, சஷ்டி திதி.
4. தவளக்கிரி முத்துமாரி அம்மன் கோயில், கொடியேற்றம் 27.06.2000 செவ்வாய்க்கிழமை, தசமி திதி.
5. வெளிவயல் மாரி அம்மன் கோயில் கொடியேற்றம், 04.08.2000 வெள்ளிக்கிழமை, பஞ்சமி திதி.
6. குருக்கள் கிணற்றடிப் பிள்ளையார் கோயில் கொடியேற்றம் 05.08.2000, சனிக்கிழமை, சஷ்டி திதி
7. ஸ்ரீ நாகவரத நாராயணர் கோயில் கொடியேற்றம் 14.08.2000, திங்கள்கிழமை, பூரணை திதி.

### கத்தோலிக்க ஆலயத் திருவிழாக்கள்

1. அலுக்கை புனித சூசையப்பர் கோயில் மே முதலாம் திகதி
2. மாகியப்பிட்டி புனித செபஸ்தியார் கோயில் ஜனவரி 20ம் திகதி

# 22ம் நூற்றாண்டில் தமிழ் நிலைத்து நிற்குமா?

பொ. கனகசபாபதி




எத்தனை நாளைக்குத்தான் பொய் பேசுவது? இங்கேயாவது உண்மையைப் பேசுவோமே. கவிதைக்குத்தான் பொய் அழகு. கவிஞனுக்குமா அது அழகு? இல்லை. இந்த நூற்றாண்டில் இருநூறு மொழிகள் அழிந்து போகும் நிலையில் இருக்கின்றன. தமிழுக்கும் இந்நிலை ஏற்படுமோ என்னும் அச்சம் வளர்ந்து வருகிறது.

வாழ்க்கைக்கு உதவாத மொழிதான் காலப் போக்கில் அழிந்துபோகிறது. அப்படி அழியாதிருக்க காலத்திற்கு ஏற்ப தன்னை மாற்றிக் கொள்ளும் வகையில் கணினியில் தமிழ் புகுத்தப் பட்டிருக்கிறது எனக் 'கவிப் பேரரசு' வைரமுத்து அண்மையில் பேசியதாக ஆனந்த விகடனில் வந்திருந்தது. உரையின் முற்பகுதி ஏற்கப் பட வேண்டியது. பிற்பகுதி சர்ச்சைக்குரியது. கணினியில் தமிழ் புகுத்தப் படுவதால் மாத்திரம் அது அழிவில் இருந்து காப்பாற்றப்படும் என்பது அதீதமான கற்பனை என்றே கருதலாம்.

கல்வி என்பது அறிவு வளர்ச்சிக்கு இன்றியமையாதது என்று சொன்னாலும் கூட அது தொழில் சார்ந்ததாக அமையும் அல்லது பண்பாடு சார்ந்ததாக அமையும். கல்வி வழங்குதற்கு மொழி அவசியம். அது பொதுவாக வாய் மொழியாக அமையும். சில சமயங்களில் உடற் கூறு மொழியாகும். மொழி ஓர் ஊடகம். எனவே எமது எண்ணங்களை எடுத்தியம்ப அது தேவையாகிறது. இன்றைய தொழில் நுட்ப விஞ்ஞான விருத்தி பரந்த உலகினை ஒரு சிறு பூகோளக் கிராமமாக்கி விட்டது. தொலைபேசி பல்லாயிரம் மைல்களுக்கப்பால் உள்ளவரை நெருங்க வைத்து விட்டது என்றால், இணையம் *(Internet)* அவரை அண்டை வீட்டுக்காரர் ஆக்கிவிட்டது. இணையத்தை ஒரு அட்சய பாத்திரம் என்போமா? அமுத சுரபி என்போமா? அது கேட்டது எல்லாவற்றையும் தேவைக்கு மேலாகவே தந்துவிடும் தன்மை வாய்ந்தது. இதற்குத் தேவையானது ஒரு கணினி, இணைய இணைப்பு சுட்டி அல்லது சுண்டெலி*(Mouse)*. போகிற போக்கைப் பார்த்தால் ஒவ்வொரு வீட்டிலும் ஆளாளுக்கு ஒரு கணினி மிகவிரைவில் வந்து விடும். இப்போ செல்லிடபேசி ( Cell Phone) மாதிரி விரைவில் கணினியும் காடு மேடெல்லாம் நம்மோடு ஒட்டி உறவாடியபடி உலாவரும். ஆனால், அலிபாபா *"Open Sessame"* என்றதும் தான் குகைக் கதவு திறக்கும். அட்சயபாத்திரம் அல்லல் படுவோருக்கு உணவு படைக்கும். ஆனால் அதனோடு உறவாட மணிமேகலையால் தான்

**திரு. பொ. கனகசபாபதி**

**புத்தூர் சோமாஸ்கந்தாக் கல்லூரி, தெல்லிப்பளை மஹாஜனக் கல்லூரி ஆகியவற்றின் அதிபராகக் கடமையாற்றியவர். ரொறன்ரோ மாவட்டக் கல்விச் சபையில் பல்கலாசார ஆலோசகராகக் கடமை புரிகிறார்.**



**சமூகவியல், உளவியல், இலக்கியம், கல்வியியல் போன்ற துறைகளில் ஏராளமான கட்டுரைகள் எழுதியுள்ளார். அவரது கட்டுரைகளின் தொகுதியொன்று 'அதிபரின் சூரிய பார்வையில்'(1998) என்ற பெயரில் வெளியாகியுள்ளது.**

முடியும். மணிமேகலைக்கு மணிமேகலா தெய்வம் என்ன சொல்லியது?

சிறந்த கொள்கைச் சேயிழை கேளாய்
மக்கள் யாக்கை உணவின் பிண்டம்
இப் பெருமந்திரம் இரும் பசி அறுக்கும் என்று
ஆங்கது கொடுத்து அந்தரம் எழுந்து
நீங்கிய தாங்கு நெடுந் தெய்வம்.

ஆம், இணையம் எனும் அட்சய பாத்திரம் அறிவுப் பசியை அறுக்கும் எனினும் அதற்கு வேண்டியது கட்டளை அல்லது பெருமந்திரம். அது தரும் தகவல் முழுவதுமே ஆங்கிலத்திலேயே இருக்கும். அறிவு வளர்ச்சியோ அபரிமித வேகத்தில் செல்கிறது. எனவே இன்றைய தகவல்கள் நாளைய பழைய செய்திகள் ஆகிவிடப் புதிய தகவல்கள் மிளிர்கின்றன. எனவே உலக அரங்கிலே ஆங்கிலத்தின் ஆக்கிரமிப்பை எதிர் கொள்ள இன்னொரு மொழி இருத்தல் சாத்தியமில்லை என்பதே உண்மை. எனவே சென்ற நூற்றாண்டின் வடமொழிக்கும், இலத்தீனுக்கும் ஏற்பட்ட கதி இந்த நூற்றாண்டில் தமிழுக்கும் நேரமாட்டாது என்பதற்கு என்ன உத்தரவாதம்? கணினியில் தமிழ் புகுத்தப் பட்டிருப்பதால், தமிழ் அழிவில் இருந்து காப்பாற்றப்படும் என்ற கவிப் பேரரசுவின் வாதம், காதால் கேட்க இதமாக இருக்கிறதே அன்றி யதார்த்தமானதாக இல்லை என்பதை மனவருத்தத்துடன் ஏற்கவே வேண்டும். கணினியில் தமிழ் புகுந்தால் மட்டும் போதுமா? அறிவியல் தொழில் நுட்பவியல், மருத்துவம் சம்பந்தமான அறிவு விருத்தியின் வேகத்திற்கு ஆங்கிலம் போல் தமிழும் ஈடு கொடுத்து எடுத்துக் கூறமுடியுமா? பாரதி அன்றே சொல்லி விட்டான்.

புத்தம் புதிய கலைகள் - பஞ்ச
பூதச் செயல்களின் நுட்பங்கள் கூறும்,
மெத்த வளருது மேற்கே - அந்த
மேன்மைக் கலைகள் தமிழினில் இல்லை.

சொல்லவும் கூடுவதில்லை - அவை
சொல்லுந் திறமை தமிழ் மொழிக் கில்லை
மெல்லத் தமிழ் இனிச் சாகும் - அந்த
மேற்கு மொழிகள் புவிமிசை யோங்கும்

என்றந்தப் பேதை உரைத்தான் - ஆ!
இந்த வசை எனக் கெய்திடலாமோ?
சென்றிடுவீர் எட்டுத் திக்கும் - கலைச்
செல்வங்கள் யாவுங் கொணர்ந் திங்கு சேர்ப்பீர்!

பாரதியின் ஆதங்கம், இணைய யுகத்திற்கு முந்தியது. உலக அரங்கிலே இன்றைய அளவு ஆக்கிரமிப்பை ஆங்கிலம் கொள்ளாதிருந்த காலத்திற்குரியது. 'கொன்றிடல் போலொரு வார்த்தை கூறத் தகாதவன் கூறினான். காண்பீர்' என்று குமுறுகிறான் பாரதி. கூறியவன் மிலேச்சனாய் இருக்கலாம். கூற்று உண்மை செறிந்தது என்பதை யாரும் மறுக்க முடியாது. தமிழுக்கு மாத்திரமல்ல இன்னும் பல மொழிகளுக்கும் இதே நிலைதான் என்பதே உண்மை. பொருளாதார விருத்தியடைந்த நாடுகளாகிய G7 நாடுகள் ஏழில் மூன்று ஆங்கிலம் கோலோச்சும் நாடுகள். ஏனைய ஜப்பான், ஜெர்மனியில் ஆங்கிலம் கட்டாய பாடம். மற்றைய நான்கில் வெவ்வேறு மொழிகள் பேசப்பட்டாலும் கூட அவை பொருளாதார விருத்தியுற்றமையால் ஆங்கிலத்துக்கு ஈடு கொடுக்க முடியும். எனினும் அந்த நாடுகளில் ஆங்கிலம் கட்டாய இரண்டாவது பாடமாகப் போதிக்கப்படுகிறது. அதே போன்று மக்கள் தொகை காரணமாக சீன மொழியும் ஓரளவு ஈடுகொடுக்க முடியும் என எண்ண இடமுண்டு. ஆனால் தமிழ்? 20ஆம் நூற்றாண்டிலே தமிழ் பேசாத தமிழர் தொகை கணிசமான அளவிலே அதிகரித்துள்ளது. இவர்கள் எல்லாம் தொழில் தேடி ஆபிரிக்க, அமெரிக்க, ஐரோப்பிய நாடுகள், ஏன் ஏனைய ஆசிய நாடுகளுக்கும் சென்றவர்களின் வாரிசுகளே. இவர்கள் தொழில் பெறுவதற்குத் தமிழ் மொழிக் கல்வி உதவவும் இல்லை. இவர்களும் தமிழை தெரிந்து வைத்திருக்க முயற்சியும் எடுக்கவில்லை. மலேசியாத் தமிழர்களும் சிங்கப்பூர்த் தமிழர்களும் சிறிது வித்தியாசமானவர்கள். மூன்று, நான்கு தலைமுறை தாக்குப்பிடித்து விட்டார்கள். அரசாங்கமும் ஒத்துழைப்பு நல்கியதால் அங்கு இதுவரை தமிழ் காப்பாற்றப்பட்டது. ஆனால் அங்கேயும் இன்றைய இளைய தலைமுறையினர் பலர் தமிழ் பேசுகின்றார்களே அன்றி எழுத வாசிக்கத் தெரியாதவர்களாகவே உள்ளனர்.

தமிழ் நாட்டிலே ஆறு கோடி தமிழர்கள் உள்ளனர். ஆனால் உயர் மட்டத் தமிழர்கள் எல்லோரினதும் கனவு தம் பிள்ளைகளை மேலை நாடுகட்கு அனுப்பி வைப்பதே. எனவே, அவர்கள் பாலர் பிரிவிலிருந்தே ஆங்கிலக் கல்வியிலேயே மோகமுடையவர்களாக உள்ளனர். ஆரம்பக் கல்வி தமிழிலே மாத்திரம் வழங்கப் படவேண்டும் எனக் கலைஞர் அரசு கொண்டு வந்துள்ள சட்டம் எத்தனை எதிர்ப்பினை நேர் கொண்டுள்ளது?

ஜெயலலிதா எதிராக அறிக்கை விடுகின்றார் என்றால், அவரின் எடுபிடிகளும் இதனை ஆதரிக்கிறார்கள் என்று தானே அர்த்தம்? ஆகவே, தமிழ்வழிக் கல்வி என்பது தமிழ் நாட்டைப் பொறுத்த மட்டிலே அடிநிலை ஏழை மக்களுக்கேதான் அல்லாமல் உயர் மட்டத்தோருக்கல்ல. மேலும் தொழில் சார்பாக வேறு மாகாணங்களிலே குடியேறிய தமிழ் நாட்டுத் தமிழர்களின் வாரிசுகள் தமிழை மறந்து நாளாகின்றன. ஓரளவிற்குத் தமிழ் மொழி தன் தூய நிலையிலே காப்பாற்றப் படுகிற ஒரே நாடு தமிழ் ஈழம் மட்டுமே. அங்கும்

போராட்டம் முடிந்து தமிழ் ஈழம் கண்ட பின் யாது நடக்குமோ யாம் அறியோம்.

தொழில் சார்ந்த மொழியாகத் தமிழ் தாக்குப் பிடிக்கும் சாத்தியம் பற்றி இது வரை சொன்னோம். எனவே அடுத்ததாக பண்பாடு சார்புடைய மொழியாகத் தமிழ் அழிவைத் தாங்கிக் கொள்ள முடியுமா எனப் பார்ப்போம்.

பண்பாடு என்பது கடைப்பிடிக்கும் விழுமியங்கள், கற்றுக் கொள்ளும் கவின் கலைகள், கையாளும் சமய அனுஷ்டானங்கள் மூலம் பிரதிபலிக்கப்படலாம்.

விழுமியங்கள் தலைமுறைக்குத் தலைமுறை மாறுகின்றன. இடத்துக்கிடம் வேறுபடுகின்றன. முரண் ஏற்படுகின்ற பொழுது தலைமுறை இடை வெளி யெனக் கூறிப் பிரச்சினையைத் தவிர்த்துக் கொள்கிறோம். விழுமியம் பேணலில் மொழி ஒன்றும் பெரிய பங்கேற்பதில்லை. கவின் கலைகளிலே சிறப்பாக ஆடல் பாடலுக்கு மொழி அவசியமாகிறது. தொன்று தொட்டே இங்கு பிற மொழி ஆதிக்கம் நிறையவே இருந்து வருகிறது. தியாகையர், முத்துசாமி தீட்சிதர், சியாமா சாஸ்திரி என்ற சங்கீத மும் மூர்த்திகள் கீர்த்தனைகள் ஒன்றுமே தமிழில் இருந்ததில்லை. இசைவாணர்கள் இவர்களுக்கு முதலிடம் கொடுத்தமையால் கோபால கிருஷ்ணபாரதியோ, ஊத்தக்காடு வெங்கட கவியோ பெரும் அளவிலே ஆதிக்கம் செய்ய முடியவில்லை. சென்ற நூற்றாண்டின் நடுப்பகுதியிலே செட்டி நாட்டரசர் அண்ணாமலைச் செட்டியார், பாரதியார், கல்கி, இராஜாஜி, பாரதிதாசன் போன்றோரின் நன்முயற்சியால் தமிழ் இசைக்குச் சற்று கௌரவம் ஏற்பட்ட போதிலும் இன்றும் பல மேடைகளிலே தெலுங்கு, சமஸ்கிருதக் கீர்த்தனைகளே கச்சேரிகளின் பிரதான அங்கமாகின்றன என்பதை மறுப்பதற்கில்லை. ஆனாலும் ஒன்றில் சந்தோஷப்படலாம். தமிழ் நாட்டிலே தெலுங்கு, சமஸ்கிருத கீர்த்தனைகளைத் தமிழிலேயே எழுதி மனனம் செய்கிறார்கள். இந்த நிலை வெளிநாடுகளில் தலைகீழாய் மாறி விட்டதைக் காணமுடிகிறது. வெளிநாடுகளில் வாழ்கின்றவர்களின் பிள்ளைகள் பெரும் அளவிலே கவின் கலைகள் கற்கவே செய்கின்றனர். ஆனால் இவர்கட்கு கற்பிக்கின்ற ஆசிரியர்கள் தமிழ்ப் பாடல்களை ஆங்கிலத்திலேயே எழுதிக் கொடுக்கிறார்கள். இந்த நிலை தொடருமானால் முதலில் மறையப் போவது தமிழ் எழுத்துக்களே. வேறுபல மொழிகள் தமது எழுத்துக்களாக உரோமன் எழுத்துக்களைக் கைக் கொண்டது போன்று தமிழும், தமிழ் எழுத்துக்களைச் கைவிட்டு, உரோமன் எழுத்துக்களைப் பாவிக்கின்ற நிலை மிக விரைவில் வரலாம்.

தென் ஆபிரிக்காவில் சுற்றுப் பயணம் செய்த ஒருவர் - சிவசங்கரி என எண்ணுகிறேன் - அங்கே தமிழ் எழுத வாசிக்கப் பேசத் தெரியாத தமிழர்கள் தமிழில் தேவாரம் பாடித் துதிப்பதாக எழுதியிருந்தார். இதே போன்று மேற்கிந்தியத் தீவுகளிலும் தமிழில் தேவாரம் பாடுகின்ற தமது வேர்கள் பற்றித் தெரியாத அப்பிராணிகள் பலர் உள்ளனர். ஆகவே தமிழ் என்று தெரியாமல் தேவாரங்கள், கர்நாடக இசைப் பாடல்கள் மூலம் தமிழ் தாக்குப் பிடிக்க முனைகிறது.

அப்படியானால் தமிழை அழிவிலிருந்து காப்பாற்ற முடியாதா? முயன்று பார்க்கலாம்.

இணையத்தில் ஆங்கிலத்துக்கு அடுத்ததாக ஆக்கிரமிப்பது தமிழ் எனப் பெருமைப் பட்டாலும் அங்கே கூட நம்மவரின் சிறுபிள்ளைத் தனம் தெற்றெனத் தெரிகிறது. வானளாவிய ஆதிக்கம் செலுத்தும் ஆங்கிலத்துக்கு ஒரே ஒரு மென் பொருள் ( *Software*) தான் உண்டு. ஆனால் தமிழுக்கோ இருபதுக்கும் மேல் எத்தனை ஆயிரம் எழுத்துருக்களை (*Fonts*) உருவாக்கினாலும் ஒரு நியமமான மென்பொருள் உபயோகத்துக்குக் கொண்டு வரப்பட வேண்டும். இந்த நோக்கிலேயே தமிழ் நாட்டு அரசு இணையம் 99 என்ற கருத்தரங்கு நடத்தியது. அதன் விளைவாக கலைஞர் 99 என்ற பொதுமைப்பாடான மென் பொருள் உருவாக்கப்பட்டது. ஆனால் எழுத்துரு ஆக்குபவர்கள் கலைஞர் 99இன் படி செயற்படுகின்றார்களா என்பது சந்தேகம்.

தமிழர்கள் குடியேறிய பெரும்பான்மையான நாடுகளிலே அந்நாட்டு அரசாங்கங்களின் அனுசரணையுடனோ, அல்லது பொது நல நோக்குடைய சங்கங்களின் மூலமாகவோ மற்றும் தனிப்பட்டோர் முயற்சியாலேயோ தமிழ் சிறார்கட்குப் போதிக்கப் படுகிறது. இதில் கனடா முன்னோடியாக அமைந்துள்ளது. பல்கலைக்கழகம் புகுவதற்கு வேண்டிய 30 விசேட சித்திகளில் மூன்று தமிழாக அமையலாம். *OAC* க்குத் தேவையான ஆறு விசேட சித்திகளில், ஒன்றினைத் தமிழில் பெற்றுக் கொள்ள முடியும். தமிழ்க் கலைகள், தொழில் நுட்பக் கல்லூரி கத்தோலிக்க கல்விச் சபையின் ஆதரவுடனும், ரொறன்ரோ கல்விச் சபை, பீல் கல்விச்சபை, யோக் பிராந்திய கல்விச் சபை ஆகியனவும் விசேட சித்திக்கான தமிழ் வகுப்புக்களை நடத்துகின்றன. தமிழ்க் கலைகள், தொழில் நுட்பக் கல்லூரி தமிழ் நாடு மனோன்மணியம் பல்கலைக் கழகத்தின் ஆதரவுடன் தமிழ் பட்டப் படிப்புக்குரிய பாடபோதனை செய்கின்றதையும் இங்கே குறிப்பிட வேண்டும்.

இவை தவிர, சிறார்களுக்கான தமிழ் வகுப்புக்கள் ஒன்றாறியோ மாகாணத்தின் பல்வேறு பகுதிகளிலும், மொன்றியால், வான்கூவர் மாநிலங்களிலும் நடைபெறுகின்றன. இவை போன்று அவுஸ்திரேலியா, இங்கிலாந்து, சுவிஸ், ஜெர்மனி, பிரான்ஸ், ஐக்கிய அமெரிக்கா போன்ற இடங்களிலும் நடைபெறுகின்றன. ரொறன்ரோவிலும் அவுஸ்திரேலியாவிலும் பாடநூல்கள் ஆக்கப்பட்டுள்ளன. தமிழ் கற்பிப்பதற்காக பாப்பா பாரதி, தமிழ் ஆரம் போன்ற வீடியோக்களும் தயாரிக்கப்பட்டுள்ளன. இவ்வளவும் போதாதா எனப் பலர் வினவலாம். கல்லில் நார் உரிப்பது என்பார்களே அதற்குச் சிறந்த உதாரணம்: சிறார்களுக்குத் தமிழ் கற்பதற்கு அக்கறையே இல்லை. பெற்றோர்கள் நிர்ப்பந்தத்தால் வருகிறார்கள். தமிழ்ப் பாடசாலைக்கு அனுப்பியவுடன் தமிழ் கற்பிப்பதில் தம் பங்கு முடிவுற்று விட்டதாகப் பெற்றோர் கருதுகிறார்கள். அனேகமான வீடுகளின் வீட்டு மொழியாக ஆங்கிலம் வந்து விட்டது. பெற்றோர்கள் பிள்ளைகளுடன் ஆங்கிலத்தில் கலந்துரையாடுகிறார்கள் அல்லது பெற்றோர்கள் தமிழில் பேச பிள்ளைகள் ஆங்கிலத்தில் பேச பேச்சுவார்த்தை மணிப்பிரவாளம் ஆகின்றது. எனவே பெரும்பாலான தமிழ் பிள்ளைகட்குத் தமிழ் இரண்டாவது மொழியாகவே போதிக்கப்பட வேண்டியுள்ளது.

ஒன்றாறியோ மாநில அரசு பாரம்பரிய கல்வி (*Heritage Language*) என்ற தத்துவத்தை அனைத்துலக மொழி (*International Language*) என மாற்றியுள்ளதின் அடிப்படைக் கொள்கையை இங்கே கூறுதல் அவசியம். ஆங்கிலம் தவிர பிறிதோர்

மொழியினை ஒருவர் கற்பாராயின் கூடுதலான மக்களுடன் தொடர்பு கொள்ளல் சாத்தியம். எனவே, எமது பெற்றோர்கள் பிள்ளைகட்குத் தமிழ் கற்பிப்பதிலும் பார்க்க சீனமொழி, ஜெர்மன் மொழி போன்றவற்றை கற்பிப்பதால் கூடிய அனுகூலம் உண்டு எனக் கருதி அவ்விதம் கற்பிக்க முனையலாம். அப்படியானால் தமிழின் கதி?

புலம் பெயர்ந்த நாடுகளின் பெற்றோர்களில் நிறையவே தங்கியுள்ளது. தமிழ் வீட்டு மொழியாக மாறவேண்டும். மறந்தும் வீட்டில் தமிழ் தவிர வேறு மொழிகளில் பேசுதல் கூடாது. அமைப்புகள், சங்கங்கள், தொலைக் காட்சியில் சிறார்களுக்கான நிகழ்ச்சிகள் பல நடத்த வேண்டும்.

பரத நாட்டியம், கர்நாடக இசை கற்பிப்போர் பலருக்கு தமது கவின் கலையில் உள்ள அபிமானம் தமிழில் இல்லை என்பது வருத்தத்துக்குரிய செய்தி. தமிழ் இசைக்கு முக்கியம் கொடுத்து கற்பிக்க வேண்டும். ஒரு காலத்தில் போதிய தமிழ் இசைப் பாடல்கள் இல்லாதிருந்திருக்கலாம். இப்போ நிறையவே தமிழ் இசைப் பாடல்கள் உண்டு. ஆகவே தெலுங்கு, சமஸ்கிருத கீர்த்தனைகளை முற்றாகவே விட்டு விடலாம். மேலும் புலம் பெயர்ந்த நாடுகளில் பாடல்களை ஆங்கிலத்திலோ வேறொரு மொழியிலோ எழுதிக் கொடுப்பதை முற்றாக விட்டொழிக்க வேண்டும். கற்க வரும் மாணவர்கட்கு முதற் சில வாரங்கள் தமிழ் மொழி கற்பிப்பது வரவேற்கத்தக்கது. ருஷ்சியா, யப்பான் போன்ற நாடுகளுக்குக் கல்வி கற்கப் போகிறவர்களுக்கு முதலில் அந்நாட்டின் மொழிதானே கற்பிக்கப்படுகிறது. கவின் கலை கற்பிக்கும் ஆசிரியர்கட்கு மொழிப் பற்றும் இருத்தல் அவசியம்.

14. 03. 2000த்து மின் அம்பலம் எனும் இணையச் சஞ்சிகையில் பிரபல எழுத்தாளர் அ. முத்துலிங்கம் புத்தாயிரத்தில் இன்டர் நெற்றும் தமிழும் என ஒரு கட்டுரை எழுதியுள்ளார். அதில் தமிழ் உச்சரிப்புப் பற்றிக் குறிப்பிட்டு, போகிற போக்கைப் பார்த்தால் இன்னும் பத்து வருடங்களில் வேறு ஓர் மொழி போன்று தமிழ் வந்து விடும் என்கிறார்.

அடுத்து மிக முக்கியமானதும், சர்ச்சைக் குரியதுமான விடயம் நமது ஆலயங்களில் நடைபெறுகின்ற வழிபாடு. ஆராதனை முறைகளில் மாற்றம் கொண்டு வருதல் மிக அவசியம். கோவில் பூசைகளும், ஏனைய சமய சம்பிரதாய நிகழ்வுகளும் முழுமையாகத் தமிழிலேயே நடத்தப்படல்வேண்டும். வடமொழிச் சுலோகங்கள் தமிழிலே கூறப்படும் போது எவ்வளவோ சுருக்கலாம் என்பது மாத்திரமல்ல, கிரியைகள் செய்ய எடுக்கும் நேரமும் பெருமளவில் குறையும். சிறுவர், சிறுமிகளுக்கும் என்ன நடக்கிறது என்பது புரியும்.

ஒவ்வொரு ஆலயத்திலேயும் ஓதுவார், உபதேசியார் நியமிக்கப்பட வேண்டும். வெறுமனே குருக்கள் பூசை செய்வதோடு நில்லாமல், கிறிஸ்தவ ஆலயங்களில் நடைபெறுவது போல் ஓதுவார் தலைமையில் கூட்டுப் பிரார்த்தனை நடைபெற வேண்டும். 'பஜனை' என்று நான் இங்கு சொல்லமாட்டேன். புலம் பெயர்ந்த நாடுகளிலே பஜனை என்றதும் சாயி பஜனையையே நினைக்கிறார்கள். போகிற போக்கினைப் பார்த்தால் அதுவும் ஒரு கிளைச் சமயமாகி விடுமோ என ஐயுற வேண்டி உள்ளது. அவர் ஒரு மகான்; வணக்கத்துக்குரியவர். பஜனைப் பாடல்களும் பெரும்பாலானவை வடமொழி அல்லது தெலுங்கு. அவரது தாய் மொழி தெலுங்கு. எனவே அது அவரைப் பொறுத்த அளவில் நியாயமானதே.

**அடுத்து மிக முக்கியமானதும், சர்ச்சைக் குரியதுமான விடயம் நமது ஆலயங்களில் நடைபெறுகின்ற வழிபாடு. ஆராதனை முறைகளில் மாற்றம் கொண்டு வருதல் மிக அவசியம். கோவில் பூசைகளும், ஏனைய சமய சம்பிரதாய நிகழ்வுகளும் முழுமையாகத் தமிழிலேயே நடத்தப்படல் வேண்டும்.**

அற்புதமான, ஆழமான கருத்துச் செறிவுடைய தேவார திருவாசகங்கள் பாடப்படுவது குறைந்து கொண்டு வருவது வருத்தத்துக்குரியதே. தமிழ் வாழ வேண்டும். சமய உணர்வு வேண்டும். அது தமிழ் உணர்வோடு வரவேண்டும் என்றால் தமிழில் தேவார திருவாசகங்கள் ஓதப்படவேண்டும்.



இம்மலரிலுள்ள அளவெட்டி கோயில்கள், பாடசாலைகள், மண்டபங்கள் என்பவற்றின் படங்கள் 1999ம் ஆண்டின் இறுதிப் பகுதியில் எடுக்கப்பட்டவை.

# Health benefits of Garlic.

Gowsala P. Sivam Ph.D,
Bastyr University, Kenmore, Washington, USA.

We have something in common-we are all fortunate to have been students at Arunodhaya College, Alaveddy, and got a sound basic education. Now we are living in a foreign land with climate, culture, food habits, which are very different from where we grew up. There is nothing we can do about the climate, but we can do a lot about how we live and what we eat and how to maintain good health. In an era with a lot of fear about diseases like heart disease and cancer, it is important to seriously think about what we eat and how it plays a role in our health. It is heartening to note that most of the food we grew up with , ingredients we commonly used to prepare food, and the medicine that we used as children (Ayurveda) are being considered very beneficial to maintaining good health. Biomedical research has shown that using herbs and spices along with food helps in digestion, reduces cholesterol, detoxifies the body, and prevents cancer, rheumatoid arthritis etc. Scientists are studying the benefits of Ayurvedic medicine for the prevention of diseases. Yoga exercise is becoming very popular in exercise facilities. Let us look at the beneficial effects of a special ingredient that is traditionally used in our diet.

Most common ingredients used in cooking our food are **onions and garlic**. Interestingly they both belong to a group of vegetables called Allium vegetables. There are over 2000 scientific publications on the health benefits of Allium vegetables. Most of the studies have been done on garlic- but onions and other vegetables belonging to this group, namely leeks, shallots, chives· etc also have similar health benefits. Here are the reported health benefits of garlic:

## 1. Antimicrobial activity:

There is extensive scientific literature on the antibacterial effects of fresh garlic juice, aqueous and alcoholic extracts, lyophilized powders, steam distilled oil and other commercial preparations of garlic. Garlic has been reported to inhibit several species of bacteria- Aerobacter, Aeromonas, Bacillus, Citrella, Citrobacter, Clostridium, enterobacter, Escherichia, Klebsiella, Lactobacillus, Leuconostoc, Micrococcus, Mycobacterium, Proteus, Providencia, Pseudomonas, Salmonella, Serratia, Shigella, Staphylococcus, Streptococcus, and Vibrio. Noteworthy among the reported findings are the following:

*Garlic exhibits a broad antibiotic spectrum against Gram-positive and Gram-negative bacteria
*Enterotoxic coli strains and other pathogenic intestinal bacteria, which are responsible for diarrhea in humans and animals, are more easily inhibited by gar-



**The incidence of stomach cancer is lower in individuals with a high intake of garlic-family vegetables in developed and developing countries**

lic than the normal intestinal bacteria. i.e garlic, unlike antibiotics exhibits selective activity towards pathogenic bacteria.

- Garlic is active even against organisms that had become resistant to antibiotics
- Complete lack of resistance of bacteria to garlic has been found
- Combination of garlic extracts with antibiotics leads to enhanced activity.
- A garlic oil preparation showed good antituberculosis activity in guinea pigs
- As a result of the bactericidal activity of garlic, toxin production by the bacteria is also prevented (Bacterial toxins are responsible for diseases caused by bacteria)

### Garlic and Helicobacter pylori

Gastric cancer is the major cancer in the developing world and one of the top two worldwide. Helicobacter pylori is a bacterium that has been shown to be responsible for most of the ulcer diseases and stomach cancer. It is estimated that one-half of the world population and one-third of the US population are infected with this bacterium. In developing countries Helicobacter carriage rate is 80-90% and standard antibiotic treatments in these populations are frequently ineffective. Hence, there is a need to develop alternative approaches to suppress or cure the infection. The incidence of stomach cancer is lower in individuals with a high intake of garlic-family vegetables in developed and developing countries Since garlic family vegetables, particularly garlic have antibiotic activity, scientists have investigated its antibacterial activity against Helicobacter and shown that garlic extract can kill this bacterium very efficiently. The inhibitory concentration of garlic reported in this study is achievable in the stomach by consuming a medium size clove of garlic or equivalent amount of garlic supplements. Thus this finding may identify a strategy for low cost intervention for stomach cancer, with few side effects, in populations at high risk for stomach cancer, particularly where antibiotic resistance is high.

Antibacterial activity of garlic is well documented. This knowledge could be utilized in two different areas.

**Antibiotics:** Microbial drug resistance is a difficult problem. As medicinal chemists are getting better at seeking new bacterial targets for attack, bacteria relentlessly evolve strategies and as a result large number of bacterial species have become multiply resistant to antibacterial drugs. Thus there is a need to develop alternate strategies. Since garlic is known to act synergistically with antibiotics, and resistance has not been reported for garlic, more dose response laboratory studies and eventually clinical studies need to be done to assess the use of antibiotic/ garlic combination for difficult to eradicate bacteria. Antibiotic resistance is a problem in the case of H.pylori as well Since Helicobacter is a world wide problem and cost of eradicating it using standard antibiotic regimen is also high, this bacterium is another candidate for clinical trial using garlic either alone or in combination with less expensive antibiotic regimen.

**Food Preservation:** Garlic inhibits growth of microorganisms as well as inhibits toxin production. Food poisoning is a common problem. More research needs to be done to assess the value of garlic, as an alternative to chemicals as food preservative- especially in foods where garlic flavor will be an added bonus. There is also potential use for garlic by itself or in combination with other herbs and spices to extend the shelf life of raw meat products.

### 2. Cardiovascular activity of Garlic:

Of all the effects of garlic that have been reported over the years, the most interesting are those on the heart and the circulatory system. Noteworthy findings are:

✓ Cholesterol and lipid lowering effects of garlic have been demonstrated in the lab and clinical trials are in progress.

✓ Regular intake of garlic helps in lowering blood pressure.

✓ Garlic reduces the coagulation time of blood. Thus it is not a good idea to consume garlic before undergoing any surgical pro cedures.

✓ Garlic inhibits the aggregation of platelets in blood.

✓ All these properties of garlic could be useful in the prevention of heart diseases.

**3. Anticancer effects:**
In laboratory experiments, garlic has been demonstrated to have anticancer effects. More importantly, population studies have clearly indicated that in populations that take garlic on a regular basis, cancer incidence is less- especially cancer of the stomach and colon.

**4. Immunomodulatory Effects:**
Garlic has been shown to influence the immune system in a positive manner. In other words it helps to increase the natural defense mechanisms of the body.

**5. Antioxidant activity**
Free radicals generated in our body have been implicated in the process of aging and age-related diseases. Antioxidants present in vegetables and fruits are very useful in combating these diseases. Garlic has been proven to be a very effective anti-oxidant.

Garlic, the "spice of life" is unique among the members of the plant kingdom. Its use as spice is well documented. It has been described as the "stinking rose". Where can we turn for detailed information on our favorite spice, Garlic? Until recently, it was necessary to search out in a technical library. Fortunately, for those who appreciate garlic and want to learn more about its colorful history and the science that defines its culinary virtues and medicinal activity, there is a book on garlic-

Garlic- The science and therapeutic application of Allium sativum L. and related species.
Eds. Heinrich P. Koch and Larry D. Lawson. William and Wilkins. 1996.

There is also a magazine devoted for Garlic. It gives a lot of information about garlic- growing garlic, recipes etc. etc. You can subscribe to this magazine by contacting Doug Urig . E-mail address- [mgarlicm@accnorwalk.com]

Finally- garlic is not the only spice that has health benefits. Turmeric, ginger, pepper and practically every other spices have been shown to be beneficial for health. So let us enjoy these spices in our food, educate our younger generation about their health benefits, and live a healthy life naturally.





# நாகசுரமா? நாதஸ்வரமா?

சித்திராங்கி பாலகிருஷ்ணன்

நாதஸ்வரத்தின் / நாகசுரத்தின் தோற்றம் பற்றிக் கூறும் போது, அது வேத காலப் பழமை வாய்ந்ததென்பர். கோயில் என்று தோன்றியதோ, அந்தளவு பழமை வாய்ந்த வாத்தியமாக நாதஸ்வரமும், தவிலும் விளங்குகிறது என்பர். எனவே வேதாகமங்களின் தோற்றத்தோடு இவ் வாத்தியங்களின் தோற்றத்திற்கும் பழமை கற்பிப்பர். அதாவது வேதாகம விதிமுறைகளோடு கிரியைகள் நடைபெறும் ஆலங்களில் இந்த மங்கல வாத்தியமான நாதஸ்வரத்திற்கும், தவிலுக்கும் முதலிடம் கொடுக்கப்படுகிறது. எனவே நாதஸ்வரம் என்ற வடமொழிப் பெயர்தான் பொருத்தமானது என்று ஒருவர் வாதிட முடியும்.

கோவிலில் உற்சவ காலங்களில் நடை பெறும் நவசந்தி, கொடியேற்றம் (துவஜாரோகணம்), ஆரோகணம், முதலிய கிரியா மந்திரங்களில் "மங்கல வாத்தியம்" என நாதஸ்வரம் குறிப்பிடப்படுகிறது. மகாபரத சூடாமணியில் நாதஸ்வரம் பற்றிய குறிப்பு ஒன்று வருகிறது.

"முகவீணை நாகசுர மொழி பாம்பு நாக சுரந்
தருசீங் குழன் முதலாய்ச் சாந்துஞ் சுகமிகவே
தங்குமிவ் வாத்தியத்திற் காய்ந்திட்டார் நூல்வல்லோர்
மங்கல வாத்தியமெனும் நாமமே"

அதாவது முகவீணை, நாகசுரம் என மொழியும் நாகசுரவாத்தியம் சகல வாத்தியங்களுள்ளும் மங்களகரம் பொருந்தியதாய் முதன்மை பெற்று விளங்கும். அதன் நாத சுகமும் மிகுந்து விளங்கும். ஆதலால் ஆராய்ந்துணர்ந்து வேதநூல் வல்லோர் இவ் வாத்தியத்திற்கு "மங்கல வாத்தியம்" எனப் பெயரிட்டனர்.

இதிகாச புராணங்கள் நாதஸ்வரத்தின் தோற்றம் பற்றிக் கூறும் போது, முகுந்தச் சக்கரவர்த்தியினால் பூலோகத்திற்குக் கொண்டு வரப்பட்ட பதினெட்டு வாத்தியங்களுள் நாதஸ்வரமும் ஒன்று என்கின்றன. அதாவது இந்த நாதஸ்வரம் என்ற குழற்கருவி முகுந்தச் சக்கரவர்த்தியின் கோரிக்கையை நிறைவேற்றும் பொருட்டு சிவபெருமான் கைலயங்கிரியில் இருந்து தியாகராஜத் திருவாரூரில் எழந்தருளிய போது அவருடன் வந்த பரிவாரங்களில் ஒன்றே நாதஸ்வரம் எனத் திருவாரூர்ப் புராணம் கூறுகிறது. இவ் வாத்தியத்திற்கான பிரத்தியேக இசை மரபு பிறப்பெடுத்தது திருவாரூரில் தான் எனவும், திருவாரூர்த் தலத்திற்கும், நாதஸ்வரத்திறகும் மிக நெருக்கமான உறவுண்டு என்பர். தியாகராஜர் இங்கு குடி கொண்ட நாள் முதலே அக் கோவிலில் நாதஸ்வரம் முக்கிய பங்கு வகித்தது என்பர்.

எனவே சிவனுக்கு மிகவும் பிடித்தமான வாத்தியம் எனவும், சிவன் தனது கழுத்தில் இருந்த நாக பாம்பை எடுத்துக் கந்தருவனை வாசிக்கச் செய்தார் எனவும், நாதஸ்ரவ வாத்தியத்திற்குப் பழமையும் சிறப்பும் கற்பிக்கப்படுகிறது. இந்த ஐதீகக் கதையில்

நாகமும் நாதஸ்வரமும் இணைக்கப்படுவதைக் காண்கிறோம்.

இதை விடவும் நாதஸ்வரமானது சங்க காலத்தில் இருந்து சிறப்புற்று இருந்தது எனவும், பதினான்காம் நூற்றாண்டில் தான் புழக்கத்தில் வந்ததாகச் சிலரும், சிலரோ பதினேழாம் நூற்றாண்டில் தான் இது தோற்றம் பெற்றது என வாதிடுவோரும் உள்ளனர். இருக்கு வேதத்திலே "நின்றெழு நாகசுரத்தின் தோற்றம்" எனத் தொடங்கும் பரத சாஸ்திரப் பாடலை முன் வைத்து இக் கருவியின் காலத்தை வேத காலத்திற்குக் கொண்டு போயுள்ளனர். இவ்வரிகளிலும் இருக்கு வேதத்திலே பேசப்படும் "உத்தால வேணு" என்பது நாதஸ்வரம் பற்றிக் குறிப்பிட்டுள்ளது. கி.பி பதினைந்தாம் நூற்றாண்டில் இயற்றப்பட்ட வசன காவியங்களிலும் இக் கருவி குறிப்பிடப்படுகிறது. சங்க இலக்கியங்களிலும் இக் கருவி குறிப்பிடப்படுகிறது. சங்க இலக்கியங்களில் பேசப்படும் "வங்கியம்", "பெருவங்கியம்" என்று குறிப்பிடப்படுவது. இந்த நாதஸ்வரமே எனவும். வங்கியம் வேறு, குழல் வேறு எனப் பல நூல்களில் பிரித்துப் பேசப்படுவதாயும் ஆய்வாளர்கள் கருதுகின்றனர். இவ் ஆய்வாளர்களுள் பி. எம். சுந்தரமும் ஒருவர்.

எது எவ்வாறிருப்பினும் ஆலயம் என்ற ஒன்று என்று தோன்றியதோ அன்றே நாகசுரம், தவில் இசைக் கருவிகளும் இருந்திருக்க வேண்டும் என ஊகிக்க இடமுண்டு. ஆய்வறிஞர் பலரது கருத்தும் இதுவே.

இதற்கு முதல் இவ்விசை அரசர்களாலும், பிரபுக்களாலும் ஆதரிக்கப்பட்டு வந்ததாக அறிகிறோம். தொல்காப்பியத்தில் "பாணர் ஏத்திய துயில் எடைநிலை" என்ற ஒரு துறை வருகிறது. அரசர்கள் காலையில் துயில் எழுந்து அன்றைய காரியங்களைப் படுக்கையில் இருந்தபடியே சிந்தித்துத் திட்டமிடுவார்கள். அதற்கு முன்னால் அரசனைப் பள்ளி எழுப்புவதற்காகப் பல இசைக் கருவிகளைப் பயன்படுத்தி பாணர்கள் பாடுவார்கள். இதில் பயன்படுத்தப்பட்ட தலைமையான கருவி "எழில்" எனப்படுகிறது. இந்த எழில் என்பது எழு சுரத் துளையுடைய நாகசுரத்தைக் குறிக்கிறது, என்று "மங்கல இசை மன்னர்கள்" என்ற நூலின் அணிந்துரையில் பொள்ளாச்சி நா. மகாலிங்கம் குறிப்பிட்டுள்ளார். மேலும் "எழில் இயம்ப இயங்கும் வெண்சங்கெங்கும்" என்று விரியும் "மாதர் மடப்பிடியும்" தேவாரத்தில் வரும் "எழில் பயில் குயில்" அடியையும் நோக்குமிடத்து (நாகசுரத்தையொத்த இனிய ஓசையை உடைய குயில்) இது புலனாகும் என்கிறார். எனவே மங்கலகரமான அந்நாளைத் தொடங்கப் பயன்படும் கருவிக்கே "மங்கல வாத்தியம் என்ற சிறப்புப் பெயரும் உண்டாகியது எனலாம்.

இவ்வாறாக நாகசுரத்தின் தோற்றம் பற்றிப் பலரும் பலவாறாகக் கூறுவர். இவ்வாறான பழமையும் பெருமையும் கொண்ட இந்த இசை மரபானது தமிழ் மக்கள் வாழ்வில் பிரிக்க முடியாத அளவிற்கு மங்கல வைபவங்களில் முக்கிய இடம் பெறுகிறது. கோயில்களிலும், வீடுகளிலும், தெய்வீக விழாக்களிலும், அரண்மனைகளிலும், மங்கல இசை எழுப்பிய இந்த இசை மரபானது தமிழர்களுக்கே தனிப்பெருமை அளித்தது என்று கூறினால் அது மிகையல்ல.

யாழ்ப்பாணத்தைப் பொறுத்த வரை இதனுடைய பயில்வு சுமார் ஒன்றரை நூற்றாண்டுக்குப் பழமை வாய்ந்தது. இந்தியாவில் இருந்து வந்து குடியேறிய சமூகத்தினரே முழக்கர், நட்டுவர், மேளகாரர், இசைவேளாளர் என்று பலவாறு அழைக்கப்பட்ட இன்றைய இசையாளராவர். இலங்கையைப் பொறுத்த வரை யாழ்ப்பாணத்து இசை வேளாளர் இக் கலைப் பயில்வில் குறிப்பிடத்தக்களவு முக்கியத்துவம் வாய்ந்தவர்கள்.

நாதஸ்வர இசைக்கருவிக்குப் பல்வேறு பெயர்கள் வழங்கப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது. இதனுடைய உண்மையான பெயர் என்ன என்பது இன்றும் சர்ச்சைக்குரிய விடயமே. நாதஸ்வரம், நாகசுரம், நாயனம், நாகசின்னம் மற்றும் நாதசுரம், நாயகசுரம், நாதக்குழல் எனப் பல பெயர்களில் வழங்கப்பட்டு வந்திருக்கிறது. இவற்றின் பொருத்தப்பாட்டை ஆய்வு செய்வது அவசியமாகும்.

நாகசுரம் / நாகஸ்வரம் (ஸ்வரத்தைச் "சுரம்" என்றும் குறிப்பிடுவர்) என்பது நாக பாம்பை மகிழ்விக்கும் ஸ்வரங்களை எழுப்புவதால் இதற்கு நாகஸ்வரம் அல்லது நாகசுரம் என்ற பெயர் வந்ததாகக் கூறுவர். மேலும் நாக பாம்பைப் போன்ற வடிவத்தை உடையதால் நாகசுரம் என்று வந்திருக்கலாம். சிவன் தனது கழுத்தில் இருந்த நாக பாம்பை எடுத்துக் கந்தருவனை வாசிக்கச் செய்ததாலும் இசை வேளாளர் சமூகமாக இருக்கலாம் என்பாருமுளர். எனவே நாகர் கையாண்ட இசைக் கருவியாதலாலும் இதற்கு இப் பெயர் ஏற்பட்டிருக்கலாம். நாகசுரத்தின் அமைப்புக்கும் பெயருக்கும் இருக்கிற ஒற்றுமை- அதாவது நாகம்-அவதானிக்கப்பட வேண்டிய ஒன்றாகும்.

பதினாறாம் நூற்றாண்டில் இயற்றப்பட்ட "கூளப்ப நாயக்கன் காதல்" என்ற நூலிலும், மகாபரத

**இருக்கு வேதத்திலே "நின்றெழு நாகசுரத்தின் தோற்றம்" எனத் தொடங்கும் பரத சாஸ்திரப் பாடலை முன் வைத்து இக் கருவியின் காலத்தை வேத காலத்திற்குக் கொண்டு**



**போயுள்ளனர். இவ்வரிகளிலும் இருக்கு வேதத்திலே பேசப்படும் "உத்தால வேணு" என்பது நாதஸ்வரம் பற்றிக் குறிப்பிட்டுள்ளது. கி.பி பதினைந்தாம் நூற்றாண்டில் இயற்றப்பட்ட வசன காவியங்களிலும் இக் கருவி குறிப்பிடப்படுகிறது.**

சித்திராங்கி பாலகிருஷ்ணன், யாழ்ப்பாணப் பல்கலைக் கழகத்தில் இளங்கலை மாணி (சிறப்பு) பட்டம் பெற்றவர்.



இச் சிறப்புப் பட்டத்துக்கான அவரது ஆய்வேடு "யாழ்ப்பாணத்தின் நாகசுர தவிற் கலைப் பாரம் பரியம்" என்பதாகும். இந்த ஆய்வேட்டின் இரண்டாவது அத்தியாயமே இவரது கட்டுரை. நாகசுரக் கலைஞர் எம். பி. பாலகிருஷ்ணனின் மூத்த மகள் சித்திராங்கி.

சூடாமணியிலும் இது நாகசுரம் என்றே குறிப்பிடப்பட்டுள்ளது.

*"துளையது கருவியாகத் தோயு நாக சுரத்தின்*
*வளையது விரலையாறு வாய்தனில் அணைத்தேயோச*
*களை தரு சர்ப்பம் பாலன் களை கடீந்தமுதமுண்ணும்*
*வளைவரே மீதின் மேவும் வாமனனுக்காசை யுண்டாம்."*

என்ற பரதசூடாமனிப் பாடலொன்றில் "நாகசுரம்" என்றே குறிப்பிடப்பட்டுள்ளதைக் காணலாம்.

இவ்வாறாகப் பெரும்பாலும் "நாகசுரம்" என்ற பெயரே இவ் வாத்தியத்திற்கான பெயராகக் கையாண்டதால் நாகசுரம் என்பதே இதற்குரிய சரியான பெயர் எனக் கொள்வது பொருத்தமானது எனத் தோன்றுகிறது. பி. எம். சுந்தரம் எழுதிய இந்திய நூலான மங்கல இசை மன்னர்கள் என்ற நூலில் அவர் நாகசுரம் என்ற பெயரைக் கையாண்டே எழுதியுள்ளார்.

நாகசின்னம் என்பதே இதற்குரிய சரியான பெயர் எனக் கொள்வாரும் உளர். இது பற்றி பொள்ளாச்சி நா. மகாலிங்கம் கூறும் போது "சின்னம;" என்பது குழல், திருச்சின்னம் என்ற ஊது குழல் இன்றும் கோயில்களிலும் மடாலயங்களிலும் இறைவன் வருவதையும், மடாலயத் தலைவர் வருவதையும் முன்னறிவிக்க ஊதப்படும் ஒலிக் கருவி ஆகும். ஏறத்தாள திருச்சின்னம் போலவே வடிவமைப்பில் நாக சின்னத்தை உருவாக்கினார். இதற்கு நாக சின்னம் என்ற பெயரையும் சூட்டினர் என்கிறார்.

மேலும் "நாகசின்னம்" என்பதே நாசனம் என்றாகிப் பின்னர் நாயனம் எனத் திரிந்து வந்ததாகவும் இவர் குறிப்பிட்டுள்ளார். "நாயனம்" என்ற சொல்லே இன்று வரை இதனை தொழிலாகக் கொண்ட அனைவராலும் குறிப்பிடப்படுகிறது. இன்றும் கூட இந்தியாவிலும் ஈழத்திலும் "நாயனக்காரர்" என்றழைக்கும் மரபுதான் இருக்கிறது. (சிவக்கொழுந்து நாயனக்காரர், சின்னச்சாமி நாயனக்காரர்). மஹாகவி தன்னுடைய கோடை என்ற பாநாடக நூலில் மாணிக்க நாயனக்காரர் என்பவரையே முக்கிய பாத்திரமாகப் படைத்துள்ளார்.

அன்று முதல் இவ் வாத்தியத்தை இறைபணிக்காக கையாண்டவர்கள், "நயினாரடியார்" என்போரே "நயினார்" என்பது "நாயனார்" என்ற சொல்லின் மரூஉ எனலாம். இறைவனைத் "தேவர்" எனவும், "நாயனார்" எனவும் குறிப்பிடுவது மரபு. இதனால் தான் ஆலயத் தொண்டிற்காகத் தம்மை அர்ப்பணித்த பெண்களைத் "தேவரடியாள்" எனவும் நாகசுரத்தைத் தொழிலாகக் கொண்டவரை "நாயனார் அடியார்" எனவும் அழைக்கும் மரபு திருவாரூரில் இன்றும் இருக்கிறது என பி. எம். சுந்தரம் குறிப்பிட்டுள்ளார். எனவே நாயனார் அடியார் கையாண்ட வாத்தியமாதலால் இதற்கு நாயனம் என்ற பெயர் ஏற்பட்டிருக்கலாம். இன்று இப் பெயர் வழக்கில் இருப்பதும் குறிப்பிடத்தக்கது.

மேலும் மகாலிங்கம் அவர்கள் நாகசுரம் பிற்பட்ட சொல் எனவும், "சரம்" என்றால் "தொடுப்பது" என்று பொருள். அதே போல இசைக் கோவையைத் தொடுப்பதால் "சரம்" என்றாகிப் பின்னர் "சுரம்" என மருவி "நாகசுரம்" என்பது "நாகசுரம்" ஆகியிருக்கலாம் என்கிறார்.

நாதஸ்வரம் என்ற பெயர் வடமொழித் தாக்கத்தாலும் தமிழ்-வட இந்திய இசைத்துறைகளின் கலப்பின் பின்னாலும் ஏற்பட்ட ஒரு பெயராக இருக்கிறது.
அதாவது "நாதம்" என்பது செவிக்கு இனிமையைத் தரும் ஒலியாகும். எனவே இனிமையான ஸ்வர ஒலிக்கோர்வையைத் தருவதால் இவ் வாத்தியத்திற்கு நாதஸ்வரம் அல்லது நாதசுரம் என்ற பெயர் வந்திருக்கலாம். யாழ்ப்பாணத்து இசைவேளாளர் நாதஸ்வரம் என்றே அழைப்பதைக் காணலாம். பேச்சு மொழியில் நாயனம் எனவும், ஏனைய சந்தர்ப்பங்களில் நாதஸ்வரம் எனவும் குறிப்பிடுவர். தமிழிசை, தென்னிந்திய கர்நாடக இசை என்பவற்றில் வடமொழி, தெலுங்கு மொழி என்பவற்றின் ஆதிக்கம் இருந்து வந்தமையால் இசையாளர்களது வாழ்விலும் பண்பாட்டிலும் வடமொழி, வடமொழிக் கலாசாரம், பண்பாட்டுக் கூறுகள் ஊடுருவின.

தமிழரின் பண்பாட்டுக் கூறுகளை வரலாற்றினடியாகத் தேட முற்படும் ஆய்வறிவாளர்கள் பண்டைத் தமிழரின் இசைக் கருவிகள், இசை மரபுகள் அவை காலத்தோடு பெற்ற மாற்றங்கள் என்பன பற்றிக் கூடுதல் கவனம் செலுத்த வேண்டும். நாகசுரத்தை அல்லது நாயனத்தைப் பொறுத்தவரை நாகம், நாகர்கள் என்ற பழங்குடி மக்களுடனான நாகசுரத்தின் தொடர்பு, உறவுகள் பற்றி மேலும் ஆய்வுகள் செய்யப்பட வேண்டும்.



# அருணோதயக் கல்லூரி பழைய மாணவர் சங்கம் - கனடா
# நிர்வாகக் குழு 1999/2000



**இருப்பவர்கள் (இடமிருந்து வலமாக)**

திருமதி. சந்திரா பெர்னான்டோ, திரு. சி. பரநிருபசிங்கம்(பாதுகாவலர்), திரு. தாமோ. விநாயகரட்னம் (தலைவர்), திரு. வி. கந்தவனம்(பாதுகாவலர்), திருமதி. ஜெயகலா வில்லவராஜன்

**நிற்பவர்கள் (இடமிருந்து வலமாக)**

திரு. த. கெங்காதரன் (பொருளாளர்), திரு. சி. கந்தசாமி, திரு. த. தேவராஜா, திரு. த. ஜெகதாசன், திரு. பொ. பாலசிங்கம், திரு. க. அரவிந்தன், திரு. சு. திலகேஸ்வரன், திரு. ப. சிதம்பரசிவன் (செயலாளர்), திரு. சி. சிவலிங்கநாதன்

**சமுகமளிக்காதவர்கள்**

திரு. செ. சிவலிங்கம், திரு. அ. சூரியகுமார், திரு. ந. யோகதாசன்

# திருக்குறளில் மெய்யுணர்தல்

-க. நித்தியானந்தன்
*உப தலைவர், அருணோதயக் கல்லூரிப் பழைய மாணவர் சங்கம், அளவெட்டி*

தெய்வப்புலமைத் திருவள்ளுவனார் இயற்றிய திவ்விய திருக்குறளில் அறத்துப்பாலின்கண் இறுதி இயல்களாக 'மெய்யுணர்தல்', 'அவா அறுத்தல்' என்னும் அதிகாரங்கள் அமைந்துள்ளன. உலக மக்களின் உயர்ந்த குறிக்கோள்களாகிய 'அறம், பொருள், இன்பம், வீடு' எனும் நான்கினுள் வீடு தவிர்ந்த ஏனைய மூன்றினையும் பற்றியே நீதி நூல்கள் கூறுகின்றன. அந்த மரபிலே திருக்குறளும் அம்முப்பொருளினையே 'அறத்துப்பால்', 'பொருட்பால்', 'காமத்துப்பால்' என்ற தலைப்புகளில் விவரிக்கின்றது.

திருக்குறளோ நீதி நூல்கள் யாவற்றுள்ளும் தலை சிறந்தது. அதனை முதுமொழி, பொய்யா மொழி உத்தரவேதம், பொதுமறை எனப் பல புனைமொழிகளால் திருவள்ளுவர் காலத்துப் புலவர்களே போற்றிப் புகழ்ந்து இருக்கின்றனர். அதன் அருமையை அறிந்த மேல் நாட்டு அறிஞர்களில் கிளேரல் என்பவர் அதனை 'வெள்ளித் தட்டில் வைத்த தங்கக் கனி' என வர்ணித்துள்ளார்.

2. திருக்குறளின் தனிச் சிறப்புக்கமைய, தமிழ் மக்களின் பாரம்பரிய பண்பாட்டு நெறிகள், மரபுகள், சீர்சிறப்பு, அறங்கள், உயர் நலங்கள் எல்லாவற்றையும் உள்ளடக்கிக் 'குறுகத் தறித்த குறளாகி', வீட்டு நெறியைப்பற்றியும் பரவலாகவும் தனிப்பட்ட முறையிலும் விளக்குகின்றது. ஆராய்ந்து பார்க்கில் நூல் முழுவதுமே அறத்தின் அத்தியாவசியத்தையும் அறத்தின் விளைவாகிய வீடுபேற்றினையும் நுண்ணிதாக நுவல்கின்றதை அறியக் கூடியதாக இருக்கின்றது. 'கடவுள் வாழ்த்திலேயே' வீடு பேற்றைப்பற்றி குறிக்கப்பட்டுள்ளது. வீடு பேற்றுக்கு வேண்டற்பாலதாய 'பிறவி அறுத்தலை' பின்வரும் குறள்களில் கூறுகின்றது:

அறவாழி அந்தணன் தாள் சேர்ந்தார்க் கல்லால்
பிறவாழி நீந்தல் அரிது.

பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவனடி சேரா தார்.

'நீத்தார் பெருமை' யினைப்பற்றிக் கூறும் பொழுது,

உரன் என்னுந் தோட்டியால் ஓரைந்துங் காப்பான்
வரன் என்னும் வைப்புக்கோர் வித்து

என்னும் குறளால் ஐம்பொறிகளையும் புலன்கள் வழியே சென்று மயங்காமல் காப்பவன் வீடு பேறு எய்துவதற்கு ஒரு வித்துப் போல்வான் என வீடு பேற்றைப்பற்றிக் குறிப்பிடப் பெற்றுள்ளது (வரன் - வீட்டு நிலம்).

'அறன் வலியுறுத்தல்' என்னும் அதிகாரத்தில் அறம் பொருட் செல்வத்துடன் வீடுபேற்றையும் அளிக்கும் என்ற கருத்து,

சிறப்பு ஈனும் செல்வமும் ஈனும் அறத்தினூங்கு
ஆக்கம் எவனோ உயிர்க்கு

என்ற குறளில் கூறப்பட்டுள்ளது.

'இல்வாழ்க்கை' என்னும் அதிகாரத்தில் 'வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந்
தெய்வத்துள் வைக்கப்படும்' என்ற குறளால் நெறிதவறாது நிறைவாக வாழ்பவர் தெய்வ நிலை எய்தி அதன் வழி வீட்டு நெறியில் நிற்பர் என்று கூறப்படுகிறது.

மேலே எடுத்துக் காட்டியவற்றால் அறமும் பொருளும் இன்பமும் வீடும் ஆகிய நான்கும் உட்பொருளாகக் கொண்டே திருக்குறள் இயற்றப்பட்டுள்ளது என்பது தெளிவாகின்றது.

3. இல்லறம் இயலுவோர் மேலும் அன்பினை விளைத்து விருந்தினரை ஓம்பி, செய்ந்நன்றி அறிந்து போற்றி, பொறை உடையவராகி ஒழுக்கத்திற் பிறழாது, பிறர் மனைவியரை விரும்புவதைத் தவிர்த்து, தன் நெஞ்சத்து அழுக்காறு (பொறாமை) இல்லாதவராகிப் பிறர் பொருளை வெஃகாமல் (ஆசைப்படாமல்), புறங்கூறாமல், பயனில சொல்லாமல், தனக்கும் பிறர்க்கும் தீமையை விளைவிக்கும் தீயவற்றைச் செய்ய அஞ்சி அவற்றை விடுத்து, ஒப்புரவு அறிந்து, வறியவர்க்கு வளம்பெற வழங்கி, புகழ் ஈட்டி, மறுவிலா வாழ்வெய்தி, வீட்டு நெறியில் நாட்டங் கொண்டு பின்னர் துறவு வாழ்க்கையை மேற்கொள்வர் (வானப்பிரஸ்த வாழ்க்கை).

துறவு வாழ்க்கை நிறைவு பெறப் புலால் உண்பதை விடுத்து எல்லோரிடமும் அருளுடைமையை வளர்த்து, தவம் இயற்றி அதனால் வருந் துன்பங்களைப் பொறுத்து பிற உயிர்கட்குத் துன்பஞ் செய்யாமல், தவ வாழ்க்கைக்கு ஒவ்வாத ஒழுக்கங்களைத் தவிர்த்து. வாய்மையை வழுவாது காத்து,

எவ்வாற்றானும் சினங்கொள்ளுதலை விடுத்து 'கறுத்து இன்னா செய்தார்க்கும் மறுத்து இன்னா' செய்யாமையைத் தலையாய அறமாகக் கொண்டு, தன்னுயிர் நீப்பினும் பிற உயிர்களைக் கொல்வதை ஒழித்துத் தூய மனத்தினராகி ஞான விசாரத்தில் ஈடுபடுவர்.

4. ஞானத்தின் முடிவு முத்தி அல்லது வீடு. அதனை 'மெய்யுணர்வு' எனத் திருக்குறளில் இயம்பப் படுகிறது. மெய்யுணர்தலுக்குக் குந்தகமாக இருக்கும், உலக வாழ்வில் உற்ற சிற்றின்பப் பற்றினை அறவே அறுத்தல் அத்தியாவசியம். ஆகையால் அவை செயற்படுத்தும் உத்திகள் 'நிலையாமை', 'துறவு' என்ற அதிகாரங்களில் விளக்கப்பட்டுள்ளன.

5. 'நிலையாமை' அதிகாரத்தில் செல்வம், 'அற்கா' (நிலையாமை) இயல்பிற்று என்றும்,
இவ்வுலகம் 'நெருநல் உளனொருவன் இன்றில்லை' என்னுந் தன்மையால் நிலையில்லாததென்றும், உறங்குவதும் விழிப்பதும் போல் இறப்பும் பிறப்பும் மாறி மாறி வருமென்றும் நிலையாமை உணர்த்தப்பட்டுள்ளது.

6. 'துறவு' என்னும் அதிகாரத்தில் அடல் வேண்டும் ஐந்தன் புலத்தை, விடல் வேண்டும் புலன் இன்பத்துக்கு வேண்டிய எல்லாம் என்றும் பிறப்பினை நீக்கலுறுவோர்க்கு உடம்பு மிகையான தென்றும் யான் எனது என்னும் செருக்கறுப்பவர் வீடு பேற்றுக்குத் தகைமையுடையவரென்றும் தீரத் துறந்தவர்கட்கு வீடு எய்தல் இயல்பாக அமையுமென்றும் பற்று அற்றுப் போக பிறப்பிறப்புத் தானாகவே அற்றுப்போகும் என்றும் அப்பற்றினை முற்றுற அறுப்பதற்கு உபாயம் எல்லாப் பொருளையும் பற்றி நின்று ஒரு பொருளிலும் பற்றில்லாத பரம்பொருளைப் (இறைவனைப்) பற்றி நிற்பதே என்றும் விநயமாக விளக்கப்பட்டுள்ளது.

இவ்வாறு நிலையாமையின் தன்மையையும் இயல்புகளையும் விளக்கி, ஞான விசாரத்தால் வீடு பேற்றைப் பெறும் முறைமையையும் மெய்யுணர்தல் என்னும் அதிகாரம் அறிவுறுத்துகின்றது.

7. மெய்ப்பொருள் ஆராய்ச்சியில், முதற்படி மெய்ப்பொருளின் இலக்கணங்களை அறிந்து கொள்ளல்.

பொய்வளரும் சமய நெறிகளைத் தழுவுமிடத்து பொருளல்லவற்றைப் பொருளெனக் கொள்ளும் அவிச்சையினால் துன்பந்தரும் பிறவிச் சுழல் நீங்காது. அவிச்சை அகன்று மெய்யுணர்வைப் பெற்றோருக்கு அம் மெய்யுணர்வு பிறப்பினை நீக்கி வீட்டினைக் கொடுக்கும். அத்தகையோரை ஐயங்களும் திரிபுணர்ச்சியும் தாக்குவதில்லை. விசாரணை மூலமாக மெய்ப்பொருளை அறிதல் பயன் தரும். விசாரணயில் கேட்டல், சிந்தித்தல் தெளிதல் என மூன்று படிகள் உண்டு.

ஆகவே மெய்ப்பொருளை உணர்வதற்கு முயல்வோர் உண்மை உணர்ந்த உத்தம ஆசாரியர் ஒருவரை (கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டாரை) குருவாகக் கொண்டு அவருடைய உபதேசங்களைக் கேட்டு அவற்றைச் சிந்தித்து உண்மையைத் தெளிய வேண்டும். அவ்வாறு தெளிந்தால் (ஓர்த்து உள்ளது உணரின்) பிறப்பற்ற நிலையை எய்துதல் எளிது.

மேற் கூறியவற்றால் பிறப்புக்குக் காரணமான அவிச்சை முதலிய பஞ்சக்கிலேசங்கள் கெட்டுப்போக வீட்டிற்கு நிமித்த காரணமாகிய செம்பொருளாகிய கடவுளைக் காண்பதே மெய்யுணர்வு என்பது புலனாகும். பிறப்பு என்னும் பேதமை நீங்கச் சிறப்பெனுஞ் செம்பொருள் காண்பது அறிவு.

8. முடிவாக 'அவாவறுத்தல்' என்னும் அதிகாரத்தில், மெய்யுணர்வு எய்தியோரையும், பழைய பழக்க விளைவால் நீங்காத் தன்மையுள்ள அவா (அதாவது காமம் முதலிய பஞ்சக் கிலேசங்கள்) மீண்டும் தலைப்பட்டுத் தாக்கி, வீட்டு நிலையிலிருந்து வழுவ விடாமல் இடையறாது சாதனை செய்ய வேண்டுமென்று வலியுறுத்தப்படுகிறது.

தூய்மை என்பது அவாவின்மை.

இன்பம் இடையறாது ஈண்டும் அவாவென்னுந்
துன்பத்துட் துன்பங் கெடின்

ஆரா இயற்கை அவா நீப்பின் அந்நிலையே
பேரா இயற்கை தரும்

என்ற குறள்கள் இவற்றை விளக்குகின்றன. இதனையே பின்வரும் சிவஞான போதச் சூத்திரம்
சொல்கின்றது:

செம்மலர் நோன் தாள் சேரலொட்டா
அம்மலங் கழீஇ அன்பரொடு மரீஇ
மாலற நேயம் மலிந்தவர் வேடமும்
ஆலயந்தானும் அரனெனத் தொழுமே.

9. வீடு பேற்றைப்பற்றி மேலே தொகுத்துரைக்கப்பட்ட உண்மைகள் சைவசித்தாந்த நெறியினையே பொது வகையில் கூறியுள்ளன என்பது மிகையாகாது.



**இக்கட்டுரை திரு சோ. அருணாசலம் (ஓய்வுபெற்ற உதவி அரசாங்க அதிபர்) அவர்களால் எழுதப்பட்டது. தவறுதலாக திரு க. நித்தியானந்தன் அவர்களால் எழுதப்பட்டதாக அச்சிடப்பட்டுள்ளது. தவறுக்கு வருந்துகிறோம்.**

# நன்றிப் புகழ்பெருகி வாழி வாழி!



**அருட்கவி. சீ. விநாசித்தம்பி**
*எந்நேரமும் கவிபாட வல்ல ஆசுகவி. கதாப்பிரசங்கி. சோதிடமும் தமிழும் இணைந்த புலமை மிக்கவர்.*

கும்பிடு வார்க் கினித்த கோபுரம் சிறந்த கோயிற்
கும்பழா வளைக் கணெசன் குளிர்பெரு மாக்கடப்பு
வெம்பிணி தீர்க்கும் மாரி வேலவன் கண்ணன் தில்லை
அம்பலத் தானமர்ந்த அருளுடைத் தளவைப் பேரூர்.

அளவிலாப் பழனம், செந்நெல் அணிதரு கழனி வாவி
விளைவுயர் தானியங்கள் வியன் பலா வாழை மாவும்
தளர்வுதீர் பனைமா தெங்கு தாங்கிய செழிப்பால் மக்கள்
உளநிறை செல்வராகி உறவுடன் வாழுங் காலை -

காலத்தின் பயனை யெண்ணிக் கடவுளின் கருணை பூத்த
கோலத்த னாகி வந்தான் கொடை அரு ணாசலப்பேர்ச்
சீலத்தன், சிவம் சிறந்த சிந்தையான், கல்வி மிக்கான்
ஞாலத்தின் சைவத் தொண்டும் நற்றமிழ்த் தொண்டும் கொண்டான்.

நம்மவர் சிறார்கள் எல்லாம் நால் மூன்று மைல் கடந்து
செம்மனக் கல்வி கற்றுத் திரிவதைக் கண்டார் நொந்தார்
எம்மள வைப்பதிக்கோர் எழில்வளர் கல்விச் சாலை
தம்மகப் படியே ஆக்கித் தந்தனர், வளம் செழிக்க.

தூயஆ யிரத்தெண் ணூற்றுத் தொண்ணூற்று நான்காம் ஆண்டில்
ஆயஆங் கிலம்போ திக்கும் அருணோத யக்கல் லூரி
தாயெனப் பணிசுரக்கத் தங்தனர், தமிழ் வளர்க்க
ஏயஅரு ணாசலம்வித் தியாசாலை யும் படைத்தார்.

- வேறு -

அருணாச லஉடையாரின் ஆர்வத்தாலே
அளவையூர் வளர்அருணோ தயக்கல்லூரி
பொருணான்கும் வழங்குமலை விளக்கமாகப்
புகுந்துபயில் வார்க்கியைந்த கலைபுகட்டி
அருணாடும் சமயதத் துவங்கள், நீதி
அறநெறிகள், விஞ்ஞானத் துறைகள். வாழ்வின்
தருணாத ரக்கணிதம், உயிரைக் காக்கும்
சகலதுறை களிலும் உயர் சேவை யாற்றி,

எண்ணரிய ஆசிரியர், ஞானவான்கள்
இசையாளர் சட்டமா வல்லுநர்கள்
வண்ணமுணர் ஓவியர்கள், புலவோர், வாய்த்த
வைத்தியர்கள் பொறியியல்விற் பன்னர், ஓங்கும்
எண்ணியல்விஞ் ஞானியர்கள், இயல் நடம் கூத்(து)
இவை முதிர்ந்த கலைவல்லோர் இனைய கற்றோர்
கண்ணகல்ஞா லம்புகழப் பயிற்றித் தந்த
கங்கை தரு கோமுகியாய் நிலைத்த செல்வம்.

தவம் நிலைத்த செல்வமெனும் இக்கல்லூரி
தந்த மகான் அருணாசல உடையார் வாழி
அவர் புதல்வன் சுப்ரமணியம் முதலி யோர்கள்
அதிபர் சிவ சுப்பிரமண்யம் முதலியோர்கள்
இவர்களைப்போல் பணிபுரிந்தோர் வாழி, சோதி
ஏழ்பரியோன் எனமிளிர் கல் லூரிவாழி
புவனமெலாம் வாழும்மா ணவர்கள் வாழி
பொலிநன்றிப் புகழ்பெருகி வாழிவாழி!

# இசையும் தமிழும்

## எழில் இறை

### இறையும் இசையும்

தென்றல் தெம்மாங்கு பாடி வருகின்றது. தேன் வண்டு ரீங்காரம் புரிகின்றது. தெளிந்த நீரோடையில் மீன் பாடுகிறது. திசையெல்லாம் புட்கள் தேன் மொழியில் பண் பாடுகின்றன. குயிலோ கோகிலகானத்தில் கூவுகின்றது. கொஞ்சும் கிளி குரல் கொடுக்கின்றது. கூட்டாக இவை அனைத்தும் இன்னிசையின் பெருமையை - இறைவனின் அன்பளிப்பை - இறவாத இப்பெரும் புகழை, இதயமெல்லாம் பரப்புகின்றன.

### இயற்கையும் இசையும்

இயற்கையிலே இசை பிறந்ததென்றால் இசையிலே இயற்கை உண்டு. இனிமைதான் இசையென்றால், இசையே இனிமைதான். இறைதான் இசையைப் படைத்தானென்றால், இசையிலே இறையைக் காணலாம். இறவாத இன்பத்தைத் தரும் இவ்வின்னிசை, எவரையும் இசைவிக்கும் தன்மை பெற்றது. இன்று, இசையே இல்லையானால் இவ்வுலகம் இருட்டாகும். இதயங்கள் இரும்பாகும். எவர்க்குமே இழப்பாகும்.

### தமிழும் இசையும்

இசையிலே இனிமைபோல், தமிழிலும் இனிமை இரண்டறக் கலந்துள்ளது. இயல், இசை, நாடகம் எனத் தமிழ் மொழியை வகுத்தனர் எம் முன்னோர். எம் மொழிக்கும் இல்லாத இப்பெருமை நம் தமிழ் மொழிக்குத்தான் உண்டு. சங்கம் வைத்துத் தமிழ் வளர்த்த நம் முன்னைத் தமிழர், இசைக்கும் சங்கம் அமைத்து இசை வளர்த்தனர். ஏழிசை நூற்சங்கம் அதன் பெயராகும். நடுநாயகமாகவுள்ள இசைத் தமிழை இயற்றமிழாலும், நாடகத் தமிழாலும் கட்டிக்காத்தனர். இயற்றமிழ் நூல் பரிபாடல் இசை போற்றியது. நாடகத்தமிழ் நூல் சிலப்பதிகாரம் இசை பாடியது. இசை நுணுக்கம், இந்திரகாளியம், பெருங்குருகு, பெருநாரை, பஞ்சமரபு, பஞ்சபாரதீயம் முதலியன இசைக்காகவே எழுந்த நூல்களாகும். நம்மிசையின் தனித்தன்மைக்கு மெருகூட்டிய யாழ்க்கருவி பற்றி கல்லாடம் என்னும் நூல் கருத்துக்கள் தருகின்றது.

### இசைக்கருவிகளும் இறைவடிவங்களும்

இன்னிசையை இறைவனோடு கலந்தவர் நம் தமிழர். தில்லையில் நடம்புரியும் நடராசனின் கையில் இருப்பது உடுக்கை. வெள்ளைக் கமலத்தில் வீற்றிருக்கும் கலைமகளின் கரங்களில் விளங்குவது வீணை. வெண்ணைக் கள்வன் கண்ணன் கையில் காண்பது வேய்ங்குழல். நாவல்ல நாரதர் நித்தம் தூக்கிச் செல்வது தம்பூரா. இவை அனைத்தும் இசையின் பெருமையை எடுத்துக்காட்டும் சான்றுகளாகும்.

### அடியார்கள் உள்ளத்தில் அரும்பிய இசை

இசையால் இயைந்ததைச் செய்து காட்டினர் நம் முன்னோர். வெள்ளிமலைக்கடியில் வேதனைப்பட்ட இலங்கையர் கோமான் இராவணன், சாமகீதம் இசைத்து இறைவன் இதயம் இளகச் செய்தான். பொதியமலையின் சாரலிலே கருங்கற்களே கனிந்தோடியது, முத்தமிழ் முனிவன் அகத்தியனின் இசைவேகத்திலே. பொங்கி வழிந்தோடும் பக்திபரவசத்தால் தேவாரப்பண் பாடி இறைவன் இதயம் தொட்டனர் நம் சமய குரவர். இன்னிசைக்கு ஏற்றம் கொடுத்தன நம்மாழ்வார்களின் பிரபந்தங்கள்.

### இசையின் ஆற்றல்

தமிழனின் இசையிலே தாவரங்கள் தழைத்தன. செடிகள் செழித்தன; பழங்கள் கனிந்தன; பயிர்கள் முளைத்தன. வண்டின் இசை கேட்டு போது விரிந்ததாகக் குறுந்தொகை கூறுகிறது. மதம் பிடித்த யானைகளும், மருண்டோடும் மான்களும், மகிழ்ந்தாடும் மயில்களும், நஞ்சுமிழும் நாகமும், கொஞ்சி விளையாடும் குரங்குகளும், குலவிமகிழும் குறவர்களும், கொடிய வேழமும் செயல் மறந்து நிற்கச் செய்யும் ஆற்றல் இவ்விசைக்குண்டு.

### தமிழிசை தழைக்கத் தமிழர் கடன் யாது?

இத்தகைய ஏற்றம் மிக்க தமிழன் இசை இன்று தோற்றம் இழந்து காணப்படுகின்றது. தொன்மையுடைய தமிழிசையை மீண்டும் பொலிவுறச் செய்யவேண்டியது ஒவ்வொரு தமிழனதும் கடமையாகும். தமிழில் இசை இரண்டறக் கலந்திருப்பதால், இசையின் வளர்ச்சி தமிழின் வளர்ச்சியாகும். தமிழின் வளர்ச்சி தமிழனின் உயர்ச்சியாகும். அத்தகைய மேன்மைகொள் தமிழிசை மென்மேலும் வளர நாம் உளமார உழைப்போமாக.

வாழ்க தமிழிசை!

---


'எழில் இறை' எனும் பெயரில் எழுதி வருபவர் சு. சுந்தரேஸ்வரன். தமிழ், சைவம் தொடர்பாக பல கட்டுரை-களும், சிறுகதைகளும் எழுதி வருகிறார். யாழ்ப்பாணத்தில் நடை பெற்ற உலகத் தமிழராய்ச்சி மாநாட்டில் இவர் வாசித்த "பாரதி தாசன் உள்ளம்" என்ற ஆராய்ச்சிக் கட்டுரை பலரது பாராட்டையும் பெற்றது. சிட்னியில் தமிழ்க் கல்வி நிலையம், சிட்னி முருகன் கோயில் என்பவற்றை உருவாக்கியதில் பெரும் துணையாக விளங்கியவர்.






கும்பழாவளைப் பிள்ளையார் கோயில் தீர்த்தத் திருவிழா



மஹாஜன சபை மண்டபம்




பிரசவ விடுதி




சமாஜ மண்டபம்




சதானந்த வித்தியாசாலை



அருணோதயா பாடசாலை அபிவிருத்திச் சபை



அருணோதயா சிறுவர் நாடகக் குழு




வைத்தியகலாநிதி ஆ. சபாநாயகம் பிரதம விருந்தினராக(மத்தி) பங்கு பற்றிய
அளவெட்டி அருணோதயக் கல்லூரிப் பழையமாணவர் சங்கக் கனடாக் கிளையின் பொதுக் கூட்டம்

# அளவெட்டி மக்கள் சங்கம், இலண்டன்

*யுத்தத்தின் அழிவுகளுக்குள் சிக்குண்ட அளவெட்டிக் கிராமத்தை அபிவிருத்தி செய்யும் நோக்குடன் கனடா வாழ் அளவெட்டி மக்கள் ஒரு சங்கத்தை உருவாக்கி தொடர்ந்து ஆறு வருடங்களாக உறுதியுடன் தளராது செயற்பட்டு வருவதையிட்டு நாம் பெருமைப்படுகிறோம். இவர்களுடைய இந்த முன்மாதிரியும் செயற்திறனுமே, லண்டன் வாழ் தமிழராகிய நாமும் இதே போன்ற ஒரு சங்கத்தை அமைப்பதற்கு ஊக்குவிப்பை அளித்தது. பல்வேறு ஐரோப்பிய நாடுகளிலும் அளவை நலன் புரிச்சங்கங்கள் உருவாகுவதற்கும் இவர்களே முன்னோடிகள் என்பதையும் மறுப்பதற்கில்லை.*

*வழமையாக இவர்கள் வெளியிடும் விழா மலராகிய 'அருணோதயம் 2000' இம்முறை 'பூச்சொரியும் பொன்னொச்சி மரம்' என்ற மகுடத்துடன் சிறப்பு மலராக வெளியிடப்படுவது இரட்டிப்பு மகிழ்ச்சியைத் தருகிறது. இது உலகெங்கும் பரந்து வாழும் அளவெட்டி மக்களை எமது கிராமத்துடன் இணைக்கும் பாலமாக அமையும் என்பது நிச்சயம். அன்றியும் எமது அடுத்த தலைமுறையினர் எமது வேர்களை அறிந்து கொள்வதற்கும் வாய்ப்பான ஒரு முயற்சி இது.*

*'அருணோதயம் 2000' கலை விழாவும், 'பூச்சொரியும் பொன்னொச்சி மரம்' மலர் வெளியீடும் சிறப்புற நடைபெற எமது வாழ்த்துக்களை தெரிவித்துக் கொள்வதில் பெருமகிழ்ச்சி அடைகிறோம்.*

**சி. உமாபதிசிவம்**
*செயலாளர், அளவெட்டி மக்கள் சங்கம் - இலண்டன்*

---

# கவிஞர் செ. கதிரேசர்பிள்ளை



செ. கதிரேசர் பிள்ளை ஆசிரியர் மகாஜனக் கல்லூரியின் சிறப்பு மிக்க தமிழாசிரியர்களுள் ஒருவர். இலக்கணம், இலக்கியம், நாடகம் ஆகிய துறைகளில் ஆழ்ந்த புலமை உள்ளவராக இருந்தார். தொடர்ச்சியாக கல்லூரி மாணவர்களுக்கு உயர்ந்த தரத்தில் நாடகங்களை எழுதி மேடையேற்றி வந்தமை மூலம் 'பாடசாலை நாடக அரங்கு' என்று இப்போது வழங்கப்படுகிற ஒரு உப பிரிவின் தோற்றத்திற்கும் முக்கியமான பங்காளியாக இருந்தார்.

'நாடகமும் அரங்கியலும்' என்கிற துறை பல்கலைக்கழக மட்டங்களிலேயே தோன்றியிராத ஒரு காலத்தில் நாடகம், அரங்கு என்பன பற்றிய சிந்தனைகளையும் செயற்பாடுகளையும் ஊக்குவித்தார் கதிரேசர்பிள்ளை அவர்கள். அவருடைய புராண இதிகாச நாடகங்களின் தொகுப்பு ஒன்று ***பாரதம் தந்த பரிசு*** என்ற பெயரில் வெளியாகி உள்ளது.

1940களில் எழுச்சி பெற்ற மறுமலர்ச்சிக் கால ஈழ இலக்கியத்தின் அங்கமாகவும் அவர் விளங்கினார். ஈழத்து இலக்கிய வளர்ச்சியில் மறுமலர்ச்சிக்காலம் முக்கியமான காலங்களில் ஒன்று என்று விமர்சகர்கள் குறிப்பிடுவர். 'மறுமலர்ச்சி' என்ற இலக்கிய சஞ்சிகையோடு இந்த காலம் தொடர்பு படுத்தப்படுகிறது. வரதர், அ. செ. மு., சோ. தியாகராஜா, அ. ந. க., மஹாகவி, சம்பந்தன், வைத்திலிங்கம், பஞ்சாட்சரசர்மா போன்ற பலர் இக் காலத்தூடாக மேல் வந்தவர்கள்.

கதிரேசர்பிள்ளை அவர்களின் கவிதைகள் பல இக்காலப் பகுதியில் பிரசுரமாகின. குழந்தைப் பாடல்களும் நிறைய எழுதியிருக்கிறார். அவருடைய குழந்தைப்பாடல்களின் தொகுதி ஒன்று ***கதிரேசன் பாடல்கள்*** என்னும் தலைப்பில் அழகிய நூலாக வெளியிடப்பட்டுள்ளது.



‘பூச்செரியும் பொன்னொச்சி மரம்’ என்னும்
இந்த மலரை அலங்கரித்த ஆக்கங்கள்,
தகவல்கள் தொடர்பான உங்களது
ஆலோசனைகளையும்,
கருத்துக்களையும், விமர்சனங்களையும்
எம்மோடு பகிர்ந்து கொள்வீர்கள் என
நம்புகிறோம்.
உங்கள் அபிப்பிராயங்கள் எதிர்காலத்தில்
எமது வெளியீடுகளை வளப்படுத்தத்
துணை நிற்கும் எனவும் நம்புகிறோம்.

- மலர்க் குழு -



# நன்றி

உங்கள் கையில் தவழும் பூச்சொரியும் பொன்னொச்சி மரம் என்னும் இம் மலரின் வேர் அளவெட்டி மண்ணில் கால் பரப்பி நிற்கின்றது. இந்த இதழ் விரிந்து மணம் பரவ மகரந்தங்களாய் இருந்த படைப்பாளிகளுக்கும், இந்த மகரந்தங்களை சுமந்த காற்றாய் இருந்த அன்பர்களுக்கும் சிறப்பாக சிவப்பிரகாசம் கந்தசாமி (இலங்கை) அவர்களுக்கும் நாம் நன்றி பாராட்டக் கடமைப்பட்டுள்ளோம்.

எமது வரலாறு பற்றிய தகவல்கள் அதிகம் பதிவு செய்யப்படாத ஒரு காலகட்டத்தில் எமக்கு கிடைக்கக் கூடிய ஆவணங்களையும், தகவல்களையும் சேகரித்து ஒரு நூலை வெளியிட நாம் முயற்ச்சி செய்த போது எமக்கு மிகுந்த உற்சாகம் அளித்து, அதன் தேவையை உணர்த்தி எம்மை வழிநடத்திய எமது ஆசான் திரு. எஸ். பரநிருபசிங்கம் அவர்களுக்கும், நூலின் தரத்தைப் பேணுவதில் கண்ணும் கருத்துமாய் இருந்து உரிய ஆலோசனைகள் வழங்கிய கவிஞர் வி. கந்தவனம் அவர்களுக்கும் எமது உளமார்ந்த நன்றிகள்.

இந்த மலர் உருவாகுவதற்கு விளம்பரங்களின் பங்கு காத்திரமானது என்பது வெளிப்படை. விளம்பரதாரர்களுக்கும், அவற்றை பெறுவதற்கு உதவியாக இருந்த நண்பர்களுக்கும், குறிப்பபாக கே. வில்லவ ராஜன், எஸ். சிவலிங்கநாதன், ரி. விமலதாசன் அவர்களுக்கும் எமது நன்றிகள் உரியன.

திறம்பட இந்த மலரை வடிவமைத்த கருணா அவர்களும் (*Digi Graphics and Studios*), கணினியில் எழுத்தமைப்பு செய்த ரமேஷ் அவர்களும் விசேடமாக எமது நன்றிக்குரியவர்கள். நூலின் மீதான உள்ளார்ந்த ஈடுபாட்டோடும், அளவற்ற அக்கறையோடும் காலநேரம் பாராது அவர்கள் கருமம் ஆற்றியமை இங்கே குறிப்பிடப்பட வேண்டிய ஒன்று. நூலுக்கு அவசியமெனப்பட்ட சில ஆக்கங்களைப் பரிந்துரை செய்தமை, அவற்றின் சேகரிப்பிற்கு உதவியமை, குறிப்புக் கட்டுரை வரைந்தமை என்றிவ்வாறாக விரிந்தது இவர்கள் ஆற்றிய பணி. கருணா அவர்கள் ஒரு ஓவியருமாக இருப்பது மிகவும் அனுகூலமாகப் போயிற்று. தனதும், தன்னுடைய குருவான பிரபல ஓவியர் மாற்கு, சக ஓவியர் சுபாஸ் அவர்களினதும் ஓவியங்களைத் தூவி கலை நுணுக்கமும், செய்நேர்த்தியும் கொண்டு மலர் செதுக்கப்பட்டிருப்பதை வாசகர் ஒருவர் இலகுவில் அவதானிக்க முடியும்.

மலருக்குக் காத்திரமான ஆக்கங்களைத் தேடிக் கண்டு பிடிப்பதிலும், அவற்றை பிழையறத் திருத்தித் தொகுப்பதிலும் எம்முடன் நீண்ட காலத்தைச் செலவிட்டவர்கள் புராந்தகன், சேரன் ஆகியோர். நன்றி என்ற வார்த்தை இவர்களுக்கு போதுமானதா என்பது கேள்விக்குறியே.

இந்நூலை அழகுற அச்சடித்த விவேகா அச்சகத்துக்கும் எமது நன்றி.

**மலர்க் குழு**

# எனது நிலம்



"…..
அதன்கீழ்
இரண்டாயிரம் ஆண்டுகள்
முன்பாக, என் முன்னோர்
நடந்த நிலப்பரப்பு.
ஒரு காலடி, ஆனால்
ஓராயிரம் ஆண்டு
எம் வேர் நீண்டுள்ளது.
…."

அருணோதயம் 2000 வெற்றி பெற வாழ்த்துகிறோம்.




# Dr. திருமதி. குகாநந்தி ரவீந்திரன்

Cosmetic Dentistry, Crown & Bridge, Orthodontics, Dentures, Root Canal Treatment, Gum Treatment, Wisdom Tooth Removal, Whitening

குடும்ப பல் வைத்தியர்

**Scarborough Professional Centre**
**1371 Neilson Road, Suite #212**
**Scarborough ON M1B 4Z8**
**(416) 281-7555**

அருணோதயம் 2000 வெற்றி பெற வாழ்த்துகிறோம்.



# சிவன் கோயில்

திரு. பாலகிருஷ்ண சாஸ்திரிகள்
80, Bradon Drive,
Etobicoke.

416- 742-8484
416-741-0178

அருணோதயம் 2000 வெற்றி பெற வாழ்த்துகிறோம்.




# B&N Arlington Shell inc.

**SINNATHAMBY VIMALANATHAN**

7430 Atlantic road, Jacksonviille, Florida 32211
**Tel: (904) 724-1490**
**(904) 724-5037**

அருணோதயம் 2000 வெற்றி பெற வாழ்த்துகிறோம்.





# SUVARA TRAVELS CANADA INC.

When it comes to service, no one flies above us.

(Except for the Airlines)

From your number one consolidator for Sri Lankan Airlines in Canada

**Tel: (416) 292-9465 • 1-800-461-BEST(2378)**

www.suvara.com • e.mail:sale@suvara.com

அருணோதயம் 2000 வெற்றி பெற வாழ்த்துகிறோம்.






# Happyland Restaurant

Pub & Fast Food

3218 Eglinton Ave. East, Scarborough (East of Markham Rd.)

**Tel: (416) 261-0733**

## அருணோதயம் 2000 வெற்றி பெற வாழ்த்துகிறோம்.






# ELLESMERE

**FISH AND MEET MARKET**

புளோரிடா, ரினிடாட் மற்றும் இலங்கையிலிருந்து நேரடியாக இறக்குமதி செய்யப்பட்ட மீன் வகைகள், நண்டு இறால், முட்டை இத்துடன் ஊர் ஆடு, மாடு, காட்டுப் பன்றி, மரை, மான், விறாத்துக் குஞ்சு, உடன் கோழி, பாற் சுறா மேலும் பல....

# (416) 285-8558

**1243 Ellesmere Road, Scarborough, Ontario**

அருணோதயம் 2000 வெற்றி பெற வாழ்த்துகிறோம்.

காங்கேசன்துறை
வல்வெட்டித்துறை
பருத்தித்துறை
கீரிமலை
சேந்தாங்குளம்
பலாலி
தெல்லிப்பளை
வசாவிளான்
பெரியவிளான்
பண்டத்தரிப்பு
மல்லாகம்
அளவெட்டி
காரைநகர்
சங்கானை
தொட்டிலடிச் சந்தி
சுன்னாகம்
வட்டுக்கோட்டை
மானிப்பாய்
கொடிகாமம்
நல்லூர்
யாழ்ப்பாணம்
சாவகச்சேரி
ஆனையிற



# இலங்கை வரைபடத்தில் அளவெட்டியும் அயலூர்களும்



# அளவெட்டி

இளவாலை
வடக்கு
கீரிமலை
பண்டத்தரிப்பு
நகுலேஸ்வரம் வீதி
பன்னாலை
பன்னாலை
கொல்லங்கலட்டி
மஹாஜனாக் கல்லூரி
தவளக்கிரி முத்துமாரி அம்மன் கோயில்
741
வாசிகசாலை
அம்பனைச் சந்தி
தெல்லிப்பளை
தஞ்சிட்டிச் சந்தி
ஞானோதயா (சீனன் கலட்டி)
அம்பனை வயல்
இறால் மடம்
விளான்
நகுலேஸ்வரம் வீதி
மஹாத்மா வீதி
768
கூட்டுறவாளர் வீதி (அம்பனை வீதி)
பெரியதம்பிரான் கோயில்
அழகொல்லைப் பிள்ளையார் கோயில்
பண்டத்தரிப்பு
முதலியார் கோயில்
தெல்லிப்பளை துர்க்கை அம்மன் கோயில்
வாரீசீமா வீதி
சின்னப்பு சோதிட நிலையம்
தம்பையப் புலம்
ப. நோ. கூ. சங்கம்
கருவேப்புலம் நோ. க. பாடசாலை
மஹாஜன வாசிகசாலை
கும்பளாவளைப் பிள்ளையார் கோயில்
சதானந்தா வித்தியாசாலை
கணேஸ்வரம் குருக்கள் கிணற்றடி பிள்ளையார் கோயில்
மாரியிட்டிச் சந்தி
பச்சு றோட்
ஆரம்பப் பாடசாலை
நரசிங்க வைரவர் கோயில்
சமாஜ மண்டபம்
காளி கோயில்
அருணோதயாக் கல்லூரி
772
அரசினர் மகப்பேற்று நிலையம்
இந்து மயானம்
அலுக்கைச் சந்தி
774
தென் இந்திய திருச்சபை தேவாலயம் C.S.I Church
மலை வேம்படிச் சந்தை
அலுக்கை சூசையப்பர் தேவாலயம்
கிறிஸ்தவ சேமக்காலை
காங்கேசன்துறை வீதி
வினாசித்தம்பி சோதிட நிலையம்
நாக வரத நாராயணர் கோயில்
பெருமாக்கடவை பிள்ளையார் கோயில்
அருணாசலம் வித்தியாசாலை
பனாக்கைக் குளம்
இந்து மயானம்
மல்லாகம்
மல்லாகம் புகையிரத நிலையம்
பத்துப்பனையடி
மாசியப்பிட்டி புனித செபஸ்தியார் தேவாலயம்
முத்துமாரியம்மன் கோயில்
அ.மி.த.க. பாடசாலை
வழுக்கை ஆறு
மாசியப்பிட்டிச் சந்தி
குளம்
768
சங்கானை
ஸ்கந்தவரோதயாக் கல்லூரி
சுன்னாகம்

கோயில்
தேவாலயம்
பாடசாலை
வைத்தியசாலை
ஏனையவை
வாசிகசாலை

**Sponsored by**
**RAJARATNAM SRITHARAN**

illustration by digi Graphics & Studios



"என்றோ ஒரு நாள், இருந்து பார் மாணிக்கம்,
நின்றந்தக் கோயில் நிமிர்ந்து, நெடுந்தூரம்
பார்த்துப் பயன்கள் விளைக்கின்ற கோபுரமும்,
வேர்த்துக் கலைஞர் விளைத்த மணி மண்டபமும்,
வீதிகளும், நூறு விளக்கும், பரதத்தின்
சேதிகளைக் கூறும் சிலம்புச் சிறுபாதம்
ஆடும் அரங்கும், அறிந்து சுவைஞர்கள்
நாடிப்புகுந்து நயந்திட நீ சோமனுடன்
ஊதும் குழலில் உயிர் பெற்று உடல் புளகித்து
ஆதி அறையில் அமரும் கடவுளுமாய்
என்றோ ஒரு நாள் எழும்பும், இருந்து பார்!"

- மஹாகவி




Printed in Canada by Viveka Printers, Toronto
Designed by digi Graphics & Studios